# தத்துவவிவேசினி

இந்துசுவக்கியானசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 1.] MADRAS:—SUNDAY JANUARY, 2, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.

## இப்புதுவருஷம் எல்லோருக்கும் நல்வருஷமாகுக.



## இப்பிரபஞ்சவிகற்பம்,

(206-வது பக்கத்தொடர்ச்சி.)

கடற்காற்று நிலக்காற்றுண்டாவதெப்படி ?

காலைப்பொழுதிலும் பகலிலும் நிலத்திலிருந்து சமுத்திரத்தைநோக்கி மோதும்காற்றுக்கு நிலக்காற்று (Land Breeze) என்றுபெயர். மாலைப்பொழுதில் கடலிலிருந்து நிலத்தைநோக்கிமோதுங்காற்றுக்குக் கடற்காற்று (Sea Breeze) என்றுபெயர். இவ்விரண்டுவிதமானகாற்றுகளுண்டாவதற்கு காரணங்களை ஈங்கெடுத்துக்கூறுவாம்.

பகலில் சூரியன் உக்கிரமாய்காயும்போது சூரியகிரணங்கள் நிலத்தில் கல், மண், முதலியவைகளின்மேல்விழுந்து அவைகளை அதிகசீக்கிரத்தில் சூடாக்கிவிடும். ஆயினமையின், பகலில் கல், மண், முதலியவைகள்மீது நமது கையைவைத்தாலும், கால்பட்டாலும் நமது கைகளும் கால்களும் சூட்டைப்பொறுக்கமாட்டாமற் போய்விடுகின்றன. இத்தருணத்தில் நாம் சடலுக்கேகி அதிற்குளித்தால் அந்தஜலம் சில்லென்றிருக்கும். இதனால் பகலில் சூரியன் உக்கிரமாய்காயும்போது கடலைவிட நிலம் அதிகசீக்கிரத்தில் சூடாகிவிடுமென்பது நிச்சயமென அறியலாம். ஆனால் மாலைப்பொழுதில் சூரியன்மறைந்தவுடனே நிலத்திலுள்ள வஸ்துக்களின்காங்கை, எவ்வளவு சீக்கிரத்தில் கிரகித்ததோ, அவ்வளவுசீக்கிரத்தில், குறையும். கடலிலிருக்கும் நீரின்காங்கை அவ்வளவு சீக்கிரத்தில்பிரியாது. ஆதலால் பகலில்நிலம் அதிகவெப்பமாயிருப்பதால் நிலத்திலிருக்கும் வாயு அதிகவெப்பமாய்விடும். அவ்வாறு வெப்பமாய்விடுவதால், அவ்வாயு சூட்டாலஇளகிமேலேகிளம்பும். அப்படி கிளம்புவதால் கடலிலிருந்து நிலத்தைநோக்கி குளிர்ந்தகாற்றுமோதும். அவ்வாறு மோதுதலுக்கு கடற்காற்று என்றுபெயர். மாலையிலும், இரவிலும், நிலம் அதிகவிரைவில் குளிர்வதாலும், நிலக்காற்றைவிட கடற்காற்று அதிகவெப்பமாய்இளகி மேலெகிளம்புவதாலும், நிலத்திலிருந்து காற்று கடலைநோக்கிமோதும். அவ்வாறுமோதுதலுக்கு நிலக்காற்றுஎன்றுபெயர்.

இக்காலத்தில் பாடசாலைகள்தோறும் பூகோள உருண்டைவழங்கிவருகின்றதல்லவா ? அவ்வுருண்டையின் இரு "துருவமுனை" (Poles) களுக்கு இடையில், ஒரு ரேகை பூமியைச்சுற்றியிருக்கின்றது. இந்தரேகைக்கு "மத்தியரேகை" (Equator) என்றும் "நிரக்ஷரேகை" என்றும்பெயர். மற்ற இடங்களைப் பார்க்கினும் சூரியன் இந்தரேகைக்குநேராக இருந்துகொண்டு அதிக உக்கிரமாய் தனது வெப்பத்தையும் ஒளியையும் தருகின்றான். இந்தரேகை பூமியை இரண்டு அர்த்தகோளங்களாகப்பிரிக்கின்றது. இந்தரேகையினின்று வடக்கேயாயினும் தெற்கேயாயினும் போகப்போக பூமியின்உஷ்ணம் கொஞ்சம்கொஞ்சமாய் குறைந்து கடைசியில் "துருவமுனை" (Poles) களில் வெகுதளிர்ச்சியாயிருக்கும். இவ்விரேகைக்கு மேலும், அதனிருபுறங்களிற்சற்றுதூரங்களிலும் சூரியன் மிக உக்கிரமாய்ச்காயும். அவ்வாறுகாய்வதால் அங்குள்ளகாற்று மிக உஷ்ணமாகி அணிஅணியாய் மேலேகிளம்பும. இப்படி பூமியின் நடுவிலுள்ளகாற்று மேலே அணிஅணியாய்செல்லவே இவ்வாறு சென்றகாற்றின் இடத்தைநிரப்ப வடக்கிலும் தெற்கிலுமுள்ள குளிர்காற்று இம்மத்தியபாகத்திற்கு மோதிவருகின்றது. இவ்வாறு மோதிவருங்காற்றுக்குத்தான் கடற்காற்றென்றுபெயர். இப்பெயர் கப்பற்காரர்களால் தரப்பட்டிருக்கின்றது. இக்காற்று ஓரேவிதமாய் |காலந்தவறுமல் வீசிக்கொண்டுவருகின்றமையாலும், கப்பற்காரர்களுக்கு இக்காற்று மிக உதவிசெய்கின்றமையாலும் இக்காற்றுக்குக் கப்பற்காற்றென மாலுமிகளால்பெயரிட்டுவழங்கிவருகின்றது.

இ. மு.

(இன்னும்வரும்.)

## பிரம்மவித்தியா.

ஸ்ரீமான் சீனிவாச சாஸ்திரியார் அவர்கள் ஒருதேசமாவது நாத்திகர் நிறைந்துள்ளது இல்லையென்று கூறியதனுல் நாம் அதனுல் நாத்திகருக்குவரும் இழுக்கென்னை என்றேம். இதற்குமுன்னே காட்டியபடி அசம்பவமான விடைபகர்ந்ததுமல்லாமல் தேசங்கள் க்ஷேமமடைவதும் மதங்களின் பிரயோசனங்களில் ஒன்றே என்கின்ருர். மதங்களால் சனங்களுக்கு இன்னவாறு ஒற்றுமையுண்டாகின்றதென்று அனுபவ திருட்டாந்தமுகத்தாற் காட்டுதல் ஒழிந்து சொல்லளவில் சித்தாந்தம் செய்துவிட்டார். இது வாக்கும் நமது சாஸ்திரியாரைப்போன்ற தருக்கசாஸ்திரப் பிரவீணர்கள் சொல்லத்தக்கவிடை! மதங்களால் எங்ஙனம் ஒற்றுமையுண்டாகின்றதோ யாம் கனவினுங் கேட்கவில்லை.

தேசங்கள் க்ஷேமமடைவதென்றல்—மாதம் மும்மாரிபொழிதல், அகாலமரணமற்றிருத்தல் கொலைகளவுகள் காமாதி துர்க்கிருத்தியங்கள் மருந்திற்கும் அத்தேசத்தில் கிடையாதிருத்தல் முதலியனவன்றே? இப்படி எந்ததேசமிருக்கிறது ? இப்படியும் சிலதேசமிருப்பின் அவை அங்ஙனமிருத்தற்கு மதந்தான் காரணமென்று சாஸ்திரியார் எவ்வாறு ரூபிப்பார் ?

வேதாங்கீகாரமுடைய சகலமதங்களையும் அனுட்டிப்பது இவ்விந்துதேசமோ அன்றே. இதில் வாந்திபேதி வைசூரி முதலிய தூர்வியாதிகளும், கருவில் மரித்தல் பிறந்தஉடன் மரித்தல் இளம்பிராயத்தில் மரித்தல் வாலியதசையில் மரித்தல் ஆகிய அகாலமரணங்களும், பிறர்மனைவிழைதல் பிறர்பொருள் கவர்தல் பிறர்குடி கெடுத்தல் பொய்ச்சான்று பகர்தல் மதுபானம்செய்தல் கொலைபுரிதல் முதலிய துர்க்கிரியைகளும் இவ்விந்துதேசத்திற் கிடையாவோ; இவைகளெல்லாம் இவ்விந்துதேசத்திலும் ஒப்பவிருப்ப, தேசக்ஷேமத்திற்கு மதங்களும் ஓர் காரணந்தானென்றது என்னஆதரவைப்பற்றி ! திண்ணைக்குத் தேள்கொட்ட முடாவிற்கு நெறிகட்டியதென்பதுபோல் தேசக்ஷேமத்திற்கு மதங்களும் ஓர் காரணந்தானென்று மொட்டந்தலைக்கும் முழங்காலிற்கும் முடிபோடுவது வியவகாராதிகளோடோடும் வித்துவான்களுக் கழகாமா? மதங்களால் ஒற்றுமை யுண்டாகின்றதென்கின்றரோ, மத ஒற்றுமையாற்ருன் க்ஷமணுதிகளைச் சைவர் கழுவேற்றினர்கள்போலும்! மதஒற்றுமையாற்ருன தென்கலையார் வடகலையாரையும் வடகலையார் தென்கலையாரையும் கோடிகோடியாய் வெட்டிமடித்தார்கள் போலும்! நேற்றுநடந்த ஆப்கானிய யுத்தத்திற்கும் சேலம் கலகத்திற்கும் காரணம் மதங்களால் உண்டான ஒற்றுமைதான் போலும்! இதுகளையெல்லாம் அனுபவயுக்தமாய் அறிந்துதான் நமதுபிரியா பிரம்மஸ்ரீ - சீனிவாச சாஸ்திரியார் காகத்தின்கழுத்தில் பனங்காயைக்கட்டினதுபோல மதத்தின்கழுத்தில உலகக்ஷேமத்தையும் ஒற்றுமையையுங் கட்டினார்போலும் ! மனம் என்பது இது, அதன் இலக்கணங்கள் இன்னவென்று நிரூபிக்கவேண்டிய நமது நண்பர் "மூளையென்பது மனத்திற்கு ஓர் ஸ்தானந்தான்" என்றும் அதற்கு அறியுந்தன்மை யில்லையென்றும் கூற, அதன்மேல் மனமென்பதுதான் யாதென யாம் வினுவ; அது அறிவின் தெளிவென்றும், அறிவு யாதெனில், புலனுணர்ச்சியென்றும், புலன் யாதென்னில் அவை கருவியென்றும், ஓரிடத்திலும் தரித்துநிற்காமல் ஓடிஓடி மறைந்தால் இவரைப்பரிகாசம்செய்யாமல் வேறென்செய்யலாம்.

நமது முன்னோர்கள் நாத்திகத்தை யெவ்வாறு கண்டித்தார்கள் என்று நாம் வினுவியதற்கு நமது நண்பராகிய சாஸ்திரியார் "கண்டன கண்டகாத்தியம்" "நியாயகுசுமாஞ்சலி" "ஈசுரானுமான சிந்தாமணி" என்று சில நூற் பெயரைமட்டுமே யெழுதிவிட்டார். இத்தகைய நூற்களில் அதி சிரேஷ்டமா

ன ஒன்றில் ஓர் நியாயத்தையெடுத்து நாத்திகத்தை இவ்வாறு நிர்விவாதமாய் கண்டித்திருக்கின்றார்கள் என்று காட்டுவாரோல், அதன்மேல் ஆக்ஷேபம் நிகழாவிடத்து உசிதமென்றேகொள்ளச் சித்தமாயுள்ளேம. இங்ஙனம் செய்யாமல் நூற்பெயர்மட்டில் சொனனதினுல் மலேவெய்த தென்னுலுராமன் காலத்திருந்த வித்துவானல்ல நாம். (தென்னுலுராமன் காலத்திருந்த வித்துவான்கதை யாதெனின்:—இராஜசமஸ்தானத்தில் ஓர் பிரபல வித்துவான்வந்து இறுமாந்திருந்ததைச்கண்ட அந்த சமஸ்தான வித்துவான்கள் பயந்து தென்னுலுராமனிடம் முறையிட, அத்தென்னுலுராமன் ஓர் தந்திர யுத்தியால் அவனே யோட்டிவிடக்கருதி எள்ளின் சுள்ளியை எருமைக்கட்டுங் கயிற்ருல் புத்தகருபமாய்ச்கட்டி கட்கத்திற்கொண்டுபோய் இராஜசமஸ்தானத்தில் பொத்தெனப் போட்டான். அங்குள்ளார் அது என்னபுத்தகமென்ன அவன் அது "திலகாஷ்டமகிஷபந்தனம்" என்ருன். அங்கிருந்த அவ்வித்துவான் அப்பெயருக்கே பொருள் விளங்கிக்கொள்ளக்கூடாமையால் நூல்எத்தன்மைத்தோவென மலேத்துப் போனவிடம் தெரியாமல் ஓடிவிட்டான்.

பிறந்தகுழந்தைகளுக்கும் ஜீவனுண்டே மனமுண்டாவென யாம் கேட்டது இவர்கூறிய மனேதத்துவத்தைச்சுட்டியேயல்லாமல் வேறல்ல. யாமும்முன்குழவியாயிருந்தே வளர்ந்து முதிர்ந்தவராதலால் எமக்கு அக்காலத்தில்மனமிருந்ததாய் அப்போதும் எப்போதும்தோனறவில்லே. மனம் என்பதற்குயாம் கொண்டபொருள் இன்னதென்று நிர்விவாதலக்ஷணயுத்தமாகவும், அனுபவப்பாங்காகவும் பின்னர்நாம் சித்தாந்திக்குங் கால்காட்டுவோம். "வீட்டின்உறுப்புகளிற் சோரதமனிதன் வீட்டிலிருப்பதும், அவ்வீட்டின்ஓர்பாகம் கெட்டால் அவ்வீட்டைவிட்டுமனிதன் ஓடுவதும் நாம்கண்டோமாதலால் அதுபோலசரீரத்தின்ஓர்பாகம்கெட்டால் ஆத்மாவேறுசரீரததைத் தேடிககொள்கின்றது" என்று குறிப்பிக்கின்ருர். இங்ஙனமேல் சரீரத்தின் ஓர்பாகமாகிய கை-கால் கண் மூக்கு நாக்கு இவை பழுதுபட்டதேகத்தில் ஆத்மாவெனப்பட்டது ஓடாதுஇருப்பதும், தலேமூளே இருதயம் இவைபழுதுபட்டதேகத்தை விட்டு அவ்வாத்துமாஓடுவதும் ஏன்? இத்னுல் ஆன்மாவுக்கும் சரீரத்திற்கும் சம்பந்தமில்லேயென எப்படிச்சொல்லலாம்? குளோரபாரம் என்னும் மயக்கவஸ்துவை உசுவாசித்தலினுல் உதிரவோட்டந்தவிர தேகவுறுப்புகள் ஒன்றும் கெடாதிருக்கபிணமாவதேன்?

## இந்துதத்துவபிரபாவம்

நமது முன்னேர்கள் பிரதமத்திலேயே தத்துவக்கியானிகளாக விருநதார்களென்பதற்கு அன்னேர்சாத்திரங்களே போதிய ஆதாரமுடயவைகளாகவிருக்கின்றன. பல வேறுவிதமான தத்துவாம்ஸ தாத்பரியங்கள் நாளுக்குநாள் பரவிவந்ததென்பது வேதத்திலே, (பிராமணம்) என்னும் அமிசத்திலேகாணலாம். உபநிஷத்துகளிலும் இதனதுஉண்மை விளங்கக்காணலாம். இவர்கள் பரிபாலித்துவந்த நூல்களே-நியாயம், வைசேடிகம், சாங்கியம்,யோகம், பூர்வமீமாம்ஸம், உத்ரமீமாம்ஸம். இவற்றை முறையேசெய்தவர்கள் கௌதமர்-கணுதர் - கபிலர்-பதஞ்சலி-சைமினி-வாதராயணர்-அல்லது வேதவியாசர். இவர்கள் அனேவரும்தத்தம்நூலே நியாயநூலின் பிரமாணத்தைக்கொண்டே செய்தவர்களாதலாலும் அந்தநியாய நூலில் கூறும் பதார்த்தஇலக்கணங்களில் காரணரூபமாகிய ஒவ்வொருபரமாணுவும்நித்தவியாபகமென்கின்றமையானும்,எல்லாப்பதார்த்தங்களும் அணுச்சையோகமேயாதலாலும், காரணம் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தாகவே அதன் காரியமுமிருத்தல் வேண்டுமாதலாலும், பரமாணுவின்காரியமாகிய பதார்த்தம் நித்தியமென்பது நாட்டப்பட்டது. இந்த சித்தாந்தத்தை ஆங்கிலேயர் [Materialism] என்கின்ருர்கள். சிலர் பார்க்கப்பட்ட உலகாதி சகலபதார்த்தங்களும் உண்மைப்பொருள்கள் அல்லவென்றும், அவை விசாரணேயில் சொரூப பேதப்படுகின்றமையால் சூன்னியமென்றும், அவற்றை அறியும்மனமே சகலமுமென்றும்சொல்கின்ருர்கள். இதை ஆங்கிலேயர் [Idealism] என்கின்ருர்கள். மூன்ருவது வகுப்பினர்களாகிய இன்னுஞ்சிலர் தமக்குத்தோன்றுகிற சித்துசடமாகிய சகலமும் உலகாத்மகமென்றும்; அதுவே கடவுளென்றும், உள்ளவைசகலமும் அவராற்சிருஷ்டிக்கப்பட்டதென்றும், எது எது எவ்வாறு என்னகாரணத்திற் கிருக்கின்றதோ அது அது அவ்வாறு இருத்தலேசரியென்றும்சொல்லுவர். இனி இம்முப்பகுதியினேயுடைய தத்துவக்கியானங்களின் சம்பந்தா சம்பந்தங்களேயும் தொந்தநிர்த்தொந்தங்களேயும் பங்கமில்லாமல் சங்கையற அங்கை நெல்லிக்கனிபோல் இங்கெடுத்துரைப்பாம். நியாயசாத்திரமானது, நமக்குப்புறம்பாயுள்ள பிரபஞ்சத்தினளவே நமது அறிவு விளங்கியிருக்கும்என்றும், அப்பிரபஞ்சத்தில் நமக்கு விளங்குகிற அறிவுஐந்தேயென்றும்,அவை சத்த பரிச ரூப ரச கந்தங்களேயே அறியுமென்றும், இவற்றிற்கு ஆதாரமாகவும் உலககாரணமாகவும் உள்ளவை பஞ்சபூதங்களேஎன்றும் அதைத்தவிர வேறென்றில்லேஎன்றும் கூறும்; வைசேடிகமோ நியாயத்திறகுச்சார்பாய் விசாரவிர்த்திசெய்து சகலமும் பரமாணுவினகாரியமேஎன்றும் மனமாதிகள் அணுநித்தியமாகிய அவ்வணுக்களின்பால் அந்தர்க்கதமாய் வியாபித்திருக்கின்றனவெனறும், அவையொருகாலும் பிரத்தியேகமாகாவென்றும்நிரூபிக்கும். இவை பிரத்தியேகமெனில் இதனே தற்காலம் அங்கிலேயர் [Realism] என்பார்கள். (இன்னும்வரும்)

## கொலேசெய்யாதிருப்பாயாக.

ஜோசெப் ஸைம்ஸ் என்பவர் முன்னே பாதிரியாராயிருந்து இப்போது ஆஸ்திரேலியாவிலே லவுகீகசங்கத்துக் தலேவராய்ப் பத்திரிகைமூலமாயும் உபந்நியாசமூலமாயும் சுவக்கியான அபிவிர்த்திசெய்துவருகிருர். அடியில்வருவது அவரால் எழுதப்பட்டது.

"கேலேசெய்யாதிருப்பாயாக" என்னும் இந்த கம்பீரமான அபிப்பிராயம் எங்கிருநதுவந்து யூதர்களுடைய நீதிபுஸ்தகத்தில் நுழைந்தது? ஒருவேளே எல்லாக கிரந்தங்களினும் மிகவும் இழிவானதாகிய பைபில என்னும் புஸ்தகத்திலே அந்த வாக்கியத்தைக் காணுவது விந்தைதான். இந்த வாக்கியமானது கழுத்தறுக்கிற உருவங்கள் வரிசைமத்தியில் அருளுருவம் போல நிற்கிறது. "கொலேசெய்யாதிருப்பாயாக"! இந்த வார்த்தைகள் புலியின்வாயிலிருந்தாவது, போப்புமதத்தைவிட்டு கன்றவனேத் தெண்டிக்குஞ் சங்கத்தான்வாயிலிருந்தாவது, தற்காலத்திய மதப்பித்தன் வாயிலிருந்தாவது வந்தாலும்வருமேயல்லாமல், அவிஸ்வாசியாகிய மோசே, கொலேபாதகனுகிய ஜாஷ்வா, ஆவியாகிய ஏகோவா இவர்களுடைய வாயிலிருந்து வந்தவையேயல்ல. சென்ற சகாப்தத்திலுண்டான மற்ற கற்பனேகளோடுகூட இந்தக்கற்பனேயையும் முக்கியமாய் புத்தசமயக் கொள்கையிலிருந்து திருடியிருக்கவேண்டும்.

அந்த வாக்கியம் எங்கிருந்துவந்தாலும் வரட்டும் நிமித்தமில்லே, அது கம்பீரமானதே, அதினுடைய உண்மைப்பொருளேக் கிரிஸ்தவர்கள் இன்னும் ஆதரணேசெய்தவர்களல்ல. "இரத்தஞ்சிந்தும் ஆட்டுக்குட்டியை" (ஏசுக்கிரிஸ்துவை) பின்பற்றுகிறவர்களேப்பார்க்கிலும் வேறே எந்தஜனங்களும் இரத்தத்தை அதிகமாய் விரும்புகிறதில்லே. ஏதாவது சம்பந்தமுண்டா! இருக்கலாம்! இரத்தத்தைப் பார்ப்பதினுலே நமது சாதியாருக்குக் கொடிய பாசங்கள் மூளுகின்றன; புலிக்கு எவ்வளவு ருசியுண்டாகிறதோ அவ்வளவு ருசி கிரிஸ்தவர்களுக்குண்டாகிறது. தீர்க்க அவஸ்தையைப் பார்த்துக்கொண்டிருப்பதினுலே ஹிருதயம் மழுங்கி, நமக்கு இயல்பாயுண்டாகிற நல்ல அபிப்பிராயங்கள் இரும்பாய்ப்போகின்றன. கிரிஸ்து சிலுவையிலறையப்பட்டதைக்குறித்து குருபீடங்களிலிருந்து சொல்லப்பட்ட கொடிய வர்னனேகளும் சிலுவையிலறையுண்டவனேத் தொழுவதும் வேறொரு பிரயோசனத்தைத் தருவதைப்பார்க்கிலும், மானிட ரத்தத்தில் ஆவலே வளர்க்க அதிக உதவியாயிருந்திருக்கின்றன. சகலதிமைக்கும் காரணனுயிருக்கிற இரத்தப்பிரியக்கடவுளே வெகுகாலமாய்த் தொழுதுவருவதும், நமது வாலிபர்களில் அநேகர் உள்ளாயிருக்கிற பைபில் சட்டத்தில் நெடுங்காலமாய்ப்படிந்து தோய்ந்திருப்பதும், இவையெல்லாம் நமது தேசத்தாரை மானிட உபத்திரவத்தை உணரவொட்டாமற் செய்வதற்கு அனுகூலமாயிருக்கின்றன. நாளதுவரையிலும் நமது குற்றவாளிகளேச் சிறையிலடைத்தும் பலகைமேற் படுக்கச்செய்தும் வேதனேப்படுத்தி வருகிறேம்; குருக்கள்மாரும் ராசாக்களும் தூக்குமரமில்லாமல் ஆளுகைசெய்வது இதுவரையில் அசாத்தியமாகவே காணப்படுகிறது.

ஜான்ஸ் என்பவருடைய விஷயமானது இந்தச் சங்கதியை அதற்குரிய சகல கோரங்களுடனே மறுபடி நமக்கெதிரில் கொண்டுவந்துவிடுகிறது. ஒருவன் கொலேசெய்கிருன், அல்லது கொலேசெய்ய எத்தனப்படுகிருன்; ஜனசமூகத்தார், அதாவது—பாதிரிமார், மாஜிஸ்திரேட்டு, ஜட்ஜி, ஜூரி முதலானவர்கள் சகலரும் சாந்தமாய் ஆழ்ந்த கருத்துடனே அவனேக் கொலேசெய்கிருர்கள்! அவர்களெல்லோரும் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று கூக்குரலிடுகிருர்கள். பழிக்குப்பழி வாங்குவது எனது வேலேயாதலால் அதற்கு வதில்செய்வேனென்று கர்த்தர் சொல்லுகிருர். பழிக்குப்பழிவாங்குவது தனது வேலேயென்று குருக்கள்சொல்லுகிருர். பழிக்குப்பழிவாங்குவது எனது என்று ஜட்ஜி சொல்லுகிருர். பழிவாங்குவது எங்களுதென்று ஜூரார்கள் சொல்லுகிருர்கள். அந்தவேலே தன்னதென்று தூக்குமரக்காரன் சொல்லுகிருன். அவ்வாறே ஜூரார்கள் குற்றவாளியென்று தீர்மானிக்கிருர்கள். (அந்த இழிவான வேலேக்காக) ஜட்ஜி கறுப்பு குல்லாய் போட்டுக்கொண்டு, ஐயோ பாவம்! கைதியைத் தூக்குக்குப்போவென்று சொல்லுகிருர்; குருக்கள் அவனுடைய ஆத்ம ரட்சிப்புக்கு வேலேசெய்து, அவனே ஒருமிக்கத் தூக்குக்கும் மோட்சத்

திற்கும் சித்தஞ்செய்கிறார்; பின்பு அந்த தேசத்தாருக்குள் உயர்ந்த தொழிலாளி அவனைக்கொலைசெய்கிறான்.

அவர்கள் அதைக் கொலையென்று சொல்லுகிறதில்லை; அது பின்னென்ன? இதுவும் முன்கொலைக்குச் சமானமான கொலைதான். அன்றியும், முதற்கொலைக்கு ஏதோ ஒவ்வொரு சமாதானமுண்டு, இரண்டாவதுகொலைக்கு ஒன்றுமில்லை. தூக்குக்குப் போகிறவர்களல்ல எப்போதும் பெரியகுற்றவாளிகள். ஜனசமூகமானது குற்றவாளிகளை விர்த்திசெய்து, பின்பு தன்னுடைய பராக்கிரமத்தைக் காட்டுவதற்கும், தான் மிகவும் பரிசுத்தமாயிருப்பதாகத் தெரிவிப்பதற்கும் அவர்களைக் கயிற்றால் கட்டுகின்றது!

பாருங்கள், இவையெல்லாம் கொடுந்தன்மை; கொடிய மதத்தினால் வளர்க்கப்பட்டு விசசிக்கப்படுகின்றன; உள்ளபடி கிறிஸ்துமதத்தைச் சேர்ந்தனவே, முக்கியமாய் அந்த மூடபக்தியைச் சேர்ந்தனவே. இரத்தஞ்சிந்தாமல் பாவ மன்னிப்பு கிடையாது. உயிர்போக்குந் தெண்டனையை நிறுத்திப்போட யார்சம்மதித்தபோதிலும் பாதிரிமார் சம்மதிப்பது அரிது. அவர்கள் பயமுறுத்தித்தான் ஆளவல்லவர்கள்; தூக்குமரமும் நரகாக்கினியுமில்லாவிட்டால், அவர்கள் உடனே விட்டொழியவேண்டியவர்கள்தான்.

ஒருமனிதனைத் தூக்கிற்போடுவதைப்பார்க்கினும் மகாஜனங்களுக்கு அதிக மூர்க்கமானசெய்கை வேறொன்றிருக்கிறதா? அதைக்குறித்து நினைத்துப்பாருங்கள். அதுகொலையைவிட அதிக கெட்டது. சாதாரணமாய் கொலையிலே கொலையுண்டவன் தனக்கு இன்ன ஆபத்து வரப்போகிறதென்று முந்தி தெரியாமலே யிறந்துபோகிறான்; குற்றவாளியோ மரணசிட்சைவிதிக்கப்பட்டபின்பு பலவிசை சிலவாரம் சும்மாவைக்கப்படுகிறான். மகாஜனங்கள் அவனைச்சித்திரவேதனை செய்கிறார்கள்: அதாவது—தூக்குமரத்தையும் கயிற்றையும் பாவித்துககொள்ளுவதற்கும், பின்கட்டாய்க்கட்டப்பட்டதாயும் கழுத்தில் கயிறுமாட்டியிருப்பதாயும் உணருவதற்கும், அதைக் கனவிற்கண்டு, கயிறறில் தொங்குகிறாப்போல பெருமூச்செறிந்து, திகிலுடனே விழித்துக்கொள்ளுவதற்கும் அவனுக்கு சாவகாசங்கொடுக்கிறார்கள். அவன் ஒரேஒருதரம் ஒரு நபரைக்கொன்றதினாலே அவனை மகாஜனங்கள் ஆயிரந்தரம் கொலைசெய்கிறார்கள். இது—விசாரணைக்கர்த்தராகிய ஏகோவாவைப்போலவும் இக்காலத்துப் பாதிரிமாரைப்போலவும், ஆழ்ந்த கருத்துடனே சாந்தமாய்ப் பழிவாங்குகிறதல்லவா? அதை ஒருவன்செய்தால் மிகவும் பரிதாபப்படத்தக்கதுதான். ஆனால் ஒருதேசத்தாராகிய அசேஷ ஜனங்களும் ஒருவனைக் கொலைசெய்ய ஒன்றுசேர்ந்து, அதுவும் திருத்தமான கொடுமையோடு செய்வது எப்படிப்பட்டதோ? இது அளவிட்டுச் சொலலக்கூடாமையான மூர்க்கத்தனம்.

இந்தக் கொடியசட்டங்களைச்செய்து ஆதரித்துவரும்படி பார்லிமெண்டு மெம்பர்களை நிர்ப்பந்திக்கிற பாதிரிமார்களை நாம் நிர்ப்பந்திக்கிறவரையில் தூக்கில்போடுவது ஒழியாதென்று நினைக்கிறேன். நாம் கொஞ்சம் முன்னுக்கு அடியெடுத்துவைத்து பார்லிமெண்டு மெம்பர்களையாவது குருக்கள்மாரையாவது, தூக்கிற்போடுந் தங்கள் தொழிலை அவர்களையே நடத்தும்படி நாம் செய்கிறவரையில், தூக்குக்கொலையை நாம் நிறுத்தமாளாதென்பது எனது தாற்பரியம். முக்கியமாய் அவர்கள் சுயக்கியானி ஒருவனைத் தூக்கிற்போடவேண்டியதாயிருந்தால், அவர்களிற்சிலர் அதைத் தாங்களே செய்வார்களென்பதற்குச் சந்தேகமில்லை. நமது சட்டநிர்மாணதிகாரிகளே தங்கள் கொடிய சட்டங்களை நிறைவேற்றுவதைப் பார்ப்பது வேடிக்கையான காட்சிதான். அந்த துரைமார்கள் ஒருகுற்றவாளியின்பேரில் தங்கள் தொழிலைத் தாங்களேசெய்து முடிப்பதைப் பார்ப்பது பின்னும் விநோதமான காட்சியே. ஆயினும், ஒரு பிஷப்பாவது எத்தனையோ யுகங்களைகண்ட ஏகோவாவாவது பூர்வீக மோஸ்தரிலே உக்கிரங்கொண்டு, தூக்குமரத்தைச் சுற்றிச்சுற்றிக் கூத்தாடிக்கொண்டு, ஏககாலத்தில் அரைடஜன்பேரைத் தூக்கிற்றொங்கவிட்டுச் சட்டத்தை நிறைவேற்றி, அது போதாமல் சுற்றுமுற்றும்பார்த்து, ஐயோ, இன்னும் தூக்கில் மாட்டுவதற்குப் பெருத்த கும்பு அகப்பட்டால் தாவளையா யிருக்குமேயென்று நினைத்து ஏங்கிநிற்பதைப்பார்ப்பது எவ்வளவு விநோதமான காட்சியாயிருக்கும்!

ஒருவனைத் தூக்கிற்போடும்படி உண்மையாகவே யிரக்கமுள்ள வேறொருவனுக்கு உத்தரவுசெய்யப்பட்டால், இவன் உடனே தன்னைத்தானே தூக்கிலமாட்டிக் கொள்வானென்று என்னுடையதுணிபு. கோபத்திலே நம்மில் அநேகர் அடிக்குஅடியாவது ஓடிக்கு இரண்டடியாவது அடிப்பார்களென்றும், நம்மைநாம் காத்துககொள்வதில் சட்டத்தைமீறிநடப்போம்அல்லது கொலைசெய்தாலுஞ் செய்துவிடுவோமென்றும் நாம்நினைக்கக்கூடும்; ஆனால் கோபமூட்டப்படாதிருக்கச்சே, சாந்தத்துடனே தனபோலியமனிதனை, மூட்டையிலிருந்து கரியைக்கொட்டிவிடுவதுபோல ஏதோஒரு சாதாரணமான வேலைபுரியு மோஸ்தராகத் தூக்கில்மாட்டிக் கழுத்தையொடித்துக் கொல்லுகிறவனுடையநிலைமையை எண்ணிப்பார்ப்போம். இதைச்செய்யத்தக்கவன் சுத்தமாய் நாகரீகமற்ற இழிவான மவுடீகன்தான். இந்த ஒருசங்கதியே தூக்கிற்போடுவதை நிந்திப்பதற்குப் போதுமானதாயிருக்கிறது. நமதுதேசத்தாருக்குள் மிகவும் இழிவான மிலேச்சன்தவிர இந்தக்காரியத்தை வேறொருவன் செய்யமாட்டான். அணுவத்தனையாவது மனிதத்தன்மை யுள்ளவன் தூக்குப்போடுகிறவனா யிருக்கமாட்டான். இதனாலேயே தூக்கிற்போடுவது குற்றமென்றும், மகாஜனத்துக்கு அவமானமென்றும், நாகரீகத்துக்குப் பழியென்றும், கொடுமையில் மிகுந்துநிற்கிற அம்சமென்றும், ஆனால், மந்திரக்காரி, யூதன், மதப்பித்தொழிந்தவன் இப்படிப்பட்டவர்களை பூர்வகாலத்து பக்திமான்கள தீயிலிட்டுச் சுட்டெரித்து, கடவுளிடத்தும் மானிடரிடத்தும் தங்களுக்கிருந்த அன்பைத் தெரிவித்தகொடுமைகளுக்குப் புறம்பான கொடுமையென்றும், விளங்குகிறது.

A. M.

---

## ௪௩ மெய்யறிவு.

### ௨-ம் பாகம்.

---

ஆத்துமா அழிவில்லாததா?

(208-வது பக்கத்தொடர்ச்சி.)

உன்மத்தன்விஷயத்தி லிருப்பதுபோல, மூளையின் ஏற்பாடு பழுதாகவாவது குறைவாகவாவ திருக்கும்போது, அறிவும் குறைவாயிருக்கிறதே, ஒரு உன்மத்தன் மனத்தொழிலைச் சரியாய்ச்செய்ததை எவனாகிலும் எப்போதாவது பார்த்திருக்கிறானா? அப்படிப்பட்டவனுக்கு நீ அறிவை யூட்டமாட்டுவையா? அறிவு விளங்கப்பண்ண முயற்சிசெய்தபோதிலும், அதுகுறைவு குறைவாகவேயிருக்கும். மனத்தொழில்களை நடத்துவது மூளையென்பதற்கு இந்தருஜுவே போதாதா? மூளையின்சக்தி குறைவாயிருக்கும்போதெல்லாம் மனதின் சக்தியும் குறைந்திருப்பானேன்? என்று (Robert Cooper) வினவுகிறார்.

ஆத்துமாவின்தொழில் அறிவென்றால், தேகத்திற்கு நோயுண்டாகும்போது ஆத்துமாவின்தொழில் கெடுவானேன்? ஆத்துமா அழிவில்லாததாயிருக்க, அது அழியத்தக்க இந்ததேகத்தில் சேர்ந்து தேகம்படுகிற அவஸ்தைகளுக்கெல்லாம் ஆளாகுமோ? நாகசுரம் ஊதுகிறவன் அந்தநாகசுரம் கெட்டுப்போகும்போது அதில்ஊதியும் தொனியெழும்பாம லிருப்பதுபோல, மூளையைத் தன்னுடைய கருவியாகக்கொண்டு வேலைசெய்கிற ஆத்துமா அந்தக்கருவி கெட்டுப்போயிருக்கும்போது அதின்மூலமாய் ஒன்றும் செய்யத்தக்கதல்லவென்றால், ஆத்துமாவிற்கு மூளையென்பதொன்று இருக்கவேண்டுமென்றும் அந்த மூளை நல்லஸ்திதியி லிருக்கவேண்டு மென்றும் சொல்லவேண்டியதாகிறது. ஆத்துமாவிற்கு அவசியம் மூளை யிருக்கவேண்டியதாகில் மூளையில்லாவிட்டால், ஆத்துமா இருந்தும் பிரயோசனமில்லை; ஆத்துமா இருப்பதுகூடநமக்குத் தெரியாதல்லவா?

அறிவுக்கு ஸ்தானம் மூளையென்பதினால், தலையை தேகத்திலிருந்து வேறுபடுத்தியபோதிலும், மூளைதன்னுடைய அறியுந்தொழிலைச் செய்யவேண்டுமே யென்று கேட்கிறார்கள். அப்படிகேட்பதுநியாயமேயாயினும், மூளைக்கு ஹிருதயத்திலிருந்து ரத்தநாடிகளின் வழியாய் ரத்தம் போகவேண்டுமென்பதையும், அப்படி ரத்தம்போனாற்றான் மூளை தன்னுடைய வேலையைச்செய்யுமென்பதையும், ரத்தம்ஒழிய, அந்தவேலையும் ஒழியுமென்பதையும், அவர்கள் கவனிக்கவில்லை போலும். அப்படிக் கேட்கிறவர்களுக்கும்பிரமாண பூர்வகமாய் உத்தரஞ்சொல்ல ஐரோப்பாசாஸ்திரிகள் ஏற்பட்டிருக்கிறார்கள். (Dr. Buchner) புஷ்னர் என்னும் சாஸ்திரி அடியில் கண்டவாறு எழுதுகிறார்.—ஒரு நாயின் தலையை அறுத்துவிட்டு, அந்தத்தலையின் உயிர் படிப்படியாய் அற்று, கண்கள் மூடிக்கொண்டு, மற்றவுறுப்புகளும் முறைத்துக்கொள்ள, அந்தச்சமயத்தில் மூளைக்குப்போகிற நாடிகள்வழியாய்ரத்தத்தை உட்புகுத்தினால் சூடுஏறுகிறது, உயிர்நீங்கியதலைக்கு மறுபடி உயிரு

ண்டாகிறது, கண்கள் திறக்கின்றன, உணர்ச்சியும உண்டாகிறது, அந்தத்தலை பக்கத்திலிருக்கிறவர்களை கண்களால் உருட்டிஉருட்டிப் பார்க்கிறது; அந்தநாயின் பெயரைக்கொண்டு அழைத்தால் அழைக்கப்பட்டவழியாய்க் கண்கள் பார்க்கின்றன. உயிர்மறுபடிவருகிற இந்தக்குறிகள் அப்படி ரத்தம்ஏற்றிக் கொண்டிருக்கிறவரையில் இருக்கின்றன; ரத்தமேற்றுவதை நிறுத்தினால், அந்தக்குறிகள் ஒழிந்துபோகின்றன; மறுபடியும் ஏற்றினால் மறுபடியும் உண்டாகின்றன. மனிதனுடைய அறுபட்ட தலையில் இன்னும் இந்தபரிட்சை செய்து பார்க்கவில்லை; செய்தால் அப்படியே சித்தியாகுமென்று நினைக்கலாம். இப்படிப்பட்ட பரிசோதனை செய்துவருகிறவர்களில் முக்கியமானவராகிய (M. Brown Sequard) என்பவர் சிலநாளைக்குமுன்னேதான் ஒரு மனிதனிடத்திருந்து அறுத் தெடுத்துவிடப்பட்ட கையில் பரிட்சைசெய்து பார்த்தார். உஷ்ணம், உணர்ச்சி, விரல்கள் மடங்கல் முதலிய அதற்குண்டான சகலதொழில்களும் நிறைவேறின. அவர் அலுத்துப்போகிறவரையில விட்டுவிட்டுச் செய்து சித்தியாவதை நிச்சயப்படுத்தினாரென்று, இப்படி மேற்கண்ட சாஸ்திரியார் சொல்வதைவிட வேறென்ன ருஜு வேண்டியிருக்கிறது? மேற்கண்ட நியாயங்களை சரியானவைகளென்று ஒப்புக்கொள்ளுகிறவர்கள் அடியில் கண்டிருக்கிற வர்த்தகசங்கதியை உண்மையான ஆத்மவியாபாரந்தானென்று நினையாமற்போகார்கள்.

கப்பல்யாத்திரை செய்தும் ஓடிஅலைந்துதிரிந்தும் ரத்நமுதலிய உயர்ந்தசரக்குகள் முதலாய்த் தாழ்ந்த சரக்குகள் வரையில் கொள்வன விற்பன செய்து, ஒவ்வொருசரக்கை எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை, எண்ணலளவை என்னும் ஒவ்வோரளவையால் அளந்து வர்த்தகம்பண்ணுகிற வியாபாரிகள் ஒருகால் லாபமடைவதும் ஒருகால் நஷ்டமடைவதும் போலல்லாமல், ஆத்துமாவென்னும் ஒரேஒருசரக்கை கிரயத்துக்குக் கொள்பவன் பெற்றுக்கொண்டதாக மந்திரமாகிய தந்திரத்தினால் பாவனைகாட்டி மயக்கிவிட்டு, எவ்வளவேனும் செலவிடாமலே தங்களிடத்திலேதானே எப்போதும் இருப்பாக வைத்துக்கொண்டு, அந்த ஒரேசரக்கைப் பலருக்கும் வாயினால் காட்டிக்காட்டி மறைத்துமறைத்து, பவித்திரம் பாபநாசனம், ஆத்மசுத்திபஞ்சகவ்யம், புண்ணியாவாசனம், தர்ப்பணம முதலிய காலணா அரையணா லாபமுள்ள சிறுவர்த்தகங்கள் தொடங்கி, துலாபாரமுதலிய பெருவர்த்தகங்கள் வரையில் எதையும் விடாமல் அந்த ஒரேசரக்கிலே, மேற்கண்ட நான்கு அளவைகளாலும் வாயினால் அளந்துகாட்டி, நஷ்டமென்பதெவ்வளவேனு மில்லாமல் நிச்சயமான லாபத்திற்கே வியாபாரஞ்செய்கிற நமது ஆசாரியர்களும் குருக்கள்மார்களும், தங்களுடைய சொந்தலாபத்திற்கேதங்கள் சரக்கை எவ்வளவுசிலாகித்துச் சிரேஷ்டப்படுத்தவேண்டி யிருக்கிறதோ அதைநாமே யோசித்தறியவேண்டும்.

ஆத்துமா அழிவில்லாதபதார்த்த மென்பதொன்று ஏற்பட்டதினாலல்லவா உலகத்தில் அநேகமாக வெவ்வேறு மதங்களும், அந்தந்த மதத்திற்கு வெவ்வேறு வேதாகம சாஸ்திரபுராணங்களும், அதற்கு உபபலமாக அநேக அற்புதங்களும், இவைகாரணமாக நமக்கு வீண்திரவியச்செலவும, அநேகருக்கு ஜீவனோபாயமு முண்டாகி, எவ்வளவோ மலைந்து விரிந்துபோயிருக்கிறதென்று யாவருக்கும் ஸ்பஷ்டமாய் விளங்கும்.

ஆத்துமாவென்கிற அழிவில்லாத ஒருபொருள் இருக்குமாயின், அப்படிப்பட்ட பொருள் இல்லையென்று சொல்வதினாலே அது அற்றுப்போய் விடுமோ, அல்லது அதற்குத் தீங்குதான் வருமோ? நாம் இந்தவிஷயத்தை தூரபிமான மில்லாமல் யோசித்துப்பார்த்து அறிந்துகொள்ளவேண்டும். (உண்மையான) சாஸ்திரானுசாரமாய்ப் பார்க்கில் மேற்கண்ட விதமாய்த்தான் முடியும். மனிதனுடைய ஆத்துமா அழிவில்லாததென்பதற்கு விக்கினம் வந்தபோதிலும், அவனுடைய நற்செய்கைகளுக்கு அழிவுவருமோ? அழிவுவருமென்றே சிலர்சொல்லுவார்கள். அவர்களுடைய அபிப்பிராயத்தைப்பற்றி நான் எழுதுவதற்கு இது இடமல்லாததால், பின்வருஞ் சஞ்சிகைகளிலொன்றில் எழுதக்கருதுகிறேன். மனிதனுடையஆத்துமா அழிந்துபோவதானாலும், அவனுடைய நற்கிரியைகளும் நல்லெண்ணங்களும் அழியாமலேயிருந்து, பின்வருகிறவர்களுக்கு வழிகாட்டிக்கொண்டே யிருக்கும்.

## வர்த்தமானம்.

**பிரமாதம்.**—சென்னையைச்சார்ந்த 'பீப்பில்ஸ்பார்க்கு' என்னுந்தோட்டத்தில் சிலவருஷங்களாய் நடந்துவருகிறபடி இவ்வருடத்திலும் சந்தைவேடிக்கை நடந்துவருகையில் சென்ற சுக்கிரவாரம் சாயங்காலம் தீபபொறிபட்டு பந்தல்பற்றிக்கொண்டு நேரிட்ட உயிர்ச்சேத முதலிய மகத்தான ஆபத்தை தெரிவிப்பது மிகவும விசனகரமாயிருக்கிறது. மறுநாள் சனிவாரமும் சில பிரேதங்கள் உருதெரியாமையினாலும், சுற்றுப்பக்கங்களிலுள்ள தங்கள்தங்கள் உறவினரும் நண்பர்களும் என்னகதியானார்களோ வென்கிற ஏக்கத்தினால் ஜனங்கள் அலைந்துதிரிந்ததினாலும் பட்டணம் அல்லகல்லோலமாயிருந்தது. தீயினால் வருத்தமுற்றவர்களெல்லோரும் உடனுக்குடனே ஜனரல் ஆசுபத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டு, மற்ற ஆசுபத்திரிகளிலுள்ள ஸ்திரீவைத்தியர்கள் முதலாய் வெளிவைத்தியர்கள் சிலரும்வந்து உதவிசெய்தார்கள். துரைகள்முதலானவர்கள் தீயினின்றும் ஜனங்களைவெளிப்படுத்த வெகு பிரயாசையெடுத்துக்கொண்டார்கள். நசுங்குண்டும் மிதிபட்டும் இறந்தவர்கள் பலர். தோட்டத்திலகப்பட்ட பிரேதங்கள் 244, காயம்பட்டு ஆசுபத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டவர்கள் 104, அவர்களில் மறுநாள் 12 மணிக்குள் இறந்துபோனவர்கள் 48. இன்னும் இரண்டுமூன்றுநாள்செல்லாமல் செவ்வையான விவரந்தெரியவராது. சிலகுழந்தைகள் அகப்பட்டு அயலார்கொண்டுபோய்வைத்திருக்கிறார்கள்.

[இப்படிப்பட்ட சங்கட்டத்தினால் அச்சாபீசுக்கு வேலைக்காரர் ஒருவரும் வராமைப்பற்றி இவ்வாரபத்திரிகை கொஞ்சம் தடைபட்டது.]

**பர்மா.**—புத்தமதபெரியகுருக்களும் சிலமுக்கியமானகுருக்கள்மாரும் ஸர் பிரிடிரிக் ராபர்ட்ஸ் அவர்களைகிரிஸ்துமஸ்தினத்தில் கண்டுகொண்டு, தேசத்தில் அமைதியுண்டாயிருப்பதற்கு சகலவிதத்திலும் உதவிசெய்வதாகத் தங்களிஷ்டத்தைத் தெரிவித்தார்கள்; அந்தவிஷயமாய்ப் பிரபு அவர்கள் செய்து வருமுயற்சி இதுவரையில் விசேஷசித்தியடைந்ததென்று உறுதியாய்ச்சொன்னார்கள்.

அப்பர் பர்மாவிலேதற்காலத்தில் மிகுந்த குழப்பமுள்ளமாகாணம்-பேகனுக்கும் மயிங்கியனுக்கு மத்தியிலிருக்கிறமண்டுவின்தான்.

அப்பர்பர்மா வடபுறத்துக்கமீஷனராகிய மிஸ்டர் பர்கெஸ் அவர்கள் சமாதானமாகும்படி சாப்வாவை உடன்படுத்த திடமானசேனையோடுஉந்துக்குபோக ஜனவரி-மீ-3-உ புறப்படுவார். காலாள்பட்டாளம் இரண்டும், 250 குதிரையுள்ள ராணுவமும், இரண்டுபீரங்கியும், மற்றதுருப்புகளும் ஷயாபோவிலிருந்துஞ்செல்லும்.

ஜனரல்ஸ்டுவார்ட்ஆனவர் எதிரிற்சென்றராணுவதுக்குடியை சத்துருக்கும்புகட்டதாகவும், கலகக்காரர்களில் அநேகர்கும்புகும்பாய்த்தங்கள் நிலையைவிட்டுத்திரும்பியோட்டம் பிடிக்கிறதாகவும் சகடங்கிலிருந்து தந்தியடித்தார்.

இயூவுக்குவடமேற்கு 28 மயல்தூரத்திலுள்ள குழப்பமான கிராமத்தின்பேரில்அனுப்பப்பட்ட 14வது துக்குடி பட்டாளம் பதினொரு கலகக்காரர்களைகொன்று, சில ஆயுதங்களையும் 27 வண்டிகளையும் 198 மாடுகளையும் பிடித்துக்கொண்டதாகவும் நம்முடைய ஐதராபாத்துதிரைப்படையில்ஒருவன்தான் காயப்பட்டதாகவும், இயூ மாகாணத்திலிருந்துவந்த ரிபோர்ட்டினால் தெரியவருகிறது.


## தமிழ்சந்தாவிபரம்.

| உள்ளூர்—(அட்வான்சு.) | | Rs. | A. | P. | வெளியூர்—(அட்வான்சு.) (தபாற்செலவுஉள்பட) | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 | மாசம் | 1-க்கு | 0 | 5 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 | ஷை | 3-க்கு | 0 | 13 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 | ஷை | 6-க்கு | 1 | 8 | 0 |

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# [illegible]

இந்துசுவக்கியானசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த் திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 3] MADRAS:—SUNDAY JANUARY, 16, 287. A. S. [Monthly, 4 Annas.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## தீட்டுச்சம்பாஷணை.

————o————

ஒருவர்போசனத்துக்கு உட்காந்து, கலத்தில் அன்னம் அளிக்கப்பட்டவுடனே, அவருடையநேசரொருவர் அதியாவசியமான காரியமாகவந்ததைக்கண்டு, அவர் எழுந்துபோயினர். அங்கிருந்தவர்கள் அன்னம் ஆறிப்போகாதபடி மணையினால் மூடிவைத்தார்கள். அவர் இரண்டொரு நிமிஷத்தில் அந்தகாரியத்தை முடித்துவிட்டுவந்து அந்த மணையையெடுத்துப்போட்டுக்கொண்டு உட்கார்ந்தார். அதைப் பார்த்திருந்த நேசர் மணைதிட்டாய்விட்டதே, கழுவாமல் அதன்மேல் உட்கார்ந்துகொண்டீரோ, என்னவென்று கேட்டனர். மெய்தான், கழுவினால் தீட்டுப்போமாகில், கலமும் கழுவப்பட்டிருப்பதினால் தீட்டுப்போயிருக்குமேயென்றார். அதற்குச் சினேகர் அப்படியாமா, கலம் அடிக்கடி எச்சிற்பட்டுத் தீட்டாயிருக்கிறதே யென்றனர். வீட்டுக்காரர் - முன்னே வாயில் எச்சிலுண்டாயிருக்கிறது; அந்தஎச்சில்கையிற்பட்டு, அந்தக்கை கலத்தில்பட்டுண்டானதீட்டு கழுவியும்போகாதிருந்தால், எச்சிலினால் தீட்டுப்பட்ட வலக்கையையும், கால்கழுவுவதினால் தீட்டுப்பட்ட இடக்கையையும கழுவிப்போட்டுக்கூப்பிக்கொண்டு கடவுளைத்தொழுவதும் எச்சிலுள்ளவாயினால் துதிப்பதும் சரியாகுமோவென்றார். சிநேகர்ஜீவனுள்ளபிராணிக்கும் ஜீவனற்றவஸ்துவுக்கும் பேதமில்லையாவென்றார். வீட்டுக்காரர்- வஸ்தவினிடத்துத் தீட்டுநுழைவதுபிரத்தியட்சத்தில் புலப்படவில்லை; சரீரத்தில் நோயுண்டாயிருக்கும்போது, பற்றுப்போடுவதினாலும் ஒற்றடங் கொடுப்பதினாலும், மருந்து ஊறியும் சூடுதாங்கியும் குணமுண்டாவதை நாமுணருகிறோமாதலால், அதுபோல தீட்டென்பதொன்று உண்மைபொருளா யிருக்குமாயின் சரீரத்தில் நுழையக்கூடியதுதானென்று நினைக்கவேண்டியிருக்கிறதே யெனறார். சிநேகர் வெட்கி ஒன்றுஞ்சொல்லாமற்போய்விட்டார்.

## இப்பிரபஞ்சவிகற்பம்,

(7-வது பக்கத்தொடர்ச்சி.)

நெருங்கிய அறைகளிலும் அழுகிப்போன குப்பைகூளமும் நாற்றமும் மிகுதியுமுள்ள இடங்களிலும் கரியமிலவாயுமிகுச்யும் இருக்குமாதலால் அத்தகைய இடங்களில் நாமடிக்கடி யிருத்தல்கூடாது. அங்குஇருக்கநேரிட்டால் மேலைய வாயுவை நாம்சுவாசிக்கும்படிநேரிடும். அந்தவிஷவாயு மெல்லமெல்ல உட்சென்று நமதுசரத்தத்தைக்கெடுத்து தலைநோய் சுரம் முதலிய நோய்களை யுண்டுபண்ணும். ஆயினமையின், நாம் ஆரோக்கியமாய் வாழவேண்டுமாயின், பரிசுத்தமானகாற்றையே சுவாசித்தல்வேண்டும், வீட்டுமுற்றத்திலும், தெருவாசற்படிக்கு எதிரிலும் ஜலதாரைகள் குட்டைகள் முதலியவைகளில்லாமல் செய்துகொள்ளல்வேண்டும். ஏனெனின் இவைகளினின்று கரியமலவாயுவாகிய விஷவாயு எழும்பி வீடுகளை அசுத்தப்படுத்தும். நமது பள்ளி யறைகளில் சுத்தமானகாற்று வரும்படிக்கும் சுவாசித்த அசுத்தமான காற்று வெளியேபோகும்படிக்கும் செய்து கொள்ளல்வேண்டும். கட்டில்முதலான படுக்கைகளைச்சுற்றிலும் நல்லகாற்று உள்ளேநுழையாமலும் தடுக்கத்தக்க திரைச்சீலைகளை தொங்கவிடுதல்கூடாது. சிலர் சுத்தத்தைத்தரத்தக்க நல்லகாற்றுக்குப் பயந்து காற்றுலாவாத அறைக்குள்புகுந்துகொண்டிருப்பது என்னமௌடீகம் !

வாயுவானது பிராணவாயு, நிற்குண (உப்பு) வாயு என்னும் இரண்டுவாயுக்களின் கலப்பு என்று முன்னர்கூறி யிருக்கினறோம். இவ்விரண்டையன்றி வேறு சிலபதார்த்தங்களுண்டென்றும் அவற்றுள் கரியமிலவாயு விஷவாயுவென்றும் சென்றவாரப்பத்திரிகையில் நன்குவிளங்கக்கூறினோம். வாயுவில், பிராணவாயுவும். நிர்க்குணவாயுவும் நீங்க இருப்பன நீராவி கரியமிலவாயு, இவ்விரண்டைப்பற்றியும் ஈண்டு வியவகரிப்பாம்.

நீராவியின்னதென அறியவேண்டுமாயின் ஒருபாத்திரத்தில் கொஞ்சம்ஜலத்தைக் கொண்டுவாருங்கள். அப்பாத்திரத்திலுள்ள ஜலத்தைப் பொங்கும்படிசெய்து அப்போது நடக்கும் காரியங்களை கவனித்தால் நீராவியினது தன்மைநன்குவிளங்கும். அப்பாத்திரத்திலிருந்து வெண்மையானபுகைகிளம்பிவெளிவாயுவுடன் கலக்குந்தோறும் பாத்திரத்தில் புகைவந்துகொண்டேயிருக்கும். அப்புகை வெளிவாயுவுடன் கலந்து நமது கண்களுக்குத்தெரியாமற்போய்விடும். இங்ஙனம் புகை பாத்திரத்திலிருந்து புறப்படுந்தோறும் பாத்திரத்திலுள்ள ஜலம்குறைந்துகொண்டே யிருக்கும். நாம் நெருப்பை அணைக்காமலிருந்தால் பாத்திரத்திலுள்ள ஜலம் கொஞ்சம்கொஞ்சமாய்க் குறைந்துகொண்டுவந்து கடைசியில் ஜலமில்லாமற்போய்விடும். இந்த ஜலமெங்கேபோயிற்று ! அந்தஜலம் எவ்வாற்றாலும் அழிந்துபோகவில்லை. ஆனால் அந்த ஜலம் ஆவியாகமாறி வாயுவுடன் கலந்திருக்கின்றது. ஆயினமையின்பாத்திரத்திலிருந்த ஜலம் நீராவியாக வாயுவிற்கலந்திருக்கின்றது. இந்த நீராவி வாயுவுடன் ஒருவேளைகொஞ்சமாகவும் ஒருவேளைமிகுதியாகவும் கலந்திருக்கும். இந்த ஆவிதான் மேகம், மூடுபனி, மழை, உறைபனியாக இருந்து மறுபடியும் பூமியிற்சேரும். இங்ஙனஞ் [illegible] பூமியில் சூரியனது வெப்பத்தால் ஜலமானது ஆவியாய்மாறி மேகம், மூடுபனி, உறைபனி, மழையாகவிருந்து மறுபடியும் பூமியிற்சேரும். இவ்வாறேஜலமானது வெப்பத்தாலாவியாக மாறுவதும் ஆவியானது குளிர்ச்சியால் ஜலமாவது மியற்கை. இவ்வுண்மையரியாதவர்கள் மேகங்களுயிருள்ளவைகளென்றும் அவைகள் சமுத்திரங்களிலும் மலைச்சுனைகளிலும் வந்திறங்கி ஜலபானம் பண்ணுமென்றும் கூறித்திரிவர்.

பூமியிலுள்ளஜலம் உஷ்ணத்தால் ஆவியாகமாறி காற்றில் கலந்திருப்பதே நீராவியென்றும், இந்த நீராவி வாயுவுடன் ஒருவேளை கொஞ்சமாயும் ஒருவேளைமிகுதியாயும் கலந்திருக்குமென்றும், அவ்வாறு கலந்திருக்கும் ஆவியே மேகம் மூடுபனி, மழை உறைபனியென்றும் மேலே விளக்கினோம். மிக வெப்பமானவாயுவில் நீராவிஅதிகமாயிருக்கும். வாயுவிற்குவெப்பம் குறையக்குறைய நீராவியும் குறைந்திருக்கும். குளிர்ந்தவாயுவைவிட சூடானவாயு அதிக நீராவியைக்கொள்ளும். இதை எளிதிலுணருதல்கூடும். நாம் சுவாசம் வெளியேவிடுந்தோறும் சற்றுநீராவி வெளிவருதல் இயல்பு. நம்மைச்சூழ்ந்துள்ள வெளிவாயுவில் காங்கையதிகமாயிருக்கின் நாம்விடும் சுவாசத்திலுள்ள நீராவி கண்ணுக்குப்புலப்படாது. ஆனால் நம்மைச்சூழ்ந்துள்ளவாயு அதிக குளிர்ச்சியாயிருக்கின் வெளியேவரும் நமது சுவாசத்திலுள்ள நீராவி புகையைப்போல் காணும். இதை கவனித்துப்பார்த்தால் நன்குவிளங்கும். இங்ஙனம் புகையாய்க்காணுதற்குக் காரணம்யாதெனின் விளம்புவாம். காற்றுகுளிர்ந்திருக்குங்காலங்களில் நீராவியைக் கொள்ளக்கூடவில்லையாதலால் அது புகையைப்போல் காணப்படுகின்றது. மேலும் எந்தகாலத்திலாவது கண்ணாடிமுதலிய குளிர்ந்த வஸ்துக்களின்மேல் மூச்சைவிட்டுப்பார்த்தால், உடனே அதில் நீராவிதங்கும், மற்றகாற்று காற்றுடன்கலக்கும். உடனே அது நீராய் விடும்.

குளிர்ந்தவாயுவிற்கு நீராவியையடக்கும் வலிமைகுறையும். இனி நீராவி வாயுவிற் கலந்திருப்பதெப்படியென்றும் பிரிவதெப்படியென்றும் விசாரிப்போம். ஒரு மட்பாண்டத்திலேனும் ஒருதாம்பாளத்திலேனுங் கொஞ்சம்ஜலம்விட்டுப்பாருங்கள்; அதைக்காற்று ஆறும்படிவைத்தால், மேற்படி பாத்திரத் [illegible] ஜலம் இரண்டொருநாளில் சுண்டிப்போம். அந்த நீ [illegible] கிரகிக்கப்படுகின்றது. இப்படி யிந்தகொஞ்சம்ஜ [illegible] ரிட்டதுதான் இவ்வகண்டபூமியிலுள்ள எல்லா [illegible]

ரிடும். குளம், குட்டை, கடல்முதலிய விடங்களிலுள்ள ஜலமும் நீராவியாக காற்றில்தங்கும். குளிர்காற்றைவிட உஷ்ணமானகாற்றில் நீராவி அதிகமடங்கு மாதலால், இராக்காலங்களைவிட பகற்காலங்களிலும், குளிர்காலத்தைவிட கோடைகாலத்திலும், நீரதிகமாக ஆவியாகும். இதற்கு உதாரணம். ஈரமானவழிகளில் வெயில்காயும்போது அங்குள்ள ஜலம் ஆவியாகமாறுவதால் அவ்வீரம் உலர்ந்துபோகின்றது. அவ்வாறு சூரியன்பிரகாசிக்காவிட்டால் அவ்வீரம் சீக்கிரத்திலுலருதலில்லை

பூமியிலுள்ள ஜலமானது உஷ்ணத்தால் நீராவியாகக் காற்றில்சேரும். வாயுவிலுள்ள நீராவியானது குளிர்ச்சியால் ஜலமாகும். ஜலம்நீராவியாவதும் நீராவிஜலமாவதும் முறையே உஷ்ணத்தாலும் குளிர்ச்சியாலுமென உணர்க. இ. மு.

---

## இந்துதத்துவபிரபாவம்

(7-வது பக்கத்தொடர்ச்சி.)

---

இவ்விந்து தத்துவப்பிரபாவத்தில், இனி நாம் நிறுத்தமுறையானே கூறும்பான்மையதான விஷயம் யோகம். இஃது பதஞ்சலியாலருளப்பட்டது. யோகமெனப்படுவது போக்கால் பெரும்பான்மையும் சாங்கியத்தை அநுட்டித்தேனும் சித்தாந்தத்தில் கடவுளொருவர் உண்டென்பதே அதன்கொள்கை. இஃது பிரபலமாய் * வாசியோகமென்றும், சித்தயோகமென்றும் இராஜயோகமென்றும் மூன்றாகாமிகத்தியினை யுடையது. நெடுநாள் வாழவேண்டுமென்னும் பேரவாதகொண்ட சிலர்காயகற்பங்கள்தேடியுண்டு, தேகம் வலிவடைந்ததாய்க்கருதி, உசுவாச நிசுவாசாதிகளை விளைவிக்கும் இடைகலை பின்கலைகளை சுழிமுனைநாடியிலொடுக்கிச் சபம்போல சிறிதுநேரம் சலனமற்றிருக்கின்றனர். இதனால் தேகநாடிகடோறும் தந்தக்கடோறுஞ் சென்றிழியுங் குருதி மூளைக்கேறிச் சித்தப்பிரமையாகி ஓர் ஜோதிபோல் தோன்றும். இந்த ஜோதியைத்தான் வாசியோகிகள் பற்பலவாறு கூறுகின்றனர். இன்னிலையிலுள்ளவர்கள் ஓர்வித ஓங்காரசப்தம் தமக்குக்கேட்பதாய்ச் சொல்கின்றார்கள். நாம் இருசெவியும் பொற்றிச் சிறிதுநேரம் உற்றுக் கேட்டால் ஓர்வித சப்தங்கேட்பதுபோல் தோன்றும். இதன் காரணம் யாதெனின் நமது செவித்துளையிலுள்ளவாயு போகவிடமில்லாது செவிநாடியில் இடைவிடாது தாக்குகின்றது; அஃது அவ்வாறு தாக்குந்தோறும் நமக்கு சப்தங் கேட்பது போலிருக்கின்றது. யோகிகள் வாயுவை அடக்குவதனாலுண்டாகும் இத்தொனியையே ஓங்காரசப்தமென்கின்றார்கள். சித்தயோகமாவது அணிமா லகிமாமுதலிய அஷ்டமா சித்திகளையும் பெறும்படி தாமுற்று மேற்கூறியவாறுசெய்தல். இராஜயோகிகள், மனிதன் இறக்கும்போது எதை இச்சிக்கின்றானோ அவ்விச்சையைப் பூர்த்திசெய்யும்படி மறுபடி பிறப்பானென்னும் நம்பிக்கையுடையவர்களாதலான், அறிவானது யாதொன்றையும் இச்சியாது நித்திரையில் லயப்பட்டிருப்பதுபோல், நாட்டசூன்னியமாகும்படி மேற்சொன்னவாறு யோகம் புரிகின்றார்கள். இவையனைத்தும் பாதஞ்சல ரகசியத்திற்பகர்ந்திருக்கின்றது. இவற்றின் காரியங்கள் (தாதுத்வ ஆகருஷணத்தில்) [Mesmerism] நன்குவிளக்கியிருக்கின்றது.

உபாங்கங்களிற் பிரதமமாகிய மீமாம்சமானது பூர்வமீமாம்ஸமென்றும் உத்ரமீமாம்ஸமென்றும் இருபகுதியினையுடையதாக விருக்கின்றது. பூர்வமீமாம்சமானது பத்திமார்க்கத்திற்குரிய கிரியாகாண்டங்களைப்பகர்கின்றது. வியாசப்புரோசதமாகிய உத்ரமீமாம்சமோ ஞானமார்க்கத்தை நவிலும். இஃது நானென்பதெதுவோ அதுவே சகலமுமென்றும், அதற்குப்புறம்பாய்க் காணப்பட்டதெல்லாம் மனோபிராந்தத்தால் விளங்கிநிற்பதாதலால் மித்தையென்றும், மனோபிராந்தமெனப்படுவதே மாயையென்றும் (Delusion) காணப்பட்ட திரிஸ்ஸிய பதார்த்தமெல்லாம் மாயாவசப்பட்டு பொய்ப்பொருளாய் மரித்தலால் நாமரூபக்கிரியாவசத்ததெல்லாம் நானென்பதல்லவென்றும் அன்மைச்சொல்லினாலறையும். உலகாத்மகமாயுள்ள பிரம்மமே அதுவென்றும் அதுவே பிரபஞ்சமாய்ப் பரிணமித்ததென்றும், அதையதுவாய்க்காணுதலே ஞானமென்றும் அதை விகற்பித்துககாணுதலே மாயையெனறும் வேதாந்திகள் சொல்வர். இதுவே (Pantheism) எனப்படுவது. இஃது உபநிஷத்துக்களில் நன்குவிளங்கும்.

---

* இஃது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, என்னும் எட்டுவிதப்படும்.

---

## சாதி.

...கமனுகுலத்தாரால் தருமசாத்திரமென்று அ...
...ப்பட்டதெதுவோ அதுவே நீதி நூல்.
...சேடமின்றி எதார்த்த உபதேசமுள்ளதா...
...வண்டும்.

பாரிசேடமின்றி எதார்த்த உபதேசமுள்ள சாஸ்திரமெதுவோ அதுவே மெய்நூல்.

மனுநீதி நூலோ அத்தன்மை யுடைத்தல்ல, ஆதலால் அது மெய்நூல் அல்ல.

மனு நூலில் வருண பேதத்தைப்பற்றிய அரோசியமான கட்டுக்கதைகள் விஸ்தாரமாக நிறைந்திருக்கின்றன.

மனு மனிதர்களுக்கு நற்போதனை யூட்டி அவர்கள் நன்மார்க்க ஞானம் பெற்று ஈடேற்ற மடையும்படி தூண்டுதற்கேற்ற யதார்த்தத்தை எழுதிவைத்ததாகக் காணவில்லை. ஆதலால், அதனை சத்திய நூலென்று ஒப்புக்கொள்ளக்கூடாது.

ஆகவே, மனு நூலில் சொல்லியிருக்கிற வருணபேதத்தை மெய்யென்று அங்கீகரிப்பதெப்படி ?

இப்பரியாய தீபத்தின் இலௌகிகவைதிக நூல்களில் அனந்தம் பேதமையினால உண்டானவையாய்த் தெரிய வருகிறது. ஆனால், ஜாதிபேதமோவெனில், கர்வத்தினாலும், இறுமாப்பினாலும், பொறாமையினாலும், சோம்பலினாலும், பகுத்தறிவில்லா மாந்தர்க்கு துர்ப்போதனையூட்டி ஆசைகொளுத்தி நாசம் வருவித்து அவர்கள் தங்களுக்குக் கீழமைந்து ஒழுகவேணுமென்று ஆணவசிந்தையினால், ஏற்படுத்தப்பட்டதென பூரணமாய்த் தெளிவாகிறது.

ஜாதி பேதத்தைப்பற்றி இருவித அபிப்பிராய முண்டாகிறது. அவை:—1 ஜன்மத்தினாலோ அல்லது, 2 தொழிலினாலோ வென்பதே.

1. ஜன்மத்தினால் ஜாதி பேதம் ஏற்பட்டதெனில், பூலோகத்து மனிதர் அனைவருக்கும் காமக்குரோத முதலியவைகளும் மெய் வாய் முதலியவைகளும், சுவை யொளியோசை முதலியவைகளும், மனம புத்தி முதலியவைகளும், விருப்பு வெறுப்புகளும் சரியாய்ச் சமைந்திருப்பதினால், இவன் பிராமணன் இவன் க்ஷத்திரியன் இவன் சூத்திரன் என்னும் பேதம் எப்படி வெளிப்பட்டது? வருணபேதம் வழங்கவேண்டுமென்பது பிறவிக்குணமானால் தேகத்தில வருணபேதத்தைக் குறித்தும் யாதொரு அறிகுறியும் வெளிப்படாதிருப்பதுமன்றி, நம்பத்தகுந்த சாதாரண கலைகளில் ஒரு அத்தாட்சியேனுங் கண்டதுமில்லை. ஆயிரங்கோடி ஜனத்திற்கு மேற்பட்ட பூலோகத்தாருக்குள் நூறுகோடிக்கு உட்பட்ட இத்தேசத்தார்மாத்திரமே வருணபேதத்தைக் கைக்கொள்ளுகிறவர்கள். இத்தேசத்தாருக்கு மாத்திரம் வருணபேதத்தைக்குறிக்கும் ஏற்பாடு விதிக்கப்பட்டதா ? விதிக்கப்பட்டதெனில், அதற்குசாட்சியென்ன ? யாதொருசாட்சியுமில்லையே. ஆதலால், உற்றுநோக்குமிடத்து தங்களை மேற்குலத்தோரென்று விகற்ப உபதேசங்கொளுத்தும் பிராமணர் தங்களுக்கு செல்வத்தையும், புகழ்ச்சியையும் விருத்தியாக்குதற்கு ஏற்படுத்திக்கொண்ட யேற்பாடென்று பல நியாயங்களால் தெளிவாகிறது.

கிறிஸ்து சமயத்தை கைப்பற்றின ஓர் பிராமணனை பிராமணனென்று கூறுமல் கிறிஸ்தவனென்றும், ஜாதிப்பிரஷ்டனென்றும், கீழ்ஜாதியானென்றும் சொல்லக்கூடாது. ஏனெனில், ஜன்மத்தினால் ஜாதி வகுப்பு பிரிந்திருக்கிற மாடப்புறா எவ்வாறு மணிப்புறாவாகும்? அதுபோல ஜன்மத்தினால் வருணபேதம் ஏற்பட்டதெனில், அது எவ்வாறுகெடும், கெடுமெனில், அது ஜன்மத்தினால் ஏற்பட்டதல்ல. ஆகையால் இவ்விதது ர்ப்போதனையினால் மனிதரை நாசப்படுத்தத்தக்க சாஸ்திரங்களை ஏற்றுக்கொள்ளவே கூடாது.

2. தொழிலினாலே வருணபேதம் ஏற்பட்டதெனில், இக்காலத்தில் உயர் குலத்தோர் இயற்றவேண்டியதொழிலை கீழ்குலத்தோரும், கீழ்குலத்தோர் பின்பற்ற வேண்டியதொழிலை மேற்குலத்தோரும் இயற்றிவருவதால் தொழிலினால் ஏற்பட்ட ஜாதிவேற்றுமை தன் நிலையினின்று தவறிப்போய்விட்டதல்லவா? அவரவர்தத்தமது செய்கடனைத்தாமே செய்துவருவார்களானால் நான்பெரியன், நீசிறியன், நான்மேலானசாதியான், நீ கீழானசா

திபான், என்னும் பேதம் இருப்பதில்லையே. வருணபேதத்தினுல் இக்கீழ்கண்டத்தில் தலைப்பட்டிருக்கிற கேடுகளொன்றுந் தலைப்படுவதுமில்லை. ஆகையால், இக்கோட்பாடுதார்க்கீக மதத்திற்கு மாறுபட்டு ஜாதிபேதம் இல்லையென்பதாயிற்று.

25th, August 1879.<br>Colligal. } M. Masilamoni Mudaliar.

---

## இதற்குஎதிர்மொழி.

சத்தியஞானானந்த மயனாகியெம்மறைக்குஞ் சான்றாய்நின்ற, வித்தகன்றண்ணருள்கொண்டெவ் வுலகவிருளோட்டுமா விளங்கியாண்டும், சொற்றிடற்கிங்கரியபுகழெய்திய தத்துவவிசாரிணியே யிங்ஙன், ஒற்றையாழித்தேரோன் மதியுமுளதனையுநீ வாழிமாதோ.........*

"பஃறலைப்பாந்தட்பணாமுடிபொறுத்த சுஃறலைவேல்செல்ச்சுவறியகடல்சூழ் நானிலத்து" அஞ்ஞானப்படலத்தை யொல்லையோட்டுவான்வெளிவந்து மெய்ஞ்ஞானச்சுடர்தனைச் சமானமின்றிக் கொளுத்தாநிற்கும் தத்துவவிசாரிணிபத்திராதிபரே,

நிகழ்ந்த பானுவாரப்பத்திரிகையின்கண், எம் மாசிலாமணிமுதலியார் வரைந்த கோடபாட்டினுக் கெளியேன் மலைவுற்றிருத்தலினிதனைக் கிருபாநோக்கம் பாலித்துத் தங்களது பத்திரிகையினோர்கோணத்திற் பிரசுரஞ்செயல் வேண்டுமென மன்றாடுகின்றனன்.

கற்பிதமாய்த்தோன்றி நின்றழியு மியல்பினை வாய்ந்த வேனைய சமயங்கட்கு மாறாகிய ஆன்மாக்கட்கோரமைவைப்பெனத்திகழும் இந்துமதத்தின் திறத்தையெடுத்துப்புகல்வான் தொடங்கல்.

"குறைவிலாக்கதிரோன்சூழுங் குன்றினிற் பிரசந்தன்னை அறிவிலாப்பங்கனேறி யருந்துவே னென்பதொக்கும்."

ஆயினும், தமியேன் சிற்றறிவுக்கிணங்கச் செப்புமிவற்றிற்குச் செவிசாய்ப்பீராக.

"பெருகுதண்கடலூற்றும்பெருநகை, யொருசுணங்கனை யொக்குந்தகைமையேன்" எனத்திரஸ்கரிக்காது,

திகைப்புற்றலக்கணுறு நம்போலியர்க்கோரரியபுணையாயுதித்த மனு, தன் நூலிற்செப்பியது சொப்பனப்பிதற்றன்று. அளவிறந்த நற்பயன்களையே நிலைநாட்டுவான் கருதினனென்பது திண்ணறிவாள ரனைவர்க்குந் தெள்ளிதிற்பளிங்கற்று. சதுர் வருணபேதத்தை யாதியினிகழச்செய்தகாரணமு மவற்றின் காரியமாய் விளைந்த பயன்களையு முறையே பகர்வாம்.

இந்நாட்டார், இலக்கணவிலக்கியமான கணித தத்துவசாத்திராதியவற்றிற்றக்க நாட்டம்வையாமலும், பகைஞரைப் போர்முனையிற் பங்கப்படுத்த வீரசௌரியாதிகள் குன்றியும், நாட்டார் நாகரீகத்திற் கின்றியமையாக் கருவியதாயிலங்கும் வர்த்தகாதிகணலமற்றும், மானிடசுகஜீவனத்திற்கு முயிர்வாழ்க்கைக்கு மாதார பூதமாய்நிற்கும் பற்பலதொழில்களுந் தடுமாற்றமுற்றும், நாடு சீர்மையற்றொளிமழுங்கிக் கிடக்கு மோர் நிலைமையினைக் கெல்லியெறிவான் கருதி, மனு வருணபேதத்தை யாதினிகழச்செய்தருளினர் காண்க.

இச்சூட்சியாலுண்டாக்கப்பட்ட பாகுபாட்டின் பயனாக அவ்வவ்வருணத்தோர் தத்தந்தொழிலை யூக்கத்துடனழுக்காறெனு மொருபாவியாற் கவரப்படாமல், நடாத்தி வந்தனர்.

இங்ஙனநிகழுங்கால், அவ்வவ்வருணத்தோர் செய்தொழிற்கின்றியமையா மதினுட்பதிட்பங்கட்கொக்க மதிப்பையு மேனையோராற் பெற்றுவந்தனரோயன்றோ! இதுகாரணமாகத்தான், முதன் மரபினருஞ் சாத்திரசோதனையில் நாட்டம்வைத்திருந்தவருமாகிய வேதியர் தெய்வத்தன்மையை யடைந்தனர்போலும்.

"தெய்வாதீனம் ஜகத்ஸர்வம், மந்திராதீனந்து தெய்வத, தத்மந்திரம் பிராமணாதீனம், பிராமணாமமதேவதா" என்பதே யதற்குச்சான்றுங்கரி.

அந்தோ! ஈண்டெடுத்துரைத்த வொழுக்கமுதலியமுற்றுங்குன்றி, நிரட்சரகுட்சிகளாய் வயிறு வளர்த்தலையே பெரும்பயனாகவுன்னி, வாணாளை வீணாளாய்க்கழிக்கும் வேதியர்க்கு, மதப்பித்தேறிய வுன்மத்தரனேகர், மதியின்றி வரையாது தத்தமரும்பொருளை வழங்கிவரா நிற்கின்றனரே! —அதுநிற்க.

இங்ஙன மொவ்வோர் வகுப்பினருந் தத்தங்கடமைகளை முறைபிறழாது, மனச்சான்றுக்கிணங்க, வியற்றுவராயின் தேசந்தேசுறுவதற்கையமயாது?

"கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க்
கடற்கரையிலெநுப்மணலையெண்ணியளவிடலாம்
பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென்
[றெண்ணிப்
பிரித்தெழுதிக்கடையிலக்கம்பிரித்துவிடலாகும்"

அதனாலுண்டாகும்பயனை யலகிடலெந்திறத்ததன்றென்க.

தற்காலத்தி லப்பாகுபாடுகள் பாடழிந்துவிட்டதால் விளைந்தபய னெம் பெருமக்களனைவரது, பேரறிவுக்கிலக்காகாததன்றே. அச்சோ! பலவருணத்தாருந், தத்தங்குடித்தொழிலையுந் தேசோபகாரத்தையுநாடாது, தற்பிரயோசனத்தையே கடைப்பிடித்து, ஆங்கிலேயபாடையிற் கல்வி கசடறப்பயின்றும், கிரகாச்சிரம தருமத்துக் கின்றியமையாததாகிய வுத்தியோகங்கள் கிடைக்கப்பெறாது,

"ஆடெரிபடர்ந்தகோடியரடுப்பில், ஆம்பிபூம்பத்தேம்பசியுழல இல்லிர் தூர்ந்தன, பொல்லாவறுமுலை, சுவைதொறுஞ்சுவைதொறும், பால்காணமற் குழவி தாய்முகநோக்க, மனைவியென்முகநோக்க, யானுநின்முகநோக்கிவந்தனன்குமண" என்றனவிட்டமெழுகுபோலுள்ளங்கரைந்திரந்த பண்டிததிலகர்போல், கடனடுவே கலங்கவிழ்ந்ததாற் கலக்கமுறுங்காக்கைபோற், கலங்காநிற்கின்றனரென்பது, பள்ளியிற்பயிலுஞ் சிறுமகவுமுணர்ந்தவிடயமே. ஆதலின், நம்மனோர்புராணநிபந்தனைகளின் நற்பயன்கள், சிகரிற் றிகழுஞ் சுடரற்றேயென்பது திண்ணம்:

உமிக்குற்றிக் கைவருந்துஞ் சில பொய்ப்புலவர்போலழுக்காற்றான், மனச்சான்றுக்குநேர்மாறாகிக் குதர்க்கித்து நான்பற்றியநெடுஞ்செவியற்குமூன்றேகாலென வாதிப்பான் தமியேன் வெளிப்பட்டிலேன். காலபேதத்தாற் புராதனநிபந்தனைகள் பயன்படமாட்டாதென்பது திண்ணமாயினுமவைகளை யாதியி னிகழச்செய்த சீமான் கனக்காலத்துக்கிணங்கவவற்றையேற்படுத்தினராதலின், அன்னோரை மூடாக்கிர சிரோன்மணிகளெனச் சின்னாட்பல்பிணிச்சிற்றறிவினராகிய. நம்போலியரோசுதன் முறையன்று. நிகழ்காலத் தந்நிபந்தனைகண் முற்றும் பொருந்தாவிடின் திரஸ்கரிக்க. பரோபகாரம், சகோதரநேசம் சாலநிறையப்பெற்ற சன்மார்க்க சிகாமணிகளனைவரும்

"ஈயாடுவதோ கருடற்கெதிரே, யிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ, நாயாடுவதோவுறுவெம்புலிமுன், னரியாடுவதோநரகேசரிமுன், பேயாடுவதோவழகூர்வசிமுன்"

எனமுகஞ்சுளிக்காது வல்லே யெம்போலியர்க்கு நல்லறிவூட்டிக் குளவியின்றன்மையராவாராக.

எனதபிப்பிராயத்தைப் "பன்னும்பனுவற்பயன்றேரறிவுளா" ர்க்கினிமேற்புலப்படுத்துவதற்கிதுவே யாதிவாரமாக நிற்றல்வேண்டும். இங்ஙனம்

11th Sept. 1879.<br>Madras. } தங்கள் பத்திரிகையாறபண்புற்றுவரும்<br>T. Balasundarum Mudalliar.

---

## அதற்கு மறுமொழி.

சென்னை டி. பாலசுந்தரமுதலியார் ... பற்றி எழுதியதின் நியாயத்தை கண் ... ராக இருக்க, அதைவிட்டு வேறுவழி ... என்ன நியாயம்? அவர்எழுதியதனைத ... ர் வாக்கினின்று பிறக்கும் சத்தியத்தி ...

வர் வாக்கியங்கள் அர்த்தசாரமில்லாத பல சொற்கள் தொடுத்த பாமாலை.

மனுநீதி நூல்கள் வாசிப்பவர்களை கன ஈன ராக்குவனவேயன்றி அவர்களைச்சீர்ப்படுத்தி நல்லோராக ஆக்குகின்றன என்பதைக்காணோம். அவைகளினுட் சில சூத்தங்களை அடியிற்காண்க.

மனுநீதிநூல்.

பிராயச்சித்த நிருணயம்.

12-வது சூத்தம். பிராமணன் வேதம் ஓதிக்கொண்டிருப்பதை சூத்திரன் கேட்டுக்கொண்டிருப்பானாகில், அச்சூத்திரன் செவித்துவாரத்தில் ஈயத்தை நெருப்பில் காய்த்துவிடவேண்டும்.

13. பிராமணன் உட்கார்ந்த இடத்தில் சூத்திரன் உட்காருவானாகில் அவன்புட்டத்தை அறுத்துவிடவேண்டும்.

18. பிராமண ஸ்ரீயுடன் சூத்திரன் சயனிப்பானாகில் அவன்வாயினுள் இரும்பைக்காய்த்துவிடவேண்டும்.

24. பிராமணன் உண்டபின்பு அவனுடைய கைகளையும் வாயையும் கழுவுதற்குமுன் அவனை சூத்திரன் தொடுவானாகில் சூத்திரன்கையை சேதித்துவிடவேண்டும்.

30. ஒரு பிராமணன் வெங்காயம் சாப்பிடுவானாகில் சாந்திராயண விரதம் செய்து மறுபடியும் பூணநூல் தரிக்கும் சடங்குகள் செய்யவேண்டும்

36. பிராமணன் சூத்திர ஸ்திரீயுடன் சயனிப்பானாகில், அப்பாவ நிவர்த்திக்கு அப்பிராமணன் 100 காயத்திரி சபிக்கவேண்டும்.

50. பசுவைக்கொன்றவனும் பிராமணனைக் கொன்றவனும் ஒரேவித குற்றவாளியாவான். அவன் தன் பாவநிவர்த்திக்கு தன் சொத்துமுழுவதையும் பிராமணருக்கு தானமசெய்து பின்பு அக்கினிபிரவேசமாக வேண்டும்.

54. ஒரு பிராமணன் ஆட்டுப்பாலையாவது எருமைப்பாலையாவது குடிப்பானாகில் ஒருராத்திரிக்கு உபவாசம் இருக்கவேண்டும். பசுவின்பாலை பிராமணனுக்குக் கொடாமல் சூத்திரன் குடிப்பானாகில் 30 நாளைக்கு இராத்திரியில் உபவாசம் இருக்கவேண்டும்.

89. பிராமணன் திருடுவானானால் சருவாங்கக்ஷவரம் செய்துகொண்டு புது பூணநூல் தரித்து பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டியது. சூத்திரன் திருடுவானாகில பாவ நிவர்த்திக்கு தன் ஆஸ்தி முழுவதையும் பிராமணருக்கு தானம்செய்யவேண்டும்.

90. க்ஷத்திரியன் பிராமண ஸ்திரீயை புணருவானாகில் அவன் தன்னுடைய ஒவ்வொரு அவயவங்களையும் புல்லினால் சுற்றிக்கொண்டு அக்கினிப்பிரவேச மாகவேண்டும்.

மற்றவையும் இவ்வாறே எழுதியிருக்கின்றன. இது தான் மனுநூல்!

27th September 1879.
Colligal. } M. Masilamoni Mudr.

## பொங்கல்விருத்தாந்தம்.

முற்காலத்தில் ஜனக்குறைவினால் காடுகள் அடர்ந்து, "ஆராச்சுவரின்மேல் விதைத்தவிதையும் விளைந்துவந்தது" என்கிற பழமொழிப்படி அதிகமழைபொழிந்ததினால் உபாயமானவையாயிருந்த மண்சுவர் வீடுகளெல்லாம் இடிந்துவிழுந்து, ஜனங்கள் ஒதுங்குமிடந்தேடி வாசஞ்செய்ய; கொட்டாய்கள்தகர்ந்து விழுந்து, மாடுகள் தங்குவதற் கிடமில்லாமல் காடுகளில் போய் ஒதுங்கிநிற்க; மழைவிட்ட மார்கழிமாதத்தில்ஜனங்களைக் கூட்டிக்கொண்டுபோய்த் தன்னைநோக்கிப் பொங்கலிடச்செய்தான். ஆகவே, தேவேந்திரனுக்குக் கோபம்பிறந்து அவன்செய்த கட்டளையின்படி அதை யழிக்கச் சப்தமேகங்களும் ஒருமிக்கவருஷிக்கவே, கிருஷ்ணன் கோவர்த்தனகிரியைச் சுண்டுவிரலால் குடையாகத்தாங்கிக் காத்துக்கொண்டான்.

இவ்வாருனால், என்கெதி என்னமாகிறதென்று தேவேந்திரன்முறையிட, கிருஷ்ணன் முன்பூசை உனக்கேயாகுமென்று அருளிச்செய்தனன். அதுதான் பெரும்பொங்கலுக்கு முன்னாள் நடக்கும் போகிப்பண்டிகை. (போகிஎன்பது தேவேந்திரன்.) அப்படி அவனவனும் பொங்கலிட்டுச் சந்தோஷமடைந்தபின்பு, காட்டில் மறைந்திருக்கிற தங்கள் மாடுகளினிமித்தம் பெரும்பொங்கலுக்கு மறுநாள் கடவுளுக்குப் பொங்கலிட்டுப் பிரார்த்தித்து, கும்புகூடி தப்பட்டைகளுடனே சென்று காட்டைச்சுற்றிலும் ஆரவாரஞ்செய்ய, போனதுபோக மீந்திருக்கிற மாடுகள்மிரண்டு வெளிப்படும்போது கொம்புகளிலும் கழுத்துகளிலும் கால்களிலும் கொடி முதலிய தழைகள் மாட்டிக்கொண்டு புறப்பட்டன. அவனவன் தன்தன் மாடுகளை ஓட்டிக்கொண்டுபோய் வீடுசேர்ந்தான். இதற்குத்தான் மாட்டுப்பொங்கலென்றும் மாடுமிரட்டலென்றும் பெயர். ஜனங்கள் தங்கள் சுகத்தைத் தேடிக்கொண்டபின்பு, சுற்றுப்பக்கத்துக் கிராமங்களி லிருக்கிற தங்கள் சுற்றத்தாருடைய க்ஷேமம் சிலமாசமாய்த் தெரியாதிருந்தமையால், அவர்களைப்போய் பால்பொங்கிற்று என்று விசாரிக்கிற வழக்கமுண்டாயிருந்தது. பூர்வம் தற்செயலாயும் அவசியமாயுமுண்டான இச்காரியங்களை இப்போது பழயவழக்கம் போகக்கூடாதென்கிற எண்ணத்தினால் வீணுக்கு வலியச்செய்து பட்டணத்திலும் மாடுகளை விட்டுத்துறத்தி அல்லகல்லோலஞ் செய்வதுமன்றி, இடையன் முதலிய ஏழையும வேடிக்கைகயில் விழுந்து வீம்புக்கு வீண்செலவு செய்கிறார்கள்.

## வர்த்தமானம்.

ஹைதராபாதிலே சிவில் டிஸ்பென்சேரிக்கு இருபதுநாள் குழந்தையொன்று வைத்தியத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அது பிறக்கும்போதே நாவி னுனியில் புற்றுரோகத்துடன் பிறந்தது. அந்தப்புற்று சாதாரணமான ஒரு எலுமிச்சங்கா யளவுண்டு. எல்லாவியாதிகளிலும் புற்றுவியாதி டாக்டர்களுக்கு வெகு கஷ்டம் தருவதென்று சொல்லப்படுகிறது. அந்த வியாதி ஓரிடத்தில் சொஸ்தமானாலும் விட்டுவிட்டு தேகமுழுதும் பரவுமாம். அந்தக்குழந்தையின் தாய்தந்தையர்களுக்கு அது பிழைக்குமென்கிற எண்ணமில்லவேயில்லை. டாக்டர் பீவான் அவர்கள் அந்தப்புற்றைப் பரவவொட்டாதபடி பட்டுநூலால் இறுகக்கட்டிவிட்டார். சிலநாளுக்குள் அந்தப்புற்று ஒற்றையிழை நூல்மேல் தொங்குவதுபோலத் தொங்கிறது. பின்பு டாக்டர் அதை அறுத்துவிட்டு வைத்தியஞ்செய்துவருகிறார். குழந்தையும் திருப்திகரமாகவே சுகமடைந்துவருகிறது.

பெங்களூர் கமிஸ்ஸேரியாட் இலாக்காவிலே அப்பர்மாவுக்குப்போக சில ஆள்கள் அமர்த்தப்பட்டார்கள். அவர்களுக்கு முன்பணமும் கொடுக்கப்பட்டது. அந்த ஆள்களைப் பத்திரமாக வைத்திருந்து சரியாக எண்ணிக்கைபிடித்துத் தொடர்வண்டியில் ஏற்றினார்கள். உடனே எண்ணிக்கைபிடிக்கையில் நான்குபேர் எப்படியோ தப்பித்துக்கொண்டுபோய்விட்டதனால் எண்ணிக்கைகுறைந்தது. ஓடிப்போனவர்களில் ஒருவன் அகப்பட்டான். உடன்படிக்கைத் துரோகமென்னும் குற்றத்திற்காக அவனைமாஜிஸ்திரேட்டு விசாரணைசெய்தத்தில், அவனைப்பார்த்து, பிரகானபிரிவின்படி உன்பேரில் பிராதுகொண்டுவரப்பட்டதனால், உன்னுடைய அதிர்ஷ்டத்துக்காக உன்கிரகங்களுக்கு வந்தனஞ்செய்யென்றுசொல்லி அவனை அனுப்பிவிட்டு, அங்குவந்திருந்த கமிசேரியாட் குமாஸ்தாக்களைநோக்கி, இனி இப்படிப்பட்ட ஆள்களிடத்திலே எழுத்துமூலமாய் உடன்படிக்கை வாங்கினாலொழிய பிராதுசெல்லமாட்டாதென்றுஅவர்களுடைய துரைக்குச் சொல்லச்சொன்னார்.

திருவான்கூர்திவான் ராமையங்காரவர்கள் தம்முடைய உத்தியோகத்தைவிட்டு நீங்கிப்போவதாகவும், தலைமை திவான் பேஷ்கார் ராமாராவு அவர்கள் திவான் அதிகாரத்துக்கு வரப்போகிறதாகவும் வதந்தி

# தத்துவவிவேசினி

இந்துசுவக்கியானசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 4.] MADRAS:—SUNDAY JANUARY, 23, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## திருஷ்டிசாஸ்திரம்.

திருஷ்டிசாஸ்திர மென்பது ஒளியின் குணங்களையும் ஒரு கண்ணாலாவது இரண்டு கண்களாலுமாவது, பார்த்தலாகிய தொழிலின் தன்மையையும், அதைச் சேர்ந்த விதிகளையும், தெரிவிக்கிற ஒரு நூலாக இருக்கிறது. ஒளியானது, வஸ்துக்களினின்றும் புறப்பட்டு (நம்முடைய கண்ணுக்குள் புகுந்து) அவைகளைநாம் பார்ப்பதற்குக் கருவியாகிற ஒருபதார்த்தம், கண்ணுக்கு விஷயமான பதார்த்தங்கள் எல்லாவற்றையும் இருவகையாகப் பிரிக்கலாம்; தம்மொளியால் விளங்குவன வென்றும், பிறவற்றி னொளியால் விளங்குவன வென்றும். அசுவனிமுதலான நட்சத்திரங்கள், பலவிதமான சோதிகள், இவைகளெல்லாம் தம்மொளியால் விளங்குவன. இவைகளை நாம் பார்ப்பதற்குக் கருவியான ஒளியானது இவைகளினிடத்திலேயே உண்டாய் வருகிறது. சந்திரன், சுக்கிரன, சனிமுதலான கிரகங்களும், மண், கல், மரம், செடி முதலியவைகளும், பிறவற்றின் ஒளியால் விளங்குவன. அவைகளினின்றும் நம்மிடத்திற்கு வருகிற ஒளியானது அவைகளிலேயே உண்டானதல்ல. சூரியன், விளக்கு முதலியவற்றினின்றும், புறப்பட்டு சந்திரன் முதலியவற்றின்மேல் விழுந்து அங்கிருந்து திரும்பி நம்மிடத்திற்கு வருவது. பிறவற்றால் விளங்குவதான ஒரு பதார்த்தமானது தன்னைப் போன்ற மற்றொன்றி னின்றும் வருகிற ஒளியைத் தான்பெற்று அதைத் தன்னைப்போன்ற வேறொருபதார்த்தத்தின் மீதுசெலுத்தலாம். ஆனால் எல்லாவிஷயத்திலும் ஒளியானது தன்னொளியால்விளங்குகிற வஸ்துக்களிலேதான் ஆதியில் உண்டாகிப் பரவியிருக்கவேண்டியது. ஒரு வத்தியைக் கொளுத்தி ஒரு இருட்டறையில் கொண்டுவந்தால் எரிகிற விளக்கின் வடிவானது அதினின்றும் வருகிற ஒளியினாலே தெரிகிறது, அந்த அறையில் இருக்கிற மற்ற வஸ்துக்களோவெனில் விளக்கினின்றும் வருகிற ஒளியைத் தாமடைந்து அதையேமறுபடியும் திருப்புதலினால் நம்முடையகண்களுக்கு விஷயமாகின்றன. இன்னும் இதரமான வஸ்துக்கள் தங்களமேலே விளக்கு வெளிச்சம் நேராக விழாமற்போனாலும், இறப்பு சுவர்கள் இவைகளிலிருந்து திரும்புகிற ஒளியினால் கண்ணுக்குத் தென்படுகின்றன. வஸ்துக்கள் தம்மொளியினால் விளங்குவனவா யிருந்தாலும், பிறவற்றின் ஒளியால் விளங்குவனவா யிருந்தாலும், தாம் எந்தவர்ணமோ அந்த வர்ணமுள்ள ஒளியையே செலுத்துகின்றன. சிவப்புஜ்வாலையும் பழுக்கக் காய்ந்த வஸ்துவும் சிவப்பான ஒளியையே தருகின்றன. ஒரு சிவப்புத்துணியானது சூரியனிடத்திலிருந்து தான் பெறுகிற வொளி வெண்மையானதா யிருந்தாலும். சிவப்பான ஒளியையே தருகிறது. இருவகைப் பதார்த்தங்களுள்ளும், அவற்றின மேற்புறத்தில் கண்ணுக்கு விஷயமாகும் படியான ஒவ்வொருஸ்தானத்திலிருந்தும் எந்தெந்ததிக்கிலிருந்து அந்தஸ்தானத்தைப் பார்க்கக்கூடுமோ அந்தந்த திக்குகளிலெல்லாம் ஒளியானது செலுத்தப்படுகின்றது.

ஒளியானது ஓடும்போது பாம்புமுதலியவற்றைப்போல் வளையாமல் நேராக ஓடுகின்றது. அப்படி ஓடுகிற நேர்க்கோடு ஒவ்வொன்றிற்கும் ஒளிக்கிரணம் என்றுபெயர். ஒரு இருட்டறையில் சுவரில் மிகவும் நெருக்கமா இருபக்கங்களிலும் தெரியும்படி ஓர் துளைசெய்தால், சூரியன் ஒளியானது அத்துளைவழியாக வந்து சூரியனுக்கு நேரெதிராயிருக்கிற ஓரிடத்தில்விழும். அந்த ஒளி விழுகிற இடமும், துளையின் நடுவும், சூரியனுடைய மத்தியும், ஒரே நேர்க்கோட்டிலிருப்பன. அதனால் ஒளிக் கிரணங்கள் நேர்க்கோடாகச் செல்வனவென்பது தெளிவாகிறது. ஒளியானது நிமிஷம்-கறு எ,கஙுரு0000 மயில் போகிறது. சூரியனிடத்திலிருந்து பூமிக்கு எ௰-நிமிஷத்தில் வருகிறது. இந்தப் பூமண்டத்தை ஒரு நிமிஷத்துக்குள், சஅ0 தரம் சுற்றிவருகிற வேகம் அதற்கு இருக்கிறது. ஒளியானது ஒருவஸ்துவின்மேல் விழுந்தால் அதில் சிலபங்கு திரும்பி வந்துவிடுகின்றது. சிலபங்கு வஸ்துவுக்குள்ளே செல்லுகிறது. சிலபதார்த்தங்களில உள்ளேசென்ற ஒளியானது மற்றொருபக்கத்தால் வெளிப்பட்டுப்போகும். சிலபதார்த்தங்களில் உள்ளேயே அயிக்கியமாய்ப்போகும். வஸ்துவின் மேற்புறமானது பொன், வெள்ளி, முதலியவற்றைப்போல சிறிதும் மேடுபள்ளம் இல்லாமல் மழமழவென்றிருந்தால் அதன்மேல் விழுந்த ஒளியில் பெரும்பங்குத் திரும்பிப்போய்விடும். மற்றது வஸ்துவுக்குள்ளே அயிக்கியமாய்விடும். பொன்னையாவது, வெள்ளியையாவது மிகவும் மெல்லிசு தகடாக தட்டினால் உள்ளே புகுந்த வெளிச்சம் மற்றொருபக்கத்தால் வெளிப்படும். கண்ணாடி, தண்ணீர், இவைகளைப்போன்ற வஸ்துக்களில் ஒருபக்கத்தில் வந்துவிழுந்த வெளிச்சத்தில் பெரும்பாலும் மற்றொருபக்கத்தால வெளிப்பட்டுப்போம், சிறிதுமாத்திரம் திரும்பும்.

## முக்கியபோதனை.

உலகத்தில் அறிவாளிகளாக இருப்பவர்கள் ஒவ்வொரு விஷயத்திலும் சித்தத்தை அமைத்து, அதன்பால் நிகழும் தமது சுயாபிப்பிராயத்தோடு விவேகிகளாயுள்ள வேறுபலர்அபிப்பிராயங்களையும் விசாரித்துத் தெளிந்து, கொள்ளற் பாலதைக்கொள்ளவும் தள்ளற்பாலதைத்தள்ளவும் வேண்டும். இவ்வாறுசெய்தல் ஒழிந்து தாம்கேள்வியுற்ற அளவிலே தமது அறிவைச் சிறைப்படுத்தி அந்தகாரத்தில் அமிழ்ந்துகிடப்போர் விஷய ஞானமாகிய சுக்கியான சூரியதரிசனம் எக்காலத்துங்காணப்போகின்றதேயில்லை. சுக்கியானசூரியன் உதிக்காதபோது அஞ்ஞான இருட்பிழம்பில் ஆழ்ந்து உலகவிகாரப் பிரளயத்தின் சுழலிற்சிக்கி உள்ளநாளளவும் சுகக்கரைகாணது அறியாமைவசத்தராய் மரியாநிற்பர். பாலுண்ணும் பாலகர்களுக்குப் பாயசமூட்டில் குமட்டிவிடுவதுபோல் பயனறியா நெஞ்சினருக்குப் பயன்இன்னதென நயவாசகமாய்ப்பகரினும் துட்டிவிடுவர். பன்றிக்குப்பாலன்னம் ஊட்டுவதுபோல பயனறியா நெஞ்சினருக்குப் பயனுயவிஷயங்களைப் பகர்தலில் பயனின்றே: இன்னோருக்குப் பயன்பயப்பதாகிய போதனையைப்போதிக்கவேண்டில் முன்னம் அவர்கள் உள்ளத்தைக்கொள்ளைகொண்டிருக்கும் மிருகத்துவத்தைப்போக்கி மானுஷீகத்துவத்தைத் தேக்குதல்வேண்டும். காடும்கரம்பும் கல்லும் புல்லும் களரும் அடர்ந்தநிலத்தில் விதைவிதைத்தால் அவ்விதை அடர்பட்டழிதல் நிச்சயமாதலால், முன்னம் அந்நிலக்குற்றத்தை அலக்கழித்துவிடவேண்டியது ஆவசியகம். ஆகையால் அறிவாளிகளுக்கு நன்மார்க்கத்தைப் போதிப்பதைவிட அறிவில்லாருக்குப் போதிப்பதில் இருபதுமடங்கு பிரையாசையுண்டு. அறிவாளி இயற்கையாகவே சகலவிஷயங்களையும் அவாவி உணர்ந்து சமநிலைச்சித்தத்தால் சீர்தூக்கிக் குற்றத்தைக்கைவிட்டு குணத்தைக்கைக்கொள்ளுவன். அறிவாளிக்கு விஷயவிசாரமுள்ளமையால் அவன் எவ்வாற்றானும் நன்மார்க்கத்தைத்தனக்கெட்டிய அளவில்நாடுவன். விசாரசித்தமில்லாத சோம்பற்றுணைவரோ எது எப்படியானால் நமக்கென்ன; எல்லாமறிந்தவர் சாவாதிருப்பதும், ஒன்றுமறியாதவர்தான் சாவதும் இல்லையே ? எல்லாம் ஒருநாளைக்குப் போகப்போகிறவர்கள்தானே ; என்றுசதாகாலமும் கும்பிக்கே மிருகாதிகளைப்போல உழைத்து, நன்மார்க்கந் துன்மார்க்கம் நீதி அநீதி ஒன்றுந்தெரியாமல் பிறர்க்கும் பயன்படாமல் நாளவம்போக்கும் நரமிருகங்களுக்கே முக்கியமாய் நாமெல்லோரும் முயன்று சிறிதுசிறிதாக சுவக்கியான போதகஞ்செய்யவேண்டியது ஆவசியகம்.

——o——

## அவலட்சணாபிஷேகம்.

ஸ்திரீகள் அந்தப்புரத்தில் மஞ்சனநீராடுகையில் புருஷர்கள் செல்லக்கூடாதென்கிற ஒழுக்கம் மானிடர்க்குமாத்திரமேயலாமல், தேவதைகளுக்கு முண்டென்பது நிச்சயம். பார்வதிமுதலியதேவதாஸ்திரீகள் நீராடுகையில் பாங்கிமார்கள் அருகிருந்து உபசரித்ததாகத் தெரியவருகிறது. சுப்பிரமணியன் சோதிடசாஸ்திரத்தை நூதனமாய்ச்செய்து, சிவனிடத்திற்குச் கொண்டுபோய்ச்சொல்ல; அதைச்சோதிக்கும்பொருட்டு, இப்போது பார்வதியெங்கேயிருக்கிறாளென்று சிவன்கேட்க, ஸ்நானஞ்செய்யத் தடாகத்திற்குப் போயிருக்கிறாளென; இப்போதுஎன்னசெய்கிறாளென்றுகேட்க, வடகரையில் வஸ்திரத்தைக்களைந்துவைத்துவிட்டு ஜலத்திலிறங்கினாளென; இவ்வாறுசில கேள்விகள்கேட்டு விடைபெற்றபின்பு, கடைசியாய், இப்போதுஎன்னசெய்கிறாளென, அருகாமையில் வந்துவிட்டாளென்று சுப்பிரமணியன் சொன்னவுடனே, பார்வதியும் வந்துவிட்டாள். பெண்ணே, உன்மகன்ஒருசாஸ்திரஞ்செய்திருக்கிறான், அதைப்பரிசோதிக்க நான்கேட்ட இன்னின்னகேள்விகளுக்கு இன்னின்னவிடைகொடுத்தான், அவைஉண்மையாயிருக்கின்றனவாவென்று சிவன்கேட்க; பார்வதிசரிதானென்று ஒப்புக்கொண்டு, சற்றுயோசித்து, இந்தசாஸ்திரத்தினாலே நாம் நிர்வாணமாயிருந்தகோல முதலியவற்றைச் சுப்பிரமணியன்கண்ணாற்பாராமலே பார்த்துவிட்டானல்லவா? இப்படிப்பட்டசாஸ்திரம் உலகத்தில்வழங்கிவருமாயின் விபரீதமுண்டாகு மாதலால், அதுபலிக்காமற்போகக்கடவதென்று சபித்தாளென்றகதைசொல்லப்படுகிறது. இதனாலே தேவதா ஸ்திரீகளுக்கும் நாணமுண்டா யிருந்ததாகக் காணுகிறோம். ஆலயங்களிலே தேவதைகளுக்குப் பிராணப்பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பதால் உயிருள்ளனவாகவே மதிக்கப்படுகின்றன. வடிவுடையம்மன்முதலிய விக்கிரகசொரூபங்களைப்பார்த்து, அம்மன்எவ்வளவு சுந்தரமாயிருக்கிறது! என்று பாதம் தொடையிடைமுதலிய பல அவயவங்களையும் வர்ணித்துத் தோத்திரஞ்செய்கிறார்களே. அப்படியிருக்க, அவ்வித ஸ்திரீதேவதைக்கு எண்ணெய்க்காப்பிட்டு மஞ்சள்நீராட்டி ஸ்நானஞ்செய்விக்க புருஷனாகிய பிராமணன் அமர்ந்திருப்பது ஒழுக்கந்தானோ! பிராமணர்கள்மாத்திரம் பார்க்கலாம், மற்றஸ்திரீபுருஷர்கள் மாத்திரம் பார்க்காதபடி திரைபோடப்படுகிறது. அந்தரங்கத்தில் நாயகியினிடத்து நாயகனுக்குண்டாயிருக்குஞ் சுதந்தரம் ஸ்திரீதேவதைகளிடத்து பிராமணர்களுக்குண்டாயிருக்கின்றதுபோலும். அபிஷேகஞ்செய்யும்போது பழயவஸ்திரந் தரித்துதான் செய்யப்படுகிறதென்று ஒருவேளைசொல்லுவார்கள். அப்படிச்சொல்லுவார்களாயின் அதற்குமுன்னும்பின்னும் நடக்குங்காரியங்களை யோசிக்கவேண்டும். கல்தச்சனே ஆதியில் வஸ்திரந்தரித்திருப்பதாக உருவமைத்திருக்கிறானென்று சமாதானஞ்சொல்லுவார்கள். பாவனையாக வஸ்திரம் ரவிக்கை இவற்றின்ஓரமாத்திரம்கோடுகாட்டி யிருப்பதேயல்லாமல், நித்தியவாலிபதேவதைகளாகையால் வாலிபப்பெண்ணிற்குரிய காம்புநரம்புமுதலிய சகல சிறுஅங்கங்களும் வெளிப்படையாகவே தோற்றுகின்றன. இப்போது சிலவிசாரணசங்கங்களும் சித்தாந்தசபைகளும் ஏற்பட்டிருப்பதால் அப்படிப்பட்டவிஷயங்களைப்பற்றிச் சீர்திருத்தஞ்செய்ய யோசிப்பார்களென்கிற நம்பிக்கையினால் சூசனையாகக்காட்டினோம்.

## கடிதம்.

வடவேங்கடந் தென்குமரியாயிடைத்
தமிழ்கூறுநல் லுலகந் தொறுஞ்செலீஇ
புகழ்நனிநிறுத்திய புலமைநனிசான்ற
எத்துணையோரு மிறும்பூதெய்திய
தத்துவவிசாரிணி யாந்தகையணங்கே
யித்துணையான்சொல் லின்னுரைகேள்மதி.

மணிநெடுங்கடல்சூழணிநிலந்தனிற் சின்னாட்பல் பிணிச்சிற்றறி வுளவாகிய வான்மாக்கள் விளிவுறுங்காறும், கூடியவளவு சுகத்தினை நுகர்ந்திருத்தல் வேண்டுமென்பதனையே, கடைப்பிடித் தக்கருத்தினுக்கிணங்கவலகிலாக்கோட்பாடுகளை நிகழச்செய்த நம்முன்னோர் மதியேமதி!!!அதனையீண்டு—

"சிந்தையிற் சிறியேன் கூறத்தொடங்குதல் சேடன்சூடு முந்தைவையகத்தை நாங்கூழ்முடிப்ப லென்றடுத்தவாறே"

அன்னோரது கோட்பாடுகளி னிலக்கணத்தையு மவற்றால்விளையு[illegible]ற்பயன்களையும்,

"அளவுகூடவுரைப்பரிதாயினும்
அளவிலாசைதுரப்பவறைகுவேன்."

சராசரங்களனைவிற்குந் தோற்றமுமீறுமாய் நிற்குமொருவன் முக்காலத்தினுமிலனெனும் வாய்மையினைச் சில மூதறிஞர்,கரதலாமலகமெனக் கண்டறிந்தேமெனக் கழறுவராயினும், எவ்வுயிர்க்குமுயிரா மொருவனுளன்; அவனியக்க நாமியங்கும் பாவைகளெனப் பகர்வதால் விளையுந்தீமை யிஃதெனவுணர வல்லேனல்லேன்.

இந்நானிலத்தொருவன், தன்சுயமதி நுட்பதிட்பத்தினாலேயே "யானைபெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்சேனைத்தலைவ" னாய்ச் சங்கநிதி பதுமநிதிகளையுமொருங்கேபெற்று, "கண்ணிற்சொலிச்செவியி னோக்குமிறைமாட்சி" தனைக், கையாளப் பெற்றானாயினும், செல்வச்செருக்குக் கன்னோனிரையாகுத லியல்பன்றோ? அவ்வண்ணமவன்பெற்ற செல்வச்செருக்கினாற் கண்ணாருத்தெரியா தொளிமழுங்குழி;

"வண்டுளருந்தண்டுழாய்மாயோனிறுமாப்பும்
புண்டரிகப்போதுறையும்புத்தேளிறுமாப்பு
மண்டர்தொழவாழன்னிறுமாப்புமாலால
முண்டவனைப்பூசித்தபேறென்றுணர்ந்திலையால்."

என, வன்னோன்செருக்கற்று அச்சோ! முன்வினைக்கீடாக நம்பன் எளியேற்கிவ்வாழ்வைத் தந்தனன்; தமியேனதாற்றலு மோராற்றலா? என்றுவல்லேபரிதபித்து அடக்கத்திற் கோரரியகலமாகிய நாட்டிற்கோரரிய கலனாகிய மன்னோன் திகழ்வானன்றோ?

இங்ஙனமே, யொருவன் பற்பல துன்பங்கட்கிலக்காகி 'புலைப்பெய்தடுவது போலுந் துயரெய்து' ங்காலத்து மருளாள னொருவனாலியக்கப் படுகின்றனன் என்று ஒல்லேல நினைப்பூட்டிக் கொள்ளுவதா லவனடையும் பயன்பளிங்கற்றே—

"மல்லலாக்கமதாக்குழிமகிழ்வதுமகிழா
தல்லலாக்குழியழுவதுமறிபவர்க்கறிவோ
மெல்லவானகத்தேற்றினும்வெய்யதீநிரயச் [வாம்."
செல்லல்வீழ்க்கினுஞ்சிவமெனத் தெளிவதேதெளி
"துன்பம்வேட்டலசூழ்வதுசூழுங்காலதுபோ [லின்
லின்பமென்பது முயன்றுழலாது வந்தெய்தும்." ஆத
"அஞ்சிநிறபதாலழித்தழித்தியற்றுமோவமல [மை
நெஞ்சுநொந்துநொந்தாண்மையையிழப்பதோ நிலை
வஞ்சிபாகனையிம்மையிற்பூசிக்கின்மறுமைச்
சஞ்சிதாதிபூ வினைகளுந்தழற்படுஞ்சருகாம்."
"எடுத்தகாயத்தாலியாவர்க்குமின்பதுன்பங்கள்
விடுத்துநீங்குங்கொல்மண்ணுடன்விண்முதல்யாவு
நடித்தபாவையப்பாவைக்குநிருத்தனெம்பெருமான்
படுத்தியாட்டுறும்பாசமேயிருவினைப்பாசம்."

இத்தகுதியதான கோட்பாடுகளைத் துயராக்கினியிற் கருகுமொருவற் கெடுத்துரைத்தலு மன்னோனக்கணமே மகிழ்ச்சியுத்தியின் மூழ்கி மனோதிடமுறுவானென்பதற்கையமியாது? மேற்கண்டகோட்பாடுகளின்வாய்மையினை நிலைநாட்டிச்சாதிப்பான் நாயேன் வெளிவந்திலன்காண்க. மேலையவற்றை யனுசரித்தொழுகுதலால் விளையும்பய னளவிகந்தனவென்பதே யறிவிலேன் கொள்கையென்க. ஆகலின், ஔவைதன் "தொன்மை மறவேல்"என்னுமூதுரையை நம்மனோர்கடைப்பிடித்திணங்குவராக.

28th September
1879 T. B.

விவேகிகளே! மேற்கடிதத்தில் ஆங்காங்கு கண்ணுற்றவஞ் செவியுற்றவமாகிய சொற்களைப் பொறுக்கிச்சேர்த்து சொல்விரயஞ்செய்திருக்கிறதென்றும், நியாயவாயிலாய் நிலைநாட்டப்பட்டவிஷயஞ் யாதேனும் இருக்கிறதென்றும் உணர்ந்துகொள்வீர்களாக. இனி இத்தகைய கடிதங்களுக்குத் தத்துவவிசாரிணி இடமாகாது.—ED.

———o———

## இலௌகிகம்.

இலௌகிகிகள் ஒவ்வொருமதத்தையும் கொள்கையையும் நம்பிக்கையையும்நாசஞ்செய்கின்றார்களே யல்லாமல் புதிதாய் ஒன்றையும் சாதிக்கின்றார்களில்லையேயென்று அனேக வைதிகிகள் மறையிடுகின்றார்கள். களர்நிலத்தில் விதைவிதைத்தால் விளையுமா? பழைய சுவர்மேல் புதுசுவர் எழுப்பினல் பாரந்தாங்குமா? நம்பிக்கையாகிய திரைப்புறத்திருப்பவர்களுக்கு நியாய ஒளிகாட்டினல் தோன்றுமா? செவிடன்காட்டுச் சங்கொலி பயன்படுமா? கலலாமையாகிய களர்போக்கி, கடினசித்தமாகிய கல்லையகழ்ந்து, காய்சினமாகிய கரம்பு திருத்தி, நியாயநூற்போத எருவிட்டுப்பதமாக்கி, விதைவிதைத்தாலன்று விர்த்தியாகும்? பழைய சுவரைப் பாழாக்கி, பாரகழ்ந்து சுவர்வைத்தாலன்று பாரந்தாங்கும்? நம்பிக்கைத் திரையை நீக்கி, நியாயவொளி காட்டினலன்று நன்றாய் விளங்கும்? ஆயினமையின் சங்கூதுவதற்குமுன் செவிட்டைப் போக்க வேண்டியது இலௌகிகி கடனுகலால், அவ்வாறு செய்யவேண்டியதே ஆவசியகமென்க. நாம் ஒவ்வொருவரும் கையாண்டுவரும் சமயமும் கொள்கையும் மதமும் நமக்கு தொன்றுதொட்டு நம்மவரால் போதிக்கப்பட்டுள்ளதா அல்லது நாமே யூகித்து கைகொண்டதாவென்று யோசிக்குமிடத்து, போதிக்கப்பட்டுள்ளதென்பதற்குச் சந்தேசமில்லை. இவ்வாறே ஒவ்வொரு மதத்தினரும் தத்தம் கொள்கையையே தம்மவர்க்கு போதித்துள்ளார். ஆயினமையின் ஒருவர்பிறக்கும்போதே அவர் கொள்கையும் உடன்பிறக்கவில்லை. பிராமணப் பிள்ளையை கிறீஸ்தவன் வளர்த்தால் அக்குழந்தைக்கு வயதுவந்தகாலத்தில் கிறீஸ்துமதத்தையே கொண்டாடும். இன்னும் இவ்விந்து தேசத்திலேயே ஒன்றுக்கொன்று வெதிரேகமான அனேகமதங்களுண்டு. ஒருமதம் கொலைசெய்யச்சொல்கிறது; ஒருமதம் கொலையை வெறுக்கிறது. ஒன்று கல்லை வணங்கச்சொல்கிறது; ஒன்று நதியைத் தொழச் சொல்கிறது. இவ்வாறே எண்ணிறந்த மதபோதனைகளுண்டு. இவைகளை யெல்லாம் அபிமான மொழித்து பற்றற்ற சிந்தையோடு நோக்குமிடத்து மனித யேற்பாடாகத் தோன்றுகின்றதா? அல்லது ஓர் மூதல்வர் ஏற்பாடாகத் தோன்றுகின்றதா? ஓர் கடவுள் ஏற்பாடாயின் எங்கும் ஒருபடித்தாக வல்லவா இருத்தல் வேண்டும்? பகுத்தறிவுடைய விவேகிகள் பற்றற்ற சிந்தையோடு யாதொரு அபிமானமு மில்லாமல் விசாரிக்க வெளிவந்தால் அவர்களைப் புறத்தில் தூஷிப்பவர் விவேகிகளா? இவ்வாறு செய்தல் தக்கோர் செய்கையன்று. மாநுஷீகமென்னும் மாணிக்க வொளி சுடர் விட்டுப் பிரகாசிக்கவேண்டில், அபிமானமென்னும் அகப்பற்றை யொழித்து, வைராக்கியமென்னும் விழியிருள் போக்கி, மனமாசென்னும் தூசுநீக்கி, விசாரசித்தமென்னும் விழிதிறந்து ஒவ்வொருவரும் வெளிவந்து விசாரிக்கவேண்டும்.

## இதற்குஎதிர்மொழி.

எத்துணையோரு மிறும்பூதெய்திய
தத்துவவிசாரிணி பத்திராதிபரே.

வந்தனம்.

நிகழ்ந்த செப்டம்பர் 28-ம் திகதிதனி லடியேன் தீட்டிவிடுத்த கடிதத்திற் குறிக்கப்பட்டுளவாய் சில கோட்பாடுகளை யனுசரித்தொழுகுதலால், விளையும் நற்பயன்க ளளவிகந்தன வென்பதனை, நியாயவாயிலாயெடுத்து அடியே னன்கு கூறியுந் தங்கட்கவை புலப்பட்டில போலும். ஆயினுந் தங்கள் பத்திரிகையாற் பண்புற்றுவருஞ் சமரச சன்மார்க்க சிகாமணிகளிற் சிலராயினு மவற்றை யுணர்ந்தே யிருப்பரென்பதற் கையமில்லை, (நிகழ்ந்த பானுவாரப் பத்திரிகையில்) "இலௌகிகம்" என்னுந் தலைப்பெயரினைச் சாற்றித் தாங்கள் வரைந்துவிடுத்த, இரண்டொரு கொள்கைகளைப்பற்றிய வினுக்களுக்காயினுந் திருவருள்சுரந்து தாங்கள் "ஆங்காங்கு கண்ணுற்றவுஞ் செவியுற்றவுமாகிய சொற்களைச்சேர்த்து சொல்வியாயஞ்" (a) செய்யாது, சுயமதி நுட்பதிட்பத்தினுலேயே, நியாயவாயிலாய்த் தக்க விடையளிப்பிரென, மன்றாடுகின்றனன்.

மதங்களனையவு மனிதராது ஏற்பாடுகளேயொழிய "ஒரு மூதல்வ ரேற்பாடாகத்தோன்ற" வில்லையென்பது சத்தியமே, தாங்களறைவதுண்மையே. (b) 'சைவசமயமே சமய'மென்று 'திருவாய்மலர்ந்தருளிய தாயுமானவரும்' சமயாதீதப் பழம்பொருளென்று கடவுளைக்குறிக்கின்றனர்.

சமயங்கள் கற்பிதமானவைகளாயினு மவற்றை யனுசரித் தொழுகுதலால் விளையும்பயன் நன்மையா? தீமையா?

தருக்காதி நியாயசாத்திரங்களிலும், பிரிதிவியாதி பூதசாத்திரங்களிலும், தேகான்மமான்த பதார்த்த சொரூப லக்ஷணங்களிலும், முறையே பாண்டித்தியமுற்றும், வேதாகம விசாரணையிலு முழுதொருங்குணர்ந்த திலகர்போன்ற நும்போலியரோ சமயமென்பதுஞ் சமயாதீதப் பழம்பொருளென்பதும், கற்பிதமானவையென்னும் வாய்மையினை யறியவல்லீர். இவ்வுலகத்திற் கோடானுகோடி யான்மாக்கள், மேற்காட்டிய மானத பதார்த்த சொரூபலட்சணுதிகளிற் சொர்ப்பனத்தினும் பயின்றிராரோ! பயிலுவதற்கு இன்றியமையாதனவாகிய மதிநுட்பந் தேகதிட முதலியவற்றை யடைந்திலரோ! அன்னோர்க்காயினும் கற்பிதமாயுண்டாக்கப்பட்ட சமயங்களும் சமயத்திற் கூறப்பட்டுள்ள தெய்வங்களை வழிபட் டொழுகுதலும் நற்பயனை நல்காவா?

"(c) நெல்லுக்குமியுண்டு, நீர்க்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்குமுண்டா" மாதலின், ஒவ்வொரு ஏற்பாட்டிலும் தீமையு நன்மையும் பிரிவறவுள்ளவாதலின், மூதறிஞர் அவ்வேற்பாட்டில் நன்மைமிக்கிருப்புழி யதனை யங்கீகரித்தலும் தீமைமல்கிநிற்புழித்திரஸ்கரித்தலுஞ் செய்யாநிற்பர். ஓர் தந்தை, தன்னரிய மகவு கிணற்றின்மருங்கேகுதலை விலக்குவான் கருதி, யாண்டளவோர் கயிற்றினையிஃதொரு கொடியவரவென வக்குழவிக்கன்னோன் வற்புறுத்திச் சாதிப்பானுயி னம்மகவு அக்கிணற்றருகே யேகாதுதப்பி யுய்யுமென்பதற்கையமியாது? அக்குழவி யச்சூட்சியால் நற்பயனை யடைகின்றிலதா? இங்ஙனமே, மனச்சாட்சிக்குநேர்மாறாகவாயினு மொன்றைக்கழறி யேனையோர்க்குச் சுகத்தினையூட்டுவதே நன்மைகடைப்பிடித்தொழுகுந் திண்ணறிவாளரதிலக்கணம். இல்லை யென்பதை யுண்டென்றறைவதாற்றீமை விளைதலில்லையே. இக்கருத்தையுள்ளடக்கித்தான், மானிடசுகாதார வேதுக்களிலும் பிரஜாரோக்கிய பிரஜானுகூல பிரவர்த்தனுதிகளில் நாட்டம் வைத்தருளிய நம்முன்னோர், சமானுதிக மிலேபென ஈண்டுநிலவிய ஆத்திகத்தை நிகழச் செய்தனர் காண்க.

(இன்னும்வரும்.)

T. Balasundrum Mudelliar.

[ (a) உன்மத்தரன்று சொல்வியாயஞ் செய்பவர் அவ்வாறு செய்த லெமக்கியல்பன்று.

(b) மகம்மதியர் வாளொருகையினும் வேதமொருகையினுந் தாங்கிப் புறச்சமயிகளை நரவேட்டை யாடியதும், கிறீஸ்தவர் (மேரி என்பவள் அரசாண்டகாலத்தில்) ஏனையோரை வாளிற்குந் தீய்க்கும் இரையாக்கினதும், சைவர் இதக்கமுருகுத்து கூடிமணுதி புறச்சமயிகளை கழுவேற்றியதும், புத்திர வாஞ்சையென்பது பரமாணுப்பிரமணமேனுமில்லாது இரணியன் தன்புத்திரனுகிய பிரகலாதனை பற்பல சகிக்கலாற்றா ஆக்கினைகளுக்கு உள்ளாக்கியதும், இந்துக்கள் பெற்ற பிள்ளையைக் கங்கையிலெறிந்ததும், அனேகர் ஜகனுதத் தேர்ச்சக்கரத்தில் வலியச் சென்று நசுக்குண்டு [illegible]தும், இன்

னன பலவும் முன்னோர் ஏற்படுத்திய மதத்தால் விளைந்த பிரயோஜனங்களன்று?

(c) நெல்லிற்கு உமியிருப்பதுபோல ஒவ்வொன்றிலும் நன்மைதீமை யிருக்கின்றதெனின், நெல்லினது உமிபோக்கி அரிசியைக் கொள்வதுபோல் குற்றத்தை நீக்கி குணத்தைக் கொள்ளுவதல்லவா மானுஷீகம்? அதிலும் குற்றமில்லாததையே முயன்று தேடிப் பெறுவதன்று நன்மானுஷிக விவேகப்பேறு? சமையத்தை யுணர்த்துவதுபோல சாத்திரங்களை யுணர்த்துதல் கூடுமே.---ED.]

## வர்த்தமானம்.

**பங்காளத்தில்** சமிஸ்கிருத பாடசாலைகள் மாணவாயிலை எட்டிப்பார்க்கிறதுபோலிருக்கிறதென்றும், நோய்பிடித்த அநேக பாடசாலைகளை உயிரோடு வைத்திருப்பதற்கான வெள்ளி மாத்திரை கொடுக்கும்படி கவர்ன்மெண்டாருடைய சகாயங்கேட்டுக்கொள்ளப்பட்டதென்றும், ஆனால், சமிஸ்கிருத பாடசாலைகளுக்கு வருஷத்திற்கு 12000 ரூபா சகாயஞ் செய்யவேண்டுமென்று பங்காளத்து பப்ளிக் இனிஸ்திரக்ஷன் டைரெக்டர் அபிப்பிராயங்கொண்டிருந்தபோதிலும், தற்காலம் பணமில்லாமையினால் சகாயஞ் செய்யக்கூடாமையா யிருப்பதுபற்றி பணவுதவியாகும்போது கொஞ்ச சகாயஞ் செய்வதாய் கவர்னர் ஜனரலவர்கள் லெப்டனண்டு கவர்னரவர்கள் டைரெக்டரவர்களாகிய இவர்களுடைய அபிப்பிராயங்கள் சர்க்கார் ரிகார்டில் எழுதப்பட்டிருக்கிறதென்றும், கேஜட் பத்திரிகையினால் தெரியவருகிறது.

**பெங்களூர்**சிவில் மிலிட்டேரி ஸ்டேஷனில் இதுவரையில் வரும்படிவரி யில்லாதிருந்தது. சுதேச சமஸ்தானங்களில் வியாபாரமுதலிய தொழில்கள் நடத்தினபோதிலும், அப்படிப்பட்டவர்களுக்கு வரும்படி வரி ஆக்ட்டு சம்பந்தப்படவேண்டியதென்று பிரதேச கவர்ன்மெண்டார் நிபந்தனைகள் செய்திருப்பதால், இனி சர்க்கார் வருப்படி அதிகமாகும்.

**ஜோலார்பேட்டையில்,** (மெயில்) தபால் உத்தியோகஸ்தருக்கும் ரெயில்வே உத்தியோகஸ்தர்களுக்கும் விவாதமுண்டாயது. ஜோலார்பேட்டையில் மெயில் திரெயின் சிலநிமிஷம் தாமசப்பட்டதால், தபால் உத்தியோகஸ்தர் புறப்படச் சித்தமாயிருக்கிறாராவென்று விசாரிக்காமல், கார்டு வண்டித்தொடரைநடத்தினர். சில கையெழுத்து வாங்கவேண்டியிருந்ததற்காக நின்றிருந்த தபால் உத்தியோகஸ்தர் என்ன அவசரமிருந்தபோதிலும் சர்க்கார் தபால் வேலையை முக்கியமாய்ப் பார்க்கவேண்டியதென்று அந்த வண்டித் தொடரைப் பின்னுக்குக் கொண்டுவரச்சொல்லித் தன் வேலையைச் சீக்கிரமாய் முடித்துக்கொண்டு ஏறிச் சென்றனர். ரெயில்வே திராவிலிங்போஸ்டாபீஸ் சூபரின்டெண்டாண்டானவர் ரெயில்வே உத்தியோகஸ்தர்கள் செய்த ஷை காரியத்தைக்குறித்து ரிபோர்ட்டு பண்ணினார். இது தமாஷான வழக்குத்தான். வண்டித்தொடர் இரண்டொரு நிமிஷம் தாமசப்படக்கூடாதென்பதுபற்றித் தபாலைப் பிந்திவிட்டுவிடுவது கூடாமையே; தபால் உத்தியோகஸ்தர் அதிகதாமசப்படுத்தி, பயணக்காரர்களையும் ரெயில்வே உத்தியோகஸ்தர்களையும் சங்கடத்துக்குள்ளாக்குவதும் கூடாமையே.

**பாம்பே** முனிசிபல் கூட்டத்தார் மகாராணி யவர்களுடைய ஜூபிலிவருஷோற்சவகாலத்தில் ராணியாரவர்களுக்கு சுபங்கொண்டாடுவதற்காக விண்ணப்பம் தயார் செய்யவேண்டுமென்றும், முனிசிபல் கட்டடங்களை சோதிப்பிரகாசமாக்குவதற்காகவும் தெருக்களை அலங்கரிப்பதற்காகவும் சந்தை வைப்பதற்காகவும் ரூ 15000 சேகரிக்கவேண்டுமென்றும், ஜூபிலியின் ஞாபகார்த்தத்துக்கென்றே நிரந்தரமான ஒருவிஷயத்திற்காக ரூ 80,000 அளிக்கவேண்டுமென்றும் ஒற்றுமையான அபிப்பிராயங்கொண்டார்கள்.

**நமது மகாராணி** யவர்களுடைய ஆளுகையின் ஐம்பதாம் வருஷம் வருகிற ஜூன்மீ 20உயோடு முடிவாகிறது. அன்றையத்தினந்தான் இங்கிலாந்துமுதலிய பிரதேசங்களில் ஜூபிலி வருஷோற்சவங் கொண்டாடப்படுமாம். அப்படியிருக்க, இந்தியாவில்மாத்திரம் நான்குமாசம் முன்னதாக வருகிறபிப்ரவரிமீ 16உ கொண்டாடும்படி உத்தேசிக்கப்படுகிறது. மற்ற ராஜதானிகளைப்பற்றி யோசிக்கவேண்டியநிமித்தமில்லாவிட்டாலும், சென்னை ராச்சியத்திலோ, இப்போதுதான் நேரிட்ட அநியாய மரணங்களினால் பட்டணத்திலுமல்லாமல் வெளிகளிலும் குடிகள் துயரத்தில் மூழ்கியிருப்பதுமன்றி, அக்கினிவாதை யடைந்தவர்களில்பிழைக்கிறவர்கள் சிலராயும் மரணமடைகிறவர்கள் பலராயும்இன்னும் நடந்துவந்துகொண்டிருக்கிற இந்நாளிலே குடிகள் யாவரும் ஒன்றுகூடி சந்தோஷங்கொண்டாடத் துணியமாட்டா[illegible] துணிவார்களாகில் அநுசிதந்தான். ஆனால், என்னகாரணத்தினாலோ முந்தி நடத்துவிக்க கவர்ன்மெண்டாருக்கு இஷ்டமுண்டாயிருக்கின்றதுபோலும்:

**ஹாவியான்** ராச்சியத்திலே பணமுட்டுப்பாடு மிததியாயிருக்கிறது. வரவுக்கு செலவு அதிகம். சர்க்கார் கஜானாவில் பணம்வைத்திருக்கவேண்டியதற்காகக் கடன்வாங்க முயற்சிசெய்யப்படுகிறது. கடன் கொடுப்பவர்களுக்கு ஐவேஜு ராசாவின் பத்திரம் தவிர வேறொன்றுமில்லை. அந்த தீவுகளிலுள்ள குடிகள் மொத்தம் 80,000 பேர்தான்; அவர்களில் வெள்ளைக்காரர்கள் 1,5000. ராஜா தமது ஐம்பதாம் வயசு ஜன்மதினத்தை ஜூபிலிவருஷமாகக்கொண்டாடினார்: அவர் ஐம்பது வயசு பிழைத்திருந்ததே அதிசயம்போலும்.

**ஆந்தமன்**தீவிலே பத்து வருஷத்திற்குமுன் கவர்ன்மெண்டு தேயிலை தோட்டத்திற்கு $3\frac{3}{4}$ ஏகரா நிலம் வளைக்கப்பட்டது. சென்ற வருஷத்திலே $288\frac{1}{2}$ ஏகரா விஸ்திரணமாயிற்று. சென்றவருஷத்தில் தேயிலை உற்பத்தி 26,600 பவுன். விற்பனையானது 23,273 பவுன், நிகர விற்பனைத்தொகை ரூ 11,048.

## அறிக்கை.

நமது மெம்பர்களும கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிகமாக "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினால்,அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச

தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ

இரண்டுபிரதிகள் ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடுமாதலால், அதிகபத்திரிகை ஒன்றுக்கு மேற்பட்டால் மாத்திரமே மாசமொன்றுக்கு வேறே ஒருஅணா தபாற்செலவு கொடுக்கவேண்டும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி----என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றி பெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணைபுரிவார்களென்று நம்புகிறோம்.



தத்துவவிவேசினி

நான்குபக்கம், பிரதி 1க்கு விலை அணா 1.

தமிழ்சந்தாவிபரம்.

உள்ளூர்—(அட்வானசு.) வெளியூர்—(அட்வான்சு.) (தபாற்செலவுஉள்பட)

| | | Rs. | A. | P. | | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 | மாசம் | 1-க்கு | 0 | 5 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 | ஷை | 3-க்கு | 0 | 13 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 | ஷை | 6-க்கு | 1 | 8 | 0 |

எல்லாத் தமிழ்ப்பத்திரிகைகளையும்

சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி

307 - வது நம்பர் வீட்டில்

பு. முனிசுவாமிநாயகருக்கும் ;

1886ம் - வருஷ முதல் சந்தாக்களையும்,

இங்கிலீஷ் பத்திரிகைகளையும்,

வேப்பேரி சில்வர்ஸ் ரோட்டில்

மதிருஸ் செகுலர்சொசைட்டி ஆனரரிசெக்ரிட்டேரி

மெஸ்டர். அப்ஷன்துரை யவர்களுக்கும்

அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிசாரிணி

இந்துசுவக்கியானசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 5] MADRAS:—SUNDAY JANUARY, 30, 287. A. S. [Monthly, 4 Annas.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## தெய்வச்செயல்.

தெய்வமென்பது, ஆத்திகாளுடைய மனக்கானலிலே அருபவக்கியான மெனும் மழை பெய்யாமலும், உண்மை ஞானமெனும் கதிரவன் உதிக்காமலும், விசாரணையெனும் ஏருழாமலும் முளைத்தெழும் அறியாமை யென்னுங் கள்ளியே. கள்ளிபோன்ற அறியாமையை மீண்டும் ஆத்திகாள் தேவன்தேவன் எனரூபகப்படுத்தி, அறியாமையால் நிகழுந் தொழில்களை தெய்வச்செயலெனவும் தீர்மானிக்கின்றனர். ஆனால் ஆத்திகாளால் இவ்விதம் தீர்மானிக்கப்பட்ட சித்தாந்தமோ பற்பல வேறுபாட்டையுடையது. அவ்வேறுபாட்டினை அடியில் வருமாறு காண்க. ஆத்திகமென்பது, வேதாந்தம், சைவம், வைணவம், கிறீஸ்துமதம் முதலிய மதங்களுக்குப் பொதுப்பெயர்.

க. வேதாந்தம்: இம்மதம் அகண்டமாயும், எங்கும் நிறைந்ததாயும், நிர்விகாரமாயும் உள்ளது பிமமென்றும், அதன் பிரதிபிம்பமே இப்பிரபஞ்சமென்றும், ஆதலால் பிரமம் மெய்யென்றும், பிரபஞ்சம் பொய்யென்றும், பொய்யாகிய விப்பிரபஞ்சத்தில் ஓர்வித சொரூபமாய் விளங்கும் மனிதர் யாவரும் இச்சொரூபத்தை யொழித்து இனி யாதொரு சொரூபத்தை யேனும் அடையாவழி தேடவேண்டுமென்றும் கூறும்.

பிரமம் அகண்டமாயின் அதன் பிரதிபிம்பமும் அகண்டமாயன்றோ இருத்தல்வேண்டும்? அவ்வாறில்லாமல் பிரபஞ்சத்தின்கண் உள்ள பொருள்கள் தத்தமக்குரிய நாமரூபங்களால் கண்டாகாரமாய் விளங்குவானேன்? பிரமம் எங்குநிறைந்திருக்குமாயின் அதன் பிரதிபிம்பம் விழுவது எங்கே? அதனைப் பிரதிபிம்பிக்கச்செய்யுமொளியேது? அவ்வொளிக்குஸ்தானமேது? நிர்விகாரமாகியஅப்பிரமத்தைபிரபஞ்சமாய்பிரதிபிம்பிக்கச்செய்தஒளியால்அதன் நிர்விகாரத்துவம் நிலைகுலைந்தொளிமழுங்கியதன்றோ? ஆகவேவிசாரணையினால், 'பிரமம் மெய்யென்பது' பொய்யாயும், அனுபவக்கியானத்தால், 'பிரபஞ்சம் பொயயென்பது' பொய்யாயும் வெளிப்படுகின்றது. 'உள்ளபொருள் இல்லாமற்போகாது' என்பதனாலும், 'சொரூபமின்றி பொருளில்லை' யாதலாலும் தற்காலம் உள்ள சொரூபத்தை யொழிப்பது சாத்தியமாயினும் வேறெந்த சொரூபததையேனும் அடையாவழி தேடுவது வீண் பிரயத்தினமும் அசாத்தியமுமாய் முடியுமென்பதற் கையஞ் சிறிதுமில்லை.

உ. சைவம் வைணவம்: இம்மதங்கள், பசு, பதி, பாசம் எனமூன்று பதார்த்தங்கள் நித்தியமாயுள்ளனவென்றும், அவற்றுள் பதியானது தன்னையும், பசு, பாசங்களையு மறியுமென்றும், பசுவானது பாசத்துடன் கலந்தமாத்திரத்தில் தன்னையும், பாசத்தையும் அறியுமென்றும், பாசமானது எக்காலத்தும் அந்தகாரத்திலிருப்பதென்றும், ஆகவே பதியானது தன்னை பசு அறியும்வண்ணம் அப்பசுவினை பாசத்தோடு பந்தித்து அப்பந்தனையால் பசுவிற் கியற்கையாயுள்ள அறியாமையை நீக்கி தன்னை யதன்பின் அறியச்செய்கின்றதெனவும் கூறும். பசு பதி பாசங்களை முறையே வைணவர் ஜீவ பர கன்மம் எனக்கூறுவர்.

ஆனால் பசுவானதுபாசத்தோடு கலந்தமாத்திரத்தில் தன்னையும் பாசத்தையும் அறியும் என பதியறிந்தது பசுவானது பாசத்துடன் கலந்ததற்கு முன்னேயா, பின்னேயா? முன்னமேயாயின் ஓர் விஷயம் சம்பவித்ததற்குமுன் அவ்விஷயத்தை யெங்ஙனம் அறியக்கூடும்? பிற்பாடாயின் பசுவானது பாசத்துடன் கலவாதிருந்தகாலம் ஒன்றுண்டென வெளிப்படுகின்றது. இவ்வாறு வெவ்வேறாயிருந்த பசுவையும் பாசத்தையும் சேர்த்தது யாதென வினா நிகழும். இவ்வினாவிற்கு சைவாள் பதியாகிய சிவனென்றும், வைணவர் பரமாகிய விட்டுணுவென்றும் விடையளிப்பர். சிவனென்றும் விட்டுணுவென்றும் சொல்லப்படும் பதியானது பசுவையும் பாசத்தையும் ஒருங்கே சேர்க்கத் துணிந்து தானும் பசுவினிடம் சேர்த்துணியாமை குரங்கு தன் குட்டியைக்கொண்டு சோதிப்பதுபோல விருக்கின்றதன்றோ? பசுவானது பாசத்துடன் கலக்கப்பட்டு தன்னையும் பாசத்தையுமறிந்ததனாலடைந்தபயனென்னை? துயருறுகின்றதன்றோ? இத்துயர்க்குக் காரணம் பதியன்றோ! பதியின் செய்கையால் துயருற்ற பசுவை பாசத்தினின்று மீண்டும் மீள்விக்க வறியாததாய் பதியானது பசுவே பசுவே நீ மீண்டும் பாசத்தைவிட்டு நீங்கி என்னிடத்தில் வா வா வென்று அழைப்பது, தானொருவனை சேற்றினிடத்தாழ்த்திவிட்டு மறைவில் நின்று சேற்றினின்று வோடிவா வோடிவாவென்று அழைக்கும் புத்தியிலியும் மீட்கச் சத்தியிலியும், ஆகிய ஒருவன் செயலை யொத்திருக்கின்றதன்றோ! பாசத்தோடு பசுவைக் கூட்டுவித்த பதியான்து அப்பாசத்தோடு தான் கலந்து மீளாச்சிறைபூண்டுபசுக்களை அவையிருந்தவாறு விடாமை சைவரும் வைணவரும் அடையும் துர்ப்பலனுக்கும்.

D.

(இன்னும்வரும்.)

———o———

## வாதப்பிரதிவாதம்.

பன்னருந்தமிழாம்பாற்கடலதனைச்
சொன்னயப்பொருணயச்சுவைமிகவுணர்ந்த
தத்துவவிசாரிணிபத்திராதிபரே-வந்தனம்.

நிகழ்ந்த டிசம்பர்மீ கசு-ம் திகதிதனில் (சென்றவாரப்பத்திரிகையில்காண்க.) யாங்கடாவியவினாக்கட்குத் தாங்களளித்த விடையின் திறத்தைச் சிறிது சீர்தூக்கிக்காட்டுவோம்.

"கெடுவல்யானென்பதறிக, தன்னெஞ்சு
நடுவொரீஇயல்லசெயின்."

ஆதலின், சமரசசன்மார்க்க சிகாமணிகள் செவி சாய்ப்பாராக.

கற்பிதமாயுண்டாக்கப்பட்ட சமயங்களும், அவற்றின் துணியாயிலங்குந் தெய்வங்களை வழிபட்டொழுகலும் நற்பயனை நல்காவா என்ற வினாவுகருத் தாங்கள், இம்மியளவாய சிலதீமைகளைமாத்திரங் காட்டி, அளவிகந்தநன்மையைக் கண்ணுறாதிருத்தல் சாலவழகுடைத்து. ஒரு ஏற்பாட்டை யங்கீகரிததலால் விளையுந் தீமைமல்கி நிற்புழி யதனைத் திரஸ்கரித்தலும், நன்மைமிக்கிருப்புழி யதனை யங்கீகாரஞ்செய்தலுமன்றோ விவேகிகளிலக்கணம். அங்ஙனமின்றி, சமன்செய்து சீர்தூக்குங்கோலினதிலக்கணமமையப் பெறாது; தீமையினைமாத்திரங்காட்டித் தம்கட்சியைத் தாபித்தல் பளா! பளா! நன்று நன்று!

"நெல்லினதுமிபோக்கி அரிசியைக்கொள்வதுபோல் குற்றத்தை நீக்கி குணத்தைக்கொள்வதல்லவா மானுஷீகம்" என்றீர், அஃதுண்மையேயாதலின், தாங்கள் காட்டிய சிற்சில குற்றங்களை நீக்கிக் குணத்தைக்கொள்வோம். (a) நும்மொழிகளாலேயே, குற்றங்கள் நீங்கிய சமயங்களும் தெய்வங்களு நிலைநின்றமைகாண்க. அற்றேல், ஆத்திகவைரிகளாய் துவசமெடுத்து வெளிவருவது என்னக் கருதி? ஏனையோர் 'உளது' என்பதை 'இலது' என்றறைவதாற் பெருமை பெறலாமென்று தானோ? விடைபகர்மின்: தீமை சிறிதாயினு மவ்வேற்பாடுகளிலுளவாதலின் யாமுற்று மவற்றைக்கொள்ளேமென்று பகர்வீராயின், "நெல்லுக்குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்குமுண்டு" தலின்,

யாம் சோற்றைத்தின்னோம், நீரை யுட்கொள்ளோம், பூவினையுஞ்சூடோமென்பீர்போலும்.

நீவிர் தீமைகளென எடுத்துக்காட்டிய சிலவற்றின் ஆபாசத்தை யெடுத்துக்கழறுவாம்.

"சைவர் இக்கழுகுத்து க்ஷமணாதிபுறச்சமயிகளைக்கழுவேற்றி" னர். என்றீர்.

(b)அந்தோ! சைவசமயத்தின் சரிதைகளை முழுதொருங்குணர்ந்தீர்போலும். சைவசமய குரவராகிய எம்பந்தமறுக்குஞ்சம்பந்தப்பெருமான் க்ஷமணாதிகளைப்பிரக்கமின்றிக்கழுவேற்றினரா? க்ஷமணர்தாமேகழுவேறினரா? சைவரையடுத்தறிமின்:

"நன்றிதேரூர் பின்புள்ளமானமிழந்துநாணழிந்து [மக்
குன்றுபோலுந்தோணிபுரக் கோமானெதிரேயாங்களு
[து
கின்றுதோற்றேமெமையீண்டுநீரோ வென்றீரெனநேர்ந்
நின்றுகூறக்கவுணியர்கோனனையாருய்யுநெறிநோக்கா.'
[றீர்
"இன்னமறத்தாறிசைக் கின்றேநீரேன்வாளாவிறக்கின்
அன்னையனையானெம்மிறைவ னவனுக்காளாயுய்மின்ச
[ழி
ளென்னவேடசிறியாய்நீ யெவ்வாறெங்கட்கடாதமொ"
சொன்னதென்று மானமுளார் கழுவிலேறத்தொடங்கி
இவ்வண்ணமாக— [னர்"
"மதத்தினின்மானமிக்கார் தாங்களேவலியவேறிப்
பதைத்திடவிருந்தார்"

மேலய திருவாக்கினுண்மையினையும் பத்திராதிபரது வாக்கினாபாசத்தினையுந் தெள்ளறிஞர் சீர்தூக்கித்தெளிவாராக.

ஆயினும் "ஏனைப்பறிதலை யவரைச் சைவவிதத்தின லொழுக்கம் பூண்டவேடத்தார் பற்றிப்பற்றிச் சிதைத்திடர்செய்தேறிட்டார் திரிதலைக் கழுக்கோறன்னில்" இதுமறக்கருணையென்க.

மதாவேசங்கொண்டு சைவரைக் கொலைபுரிந்துவந்த மகா பாபரூபிகளின்னு முயிர்வாழ்ந்து, சகோதரரை நிர்மூலமாக்குவதை விலக்குவான்கருதியே, மானிட சுகாதாரவேதுக்களிலும், பிரஜாரோக்கிய பிரஜானுகூல பிரவர்த்தனாதிகளில் நாட்டம்வைத்தஅக்காலத்துச்சைவர், அவ்வமணரைச் சங்கரித்தனர்காண்க. தன்குடிகளை யோம்புமோர் மன்னவன், ஏனையோர்க்கு ஹானியை விளைக்குந் தீமையாளரைக் கொலைபுரிதல் மானுஷீகமன்றோ?

இங்ஙனமே யேனையவற்றின் ஆபாசத்தினையும் இடம் பெற்றுழிவருகிற முறை யெடுத்துக்காட்டுவாம்.

"சமயத்தை யுணர்த்துவதுபோல சாத்திரங்களை யுணர்த்துதல் கூடுமே" என்றீர்.

(c) சாத்திரத்திற் பயிலுவதற்கின்றி யமையாதனவாகிய தேகதிடம்,மதிநுட்பம் முதலிய அமையப்பெறாத கோடானுகோடிகள்போம்வகையாது? கடாவிய வினாக்கட்கு நேரான விடைகளைத் தூஷணை யொழித்து நியாயவாயிலாய்ச் சகோதர வாஞ்சையுடன் தீட்டிக் காட்டுமின்.

22nd December 1879. Madras. } (இன்னும்வரும்.) T. Balasundaram Mudr.

(a) மதங்களனையவும் மனிதரது ஏற்பாடுகளென்பதனைச் சத்தியமேயென்று இவர் ஒப்புக்கொண்டமையாலும் அவற்றில் நன்மை தீமைகள் இரண்டும் உண்டென அங்கிகரித்தமையாலும் குற்றத்தை நீக்கிக் குணத்தைக்கொள்ளுவது எல்லாருக்கும் ஒத்ததே யென்று கூறினும். இங்ஙனம் கூறியதனால் குற்றங்களை நீக்கிக் கொள்ளக்கூடிய மதங்களுண்டெனவாகின்றதேயல்லாமல், குற்றங்கள் நீங்கியமதங்களும் (குற்றங்களுக்கெல்லாங்காரணமாகிய) சிவமாதி தெய்வங்களும் நிலைநின்றமை காண்கிலம். பிரகசனம், சித்தாந்தம், உத்தாபன முதலிய தருக்கசாதனசாத்திரப்படி எங்ஙனம் அனுமானித்தற்கிடமுண்டோ வதைப் பாரமரிசித்துக் காட்டி இவரது அநுமானத்தை நிலைநாட்டுவாராக. இஃது பத்தொன்பதாவது நூற்றாண்டிற் படித்த பன்மதாபிமான தருக்கசாத்திர நிபுணத்துவம்போலும். குற்றத்தை நீக்கிக் குணத்தைக்கொள்வோமென்பதனால் பூவையும் புனலையும் போசனத்தையும் நீக்குவோமென்று இவரது தெள்ளறிவிற்குப் புலப்பட்டமை காலவழுக்குடைத்து. நீரைநுரைபோக்கியும் நெல்லை உமிபோக்கிச் சமைத்தும் உண்போம் பூவைப் புல்லிதழ்போக்கிச் சூடிக்கொள்வோமென்பதே நங்கருத்தென சாதாரண படிப்பாளிகளும் தெள்ளிதினுணர்வர்.

(b) சைவர் இக்கழுகுத்து க்ஷமணாதி புறச்சமயிகளைக் கழுவேற்றினர் என்று யாம் பொதுப்படக் கூறினதைத் 'தம்பந்தம் போக்கும் சம்பந்தர்' அங்ஙனஞ் செய்தாரெனத் தாமே தலைமேல் போட்டுக்கொண்டு, திரும்ப அவர் அங்ஙனஞ் செய்யவில்லையென்று திருவிளையாடற்பாட்டைத் தெருவிளையாடலாக்கிவிட்டார். அங்ஙனஞ் செய்ததல்லாமல யாமுஞ் சைவத்தினை யுணரோமென்று தோஷாரோபணமுஞ் செய்தார். விவேகிகளே! யாம் சைவத்தினை யுணரவில்லை யென்பதும், இவர் உணர்ந்தவரல்லரென்பதும் அடியில் விளங்கும். இவர் மேல்காட்டிய பாக்கள் எப்புராணத்தில் எப்படலத்திலுள்ளவை? திருவிளையாடற்புராணத்தில் சமணரைக்கழுவேற்றிய படலத்திலன்றோ? சமணர் தாமே கழுவேறினரென்று இவர் காட்டிய பாட்டின்படி நடந்தது உண்மையாயின் 'கழுவேறிய படலம்' என்றிராமல் கழுவேற்றியபடலமென்று இருத்தற்குக் காரணமென்ன? ஏற்றிய-ஏறியவென்னுஞ் சொற்களுக்குப் பேதமிலவோ? இத்தகைய கோமுட்டி சாட்சியைக் கோர்ட்டார் கேட்டால் வாயால் நகைப்பார்களோ? சமயத்தினதும் நூல்களினதும்சம்பவாதி உண்மைகளை அகச்சாக்ஷிபுறச்சாக்ஷிகளைக்கொண்டுவிசாரிக்குங்கால், அகச்சாக்ஷியிலேயே படலத்திற்கும் படல நுதலிய பாக்களுக்கும் பரஸ்பரவிரோதமிருப்பின் அந்த மதாபாசத்தை விவேகிகள் எவ்வாறுகொள்வர்? இன்னும் இவர் பிரமாணமாகக்கொண்ட அத்திருவிளையாடற் புராணத்திலேயே, அப்படலத்திலேயே மேல்காட்டிய பாட்டிற்கு அடுத்தபாட்டிலேயே "ஏனைப்பறிதலையவரைச்சைவவிதத்தினல்வேடம்பூண்ட வேடத்தார் பற்றிப்பற்றிச் சிதைத்து இடர்செய்தேறிட்டார் திரிதலைக்கழுக்கோல் தன்னில்" என்றிருப்பதை யூகிக்கவொட்டாமல் இவர் மதம் இவர்கண்ணைமறைத்து மறக்கருணையென்று சொல்வித்தமை விந்தை! விந்தை! இன்னும் அடுத்தபாடல்களைப்பார்த்தால் க்ஷமணர்பால சைவர்புரிந்தகொடுமைகள் நன்குவிளங்கும். மேலும் இவர்தம்பந்தம்போக்கும் சம்பந்தரும் க்ஷமணாதிகளைக்கழுவேற்றினரென்பதும் அவர்களைக்கழுவேற்ற உடன்பட்டாரென்பதும் அடியிற்காட்டும், திருத்தொண்டர்புராண சாரத்தினாலேயும், பெரியபுராண விருத்தத்தினாலேயும், திருஞானசம்பந்தர் தேவாரத்தினாலேயும் விளங்கும்.

ஆரெரியிட்டெடுத்தவேடவைமுன்னேற்றி
யாற்றிலிடுமேடெதிர்போயனையவேற்றி
யோரமணரொழியாமேகழுவிலேற்றி
யோதுதிருப்பதிகத்தாலோடமேற்றிக்
காருதவுமிடிபுத்தன்றலையிலேற்றிக்
காயாதபனையின்முதுகனிகளேற்றி
யீரமிலாவங்கமுயிரெய்தவேற்றி
யிலங்குபெருமணத்தானையெய்தினரோ.

மன்னவன்மாறன்கண்டுமந்திரியாரைநோக்கித்
துன்னியவாதிலொட்டித்தோற்றவிச்சமணர்தாங்கண்
முன்னமேபிள்ளையார்பாலனுசிதமுற்றச்செய்தார்
கொன்னுனைக்கழுவிலேற்றிமுறைசெய்கவென்றுகூற
புகலிபல்வந்தஞானப்புங்கவரதனைக்கேட்டும்
இகலிலரொனினுஞ்சைவரிருந்துவாழ்மடத்திற்றீங்கு
தகவிலாச்சமணர்செய்ததன்மையாற்சாலுமென்றே
மிகையிலாவேந்தன்செய்கைவிலக்கிடாதிருந்தவேலை,

வேதவேள்வியைநிந்தனைசெய்துழ
லாதமில்லியவமணொடுதேரரை

வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
பாதிமாதுடனுபபரமனே.

இன்னும் இவர்கள்புரிந்த கொடுமையினை சிவரகசியத்தினும், உபமன்யுபக்தவிலாசத்தினும், அகத்தியபக்தவிலாசத்தினுங்காணில் நன்குவிளங்கும். அத்திருவிளையாடலிலேயே,

[வழிவழிவருமாணுக்கர் சாதற்குவருந்திநெஞ்ச
மழிபவர்திருநீறிட்டா ரதுகிட்டாதயர்வாராவி
ணிழிவில்கோமயத்தையள்ளிப் பூசினரிதுவுங்கிட்டா
தொழிபவராவின்கன்றைத் தோளிலிட்டுயிரைப்பெற்றார்.
கூறிட்டமூன்றுங்கிட்டா தயர்பவர்குற்றந்தீர
நீறிட்டார்நெற்றியோடு நிருமலகோமயத்தின்
சேறிட்டார்நெற்றியோடு நெற்றியைச்செறியத்தாக்கி
மாறிட்டபாசந்தன்னை மறித்திட்டுப்பிறப்பைவெல்வார்.
மற்றிவர்தம்மையூற்றஞ் செய்திலர்மடிந்தோர்யாருஞ்
சுற்றியசேனங்காக நரிகளுந்தொடர்ந்துகௌவிப்
பற்றினநீர்த்துறைத்தின்னக் கிடந்தனர்,]

இரக்கமற்ற சைவர்கள் புரிந்த கொடுமையைச் சகிக்கலாற்றாது சிலர் சாம்பரைப் பூசின ரென்றும், அது கிட்டாதவர் கோமயத்தைப் பூசின ரென்றும், அதுவுங் கிட்டாதவர் பசுவின் கன்றைத் தோளிற் றூக்கினார்க ளென்றும், அதுவுங்கிட்டாதார் நீற்றினையுங் கோமயத்தையுந் தரித்தார்நெற்றியோடு தங்கள் நெற்றியைப் பொருத்தினார்களென்றுங் கூறியிருப்பதைக் காணுமை என்னதுரபிமானமோ ? இன்னும் இவற்றின் உண்மைவிரோதத்தை ஆராயவேண்டின் சூக்ஷ்மணவிஜயத்திற்காண்க. இத்தியாதி நியாயப்பிரமாணங்களாலும் "மறக்கருணையென்று" இவர்வாயினாலேயே வெளிவந்தமையாலும் எமதுகூற்று மறுக்கப்பட்டதில்லை. சைவர் கொடுமைபுரிந்தாரொன்னும் எமதுகூற்றை மறுக்கவழியில்லாமலே இவ்வளவுதூரம் வீண்வாதம் செய்தமை நகைப்புக்கிடமாம். இத்தகை யோர்வீண்வாதத்திற்கு இடங்கொடுப்பது பிரயோசனமுடைத்தாவென்பதை விவேகிகள் சிந்தித்தல்வேண்டும்.

(c) சாத்திரத்திற் பயிலுவதற்கு தேகதிடம்போதாதவர் போகும்வழி ஆபாசமயானவழியே; மதிநுட்பமையப்பெறார் போகும்வழி உன்மத்தப் பரிகாரச்சாலைவழியே—Ed.

## ஜூபிலிஉற்சவ ஆயத்தம்.

சென்னைமகமதியர்கள் மகாராணியவர்களுடைய ஜூபிலி வருஷோற்சவத்தைக் கிரமமாயக் கொண்டாடவேண்டியதைப் பற்றி ஆலோசிக்கும்பொருட்டு சென்னைபிரசிடென்சி காலீஜுமந்திரததில் 23உ சபைகூடினார்கள். மகமதியபிரபுக்கள் அநேகர்வந்திருந்தார்கள். அக்கிராசனாதிபதியாகிய மொகமத் மாமத்கான் பஹதூரவர்கள் மேற்கண்டவிஷயத்தைப்பற்றி யோசிப்பதற்காகச் சபைகூட்டப்பட்டதென்று தெரிவித்தார். டாக்டர் மோதீன் ஷெரீப்கான் பஹதூர் அவர்கள் பிரிட்டிஷ்துரைத்தனத்திலேஜனங்கள்முக்கியமாயடைந்த பிராணரட்சணை,சொத்துரட்சணை,கல்வி,பென்ஷன் இவைகளையும்,மற்றும் அநேகநன்மைகளையும்பற்றி வெகுவாய்ப்பேசி, இத்தியாதிகாரணங்களினால் மகாராணியவர்களுடைய ஜூபிலி உற்சவத்தை அகத்தியம் கொண்டாடவேண்டுமென்று கூறினர்.

இந்த விசாலமான ராச்சியத்தின் சக்கரவர்த்தினியாரவர்களுடைய பிரதிநிதியாகிய கவர்ன்மெண்டு நமக்குளது. நாம் அந்த கவரன்மெண்டாருடைய வாக்கே சக்கரவர்த்தினியாருடைய வாக்காகக்கொள்ளவேண்டும், இராஜப் பிரதிநிதியவர்கள் இந்தியா ஸ்டேட்டு செக்கிரிட்டேரியவர்களோடு தகுந்த ஆலோசனை செய்தபின்புதான் அநேக நல்ல ஏதுக்களைப்பற்றி இந்தியா முழுமையிலும் ஜூபிலி உற்சவத்திற்கு பிபர்வரி-மீ 16உ நியமித்தார்கள்; ஜூன்மீ 20உ ஆகிய சரியானதினத்திலே அதைக்கொண்டாட நமக்கு இஷ்டமிருந்தபோதிலும், ராஜப்பிரதிநிதியினுடைய தீர்மானத்தை ஆடசேபிப்பதாவது பிபர்வரிமீ 16உ நேமித்ததற்கு அவரைக்காரணங் கேட்பதாவது நமது வேலையல்ல;இந்தியாவின அனேகபாகங்களில் ஜூன்மீத்திலே ரிதுக்காலம் விருப்பமானதா யிருக்கமாட்டாது; நமது சக்கரவர்த்தினியாரைச் சந்தோஷிப்பிக்கவும் நமது விஸ்வாசத்தைத் தெரிவிக்கவும் உற்சவங் கொண்டாடப்போகிறோம், ஆதலால் தினத்தைக் குறித்து ராஜப் பிரதிநிதியினுடைய எண்ணத்தை நிறைவேற்றுவதில் நாம் ஆட்சேபிப்பது சரியல்ல, அதனாலே ராஜப்பிரதிநிதியவர்களுடைய கோபத்திற்கும் பாத்திரராவதுமல்லாமல், சக்கரவர்த்தினியாருக்கும் வெறுப்புண்டாக்குவோம்; இப்படிப்பட்டது குடிகளுடைய விஸ்வாசத்திற்கு எவ்வளவும் தகாது. ஆசலால், அபிப்பிராயங்களில் சொற்பவேறுபாடு உண்டாயிருந்தபோதிலும், அதை பொறுக்கிவிட்டு யாவரும் ஒருமித்து அந்தப் பதினாறுந்தேதியிலாவது அதற்காகத் துரைத்தனத்தார் நேமிக்கிற வேறே எந்ததினத்திலாவது உற்சவங்கொண்டாட வேண்டுமென்று ஆமத்மோதீன்கான் பஹதூரவர்களால் பிரேரேபிக்கப்பட்டு யாவராலும் அங்கீகரிக்கப்பட்டது. பிறகு, மகாராணியவர்களுக்கு எழுதம் விண்ணப்பத்தை விசித்திரமான பெட்டியில் அடக்கஞ்செய்து அனுப்பவேண்டுமென்றும், வசூலாகிற பணத்தில் மிகுதியிருந்தால் மகமதிய ஏழைகளுக்கு உற்சவதினத்தில் அன்னம் அளிக்கவேண்டுமென்றும் சக்கரவர்த்தினியார் பேரால் மகமதியவித்தியார்த்திகளுக்கு ஸ்காலர்ஷிப்ஏற்படுத்தவேண்டுமென்றும், தீர்மானஞ்செய்யப்பட்டது. கடைசியாய், ராணியாரவர்களுக்கு விண்ணப்பம் அனுப்பும்விஷயத்தில்மாத்திரம் மகமதியர்கள் இந்தியாவிலுள்ள மற்ற வகுப்பாரைப் பிரிந்திருக்க இஷ்டமே யல்லாமல், மற்ற சகல விஷயங்களிலும் எல்லாரோடுங் கூடிக் குலாவ இஷ்டமுள்ளவர்களாகவேயிருக்கிறார்களென்றும், ஆமத்மோதீனகான் பஹதூரவர்கள் தெரிவித்தார்கள்.

ஜூபிலி உற்சவங் கொண்டாடவேண்டியதினிமித்தம் சென்னைசுதேசபிரபுக்கள்அடுத்தடுத்து சபைகூடினார்கள். சிலஐரோப்பியர்களும் வந்திருந்தார்கள். இங்கிலீஷ் துரைத்தனத்திலே, முக்கியமாய் சக்காவர்த்தினியாரவர்களுடைய ராச்சியபாரகாலமாகிய ஐம்பது வருஷங்களில் இத்தேசத்திற்குண்டாகிய அளவிறந்த நன்மைகளை எழுதினால் அநேக கிரந்தங்களாகுமென உணர்ந்த நன்றியினால் உற்சவங்கொண்டாடவேண்டுவது அத்தியாவசியகமென சர்வத்திர சம்மதத்தை தெரிவித்தார்கள்; ஆனால், கிரமமான தினத்திற்கு நான்குமாசமுன்னதாக அந்த உற்சவத்திற்கு பிபர்வரிமீ 16உ நேமிக்கப்பட்டிருப்பதைப்பற்றிமாத்திரம் யோசனை யுண்டாயிருந்தது. கொஞ்சநாளைக்குமுன்னேதான் நேரிட்டு, இன்னுந் தீராதிருக்கிற அக்கினி ஆபத்து விசனத்தினாலும், அந்த ஆபத்து சில தனவான்களுடைய குடும்பத்திலே நேர்ந்திருப்பதினாலும், திரவிய சகாயம் குறைவுபடுமாயின், சிறப்பாக உற்சவம் நடப்பது தடைபடுமென்கிற அச்சத்தினாலும் சிலநாள் பொறுப்பதுசந்தர்ப்பமாயிருக்குமென்று முதலில் எண்ணினார்கள். இந்தஉற்சவம் நமது இந்தியாமுழுவதும் ஏககாலத்தில் கொண்டாடுவதுசிரேஷ்டமாதலாலும், மற்றப் பிரதேசங்களிலே அந்தத் தினத்தைச்குறித்து ஆட்சேபமொன்றுமில்லாமையாலும்,கல்கத்தாவிலும்பொம்பாயிலும்ஜூன்மீ மாரிகாலமாயிருக்குமாதலால் உற்சவத்திற்கு இடைக்கிடை ஒருவேளை பங்கமுண்டாகுமென்கிற யோசனையினாலும், பிபர்வரி 16உயே சரியென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. அதற்குவேண்டிய காரியங்களை நடத்தக் கமிட்டி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. கடைசி சபையில்அக்கிராசனாதிபதியாக வீற்றிருந்த கவர்னரவர்கள் பணஞ்சேகரிப்பதுமுதற்காரியமானதுபற்றி ஏழை கவர்னரிடத்தில் வசூல்செய்யும்போது மகராச வக்கீல்களைவிடமாட்டீர்களென்றும அவர்களை விடாதபோதுதாதாக்களாகிய ஜமீன்தாரர்களை விடமாட்டீர்களென்றும் இவ்வாறு யாவருக்கும் சிரிப்பும் சந்தோஷமுமுண்டாகும்படி சிலவேடிக்கை வசனங்களைப் பேசி மிகுதியாய்ப் பணஞ் சேகரிக்குமார்க்கத்தைச் சூசனையாய்க் காட்டினர்.

வசூலாகுந்திரவியத்திலே உற்சவத்திற்கு வேடிக்கையார்த்தமான செலவுபோக மிகுதிப்பணத்தைக்கொண்டு சென்னையில் கட்டடங்கட்டி ஜூபிலிஞாபகார்த்தமாக சக்கரவர்த்தினியார்பேரால் ஓர்சாலை யேற்படுத்துவது நன்மையாக எண்ணியிருந்தபோதிலும், ஒன்பது வருஷத்திற்குமுன்னே இவ்விடத்தில் கொடியக்ஷாமம் நேரிட்டு ஜனங்கள் அபரிமிதமாய் மாண்டபோது, மகாராணியாருக்கும் இங்கிலாந்து குடிகளுக்கும் மனுவுசெய்துகொண்டமாத்திரத்தில், சுமார் ஒருகோடிரூபாய் கையொப்பமூலமாய் அவ்விடத்திலிருந்து அனுப்பப்பட்டதே ; அது ஒருபிரதேசப் பிரயோசனத்துக்காகவே. இப்போது ஞாபகார்த்தமாக லண்டன்பட்டணத்தில் உத்தேசித்திருக்கிற சுபகரமான பெருத்தகட்டடம் மகாராணியாருடைய அதிகாரத்துக்குட்பட்ட ராச்சியமுழுவது மிருக்கிற குடிகள் ஒன்றுசேர்ந்து கட்டவேண்டியதாயிருக்கிறபடியாலும், மகாராணியவர்களும் அதற்குச்சம்மதித்திருப்பதாலும், இவ்விடத்தில உற்சவகொண்டாட்டத்திற்கும், தருமவிஷயத்திற்கும், ஞாபகார்த்தமான வேலைக்குஞ்செலவிட்டபின்பு, ஓர்பெருந்தொகை லண்டன்பட்டணத்துக் கட்டடத்துக்கு அனுப்பவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.அச்சமயத்தில் சென்னை ஷெரிப்பு P.S. இராமசாமிமுதலியார் C. I. E. அவர்கள் கையொப்ப ஜாபிதாவில்கையொப்பமிடுவதுமல்லாமல் தமதுசொந்தசெலவிலே பலஏழைப் பாடசாலைகளின் வித்தியார்த்திகளுக்கு விருந்தளிப்பதாகவும், ஜூபிலி ஞாபகார்த்தமாக "விக்டோரியாவார்டு" என்னும்பெயரால் மணியக்காரசாவடி (கஞ்சிதொட்டி) யில் பெண்டுகள் வைத்தி

யசாலைகட்டுவது முதலியவற்றிற்காக ரூ 25,000 கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டார். மேலும், வெளிப்பிரதேசத்திலுள்ள தமது சிநேகிதரொருவர் பிப்ரவரிமீ 16உ சென்னைக்குவந்து, சக்கரவர்த்தினியாரைப்போல வெங்கலப் பிரதிமை யொன்று கொடுக்க உத்தேசித்திருப்பதாகவும் தெரிவித்தார்.

## கடிதம்.

ஐயா, தத்துவவிவேசினி பத்திராதிபரே,

சிலவாரங்களுக்குமுன்னமே தங்கள் கையொப்பக்காரர்களில் சிலர் கேட்டுக்கொண்டபடி சென்ற இரண்டுபத்திரிகைகளில் பழய வாதங்கள் பிரசுரஞ்செய்யப்பட்டிருப்பதைக் கண்ணுற்று ஆனந்தமடைந்தேன். தங்களைக்கேட்டுக்கொண்டவர்களில் யானுமொருவனே. அப்படிப்பட்ட விஷயங்களைப் புதிய கையொப்பக்காரர்கள் அறிவார்களாகில், சீர்தூக்கிப்பார்க்க இடமுண்டாகுமாதலால், அவ்வித விசேஷ விஷயங்களை அப்போதப்போது பிரசுரஞ்செய்வீர்களென்று கேட்டுக்கொள்ளுகின்றனன்.

த். பாலசுந்தரமுதலியாரென்பவர் எழுதியதாகச் சென்றவார பத்திரிகையில் கண்டிருக்கிற அம்சங்களில் முக்கியமானவைகளுக்குத் தாங்கள் சுருங்கச்சொல்லவேண்டிய நியாயத்தின்படி சமாதானங் கூறியிருக்கிறீர்கள். "மதங்களனையவு மனிதரது ஏற்பாடுகளேயொழிய ஒரு முதல்வரேற்பாடாகத் தோன்றவில்லையென்பது சத்தியமே" யென்று ஒப்புக்கொள்ளுகிற ஷை முதலியார், "சைவசமயமேசமயமென்று திருவாய்மலர்ந்தருளிய தாயுமானவரும் சமயாதீதப்பழம்பொருளென்று கடவுளைக் குறிக்கின்றனர்" என்று தமது கொள்கைக்கு மேற்கோளாகக் கூறியுள்ளார். சமயமென்பது கற்பனை, கடவுளொருவருண்டென்று தாயுமானவர் சொல்லியிருப்பாராயின் மேற்கோளாகும்; அப்படிக்கன்றி, "சைவசமயமேசமயம்" எனவற்புறுத்திச் சொல்லியிருப்பதனால், கற்பனாசமயங்கள் பலவற்றுள்ளும் சைவமேநிர்த்தோஷமானதென்பது தோன்ற அதை உதகரித்தனராக்கும். அன்றியும், விஷ்ணுபிர்மாக்களை இழிவுபடுத்திச் சிவனைச் சிறப்பிக்கிறபாடலை உதகரித்திருப்பதை யோசிக்குமிடத்து, சமயாதீதப்பழம்பொருள் அல்லது கடவுளென்றது சிவன்தானே? முதலியாரதுவாதத்தை யாராயுங்கால், பொதுமையாகக் கடவுளொருவ ருண்டென்கிற நம்பிக்கையில்லாமல் சைவசமயப்பற்றுடையவராகக் காணுகிறார்.

ஆன்மாக்கள் சுகமனுபவிக்கவேண்டுமெனக் கருதி அளவற்ற கோட்பாடுகளைச்செய்த நம்முன்னோர் மதியே மதியென்று ஓரிடத்தில் வியந்து மூன்று வியப்புக் குறியிட்டிருக்கிறார். மற்றோரிடத்திலே, அன்னோர்செய்த "ஒவ்வொரு (சமய) ஏற்பாட்டிலும் தீமையும் நனமையும் பிரிவறவுளவாதலின், (இக்காலத்து) மூதறிஞர் அவ்வேறபாட்டில் நன்மை மிககிருப்புழியதனை யங்கீகரித்தலும், தீமைமல்கிநிற்புழித்திரஸ்கரித்தலுஞ் செய்யாநிற்பர்" என்று ஒப்புக்கொள்ளுகின்றனர். மிக வியக்கத்தக்க முன்னோர்கள் செய்தனவற்றுள் நிகழும் நன்மைதீமைகளைப் பகுத்தறிபவர்கள் அவர்களினுஞ் சிறந்தவர்களாவார்கள். சமயக்கோட்பாட்டிலுள்ள மிக்க தீமையையெடுத்துக் காட்டுவோரும் (அது தீமையல்ல, நன்மைதானெனச் சாதிக்கப்படுமளவும்) முதலியாருடைய கருத்தின்படி மூதறிஞராகவே யிருக்கின்றார்கள்.

"அவனியக்க நாமியங்கும்பாவைகளெனப்பகர்வதால் வினையுந் தீமை யிஃதென வுணரவல்லேனல்லேன்" என்றுகூறி, ஆன்மாக்களின் இருவினைகளைக் கயிறுகக்கொண்டு கடவுள் அவற்றை ஆட்டுகிறானென்கிற ஒரு செய்யுளையும் உதகரித்திருக்கிறார். இதனாலே, நன்மையாயினும் தீமையாயினும் அவன்செய்விக்க மனிதன்செய்கிறவனாகிறானேயல்லாது, எதற்கும்மனிதன்பொறுப்பாகமாட்டான். மனிதனுக்குத் தனககென ஓர் செயலில்லாதபோது, வினை இவனால்வந்ததாகாமல் புரண்டுபோம், புரளவே மற்றியாவும் புரளும். இக்கோட்பாடு, "இந்தச்சீவனால் வருமறுபகையெலாம் இவன்செயலென்னுது, அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள் அதோகதியடைவாரோ" என்கிற கோட்பாட்டுக்கு விரோதமாயிருக்கிறது. முந்தியது முதலியாருக்குச் சம்மதமானது, பிந்தியது எனக்குச்சம்மதமானது; ஆயின், இவ்விரண்டுமடங்கிய ஓர் சமயத்தி லகப்பட்டவன் இருதலைக்கொள்ளிபோ லிடைபடத்தான்வேண்டும்; அல்லது சமயத்துக்கேற்றபடி அவ்விரண்டையுந்தான் சொல்லிக்கொள்ளவேண்டும். முதலியார் ஒப்புக்கொண்டபடி கற்பனையான ஒவ்வொருசமயத்தையும் ஆராய்ந்தபின்புதான் நன்மைமிகுந்துள்ள சமயத்தைக் கைகொள்ளவேண்டுதலின், அவர் அப்படியே செய்திருப்பாரென்பது முடியாத காரியம். இனியொரு வேளை செய்வார்போலும். தமக்கு முந்திய தலைமுறையார் கைக்கொண்டிருந்தசமயமே தமக்கு நறசமயமாயின்; மற்றவர்களுக்கும் அப்படித்தானே. அப்போது நன்மைமிகுந்த தெது, தீமைமிகுந்ததெது? இவர் அனுசரிக்கு மதத்தில் தீமை ஏதாவது கணடு கழித்தனரா? அல்லது லவுகிகர்கள் எடுத்துக்காட்டுந் தீமைகளை ஒப்புக்கொண்டனரா? இவர் தன் சமயத்தையும் கற்பனையென்று சொல்லுகிறதை அச்சமயத்திலுள்ள மற்றவர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்களா? மற்ற சமயிகளும் தம்தம் சமயதசை அவ்வாறானதென்றே ஒப்புக்கொள்ளுவரா?

தருக்காதி நியாயசாஸ்திர முதலியவற்றில் சொற்பனத்திலும் பயின்றிராத கோடானுகோடியான்மாக்களுக்கு கற்பிதசமயங்களும் தெய்வங்களும் பயன்படாவா வென்றார். இதனாலே அவ்வித அவிவேகிகளுக்கேயன்றி சாஸ்திரங்களைப் பயின்ற விவேகிகளுக்கு அவை அவசியமில்லையென்றும், அப்படிப்பட்ட விவேகிகள் சிறுபான்மையோரதானென்றும், விசாரணைபுருஷர்கள் விர்த்தியாக ஆக அவற்றைக் கைவிடுவார்களென்றும் தாமே ஒப்புக்கொள்ளுகிறவராகிறார். ஆதலால், இவ்வளவு எடுத்துப்பேசுந் திறமுடைய இவர் என்னதசையி லிருக்கின்றாரோ தெரியவில்லை. அன்றியும்,

கற்பனாமதத்தையும் தெய்வங்களையுங்காட்டி மனிதருக்கு நன்மை பயப்பிப்பதற்குத் திருஷ்டாந்தமாக, ஓர் தந்தை தனகுழந்தையைக் கிணற்றருகே போகாதபடி ஓர் கயிற்றைப் பாம்பெனக்காட்டித் தடுப்பதினாலே நன்மையுண்டாகிறதென்று கூறுகிறார். அக்குழந்தைப்பருவம் நீங்கியபின்பு, அப்பிள்ளை கயிற்றைக்கயிறாகவேகொள்ளுவன்; எப்போதும்பாம்பெனக்கொள்ளில்ஆயுசுவரையில் சுத்தமூடனாகவேயிருக்கவேண்டும். அவ்வாறேமதங்கள் கற்பனையெனத்தேர்ந்தவர்கள் "மனச்சாட்சிக்கு நேர்மாறாகவாயினும் ஒன்றைக்கூறியேனையோர்க்குச்சுகத்தினையூட்டுவதே நன்மை" எனவும், "இல்லையென்பதை யுண்டென்றறைவதாற் றீமைவிளைதலிலையே" எனவும் முதலியார் கூறியபடிச் செய்து மற்றவர்களை எக்காலத்தும் மூடஸ்திதியில்வைத்துத் தாங்களும மூடர்களாக நடித்துக் காலத்தையும் பணத்தையும் வீணாயொழிப்பதைப்பார்க்கினும்; "சமயத்தை யுணர்த்துவதுபோல சாஸ்திரங்களை யுணர்த்துதல் கூடுமே" என்று பத்திராதிபர் கூறிய நன்மொழிகளையேற்றுக்கொண்டு, சமையங்கள் கற்பிதமெனத் தெரிந்துகொள்ளுவதற்கு முகாந்தரமாக, முதலியார் எடுத்துக்காட்டியிருக்கிற பஞ்சபூத சாஸ்திர முதலியவரறில ஷை முதலியார் முதலான விவேகிகள் பயிலுவதம் ஏனையோரைப் பயிற்றுவித்து விவேக மூட்டுவதுமே உத்தமம்.

கையொப்பக்காரன்.

## கடிதநேயருக்கு

**N. R. V.**—தத்துவவிசாரணைக்குச் சம்பந்தப்பட்டதல்லவாதலால் பிரசுரிக்கப்படவில்லை.

**நாகேந்திரகுரு.**—தமக்குவேண்டியது முழுவதும் 42, 44 நம்பர்களில் காணலாம். கையொப்ப விவரம் இப்பத்திரிகையின் கடைசியில் பார்க்க.

உளளூர்மெம்பர் - மூன்றுமாசத்தற்கு—ரூ 3—0—0
வெளி " " —ரூ 1—14—0

செலுத்தவேண்டும். அப்படி சேருகிறவருக்கு "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகையாவது, "தத்துவவிவேசினி" யாவது இலவசமாக அனுப்பப்படும்.

### தத்துவவிவேசினி
**நான்குபக்கம், பிரதி 1க்கு விலை அணா 1.**

### தமிழ்சந்தாவிபரம்.

| உள்ளூர்—(அட்வானசு.) | | Rs. | A. | P. | வெளியூர்—(அட்வான்சு.) (தபாற்செலவுஉள்பட) | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 | மாசம் | 1-க்கு | 0 | 5 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 | ஷை | 3-க்கு | 0 | 13 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 | ஷை | 6-க்கு | 1 | 8 | 0 |

எல்லாத் தமிழ்ப்பத்திரிகைகளையும்
சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி
307 - வது நம்பர் வீட்டில்
பு. முனிசுவாமிநாயகருக்கும்;
1886ம் - வருஷ முதல் சந்தாக்களையும்,
இங்கிலீஷ் பத்திரிகைகளையும்,
வேப்பேரி சில்வர்ஸ் ரோட்டில்
மதிறாஸ் செகுலர்சொசைட்டி ஆனரரிசெக்ரிட்டேரி
**மெஸ்டர். அப்ஷன்துரை யவர்களுக்கும்**
அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

இந்துசுவக்கியானசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 6 ] MADRAS:—SUNDAY FEBRUARY, 6, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## தெய்வச்செயல். 308

(17-வது பக்கத்தொடர்ச்சி.)

ங. கிறீஸ்துமதம்: இம்மதம், சுமார் 6000 - வருடங்களுச்குமுன் பராபரன் வானத்தையும் பூமியையும் உண்டாக்கினு ரென்றும், சாத்தானின் ஏவுதலால் மனிதன் பராபரனது கட்டளைக்குமீறி யாவுஞ்செய்தானென்றும், அப்பாவம் நிவர்த்தியாகும்பொருட்டு பராபரனே சுமார் 4000 - வருடங்களுக்குப்பின் மாறுட அவதாரமெடுத்துகிறீஸ்துவெனும்பெயர்வகித்து முப்பதாவது வயதுதொடங்கி 'தன்னை நம்பினவருச்கு நித்திய சுவர்க்கமென்றும், தன்னைநம்பாதவருக்கு நித்திய நரகமென்றும்' பிரசங்கித்து முப்பத்துமூன்ரும்வயதில் இராஜாங்கத்தார்ால் இராஜவிரோதியாகக் குற்றம் பாரிக்கப்பட்டு, சிலுவையிலறைபட்டு இறந்ததாகவும், இவ்வாறு மரித்ததேவன் புதைக்கப்பட்டு மீண்டும் உயிர்த்தெழுந்து ஓர்மண்டலம் பூமியின்மீது வசித்து பின்னர் ஓர்மலையினுச்சியினின்று வானத்திற்கேறிப் போயினரென்றும், அவரை நம்பினவரோ பாவநாசத்தைப்பெற்று பரலோகப் பிராப்தியடைவர் என்றும் கூறும்.

தொழிலில்லாதவன் துரும்பைக்கிள்ளுவதுபோல், யாதொன்றுஞ்செய்யாதிருந்த பராபரன், குழந்தையொன்றை கிணற்றின் சுவர்மீது நிறுத்தி குழந்தையைநோக்கி நீ யிதில் விழுந்தால் சாவாய் என்று அக்குழந்தை யுணராவண்ணம் சொல்லி தூரத்தேபோயொளித்திருந்து பிறகு அக்குழந்தை தற்செயலாய் கிணற்றில் விழவும் அதன்முன்வந்து நின்று விழவேண்டாமென்று சொல்லினேனே நீ யச்சொற்றவறி விழுந்தமையால் தண்டிக்கப்படுவாய் அஃது வேண்டாயேல் என்னை யுன் இரக்ஷகன் எனறு நினையென்று அக்கிணற்றிலேயே அக்குழந்தையை விட்டுவிடுவானையொத்து, சுமார் 6000 - வருடங்களுக்குமுன் தனக்கோர் எண்ணம் எழ வானத்தையும் பூமியையும் சிருஷடித்து ஓர் சிங்காரவனத்து ஓர் புருஷனையும் பெண்ணையும் வைத்து துன்பமென்பது இன்னதென வறியாத அன்னோரை ஓர் தருவின் கனிகளைச்சுட்டி இவற்றினை நீங்கள் தின்னன்மின், தின்னின் நீங்கள் துயருறுவீர்கள் என்றும் சொல்லித் தூரத்தே யொளித்திருந்து தனக்கு பகைவனுகிய பசாசானவன் அவர்களைப் பாவத்திற் காளாக்கியதைக் கண்டிருந்து பகைவனுகிய பசாசு பலங்கொண்டதே செயங்கொண்டதே என்றுக்கித்தும், ஏன் இப்பிரபஞ்சத்தை யியற்றினேனென்று சிந்தித்தும், தான் செய்த குற்றத்திற்குத்தானே யனுபவிக்கவேண்டுமென்று உடன்பட்டும், தான் செய்த குற்றத்தை பிறர்மேல் ஏற்றுவாரையொத்து அவ்விருவர்முன்சென்று நீங்கள் பாவிகளாய்விட்டபடியால் துயருறுவீர்களென்றும் அதற்குப் பரிகாரம் தான் எடுக்கவேண்டியிருக்கும் கிறீஸ்து அவதாரத்தில்தனதுதேகத்தினின்று சிந்தும் உதிரமென்று சொல்ல சுமார் 4000 வருடங்களுக்குப்பின் அவதாரம் புரிந்து தமது முப்பத்துமூன்ரும் வயதில் சிலுவையில் அறைபட்டு புதைபட்டுமீண்டும் வெளிப்பட்டு வெளியினுட் பிரவேசித்தார் என்று சொல்லும் மதமும்மதமா? ஏசுவைநம்பவேண்டுமென்பதும்நலமா? அல்ல, அல்ல, எக்காலும் நலமல்ல.

ஆத்திகம் எனப் பொதுப்பெயர்வகித்துள்ள இம்மதங்களும் இன்னும் வுள்ள பற்பல மதங்களும் அறியாமையையே தெய்வமாகவும் அறியாமையால் நிகழும் சம்பவங்களையே அத்தெய்வத்தின் செயலென்றும் உதகரிக்கும். ஆனல் இதுவரையிலும் தெய்வச்செயல் என்று நம்பிவரப்பட்ட இடியின் ஒலியையும், மின்னலின் ஒளியையும் தேகத்தின்வலிவு மெலிவினையும் பூதகிருத்தியங்களென விவேகிகள் ஆராய்ந்து அறிந்திருப்ப, ஆத்திகாள் தெய்வச்செயல் தெய்வச்செயல் என நாத்தழும்பேற இனி நவிலுவதிற் பிரயோசனமில்லை. இனி இவர் பிரயோசனத்தையடைய விரும்புவரோல் சம்பவாதிகளுக்கு காரணம் தெரியாக்கால் தெய்வச்செயலென நவிலாமல் காரண காரிய விசாரணையில் மனதைச் செலுத்துவாராக.

D.

—o—

## பிர்மவித்தியா.

—o—

நாம் தருக்கசாஸ்திரம் ஒன்றையே படித்தோமென்றும் ஜீவனது சொருபத்தைப்பற்றிய நூற்களை வாசிக்கவில்லையென்றும் படித்திருப்பின் ஜீவனது சொருபமாகிய அறிவு பொருளென்ருவது குணமென்ருவது துணிவோம் என்றும நமது சாஸ்திரியார் சொல்கின்றனர். நாம் ஜீவனது இயல்பை அறிந்துள்ளோமென்றும் நமது நண்பர் அறிந்துள்ளாரென்றும் எங்கள் இருவர் வாதத்தையும் வாசிசகும் அபிமானமென்னும் அந்தகாரத்தைவிட்டு வெளிவந்த விவேகிகள் உணர்வார்களாதலால் நாம் அளந்ததையே அளப்பதில் யாதொரு பயனுமில்லை.

விவேகிகளே! "உயிர் என்பது இச்சரீரத்தில் நிறைந்திருக்கும் ஓர்வகை வாயு, அதாவது—உயிர் என்பது சரீரத்தில் நிறைந்ததும் வாயுக்களின் பலபகுப்புகளில ஓர்வகையிற் சேர்ந்த வாயு" வும் என்று நமதுபிரியர் கூறுகின்ருர்.இவர் பிராணன் அல்லது உயிர் என்பது ஓர்வகை வாயுவென்றும், இவ்வாயு பலவிடங்களிற் சென்று பலவேலைகளைச் செய்து அனேக தொழிற்பெயரைப்பெற்றுள்ளது என்றும், அப்பெயர்கள் பிராணன அபானன் வியானன்முதலியன வென்றும் கூறியுள்ளமையால் வாயு ஒன்றேயென்றும் அது தேகத்திற் பலவிடங்களிற் சென்று பலதொழில்களைச் செய்கின்றதென்றும் ஆதலால் அது பெயர்களைப்பெற்றுள்ளதென்றும் நமது சாத்திரியார் எழுதியுள்ளமையாலும் அவ்வாயுவே பிராணன் என்றமையாலும் அவ்வாயுத்தானங்களில் ஒன்ருகிய அபானத்தினிடமாக அது வெளிகாணும்போது பிராணன் அல்லது அதிற்கொஞ்சம்பாகம் வெளிகாணவேண்டுமன்ரு? ஆதலாற்ருன் அபானவாயு வெளிகாணும்போது எவ்வளவு பிராணன் குறையுமென்று கேட்டோம். இது பரிகாசக் கேள்வியா கேட்கத்தக்க கேள்வியா விவேகிகளே! பாருங்கள் "எவ்வளவு அபானவாயு வெளிசெல்கின்றதோ அவ்வளவுவாயு புறத்திலிருந்து உள்நுழைகின்றதென்ருர். அப்போது வாயுவாகிய பிராணனுக்கு கூட்டங்குறைவு உண்டென்றும் அது தேகத்திற்குப்புறத்திலும்உண்டென்றும்ஆகின்றதன்ரு? தேகத்திற்குபுறத்திலும் பிராணன் உண்டென்பது இவருக்குடன்பாடுதானு? உடன்பாடேல் "உயிரென்பதுஇச்சரீரத்திலுள்ள ஓர்வகைவாயு" என்றுசொன்ன இவர் வசனத்தில் அதிவியாப்திதோஷம் உண்டாகின்ற தல்லவா? அல்லாமலும் பிராணவாயு 12 அங்குலவேகமுடையதென்று கூறிய இப்புத்திமான் அதன்காலவரையறையைக் குறிக்காதவிடத்து அதை ருசுப்படுத்துந் திராணி இவருக்கில்லையென்றேனும், அவ்வுரை வெற்றுரையென்றேனும் சந்தேகிக்க நேருமன்ரு?

அப்படிச் சமயம் நேரும்வழி, இவர்கேட்ட(வாயுவைத் தண்ணீராக்கலும் தண்ணீரைத் திரும்ப வாயுவாக்கலும் ஆகிய) பரீக்ஷை இவர்கொண்ட கருவிகளின்றி வெவ்வேறுவிதமாயே நமது முன்னோரெழுதிய அரிய நூற்களால் எடுத்துக் காட்டவல்லவர் அநேகருண்டு என்று நமது சாஸ்திரியார் எழுதுகின்ருர். அதைப்பற்றி விவாதம் நேரிட்ட இச்சமயத்தையன்றி மற்றெச்சமயத்தைச் சாஸ்திரியார் எதிர் பார்த்திருக்கின்ருரோ தெரியவில்லை. இங்கிலீஷ்பாஷையில் ஏற்பட்டிருக்கிற பரிபாஷா நாமங்களுக்கு முன்னோரெழுதிய புஸ்தகங்களில் பெயர்களுண்டில்லையென்பது குறித்துக்கேட்டால் விளங்கமறுமொழி கிடைக்கும்" என்கிருர். Luis Essays on human understanding, என்னும் புத்தகத்தில் முதல்பக்கத்தில் சேர்த்திருக்கும் சந்ததி குறிக்குஞ் சக்கரத்தைப்போன்ற கோடிட்டு

எழுதப்பட்டிருக்கும் பெயர்களுக்கெல்லாம் சமஸ்கிருத பெயர்களெடுத்துக்காட்டின் போதும்.

"ஜீவன் அறிவினிடம் என்று சொன்னவிஷயத்தைமாத்திரம் கவனித்தாரேயொழிய அதன்சொரூப அறிவிற்கும்வெளியறிவிற்கும் நாம் கூறிய பேதத்தைச் சற்றுக்கவனித்து எழுத அவருக்கு அவகாசங்கிடைக்கவில்லைபோலும்" என்று நமது சாஸ்திரியார் எழுதுகின்றார். இச்சாஸ்திரியார் ஜீவனுக்கு அறிவை இடமாக்கியதுங் கவனித்தோம், திரும்ப அவ்வறிவிற்கு ஜீவனை யிடமாக்கியதுங் கவனித்தோம். கவனித்ததனாற்றான் அவற்றிலுள்ள பரஸ்பர விரோதத்தை ஆசங்கிக்க நேர்ந்தது. **பொருள்** என்பது நாம் படித்த தருக்கசாஸ்திரத்திலுள்ள **பதார்த்தம்** என்கிற சொல்லுக்கொத்ததென்றார். பொருளுக்கும் பதார்த்தத்திற்கும் இவர் படித்த தருக்கநூலிற் பேதமில்லையேல் பதார்த்தம் பொருளாகும்! பதார்த்தத்தில் திரவிய முதலிய ஒன்பதும் அடங்குமே, பொருளில் அடங்குமா? அடங்காதேல் பதார்த்தம் பொருளுக்குப் பிரதிபதமாமா? இதைச் சாஸ்திரியாரும் பிறரும் யோசிக்கவேண்டியது.

நாம் இவ்வாதத்தில் நமது நண்பருக்குமின்றி யாதொன்றும் நிந்தனு வசனங்கள் வழங்கவில்லை. ஆபாசங்களைக் கண்ட வழி அவற்றை ஏளிதம் செய்கின்றோம்.

## மானுஷீகத்துவம் யாது?

மானுஷீகத்துவமென்பது மனிதருக்கு நியதமாயிருக்குந் தன்மை என்று சிலர் சொல்லுகின்றார்கள். இது காலதேச சங்கத்தளவினதாக விருக்குமென்பது பின்னைய விஷயங்களால் நன்குவிளங்கும். காலமென்பது எல்லாக்காரியங்களுக்கு நியதமாய் ஒன்றாய் வியாபகமாயிருப்பதாதலால், அதன்கண் ணிகழும் சம்பவாதிகளை முன்னிட்டன்றி அளவிடற்பாலதன்று. வானம் வறண்டு மழைபெய்யாது பஞ்சமென்பது மேலிட்ட காலத்து,வற்றுச்சமுத்திரம்போல குறைவறவாழ்ந்து ஈகையுமிதக்கமும் இன்துணையாகக்கொண்ட வேளாளந்தன்மையர், தத்தம் பெருந்தன்மையைப் பாராட்டாமலும், மேன்மையை மதிக்காமலும்,குடிப்பிறப்பைக்குறிகொள்ளாமலும் கஞ்சிகஞ்சியென்று நெஞ்சுலர்ந்து வீதி விடங்கராய் வேற்றூர்புக்காலத்து அவர்கள் முன் சம்பத்திலிருந்தபோது உண்டாயிருந்த நடையுடை பாவனைகளும் உதாரத்துவமும் விகற்பப்படாமல் என்றும் ஒருபடித்தாகவே இருக்குமென்பதும் இராவென்பதும் நாம் பஞ்சகாலங்கடோறும் நெஞ்சாரக்கண்டிருக்கின்றோம். ஒரு தேசத்திலுள்ளவர்களுடைய நிறமும் சொரூபமும் குணமும் ஒழுக்கமும் தன்மையும் மற்றெல்லாத் தேசத்தவர்க்கும் ஒத்திருத்தல்கூடாது. நமது தேசத்திலுள்ளவர்கள் அற்பவாழ்நாளுடையவர்களாகவும், நூறுவயதிற்கு உட்பட்டவர்களாகவும் இருக்கின்றார்கள். சுவீடன், நார்வே முதலிய தேசாந்தரங்களிலுள்ளவர்களோ விசேஷ வாழ்நாளுடையவர்களாகவும், சிலர் நூறு, நூற்றிற்கு மேற்பட்டிருப்பதல்லாமல் ஏகதேசம் நூற்று அறுபது வயதளவுமிருக்கிறார்கள். சிவப்பு வெண்மை கறுப்பு செவ்வந்தி சாம்பர் முதலிய நிறங்களும், இரண்டடி முதல் எட்டடி உயரமும் வட்டமுகமும் சப்பைமூக்கும் குழிந்ததாடையும் கொள்ளிக்கண்ணும் மிருகாதிகளைப்போல தேகமுற்றும் உரோமமும் இன்னும் பற்பலவிதமான விகற்பருபமுடைய மனிதர்களை தேசாந்தரங்களிற் கண்ட கப்பல்யாத்திரிகள் சரித்திரங்களிற் சொல்லியிருக்கிறார்கள். சிற்சில தேசங்களில் புல்முதலிய கந்தமூலங்கள் தெரிசனத்திற்கும் கிட்டுவ தருமையாதலால, அங்குள்ளவர்கள் சதாகாலமும் மாமிசாதிகளையே புசிக்கின்றார்கள். சில தேசத்தவர் மாமிசங்கிட்டுவது அருமையாயிருத்தலின் சதாகாலமுங்கந்தமூலாதிகளையே புசிக்கின்றார்கள். சிலர் இரண்டும் புசிக்கின்றார்கள். சிலர் மனிதரையும் புசிக்கின்றார்கள். இவர்களுடைய அறிவுங் குணமும் மதமும் இவ்வாறே பற்பலவாய் வேறுபட்டிருக்கின்றன. சிலர் சூரியனையும் சிலர் சந்திரனையும் சிலர் அக்கினியையும் சிலர் சமுத்திரத்தையும் சிலர் நதியையும் சிலர் மச்சங்களையும் மிருகங்களையும் மரங்களையும் பக்ஷிகளையும் மலைகளையும் ஜீவஜெந்துக்களையும் சிலர் மனோகற்பிதாபாவங்களையும் கடவுளாென வணங்குகின்றார்கள். சிலர் கடவுளொன்னும் எண்ணமும்ஆன்மாவென்னும் எண்ணமும் அணுத்துணையும் அற்பமேனுமில்லாமல் காலங்கழிக்கின்றார்கள். சில தேசத்தவர் தமக்கு உற்சாகமுள்ளபோது தங்கடவுளாகிய செய்யுருவத்திற்கு தாமுண்ணும் உணவாதிகளைத் தூபங்காட்டி உபசரித்து பூசித்தும், தமக்கு விசனம் நேரிட்டபோது அவற்றைப் பிரம்புகொண்டடித்தும் வருகின்றார்கள். இவற்றை எல்லாம் உற்றுநோக்கி சித்தசமாதானத்தோடு பரியாலோசனை செய்யுங்கால், மானுஷீகத்துவமென்பது தேசங்களெங்கும் எக்காலத்தும் ஒரு தன்மைப்பட்டிருப்பதைக் காண்கின்றோமில்லையாதலால், இதன் காரணம் ஒன்றேயென எவ்வாறு நிச்சயித்தல்கூடும். இவ்வாறு பற்பல தேசாசார ஒழுங்குகளை சிந்தியாது விடினும் நமது தேசாசார ஒழுங்குகளேனும்பிரதிமசந்ததிக்குப் பெருமிதப்படுகின்றதாவென்பதைப் பரியாலோசித்தல் வேண்டுமே. நம்முன்னோர் சில காலங்களுக்குமுன், பிள்ளையில்லாதிருந்தால் கங்காபவானிக்குப் பிரார்த்தனைசெய்தலும், பிள்ளைகள் பிறந்தால் தங்கள் பிரார்த்தனையைப் பூர்த்திசெய்ய வெண்ணி முதற்பிள்ளையை மனங்கூசாது கங்கையில் தூக்கிப்போடுதலும்,புருஷனிழந்தபெண் உடன்கட்டையேறுதலும், வீடு கட்டும்போதும் கிணறு தோண்டும்போதும் நரபலி கொடுத்தலும் வழக்கமன்றோ. சில பயிரிடுங்குடிகள் 'மாரியார்பலி' என்னும் ஒருவித கோரகிர்த்தியத்தைச் செய்தலும் உண்டே: இதில் ஒருவனைப்பற்றிப் பிடித்து அவனுக்கு மூன்று நாள் அல்லது பதினைந்துநாள் அவன் விரும்பி வேண்டிய போஜன பூஷணாதிகளெல்லாங்கொடுத்துப் பின் அவன் அவயவங்கள் முப்பத்திரண்டிலும் பதைபதைக்க கொஞ்சம் கொஞ்சம் அறுத்து, காளிபூசைசெய்தும் அவன் உதிரத்தைச் சோற்றுடன் கலந்து வயல்களிலிறைத்தும், கடையில் அவன் தேகத்தைச் சிந்தசிந்தாய்ச் சேதித்தும், அவ்வாறு சேதித்த மாமிசாதி எலும்புகளை ஒவ்வொருவரும் தத்தம் விளை நிலங்களில் பயிர் செழிக்குமென்றெண்ணிப் புதைத்தலும் வழக்கமன்றோ. ஜகந்நாதமுதலிய ஸ்தலங்களில் இரதோச்சவகாலங்களில் முத்திவெறிகொண்ட பித்தர்கள் ஓடித் தேர்ச்சக்கரங்களில் விழுந்து நசுக்குண்டு பதைபதைத்து உயிர் விடுவதும் மோக்ஷப்பேயப்பற்றிய மூர்க்கத்துவமன்றோ? சில காலங்களுக்கு முன்னும் செடிலாடல முதலிய வழக்கங்களையும், அதனால் அனேகர் 'அம்மன் குறையால்' விழுந்திறந்தமையையும் அரசாங்கத்தார் கண்டு தடைசெய்து விட்டமையையுங் கண்ணாரக் கண்டிருக்கின்றோமல்லவா? இன்னும் இத்தகைய கோர கிருத்தியங்கள் அளவற்றன உண்டே: இவை மானுஷீகத்துவமா மிருகத்துவமா? இவற்றையெல்லாம் அக்காலங்களிலுள்ளவர்களும் அரசர்களும் பராமரித்துவந்தார்களன்றோ: இவற்றையெல்லாம் நினைக்கவுங்கோரமாகவிருக்கின்றதே: இவை பிறநாட்டவர்க்கு எவ்வாறிருக்கும். இதனை நாமெல்லோரும் சிந்தித்தல்வேண்டும். இன்னொருகால் மானுஷீகத்துவமின்னதென நன்குவிளக்குவாம்.

—o—

## வாதப்பிரதிவாதம். ௮

"பொருவிலருணெறிவாழ்க புனைநெறிகள் மிகவாழ்கவனாவிறிருத்தொண்டரணி வளர்கதிருத்தொண்டரணி"

நீவிரளித்தவிடையின் திறத்தைப் பனுவற்பயனுணரறிஞர்க்கெடுத்துரைப்பாம்.

க-வது. மனிதராது ஏற்பாடுகளாகிய மதங்களில் நன்மைதீமைக ளிரண்டுமுள.

உ-வது குற்றத்தைநீக்கிக் குணத்தைக் கொள்வது மானுஷீகம்.

ஆகிய இவ்விரண்டு சட்டுரைகளினின்றும், தங்கொள்கையினையே நிலைநாட்டுவான்கருதி உமிக்குற்றிக் கைவருந்தும் பொய்ப்புலவரல்லாத மெய்ப்புலவர் மனிதரதேற்பாடுகளாகிய மதங்களிலுள்ள தீமைகளை யொழித்து நன்மையினை நுகரல் மானுஷீகமென்னுந் தீர்ப்பைத் தலைமிசைக்கொள்வ ரென்பதற் கையமென்னுளது? இதனைவிடுத்து, குற்றங்கள் நீக்கிக்கொள்ளக்கூடிய மதங்களுண்டு என்னும் வாய்மை மேலையவற்றினின்று முதிக்கின்றதென்று வாய்மதம் பேசுகின்றது விந்தையினும் விந்தை! (a) இத்தருக்க நிபுணத்தாலன்றோ பாமரனாமருட்டிப் பெருமைபெறுதல்! நுமது மொழியாலேயே குற்றங்களை நீக்கிக்கொள்ளக்கூடிய மதங்களிலைபெற்றமையாற் குற்றங்களை யொழித்து மதங்களையு மவற்றின் துணிபாயிலங்குந் தெய்வங்களையு மனுசரியாதிருப்பது எதனைநாடி? நீர் கழறுமாறு யாம் சிவமாதியதெய்வங்களையே நிலைபெறச் செய்தோமில்லை. எம்மதமாயினும் எத்தேவாயினும் நன்மையினைப்பயப்பனவாயின் அவை யெமக்குச் சம்மதமே யென்றுணர்க. (b)

யாம் எழுதிய நிருபத்திலேயே "ஏனைப்பறிதலையவனாச் சைவவிதத்திநுலொழுக்கம் பூண்ட வேடத்தார் பற்றிப்பற்றிச் சிறைத் திடர்செய்தேயிட்டார் திரிதலைக் கழுக்கோறன்னில்" என்னுந் திருவாக்கினுக்குத் தக்க சமாதானங்கூறியும் நுங்கொள்கை யெம்விடையின் வாய்மையினை யூகிக்கவொட்டாது நுங்கண்ணை மறைத்தது விந்தை! விந்தை! மறக்கருணையினிலக்கணமுமக்குப் புலப்படாமை தருக்கசாஸ்திர நிபுணத்துவத்தின்

பயன்போலும். கருணை, அறக்கருணையென்றும், மறக்கருணையென்று மிருவகைத்து. ஓராசிரியன் தன்மாட்டு, கல்வி பயிலா நிற்கும் வித்தியார்த்தி யொருவனைத் தண்டித்தல் அவனது நன்மைக்கன்றோ? அற்றேலது கருணையின் காரியமன்றோ? அற்றேலது மறக்கருணையென்று தெள்ளறிவுடையார் சிரக்கம்பஞ்செய்யாரா? ஆதலின் அவ்வாசிரியன் நும்போலியரது தூஷணைக்கிலக்காதன் முறையன்றே. தத்வத்தாகவே, பரமாசிரியரா யவதரித்த திருஞானசம்பந்தரை வழிபட்டொழுகி யுய்ந்த சைவர்கள், மென்மேலும் பாதகங்களை யிழைத்துச் சகோதரவாஞ்சையின்றி யுன்மத்தரா யுயிர்வாழ்ந்து வந்த சமணரைத் திரிதலைக்கழுக்கோறன்னி லேறிட்டுத்தண்டித்தது இரக்கமின்மையின்பயனோ? உரைமின். ஆவா நீரென்செய்வீர் 'தீவினைக்கம்மியனால் வாய்பூட்டிடப்படின்'? (c)

"மாநிலங்காவலனாவான்மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன்பரிசனத்தால்
ஊனமிகுபகைத்திறத்தாற், கள்வரா லுயிர்தம்மால்
ஆனபயமைந்துந்தீர்த் தறங்காப்பானல்லனோ"

அறங்காப்பானாகிய மன்னவன் றன்னின்னுயிர்போன்ற குடிகளைத் துஷ்டநிக்கிரஹஞ்செய்து ஓம்புதல்மரபன்றோ? அற்றேல், அன்னோன் கருணைக்குப் பழுது வந்தமையை யெத்துணையுங் காண்டிலம். ஏனெனின், துஷ்டநிக்கிரஹகாரியம் மறக்கருணையின் பயனேயாமாதலின்.

நீவிர்மொழியுமாறு "கழுவேற்றியபடலம்" எனப் பிறவினையி லிருத்தலின், ஆளுடைய வரசுகளாற் சமணர் கழுவேற்றப்பட்டனர் என்று பொருள்கொண்டது குழறலன்று. கிரந்தகர்த்தராயிலங்கும் பரஞ்சோதிவள்ளல், அக்காலத்துள்ள சைவர்கட்கோரணிகலமாய் நிலவிய ஆளுடைய பிள்ளையாரால் சமணர்கள் கழுவேற்றப்பட்டனர் என்று தலைமைநோக்கிக் கூறியுள்ளார். அடியில் வரும் பாசுரத்தானுங் கண்டுதெளிக.

"ஞானமாமதநீர்சோர் ஞானசம்பந்தரென்னு
மானமாயானைவந்து கடம்பமாவனத்திற்றுன்னு [ ணீ
மூனமாஞ்சமணரென்னுந்தருக்களை யொடித்து வெண்
றுனமாப்பூழியள்ளித்தூற்றியதவனியெங்கும்"

இங்ஙனந் தலைவர்மீது சாட்டிச்சொல்லல், சரித்திரக்காரரது மரபாமாதலான்.

"ஓரமணரொழியாமேகழுவிலேற்றி" என்னு மூதுரைக்கும், "மதத்தின்மானமிக்கார் தாங்களேவலியவேறிப்பதைத்திடவிருந்தார்" என்னுந் திருவாக்கினுக்கு முரண்படுதலின்மைகாண்க. ஆதலின் பரஞ்சோதி முனிவரது வாக்கின்மீது குற்றஞ்சாட்டியது ஆபாசத்தினுமாபாசம்: (d)

"நாழிநவைதீருலகமாக நளினத்து நீதந்தநான்முகனார்தாமே, ஊழிபலபலவு நின்றளந்தாலொன்று மூலவாப்பெருங்குணத்த ருத்தமனேமேனாள், தாழிதனையாகத்தண்டயிர்நீராகத் தடவரையே மத்தாகத்தாமரைக்கை நோவ, ஆழிகடைந் தமுதமெங்களுக்கே யீந்தாயவுணர்கடா முனக்கடிமையல்லாமையுண்டோ" என்னுந்திருப்பாசுரத்தில் விண்டுவே, தன் தாமரைக்கை நோவ ஆழிகடைந்ததாகச் சொல்லியிருப்பது சரித்திரபூர்வகத்துக்குப் பரஸ்பரவிரோதமாயிருக்கின்றதன்றோ? சுரரும் அசுரருமே பாற்கடலைக்கடைந்தபிறகன்றோ, எம்பெருமான் அமரர்க்கமுதளித்தது? இங்குந்தலைமை நோக்கி, விண்டுவே கைநோவக்கடைந் தளித்ததாகக் கூறியுளார். கிரந்த கர்த்தா என்றுணர்ந் துய்க. எத்தேயத்தோர்க்கு மிஃதோர் மரபென்பது பளிங்கற்று.

"வாதுசெய்தழிக்கத் திருவுள்ளமே" என்னுந்தேவாரப்பதிகத்தில் "அழிக்க" என்பது "கொல்ல" என்று பொருள்படுதலைக்கண்டிலம். அங்ஙனமே பொருள்படுமென்று சாதிப்பீராயின், யாம் பண்டே யளித்த சமாதான மிதனுக்குமொக்கும். மேற்குறித்த நியாயங்களும் சமாதானங்களு நும்பேரறிவுக்கிலக்காகாவிடின்யாமென் செய்குவதாம்? சமணரைப்பற்றிய இவ்விஷயம் முற்றுங் குற்றமென நுமது மதிக்குப் புலப்படின், "குற்றத்தைநீக்கிக் குணத்தைக்கொள்வது" மரபாதலின், இப்போலிக்குற்றத்தை யொழித்து எஞ்சிய குணத்தையாயினுங் கொண்டுய்மின்.

Balasundram Mudelliar.

(a) "காணாதுகண்ட கரிச்சட்டியும் வீணா வீணர்க்கு வெகுவிந்தையே" என்னும் பழமொழிக்கிணங்க, 'குற்றங்களை நீக்கிக்கொள்ளக்கூடிய மதங்களுண்டு' என்னும் எமது நியமனம், விந்தையிலும் விந்தையாயின், அதை முன்னமேயுணராமை யார் குற்றம்?

(b) நீவிர் சிவமாதி தெய்வங்களை நிலைபெறச்செய்தல் நுந்திறமன்றே, நிழலைப்புதைக்க நும்மாலாகுமா? பிரபஞ்சத்திற்கு அன்னியமாய் ஓர் பரமாணுவையேனும் நிலைநாட்டவல்லீரா? இவ்வாதத்தில் அறுவதிக்கப்பட்ட நும்மதமே மனோரதமாகும்போது தேவை நிறுத்த திடமேது?

(c) உமது உடன்பாடாகிய தீவினைக்கம்மியன்எமது விசாரசன்னிதானத்தில் நாஸ்தியாய் விடவேண்டியவனாதலான், யாமிருக்குந் திசையையுந் நோக்குந்திறனுடையனல்லனே: அவனிட்ட வாய்பூட்டு நும்வாய்க்கென்றும் நம்வாய்க்கென்றும் அடியில் நன்கு விளங்கும்—"சைவர் சமணாதிகளைக் கொலைபுரிந்தனர்" என்று நாம்சொல்லியதற்கு மாறாய்நீவிர், "சமணர்தாமே கழுவேறினர்" என்று கூறியதுண்டா, இல்லையா? பின்னர் நும்மவனாகிய தீவினைக்கம்மியனுடைய தொழிற்றிறத்தாலோ மற்றியாதாலோ "ஏனையசமணரைச் சைவர்பற்றிப்பற்றிச் சிதைத்து கழுவேற்றினர்" என்று நஞ்சொல்லைச் சிரமிசைகொண்டு நுஞ்சொல்லையே மறுத்ததும் உண்டா? இல்லையா? எவ்வாறு சுற்றிச்சுற்றியோடினும் நமது வழிக்கே வரவேண்டிய உமக்கு வாயேன்! வாதமேன்!! முழுப்பூசினிக்காயைச் சோற்றோடுமறைத்தால் பாதிகாய் வெளியே தெரியாதா? சைவர் அங்ஙனம் கொலைபுரிந்தது மறக்கருணையென்றீர். மறக்கருணையாவது என்னவெனின் ஓராசிரியன் தன் மாணாக்கனைப் பிழைகண்டு அவனங்ஙனம் மறுபடி புரியாதிருக்க தண்டித்தல்,என்றீர். தண்டனை-பழிவாங்குதற்பொருட்டு செய்யுந் தண்டனையென்றும், பிறன் புரிந்த குற்றத்தை அவன் அங்ஙனம் திரும்பவும் புரியாதிருக்கும்படி கருணைகூர்ந்து தண்டிக்கும் தண்டனையென்றும் இருவகைப்படும். இவற்றுள் முன்னையது ராகத்துவேஷங் காரணமாகக் கொலைபுரிதலும், பின்னையது கருணைகாரணமாக கொலையல்லாத சொற்ப சிக்ஷை புரிதலுமாம். ஆகையால் முன்னையது மறக்கருணையும் பின்னையது அறக்கருணையுமாம். சைவர் சமணாதிகளைப்புரிந்தது கொலையேயாதலால் அது மறக்கருணையேயல்லாமல் அறக்கருணை அன்று அன்று. சமணர் சைவமடத்தில் கொள்ளி வைத்ததையும், புரோடெஸ்டான்டு உரோமன் கிறீஸ்தவர்களும் மகம்மதியரும் ஒருவரையொருவர் கொலைபுரிந்ததும் அறக்கருணையென்றால் நீர் ஒப்புவீரா? சங்கிலே வார்த்தால்தீர்த்தம் சொம்பிலேவார்த்தால் தண்ணீரா?

(d) மதங்களனைத்தும் மனிதரேற்பாடென்று ஒப்புக்கொண்டு, அம்மதத்திலொன்றாகிய சைவத்தினை அபிமானித்தொழுகிய ஒருவகையாரை நியாயஞ்சொல்லாமலே அரசருக்கொப்பிட்டு அன்னோர் செய்கை புனிதமுடைத்தெனப் புதுமைகாட்டுவது ஆபாசத்தினும் ஆபாசம். சமணர் கழுவேறியபடலத்தை சமணரைக் கழுவேற்றியபடலமென்று தலைப்பெயர் சூட்டியது. தலைமைபத்தியமரபெனின், நாயை எவ்விடத்தடித்தாலுங் காலைத்தூக்கிக்கொள்வதுபோல் யார் எதுசெய்தாலும் தலைவராயுள்ள சம்பந்தர் தலையில் வந்து அவர் செய்தாரென்று விடுவது சைவமரபுபோலும்? புனலில் ஏடெதிரேற்றியதும் காயாத ஆண்பனையில் கனி[illegible]ற்றியதும், புத்தன் தலையி விடியேற்றியதும் இ[illegible] இவைபோன்ற அற்புதங்களனைத்தும் ய[illegible] செய்துவிட்டு கடையில் தலைவராயுள்[illegible]

வந்துவிடிந்ததுபோலும் ? ஆ! ஆ! உம்மைப்போலும் இன்னும் இரண்டொரு சைவவாதிக ளேற்படின் சைவம் நன்றாய் விளங்கும் விளங்கும். புறச் சமயிகளாகிய சமணர் தாமே கழுவேறியதை சைவர் கழுவேற்றினர்களென்று பெருமை பாராட்டிவருவது சிவபுராணிகர் மரபாயின், எந்தெந்த சமயத்தவர் என்னென்ன அற்புதங்கள் செய்தார்களோ அவையனைத்தும் சைவசமயாசாரியர்கள் செய்தார்களென்று பெருமை பற்றிப் புராணங்கட்டினர்களென்பதற்கு வேறு புறச் சாக்ஷியும் வேண்டுமோ ? குருடன் வழியறிந்து செல்லானேயென்றால், அவனோடு வேறொரு குருடனை வழிகாட்டவிடுவதுபோல் கழுவேற்றிய வென்பதை மெய்ப்பிக்க 'நாழிநவைதிர்' என்னும் இன்னொரு பொய்க்கதையைக் குமிக்கும் பாட்டைக் காட்டின் மெய்யாமோ?

பகுத்தறிவும் நடுநிலையுமுடைய விவேகிகாள்! நாம் மதங்களனைத்தும் மனித சிருஷ்டியேயென்று கூறியதை இவர் அநுவதித்து அது சத்தியமேயென்று ஒப்புக்கொண்டார். ஆகையால் அதுவிஷயத்தில் இவருக்கும் நமக்கும் அபிப்பிராய பேதமில்லாமையால் வாதமுமில்லை. பின்னர் மதங்கள் பலவற்றில் நன்மை தீமைகளுளவென்று, கிரீஸ்தவம் மகமதியம் சைவம் முதலிய மதங்களின் குற்றங்களைக் காட்டினும். இதிலும் இவர் பெரும்பான்மையும் ஒப்புக்கொண்டு, சைவர் புரிந்தது குற்றமன்று என்றும், நாம் சுட்டிக்காட்டாத சம்பந்தனைத் தாமே சுட்டி, அவர் சமணரைக் கழுவேற்றிலரென்றும், சமணர் தாமே கழு வலியவேறினர்களென்றும், "ஏனைப் பறிதலையவரை" என்னும் பாட்டின்படி சைவரோ ஏற்றினர்களென்றும் அவர் அவ்வாறு செய்தது மறக்கருணையென்றும். முன்னுக்குப்பின் மலைவுபடக் கூறி "சைவர் சமணரைக் கொலைபுரிந்தார்" என்னும் எமது வாய்ச்சொல்லிற்கு இவரே பிரமாணமும் எடுத்துக்கொடுத்துவிட்டார். இவர் இங்ஙனம் செய்தமை கொல்லவந்த எதிரி கையில் வாளைக்கொடுத்துவிட்டு கழுத்தையும் அவ்வாளில்தானே மோதிக்கொண்ட கதையாய் முடிந்தது. சைவர் கழுவேற்றினர்களே யன்றி சம்பந்தர் கழுவேற்றவில்லையென்றால், சம்பந்தர் சைவரன்றோ ? சம்பந்தரும் செய்தாரென்று சைவபுராண பிரமாணங்களை முன்னர்காட்டியும் உள்ளோம்; இன்னும் வேண்டுமட்டுங் காட்டுவோம். செய்கையைநோக்கி குற்றம்பாரிக்கப்பட்ட இந்த சந்தர்ப்பத்தில் மறக்கருணையென்று எண்ணத்தைக்காட்டி வாதிக்கவேண்டிய ஆவசியகமின்றே: ஒருவனைக் கொன்றவனைக் கோர்ட்டார் தூக்கிவிடுவார்களேயல்லாமல், கொல்லும்படி எண்ணினவனைத் தூக்கார்களே: கிறீஸ்தவர் மகமதியர் முதலியோரும் தம்மவர் புறச்சமையிகளைக் கொன்றது மறக்கருணையே யென்கிறார்கள் ; அப்போது குற்றமுடையசமயம் எது ? ஆடறுப்பவனும் நான்செய்யுந் தொழில் மறக்கருணையேயென்று சொல்லானோ ? ஆகையால் உம்முடைய அபிமதம் குற்றமுடையதே. ஒடிந்தகாலுக்கு எவ்வளவு ஒட்டுவைத்தாலும் ஊனம் ஊனமே. இவ்வளவில் வீண்வாதத்தை ஒழித்துவிடல் மரியாதை.

---o---

## வர்த்தமானசங்கிரகம்.

**ஜூபிலிஉற்சவம்.**—சென்னையில ஜூபிலி ஞாபகார்த்தமாய் நடத்தப்படும் வேடிக்கைக்கென்றும், ஏற்படுத்தவேண்டிய சாலைக்கென்றும். லண்டன் பட்டணத்தில் கட்டப்படும் கட்டடத்திற்கென்றும், மூன்று பிரிவு ஏற்படுத்தி, அவரவரிஷ்டப்படி அததற்கென்று கையொப்பஞ்செய்யலாமெனத் தீர்மானமுண்டாயிருக்கிறது. அன்றியும், துரைத்தனத்தாருடைய உத்தரவின்படி பிப்ரவரிமீ 16௳ உற்சவம் கொண்டாடுவதுமல்லாமல் சரியானதினமாகிய ஜூன்மீ 20௳யிலும் மறுபடி கொண்டாட வேண்டுமென்று யோசனையுண்டாயிருக்கிறது.

...யாத் நபாபு அவர்கள் அவ்விடத்திலே மருத்துவத்சாலை ஏற்படுத்தி, ஜூபிலி சம்பவ ஞாபகத்தை நிலை நிறுத்த உத்தேசித்திருக்கிறார்.—பாட்னாவில் அதற்காக கைத்தொழிற்பயிலுஞ்சாலை ஏற்படுத்தப்படுமாம். அனுகூலமானகாரியமே.

**சென்னை ரிஜிஸ்திரேஷன் இலாகா.**—1876-77௵ முதல் ரிஜிஸ்தர்செய்யப்பட்ட தஸ்தாவேஜுகளின் சங்கியை விர்த்தியாய்க்கொண்டுவருகிறது. அந்தவருஷத்தியசங்கியை 251,405. 1885 - 86 ௵த்தில் 584,224. 1876-77௵த்தில வரவு தொகை ரூ 3,92,193. 1885-86௵ வரவு ரூ 8,38, 455. செலவு ரூ 6,59, 850: இந்த வருஷம் கட்டடவிஷயத்தில் செலவு குறைந்ததினாலே இதற்கு முந்திய வருஷத்தைப்பார்க்கிலும் செலவு குறைவுதான். ஆதலால் சர்க்காருக்கு மிகுதி வரும்படி ரூ 1,78. 605. கர்னூல், திருச்சினாப்பள்ளி, வட ஆற்காடு, செங்கற்பட்டு, இந்த ஜில்லாக்களிலே ரிஜிஸ்திரேஷன் அதிகம். நீலகிரியிலே பொன்கனி சோதனைவேலை குறைவுபட்டதினாலும் காப்பிபயிர் பலிதமாகாமையாலும் ரிஜிஸ்திரேஷன அதிக குறைவுபட்டது. மற்ற ஜில்லாக்களிலேமிதம்.

**சென்னை ஸ்மால்காஸ்கோர்ட்டு.**—இந்தக் கோர்ட்டில் விடுமுறைநாள்கள் கல்கத்தாவிலும் பொம்பாயிலும் அப்படிப்பட்ட கோர்ட்டுகளிலிருப்பதைப்பார்க்கிலும் அதிகமாயிருக்கிறதென்று இந்தியா கவரன்மெண்டார் நினைக்கிறபடியால், அந்த நாள்களைக் குறைக்கவேண்டுமென்று பிரோரோபித்து, கோர்ட்டுஜட்ஜிகள் ஹைகோர்ட்டு அட்டரணிகளுக்கும் வக்கீல்களுக்கும் சர்க்கியுலர் அனுப்பினார்கள். அவர்கள் அந்தப்பிரோரோபனையை அங்கிகரித்தார்கள்.

**யானைகள்பிடிப்பு.**—டேப்ரீ, ஜனவரி 17௳. இங்கிலீஷ்மான் பத்திரிகைக்கு கடிதநேயர்எழுதியது—கவரன்மெண்டு யானைச்சாலை சூபரின்டெண்டாண்டு சாண்டர்சன் துரையானவர் வெகு நேர்மையாக உபாயஞ் செய்கிற தமது சாமர்த்தியத்துக்குத் தக்கபடி ஜனவரிமீ 14௳ ஒரு பெருத்த யானைக் கூட்டத்தைப்பிடிப்பதில் சித்தியடைந்தார். அது 140 யானைகளுக்குக் குறைவில்லை. எப்போதாவது இவ்வளவு பிடிபட்டதாக ரிகார்டில் இல்லை. அவை சுமார் லட்சம் ரூபா மதிப்புள்ளவை. பிடிபட்ட இடம் கேரோமலைகளின் பிரதான ஸ்தானமாகிய தூராவிற்கு ஆறுமயல் தூரத்திலேதான். யானைகளை பிடிப்பதற்கு பலமான அடைப்பு போடப்பட்டது. அதை வலுவுள்ள அத்தனையானைகள் நெக்கித்தள்ளிவிடாதபடி அதற்குப்பின்னால் உறுதியானமாதிரி மரங்கள் முட்டாக நாட்டப்பட்டன. இந்த யானைகளைப் பழகின யானைகளோடு புணைக்கத்தொடங்குவதற்குமுன்னமே அவற்றுள் சிற்சிலவாய் அப்புறப்படுத்துவதற்காக உள்ளே விடும்படி வேறே அடைப்பு தயார் செய்யப்பட்டிருந்தது. யானைகளை ஓட்டிக்கொண்டிருக்கையில், ஒன்று விடுபட்டுத் தப்பித்துக்கொண்டபோது வேட்டைக்காரர்களில் ஒருவனைக் கொன்றுவிட்டது.

**இடையூறு.**—கல்கத்தாவில் ஒருவாரத்துக்குமுன்னமே ஒரு பயணக்காரர் தோணியிலே பத்துகூலியாள்கள் ஏறினார்கள். அவர்களிலிருவர் ஒருவன் பின்னொருவனாகக் கயிற்றேணியின் மேலேறுகையில் முன்னவன் தவறிப் பின்னவன்பேரில்விழ, அவ்விருவரும் தண்ணீரில் விழுந்துவிட்டார்கள்; மேலுக்குக் கிளம்பவேயில்லை. அவர்கள் தகப்பனும் பிள்ளையும்.—அதே தினத்தில் ஒரு சுதேசஸ்திரீ நெருப்பண்டை குளிர்காய்ந்துகொண்டிருக்கையில், துணியில் தீப்பட்டு, மிகுதியாய்வெந்து, அன்றுசாயங்காலம் ஆசுபத்திரியில் இறந்துபோனாள். **சாக்கிரதை, சாக்கிரதை !**

**ஜூபிலி வால்நட்சத்திரம்.**—கார்டோபாவில்நட்சத்திரகணிதசாலை டைரெக்டர் புது வால்நட்சத்திரமொன்று கண்டறிந்தனராம். அது மிகப்பிரகாசமாயிருக்குமாம்.

**பர்மா** போலீஸ் அலுவலுக்காக பம்பாய்ராச்சியத்தில் ஆயிரம்பேரைச் சேர்க்கவேண்டியதிருக்கிறது. மேற்புற இந்தியாவிலே சேர்க்கவேண்டியிருந்த மூவாயிரம்பேரில் இதுவரையிலே 1800 பேர்சேர்த்தாயிற்று. ஆள்கள் விடாதுவந்துகொண்டிருக்கிறார்கள்.—ஸர் பிரிடிரிக் ராபர்ட்ஸ் அவர்களும் ஜனரல் ஒயிட் அவர்களும் ஜனவரிமீ 25௳. கெம்பு கனிப் பிரதேசத்திலிருந்து மந்தாலே வந்துசேர்ந்தார்கள். அவர்கள் போனகாரியம் திருப்திகரமாகவேயிருந்தது. தேசமுழுவதும் அமைதியாயிருக்கிறது. ஆரோக்கியத்துக்கடுத்த சீர்திருத்தஞ்செய்யப்பட்டுவருகிறது. அந்தத்துச்குடியிலுள்ள சேனையில் 150 பேரை மாத்திரம் நிறுத்திக்கொண்டு மற்றவர்களை அப்புறப்படுத்த உத்தேசித்திருக்கிறது.

**கங்கிராவாலி** என்னும் கணவாயிலுள்ள பாலம்பூரிலிருந்து ஒருவர் எழுதியதாவது:—ஜனவரிமீ 19௳ காலமே $12\frac{2}{3}$ மணிக்கு அவ்விடத்திலே பூமியதிர்ச்சியுண்டாயது. சென்ற இரண்டு வாரத்திலே விடாது அபரிமிதமான மழைபெய்தது. மூன்று தருணங்களில் பனிபெய்தது. ஒரு நாள் இரவிலே இரண்டங்குல மழை,

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 7.] MADRAS:—SUNDAY FEBRUARY, 13, 287. A. S. [Monthly, 4 Annas.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



"இந்துசுவக்கியானசங்கம்" என்னும்பெயர், இச்சங்கத்தில் இப்போது யூரோஷியர்முதலானவர்கள் சேர்ந்திருப்பதால், "மதிராஸ் சிக்யுலர் சோசைட்டி" என்னும் இங்கிலீஷ் பெயருக்கிணங்க, "சென்னை லௌகிக சங்கம்" என மாற்றப்பட்டது.

## மானுஷீகத்துவம்.

நாம் இவ்வுலகத்தின்கண் காணுஞ் சகல பதார்த்தங்களையும் ஒன்றோடொன்று ஒப்பிட்டு (ஒத்தவை இவை ஒவ்வாதவை இவை நன்மையைத் தருபவை இவை தீமையைத் தருபவை இவை என்று) பகுத்தறியும் அறிவே நமது ஞானத்திற்குக் காரணமாக விருக்கின்றது. பகுத்தறிவையன்றி ஞானமுங், *காட்சியையன்றி பகுத்தறிவும் இல்லையாதலால், ஞானத்திற்கு மூலகாரணம் காட்சியேயாம். காட்சி மனக்காட்சியென்றும் இந்திரியக்காட்சியென்றும் இருவகைப்படு மென்பது சிலர் துணிபு. கண்ட வழியுங் கேட்டவழியும் முகர்ந்த வழியும் உருசித்தவழியும் பரிசித்தவழியுமே நமது மனம் செல்கின்றமையால், மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் தொந்தமுண்டு, மனோரதத்தோடு தொடுக்கப்பட்டுள்ள சத்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் பஞ்சேந்திரியப்புரவிகள் சென்றாலல்லது மனோரதம் செல்லாதாதலால், மனம் இந்திரிய வழிப்பட்டதென்பதே துணிபு; ஆயினமையின மனக்காட்சி இந்திரியக்காட்சியினுள் அடங்கும்; அடங்கவே மனக்காட்சியும் இந்திரியக்காட்சியும் ஒன்றேயாகின்றது. ஆனதோர்காரணத்தால் ஞானத்திற்கு ஆதிகாரணம் இந்திரியமே: இந்திரியங்கட்கு வசப்பட்டதெல்லாம் சத்தியம்; இந்திரியங்கட்கு வசப்படாததெல்லாம் சத்தியமெனச்சொல்லோம். இந்திரிய விஷயமாகிய கானல்நீர் இப்பிவெள்ளி என்பன அசத்தியமாய் விடுகின்றமையால், எங்ஙனம் சத்தியமாதல்கூடும் எனின், நீர் ரூபம் பரிசம் ரசம் முதலிய குணங்களுடையதாதலால், ரூபமாத்திரம் விஷயப்பட்டு மற்றைய குணங்கள் விஷயப்படாமையால் அது இந்திரியவிஷயமன்று; விகற்பக்காட்சியேயாம். இந்திரியங்களுக்கு விஷயமாகாததை உண்டென்றும், விஷயமானதை இல்லையென்றும் சொல்லுதல் அசத்தியமே. அசத்தியம்பேசுதல் மானுஷீகத்திற்கு ஒத்ததன்று. ஒருவர் தமது அறிவுக்கெட்டாத ஒன்றை மனோசிருஷ்டிசெய்து நமக்குச்சொல்லின், அதைச்சொல்லளவாகக் கொள்ளாமல், கானல்நீரை அதனது குணங்களைக்கொண்டு பரீக்ஷித்ததுபோல பரீக்ஷித்து இந்திரியவிஷயமாகுமேல் கொள்ளுவதும், இந்திரியவிஷயமாகாதேல் தள்ளுவதுமே மானுஷீகத்துவம. மனமாகிய பொக்கிஷத்தில், மதவைராக்கியக் கள்ளன் புகுந்து, நியாயமாகிய நன்மணிகளைக் கொள்ளைகொண்டோடாமல், நல்லறிவாகிய தாழ்வீழ்த்திக்காப்பிட்டு, விவேகமாகிய காவல்வைத்துக்காப்பதே மானுஷீகத்துவம். பொய்க்குப் பயப்படுதலும், அசத்தியத்திற் கஞ்சுதலும், பொறாமைக்குப் புறங்காட்டுதலும், வசையை வழிமறித்தலும், நியாயத்தை நேசித்தலுமே மானுஷீக ஒழுக்கம்! நிலத்தின் கண்ணேனும் நீரின் கண்ணேனும் யாத்திரைபுரியும் மனிதர் இடுக்கத்தினின்று தெய்வபக்தியால் உய்ந்தாரென்றும், அஃதின்மையால் மாய்ந்தாரென்றும் சொல்வது நியாயமன்று. தெய்வபக்தி யுடையவர்களெல்லாம் நேர்ந்த இடுக்கண் பலவற்றினின்றும் எப்போதும் உய்கினறாருமில்லை; தெய்வபக்தி இல்லாதவர்களெல்லாம் நேர்ந்த இடுக்கண் பலவற்றினின்றும் எப்போதும் மாய்கின்றாருமில்லை. வலுவாய் சமைக்கப்பட்டுதொழில்வல்ல சந்திரியாகிய மாலுமியால் செலுத்தப்பட்ட புதிய மரக்கலத்திலேறிப் புசலில்லாக் காலங்களில் போக்குவரவு செய்யும் பக்தியற்றோரெல்லாம் துன்பத்திற்குள்ளாவதும், புசல்பெருகிய காலத்தில் தொழிலறியாத துட்டமாலுமியால் செலுத்தப்பட்டபழைய கப்பலிலேறிப் போக்குவரவுசெய்யும் பக்திமான்களெல்லாம் துன்பமுறாதொழிவதும் இல்லை. பக்தியற்றோரெல்லாம் வறியவருமல்லர். பக்தியுற்றோரெல்லாம் செல்வத்திற்பெரியவருமல்லர். பக்தியுற்றோர்க்கு வருவதெல்லாம் இன்பமேயன்று; பக்தியற்றோர்க்கு வருவதெல்லாம் துன்பமேயன்று. பக்தியுடையோரெல்லாம் பலநாள் வாழ்வதும் இல்லை; பக்தியில்லாரெல்லாம் சிலநாளிற்றாழ்வதும் இல்லை. பக்தியற்றோரெல்லாம் சோரரும் அன்று; பக்தியுற்றோரெல்லாம் யோக்கியருமன்று. நோய்முதலிய துன்பம்வந்தபோது பக்தியால் பிரார்த்தனை செய்பவரெல்லாம் பிழைப்பதும் இல்லை; பக்தி இன்மையால் பிரார்த்தனை செய்யாரெல்லாம் மாய்வதும் இல்லை. ஆயினமையின் குணமுடையவைகளைக் கைவிடாமலும், இன்பத்தைத் தருமவைகளை இகழாமலும், ஆரோக்கியத்தை அசட்டைசெய்யாமலும், பசித்தோர்க்குஅன்னமிட்டும், சரணடைந்தோர்க்குப் புகலிடந்தந்தும் வருதலே, மானுஷீகமதம். மனோவாக்குக் காயங்களென்கிய கரணத்திரயங்களுக்கும் எட்டாத ஒன்றை, மலடிமகன் முயற்கொம்பேறி ஆகாயப்பூவை அருந்துணைவிக்குச்சூட்டி அழகுபார்க்கும் அற்புதச்செய்கையொத்துநிழலை அளப்பதுபோல அளப்பான் புகுதல் அழகன்று. கல்வியைக் கவனிக்காமலும் நீதியை நிலைநிறுத்தாமலும், விவேகத்தை விர்த்திசெய்யாமலும் நாள் பலகழிக்கும் நஞ்சனையார் செய்கை நன் மானுஷீகமன்று. பகுத்தறிவென்பது மனிதருக்கிருந்தும் தக்கவை தகாதவை ஒத்தவை ஒவ்வாதவை என்னும் இருகக்ஷியையும் சித்த சமாதானத்தோடு முற்றுமுணர்ந்து உபேக்ஷிக்க வேண்டுவனவற்றை உபேக்ஷிக்காமலும், அபேக்ஷிக்க வேண்டுவனவற்றை அபேக்ஷிக்காமலும், எது எப்படிபோனால் நமக்கென்ன, கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன், உண்பதும் உறங்குவதுமே நமது கடனெனககருதி, விவேக விர்த்தியாகும் பத்திரிகைகளையும், சாஸ்திரங்களையும், கேள்விகளையும் கேட்டலிலும் படித்தலிலுங் காலத்தைப்போக்காமல், சதாகாலமும் கும்பிக்கேயுழைத்து வாணாளை வீணாட்படுத்தி, சஞ்சலமேலிட்டிளைத்து நாளும் வருந்தியிளைத்து நரைமயிருடன் கூனும் விளைத்து விக்கலு மிருமலு மெழ ஒக்கலுஞ் சுற்றமு மழ பாடைஏறி காடடைவது பண்புடைத்தாகிய மானுஷீகமன்றே! மிருகாதிகளும் உண்டுறங்குகின்றனவன்றோ? மனிதனுக்குள்ள ஏற்றந்தான் என்னையோ! சகல விஷயங்களையும் கற்றுங்கேட்டும் உணர்ந்தும் சுகாதாரமானவைகளைக் கைக்கொண்டும், துன்பத்திற்கேதுவாகியும் நிஷ்பிரயோசனமாகியு முள்ளவைகளைக்கைவிட்டும் மனுஷாரோக்கியத்தைக் சதாகாலமும் ஓம்பி அபிவிர்த்திசெய்தலே மானுஷீகத்துவமாதலால், இவற்றைநாம் ஒவ்வொருவரும் கடைப்பிடித்தொழுகுதல் கடனாகும்.

* ஐயக்காட்சி, வெதிரேகக்காட்சி, திரிபுக்காட்சி, என்றும் சிலர் சொல்வர்; அவைஇந்திரியக்காட்சியினுள் அடங்கும்.

—0—

## மின்னலால்விளையும் மரணம்.

ஒருவன் மற்றொருவனைக் கையினாலாவது ஊசியினாலாவது குத்தினால் குத்தின அக்கணமே அதை யுணர்கின்றானெனச் சாதாரணமாய் ஜனங்களபிப்பிராயப்படுகிறார்கள். இஃது முற்றும் பிசகு. உணர்ச்சி அறிவிற்கு, மூளை மாதருஸ்தானமாதலால் குத்தியசெய்கை நரம்பின்வழியாய்ச்சென்று மூளையைத் தூண்டவேண்டும். இவ்விதமாய் மூளையைத் தூண்டுவதற்கு அவசியம் காலவரை வேண்டும். மூளைக்குத் தூரத்திலிருக்கும் தேகவுறுப்பிலுண்டாக்கிய காயத்தைப்பார்க்கிலும் அதற்குச் சமீபவுறுப்பிலுண்டாக்கிய காயம் சீக்கிரமாய்ச்சென்று அம்மூளையைத் தூண்டும், ஏனெனில் பரிசஉணர்ச்சியின் வேகத்துவம்

ஒரு விநாடிக்கு நூறடி (100ft) என்றும் அதாவது ஆகாயத்தோடு கலந்திருக்கும் ஓசை (சப்தம்) யின் வேகத்துவத்தின் பத்திலொரு பங்கைப்பார்க்கினும் (1/10) குறைந்திருக்கின்றதென ஹெம்ஹோள்ட்சு (Helmholtz) என்னும் பண்டிதர் அதிநுட்ப பரிட்சைசெய்து கணக்கிட்டிருக்கின்றனர். (50ft) ஐம்பதடி நீளமுள்ள திமிங்கலமீனின் வாலில் ஓர்காயம் உண்டாக்கினால் அரைவிநாடிக்குப் பிறகுதான் அக்காயம் அம்மீனின் மூளையைத் தூண்டவாரம்பிக்கும். இப்படித் தூண்டவாரம்பிப்பதற்குத் தேவையான அரைவிநாடியுடன்கூட மூளையினுணர்ச்சி நரம்புகள் சுய நிலையிலிருந்து அக்காயத்தையுணர்த்த ஓர் விநாடியில் (1/10) பத்திலொருபங்கு காலந்தேவையாயிருக்கிறது. ஆதலால் இத்திமிங்கலத்தை இக்காயத்தினின்றுந்தடுக்க கருதினால் அதின் வாலை ஒரு விநாடியும் அவ்விநாடியில் பத்திலொருபங்கு காலமும் $(1\frac{1}{10})$ முன்னதாய் அசைத்து தப்பிக்கொள்ள ஜாக்கிரதைப் படுத்தவேண்டும். பரிச உணர்ச்சியை மூளைக்குச் செலுத்துகின்ற நரம்புத்தொகுதிகளைப் பின்னப்படுத்தி அவைகளின் தொழில்களை நிறைவேற்றாவண்ணம் செய்தல் அசாத்தியமன்று, இத்தொகுதிகள் பின்னப்பட்டு பரிச உணர்ச்சியில்லா ஒருவனை நெருப்பிலிட்டுக் கொளித்தினாலும் இன்னம் பலவித கடுமையான கொடுமைகளைப் புரிந்தாலும் அவன் கிஞ்சித்தும் உணரவேமாட்டான், இவ்வழல் அல்லதுகொடுமைகள் மரணம் விளைக்கின் மரணாவஸ்தையை எள்ளளவேனு முணரவே யுணரான். இவ்வித மரணமியாதெனில், அறிவிற்கும் ஞானத்திற்கும் சிறிதும் புலப்படாமல் திடீலென செயலற்று துஞ்சுகின்ற நிலையாம். இவ்வித மரணம் விளைவிக்க பல உபாயங்களிருக்கின்றன. இராமன் தன் கைத்துப்பாக்கியின் குண்டால் இலட்சுமணன் மூளையினுருவிப் பாயும்படி சுட்டு மரணமுண்டாக்கின், இலட்சுமணன் இலேசமேனும் மரணாவஸ்தையையுணரவே யுணரான், கைத்துப்பாக்கியின் குண்டானது மூளையினுருவிப்பாய ஒரு விநாடியில் (1/1000) ஆயிரத்திலொருபங்கு காலந்தான் வேண்டியிருக்கிறது. ஆதலால் மேற்காட்டிய வேகத்துவநியாயத்தாலமரணமுண்ட இலட்சுமணன,மரணாவஸ்தையையறிவதற்கேனும்உணர்வதற்கேனும்சற்றுமிடமேயில்லை.

இது இப்படி நிற்க, (a flash of lightning) மின்னொளியின் வேகத்துவமோ, ஒரு விநாடியின் லட்சத்திலொருபங்கு காலத்திற்குள்ளாக (1/100,000) அண்டகடாகங்களெங்கும் அடர்ந்து படர்ந்திருக்கும் கார்மேகங்களை இருபிளவாய்ப் பிரித்துப் போடுகின்றது. மின்னொளியின் வேகத்துவ மிப்படியிருக்க, (Electricity) மின்சாரத்தின் வேகத்துவமோ, ஓர்கணப்போழ்துக்குள்ளாக சந்திரனுக்கும் இப்பூமிக்கு மிடையிலுள்ளவிடத்தில் நெருங்கியிருக்கும் மேகக்கூட்டங்களைப்பிரித்துப்போடும்.

மின்னொளியின் வேகத்துவமும் மின்சாரத்தின் வேகத்துவமும் கண்ணிமைப்பொழுது அல்லது கைந்நொடிப்பொழுதக்குள்ளாக, அநேகஆயிரமயில் யாத்திரை செய்வதென மேற்காட்டிய நியாயத்தால் நன்கு புலப்படும். நாம் மின்னலைக் கண்ணுற் காண்கின்றனமே, எத்தருமத்தாலதைத் தரிசிக்கின்றோமெனக் கேள்வி யுதிக்கும். அதாவது—திடீலென ஒளிவிட்டு பறக்கும் எப்பொருளின் பிரகாசமும் நமது கண்களின் கீழ்ப்பாகங்களி லமைந்திருக்கும் ஒளி நரம்புகளில் (Retina) ஒரு விநாடியில் (1/6) ஆறில் ஒரு பங்குகாலம் வரைக்கும் (அப்பிரகாசம் மறைந்து அல்லது அழிந்துவிடினும்) படிந்திருப்பது போல் காணப்படுவது அந்நரம்புகளின் இயல்பாயும் தத்துவமாயுமிருக்கிறது. இவ்விலக்கணத்தைத் தேகதத்துவ சாஸ்திரிகளெல்லோரும் ஒத்துக்கொண்டிருக்கின்றார்கள். இவ்விலக்கணத்தின் தருமத்தால் தான் ஆகாயத்தில் அதிவேகமாய்ப் பறந்துபோகிற நெருப்புப்பொறிகள் அக்கணமே அணைந்துவிடினும் அவைகளினொளி நமது நேத்திரங்கட்குப்புலப்படுகிறது. இதுபோலவே மின்னொளி அதிவேகமாய்ப்பறந்து மறைந்துவிடினும் அதின் பிரகாசம் நமது கட்புலனுக்கு ஒரு விநாடியில் (1/6) ஆறிலொருபங்கு காலம் வரைக்குந்தோன்றும். மேலும் இப்பிரகாசம் எப்பொருளின் எப்பாகத்தில் படிகிறதோ அப்பொருளின் அப்பாகம் நிலையாய் நிற்காமல் அசைந்தாவது சுற்றிக்கொண்டாவது ஓடிக்கொண்டாவது உருண்டுகொண்டாவதிருக்கின் நிலையாய் நிற்பதுபோல்காணப்படும். ஒரு பீரங்கிவண்டியினின்றும் வெடிதீர்த்த பீரங்கிக் குண்டின் மேலாவது, ஓரிருட்டறையில் ஆட்டிவிட்ட பலவித வர்னங்கள் பூசிய பம்பரத்தின்மேலாவது, மின்னொளியாவது மின்சார ஒளியாவது படியும்படி செய்வித்து, வேகமாய் ஓடுகின்ற குண்டையும் சுற்றி ஆடுகிற பம்பரத்தையும் பார்த்தால் அசைவற்று நிலையாயிருப்பனபோற்காணப்படும். சுற்றிக்கொண்டிருக்கும் பம்பரத்தில் பூசியிருக்கும் பல வர்னங்களும் தெளிவாய் நமது கட்புலனுக்குப்புலப்படும். இதை நுட்பமாய்ப்பரீட்சைசெய்த (Dove) இடௌ என்பவர், மின்னொளி பறக்கும்போது பூமியின் மேற்புறத்தில் ஆடிக்கொண்டும், ஓடிக்கொண்டும், சுற்றிக்கொண்டும், உருண்டுகொண்டும், இருக்கின்ற எல்லாப்பொருள்களும் அசைவற்று நிலையாயிருப்பதுபோல்காணப்படுமெனப் பகர்ந்திருக்கின்றனர். போதுமான வேகத்துடன் செல்கின்ற கைத்துப்பாக்கியின் குண்டானது வருத்தமென்பதைச் சற்றேனுமுணர்த்தாமல் ஒருவன் மூளையிற்பாய்ந்து மரணம் விளைக்குமாயின், மின்னொளியாவது மின்சாரமாவது ஒருவனுக்கு மரணம் விளைக்கின் இம்மரணத்தால் விளையும் கொடுமை அல்லது அவஸ்தையினளவை அறிவுடையவர்கள்தான்அளவிடக்கடவர்.

இத்தத்துவத்தை யுணர்ந்துதான் ஐரோப்பா கண்டத்தில் நாகரீகமும், செல்வப்பொழிவும், கல்விப்பொழிவும் மலிந்த சிறந்த குடியரசாங்கமாகிய பிரான்சியதேசத்தார் கயிற்றில் மாட்டி தூக்கிடுவதற்குப் பதிலாகவும், இருப்புப்பெட்டியின் மேற்புறத்தில்படுக்கவைத்து தலைவேறு உடல்வேறு செய்விக்கும் கொலையந்திரத்திற்குப் பதிலாகவும,மின்சாரத்தால் கொலைபுரிவித்தல் மானுஷீகத்திற்குப் பொருந்தியதென அனுட்டிக்கப் பிரயத்தினஞ்செய்கின்றார்கள்.

(இன்னும்வரும்.)

C. L.

## கள்ளஆஸ்திகம்.

இம்மகுடஞ்சூட்டிப்புதுவை தத்துவநேய ரொருவர்—புதுவைக் கடுத்த காரணப்பட்டு கிராமத்தில் நூதனமாய்ச் சமைக்கப்பட்ட ஒரு சைவமடத்தில் சென்ற ஆருத்திரா நட்சத்திரத்தன்று நடராஜபடத்திற்கு நடத்தப்பட்ட உற்சவகாலத்தில் வேண்டுகோளுக்கிணங்கிச்சென்ற கனம்பொருந்திய ஒரு முதலியாரவர்களைத் தொடர்ந்தேகிய சைவசிகாமணி யொருவர் நடேசனுக்குப் பூசைநடந்துகொண்டிருக்கையில் பசியாற் பீடிக்கப்பட்டவராய் மடப்பள்ளியிலிருந்த அம்மையாரை அன்னம் படைக்கச்சொல்லிகேட்க;ஸ்வாமிக்கு ஆராதனையும் அடியார்கள் அமுதருந்தலு முடியாமுன்னம் கூடாதென்று அந்தம்மாள் மறுக்க; அவர் (மானங்குலம் * * * பசிவந்திடப்பறந்துபோம்) என்னும் பாட்டையும் பின்னுஞ் சில நியாயங்களையுங்கூறி, பசியால் வருந்துகையில், கடவுளைத் துதிப்பதற்கும் மனம் ஒருவழிப்படாதென்று உபதேசித்து, தாமே மடப்பள்ளியிலிருந்த அன்னபானாதிகளைப் பரிமாறிக்கொண்டு புசித்தனராம்; சைவசமயசாஸ்திரங்களுக்கு விருத்தமாய்ச் சைவர் இப்படியுஞ் செய்வரோவென்று வியந்து எழுதியிருக்கிறார். [இதனாலே அச்சைவர் வெளிக்கு வைதிகத்தைக்காட்டினபோதிலும், உள்ளத்தில் சுத்த லவுகிகராயிருக்கிறதாகத் தெரியவருகிறது. இவ்வாறே அநேகர் தைரியக்குறைவினாலும், சுற்றத்தார் முதலானவர்களுடைய நிர்ப்பந்தத்தினாலும், கோவணங்கட்டாத ஊரில் கோவணங்கட்டினவனைப் பயித்தியக்கார னென்பார்களாதலால், தாம் வேறுபடாமல் பெரும்பாலாரோடு கலந்துகொண்டு நாளைக்கழிப்பது நன்மையெனக்கருதி, வெளிக்கு வைதிகாளைப்போல நடித்துக்கொண்டு, மனதில் லவுகிகாளுடைய கொள்கையை அனுசரித்துவருகிறார்கள்.]

—o—

## சாதிசமயவாதவிபரீதம்.

ஐயா, பத்திராதிபரவர்களே,

சென்றநான்கு வாரபத்திரிகைகளில் இந்தவாதம் எழுதப்பட்டிருக்கிறது! அதில், "நாடுசீர்மையற் றொளிமழுங்கிக் கிடக்குமோர் நிலைமையினைக்கெல்வி யெறியான்கருதி,மனு வருணபேதத்தை யாதியினிகழச் செய்தருளினர்" என்றும் "இச்சூடசியால் * * அவ்வவ்வருணத்தோர் தத்தந்தொழிலை யூக்கத்துடன் ** நடாத்திவந்தனர்" என்றும், ம-ா-ா-ஸ்ரீ-பாலசுந்தரமுதலியார் கூறியிருக்கினறனர். இதனாலே நாடுசீர்ப்படுவதற்கு மனுசெய்த உபாயமென்று தெரியவருகிறது. அப்படியாயின, பிரமனுடைய முகத்தில் பிராமணனும், மார்பில் க்ஷத்திரியனும், துடையில்வைசியனும், பாதத்தில் சூத்திரனும் பிறந்ததாகச் சொல்லியிருப்பதற்கு விரோதமாகிறது. அன்றியும், மற்றத்தேசங்களெல்லாம் சாதிபேதமின்றி அவரவர் தந்தம் திறத்துக் கேற்றதொழிலைச் செய்வதினால் விர்த்தியடைந்திருக்கினறன. ஆதியில் இந்துதேசமிருந்த நிலைமையை அறிந்து மனுசெய்த ஏற்பாட்டை முதலியார் ஊகித்தெழுதியிருப்பார்.

"சாத்திரசோதனையில் நாட்டம் வைத்திருந்தவேதியர் தெய்வத்தன்மையை யடைந்தனர்" என்பதற்குச் சாட்சியாக "தெய்வாதீனம் ** பிராமணாமமதேவதா" எனனுஞ் சுலோகத்தைஉதகரித்தனர். இச்சுலோகஞ்செய்தவர் பிராமணரோ யாயின, அதுமேற் கோளாகமாட்டாது.

ஐயா, மதங்களனையவுமனிதரது ஏற்பாடுகளே, ஒருமுதலவரேற்பாடாகத் தோன்றவில்லையென்று தாங்கள்கூறியதை உண்மையென்றே ஒப்புக்கொள்ளுகிறார். அதனாலே அவருடையகூற்றினபடி மதத்தை அனுசரித்தகடவுளர்களும் வேதாகம

முதலியநூல்களும் அற்புதங்களும் கற்பனையேயாகின்றன; ஆயின சிலர் சர்வேஸ்வரனைப்போல வேதம் அநாதியென்றும், சிலர் பிர்மத்தின் ஸ்வாசமென்றும், சிலர் பிர்மாவின்வாக்கென்றும், சிலர் [illegible] வேமுதல்வனென்றும், இவ்வாறுபற்பலர் பற்பலவிதமாய்ச் சொல்லுவதற்குமாறுபடுகின்றன. அன்றியும், "கற்பிதமாய்த்தோன்றி நின்றழியு மியல்பினைவாய்ந்தவேனைய சமயங்கட்குமாறுகிய ஆன்மாககட் கோமேமவைப்பெனத் திகழும் இந்துமதத்தின் திறத்தைபெடுத்துப் புகல்வான் தொடங்கல்" மலைத்தேனைமுடவன் ஏறியுண்பேனென்று சொல்வதொக்குமென்று பாலசுந்தரமுதலியார் எழுதியிருககிருர். இதனுலே இந்துமதமாத்திரம் கற்பிதமன்றி கடவுளாலாய மதம்போலும். இந்துமதமென்பது என்னமதம்? அது இந்துக்களுக்குரிய பல மதங்களையுங்குறிக்குமே; அவற்றுள் ஒன்றையொன்று விரோதிப்பதால், எது உண்மையானது? அல்லது எல்லாம் உண்மையானவையா?

மதம் கற்பிதமாயினும் நன்மைபயக்கிறதென முதலியார் கூறியதற்கு, மதத்திஞல் நேரிட்ட சில கொடுமைகளைத் தாங்களெடுத்துக்காட்டியவற்றுள் சைவர்கள் க்ஷமணர்களைக் கழுவேற்றியதின்பேரில் வாதந் திரும்பிவிட்டது. சைவர்கள் ஏற்றவில்லை, க்ஷமணர்கள் தாமேஏறினர்களென்பதற்கு, நீங்களேனவீணுபிறக்கின்றீர்கள், பரமசிவனுக்கு அடிமைபூண்டு உயிர்வாழ்ந்திருங்களென்று க்ஷமணருக்குச்சொல்லிய திருஞான சம்பந்தரைநோக்கி, "வேடசிறியாய் நீ யெவ்வாறெங்கட்கடாதமொழி, சொன்னதென்று மானமுளார் கழுவிலேறத்தொடங்கினர்." இவ்வண்ணமாக—"மதத்தினின் மானமிக்கார் தாங்களே வலியவேறிப்பதைத்திடவிருந்தார்," என்று திருவிளையாடற்புராணத்திலுள்ள வாக்கியங்களை மேற்படிமுதலியார் அத்தாட்சியாக எடுத்துக்காட்டிச் சாதித்து; மறுபடியும். "ஆயினும், ஏனைப்பறிதலை யவரைச்சைவ விதத்திலொழுக்கம் பூண்ட வேடத்தார் பற்றிப் பற்றிச் சிதைத்திட்டிடர் செய்தேறிட்டார் திரிதலைக்கழுக்கோ றன்னில்," என்னும் வாக்கியத்தை எடுத்துக்கூறி சைவர்கள் வதைத்ததாகவும் ஒப்புக்கொண்டு, இதுமறக்கருணை என்கின்ருர். ஐயா, அதனுலும். தாங்கள் அப்புராணத்திலிருநதெடுத்தே உதகரித்த சிலபாடல்களாலும் சமணர்கள் குப்பைச்சாம்பலையும் கோமயத்தையும்வாரிப்பூசிக்கொண்டு, அதுவுங்கிட்டாதவர் கன்றைத்தோளில்போட்டுக்கொண்டும், கோமயத்தின் சேறிட்டவர்களுடைய நெற்றியோடு நெற்றியைத்தாக்கிக்கொண்டும், இவ்வண்ணமாகக்கொலையுண்ணுமல் உயிர்தப்பினரென்றும், மடிந்தவர்கள்யாவரும் கழுகு நாய் நரிகள் கவ்விக்கவ்விப் பிடுங்கித்தின்னக்கிடந்தனரென்றும், தெரியவருகிறது. இவ்விரண்டு பட்சத்தையும் யோசிக்குமிடத்து, 'மதத்தினின்மானமிக்கார்' என்றதஞல் சம்பந்தரோடுவாதுபுரிந்த சமணமுனிவர்கள் தங்களைச்சைவ மதத்தில் சேரசசொன்ன சமயாசாரியரைநோக்கி, உன்சமயமும் ஓர்சமயமா? தந்திரத்திஞல் எங்களைச் சயித்துவிட்டதினுலே எங்கள்சமயம் குறைந்துபோகாது என்றுசொல்லி மதவைராக்கியத்திஞலும் சவுரியத்திஞலும் தாங்களே கழுவேறினர்களென்றும், சாமான்னியமான சமணசனங்களைச்சைவர்கள்துரத்தித்துரத்திப்பிடித்துக் கொலைசெய்தார்களென்றும் விளங்குகிறது. கருணையினுல் பிணங்களையாவது புதைத்துவிடச்செய்யாமல் விட்டுவைத்து, நாய் நரிகள் பிடுங்கித்தின்னப் பார்த்திருந்ததும் வஞ்சமனத்தின் கொடுமைகொடுமை. ஆரியமதஸ்தர்கள் கருணைகூர்ந்தவர்களாயிருப்பார்களாகில், யாவருக்கும் மதாபிமானமிருக்கவேண்டுமென்று சொல்லுகிற அவர்கள் சமணர்களுக்கு மதாபிமான முண்டாயிருந்ததுபற்றிச் சந்தோஷப்பட்டேயிருப்பார்கள்.

கொலைசெய்தது மறச்செய்கையேயல்லாமல் அதில்கருணை விளங்காமையால், மறக்கருணையாகாதென்றதற்கு, ஓராசிரியன் தன்வித்தியார்த்தியைத் தண்டித்தல் அவனது நன்மைக்காதலால் அது கருணையின் காரியமென்று பாலசுந்தரமுதலியார் உதாரணமெழுதியிருக்கிருர். இந்ததெண்டனையில். வித்தியார்த்தி உயிரிழக்காமல் ஜீவித்திருந்து பின்பு குணப்படுவதால் கருணைவிளங்குகிறது. கொலையுண்டவன் அத்தெண்டனையால் பிந்தியாதொரு நன்மையுமடைந்ததாகத் தெரியவராமையால் அதில்கருணைவிளங்கவில்லை. அப்படியிருக்க, முதலியார்வித்தியார்த்தி உதாரணத்தைக்காட்டி, உடனே, சம்பந்தரைவழிபட்டொழுகியுய்ததைசவர்கள் மகாபாபிகளாகிய சமணரைக்கழுவிலேற்றித்தெண்டித்தது இரக்கத்தின்பயன்தானென்று எழுதியிருக்கிருர்.

சமணர்கள் தாமேவலியக் கழுவேறினர்களென்று முதலியார் சாதித்ததஞல், கழுவேறியபடலமென்றிராமல், கழுவேற்றியபடலமென்றிருக்கிறதே யென்கிற ஆட்சேபனைக்கு, கழுவேற்றியபடலமெனப் பிறவினையிலிருத்தலின். கிரந்தகர்த்தாவுடையசம்பந்தரால் சமணர்கள் கழுவேற்றப் பட்டனரென்று தலைமைநோக்கிக் கூறினரென்ருர். இவரோ பாடல்களிலிருப்பதுமல்லாமல், மதாவேசங்கொண்டு சைவரைக்கொலைபுரிந்துவந்த மகாபாபிகளாகிய சமணரைச் சைவர்கள் சங்கரித்தார்களென்று எழுதிஒப்புக்கொள்ளுகிருர். இதனுலே, தலைவருடைய ஆக்கினையின்படி மற்றச்சைவர்கள் புரிந்தகொலைக்கு அத்தலைவரோ பொறுப்பாகிருர். அப்படியிருக்க, "இங்ஙனந்தலைவர்மீது சாட்டிச்சொல்லல் சரித்திரக்காரரது மரபாமாதலான், 'ஓரமணரொழியாமேகழுவிலேற்றி' என்னுமூதுரைக்கும், 'மதத்தின் மானமிக்கார் தாங்களே வலியவேறிப்பதைத்திடவிருந்தார்' என்னுந்திருவாக்கினுக்கு முரண்படுதலில்லை." என்று முதலியார் கூறியதை வாசிப்பவர்கள் தான்அறிந்துகொள்ளவேண்டும்.

ஐயா, பத்திராதிபரவர்களே, "இவ்வளவில விண்வாதத்தை ஒழித்துவிடல்மரியாதை." என்றுதாங்கள்எழுதியிருப்பதிஞல், அந்தவாதம் அதோடு ஒழிந்துபோயிருக்குமென்றே நினைக்கிறேன். இன்னுமிருக்குமாயின், ஏகதேசமாய் ஒருவர் மனம்போனபடி முன்னுக்குப்பின் முரணுகப்பேசும்வாதத்தைப் பிரசுரஞ்செய்வதைப்பார்க்கினும், பிரயோசனகரமான வேறேவிஷயங்களைப் பிரசுரிப்பீர்களென்று கோருகின்றனன்.

ஓர்மெம்பர்.

---

## வர்த்தமானசங்கிரகம்.

---

நடக்கப்போகிற ஜூபிலி உற்சவ சம்பந்தமாகச் சிற்சிலருக்குப் பட்டங்கொடுக்கவேண்டி ஜாபிதா தயார்செய்து, ஸ்டேட்டு செக்ரிட்டேரியவர்களும் மகாராணியவர்களும் ஆலோசிக்கும்படியாக இப்போது அனுப்பப்பட்டிருக்கிறது. வெகுவாய் 1877ஞுடத்தில் செய்ததுபோலவே இப்போதும் தயார்செய்யப்பட்டிருக்கிறதென்றும், அதனுலே அது மிகவும் பெரிதாயிருக்குமென்றும் நினைப்பதாய் பயனீர் பத்திரிகை பேசுகின்றது. இந்தியாஜெயில்களிலிருந்தும் ஆந்தமனதீவிலுள்ள குற்றவாளிச் சாலைகளிலிருந்தும் பலகைதிகளை விடுதலைசெய்த முன்மாதிரி இத்தருணத்தில் அனுசரிக்கப்படும்போலும்.

இந்தியாவிலுள்ள குஷ்டரோகிகளுக்குக் குணமுண்டுபண்ணும்பொருட்டு சீர்மையில் எடிம்பரோ பட்டணத்தில் பத்துவருஷத்துக்கு முன் ஏற்பட்ட சங்கத்தின் காரியதரிசியாகிய பெய்லிதுரையவர்கள் அந்தச் சங்கத்தார்பட்சத்திலே இப்போது கல்கத்தாவில் வந்திருக்கிருர். வங்காள ராச்சிய முழுதுமுள்ள ஜனங்களுள் 54,000 குஷ்டரோகிகளிருப்பதும், கல்கத்தாபட்டணத்தில் மாத்திரம் 1,200 பேரிருப்பதும் எல்லோருக்குந் தெரியாதிருக்கலாமென்றும், அதிகமாகச் சேர்த்துக்கொள்ளச் சாலையிலே இடம்போதாமையால், 90 பேர்மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிருர்களென்றும், அவ்விடத்திய பத்திரிகை யொன்றிஞல் தெரியவருகிறது.

ஆக்ரா பெண்டுகளாசுபத்திரி கட்டுவதற்காகசென்றமீ22வ லேடிலயாலம்மாஅவர்களால் அஸ்திவாரக்கல்போடப்பட்டது. ஐரோப்பியர்களும் சுதேசவாசிகளும் அநேகர் வந்திருந்தார்கள். பெண்டுகள் வைத்திய பாடசாலை வித்தியார்த்திகளும் வந்திருந்தார்கள். மூதுராசெத் அவர்கள் அந்தக் கட்டடத்தின் அவசரமான வேலைக்காக ஜூபிலி ஞாபகார்த்தமாய் ரூ. 500 விராளங்கொடுத்தனர். [உத்தமமான காரியம்.]

---

## சென்னைகாலஸ்திதி ரிபோட்டு.

---o---

(சென்றமீ உகூவயோடு முடிகிறவாரத்துக்கு.)

**கஞ்சம்.**—நான்கு தக்குடிகளில் அம்மை உபாயம்; மூன்று தக்குடிகளில சுரமும் கால்நடைகளுக்கு நோயும்; விஷபேதி வெகுவாய்க் குறைந்திருக்கிறது.

**விசாகபட்டணம்.**—இரண்டுதக்குடிகளிலே சென்றபெருமழையினுல் பயிர்கொஞ்சம்சேதம்; நன்செய் புன்செய் அறுப்பு; பலன் நடுத்தரம்; நான்குதக்குடிகளிலே அம்மை, நான்குதக்குடிகளிலே விஷபேதி(குறைவுபடுகிறது,) மூன்றுதக்குடிகளில் கால்நடைரோகம்.

**கோதாவரி.**—பயிர் சாதாரணமாய் நன்று; ஆறு-லாக்கின் கீழ்ப்புறத்துக்குமேலே -எ- அடி. சுரம்பரவல, சிலபாகங்களிலே விஷபேதியும் மாட்டுரோகமும் (குறைகின்றன.)

**கிருஷ்ணு.**—பயிர் சாதாரணமாய் நன்று. நெல்லறுப்பு, பலன்சராசரிக்குக் குறைவு; ஆறு-அணைக்கட்டுக்குமேலே உ௦-அடி; சிலபாகங்களிலே சுரம், இரண்டுதாலூகாக்களிலே விஷபேதி (குறைந்துவருகிறது.)

**நெல்லூர்.**—பயிர்சாதாரணமாயநன்று, நன்செய் புன்செய் அறுப்பு, பலன்பூர்த்தி, ஆறுதாலூக்காக்களிலசுரம், இரண்டு தாலூக்காக்களில் அம்மையும் விஷபேதியும், ஒருதாலூக்காவில் மாட்டுரோகம்.

**கடப்பை.**—பயிர்நன்று, நன்செய் புன்செய் அறுப்பு, பலன்சுமார். ஐந்துதாலூகாக்களில் சிலவிடங்களிலே சுரம், மூன்றுதாலூகாக்களில் மாட்டுரோகம்.

**அனந்தபூர்.**—பயிர்நன்று, சிலவிடங்களிலே பருத்தியும் சோளமும் சப்பட்டை, நன்செய் புன்செய் அறுப்பு, பலன்சராசரி, சிலபாகங்களில்லே அம்மையும் மாட்டுரோகமும்.

**பல்லாரி.**—பயிர்சுமார், சிலபாகங்களிலே துவரை பூச்சடி; பருத்திச்கும் கோதுமிக்கும்பிணி, வெள்ளைச்சோளம சாவி. நன்செய் புன்செய் அறுப்பு, பலன் - நெல்லும் கரும்பும் சுமார், புன்செய்குறைவு. மூன்றுதாலூகாக்களில் சுரம், நான்குதாலூகாச்களில் மாட்டுரோகம்.

**கர்னூல்.**—பயிர்நன்று, வெள்ளைச்சோளம் அறுப்பு; பலன்சராசரிக்குசகுறைவு; ஆறுதாலூகாக்களில் சுரமும் மூன்றுதாலூகாக்களில் அம்மையும மாட்டுநோயும் அதிகரிக்கின்றன.

**சென்னை.**—சுரம் வியாபிக்கிறது.

**செங்நற்பட்டு.**—பயிர்சுமார், சிலவிடங்களிலே மழைக்குறைவினுல்கம்மி, நெல்லும் வரகும் அறுப்பு, பலன் சராசரிக்குக்குறைவு. அம்மை உபாயம், நான்கு தாலூக்காக்களில் மாட்டுரோசம்.

**சிற்றூர்.**—பயிர்சாதாரணமாய் நன்று, சிலவிடங்களில் மழைச்குறைவினுல் சாவி, நன்செய் புன்செய் அறுப்பு, பலன் சராசரிக்குத்தாழ்வு. சிலபாகங்களில் சுரமும் அம்மையும், ஒருதுக்குடியில் மாட்டுரோகம்.

**கூடலூர்.**—பயிர்சாதாரணமாய்நன்று, சிலபாகங்களில் மழைக்குறைவினுல் நெற்பயிர்சாவி, இரண்டுதாலூகாச்களில் சிலவிடங்களிலேவேர்க்கடலைச்குப்பூச்சியரிப்பு, நன்செய் புன்செய் அறுப்பு, பலன் மொத்தத்தில சராசரிக்குத்தாழ்வு. ஒருதாலூக்காவில் மாட்டுரோகம்.

**தஞ்சாவூர்.**—பயிர் சாதாரணமாய்நன்று, சிலவிடங்களின் மழைகுறைவு, நன்செய் புன்செய் அறுப்பு, பலன்சராசரி. இரண்டுதாலூக்காக்சளில் மாட்டுரோகம்.

**திரிச்சினுப்பள்ளி.**—பயிர் தண்ணீர் போதாமையால் கெடுதி, நெல்லறுப்பு சராசரி, கம்புகுறைவு.

**மதுரை.**—பயிர் நான்குதாலூகாக்களில் சிலவிடங்களிலே தண்ணீர் குறைவினுல் சாவி. அறுவடையான விடங்களிலே பலன்கம்மி.

**திருநெல்வேலி.**—மழைசுமார், மழைபோதாமையால் முழுதும்பயிர்சாவி, ஒருதாலூக்காவில் நெல்லும்பதர், நன்செய் புன்செய்அறுப்பு, பலன்சாதாரணமாய்கம்மி. ஒருதாலூக்காவில் அம்மை, மூன்றுதாலூகாக்களில் மாட்டுரோகம் குறைந்துவருகிறது.

**கோயம்புத்தூர்.**—மழைசராசரி, பயிர்சாதாரணமாய் நன்று, சிலவிடங்களிலே தண்ணீர்குறைவினுல் சாவி, நன்செய்புன்செய் அறுப்பு, பலன்—நெல்லும் கேழ்வரகும் சாதாரணமாய்சராசரிக்கு அதிகம், மற்றவைகம்மி, ஒருதாலூகாவில் சுரம், இரண்டுதாலூசாக்சளில் அம்மை.

**நீலகிரி**—மழைசராசரி, பயிர்சாதாரணமாய்நன்று, சிலவிடங்களில மழைதுறைவினுல் பீடு, அறுவடையானஇடங்களில் பலன்சராசரி, ஒருதுக்குடியில் சுரம், மூன்றுதுச்குடிகளில் அம்மை.

**சேலம்.**—பயிர்சாதாரணமாய்நன்று, இரண்டுதாலூகாக்கள்ல் சிலவிடங்களிலே தண்ணீர்ப்பாய்ச்சலில்லாதவைதாறுமாறு, நன்செய் புனசெய் அறுப்பு, பலன்சராசரி, மூன்றுதாலூகாக்களில் சுரம், இரண்டுதாலூகாக்சளில மாட்டுரோகம்.

**தென்கன்னடம்.**—இரண்டாம்போக நெல்லறுப்பு ஆரம்பம் பலன்சராசரி. மூன்றுதாலூகாக்களில் சுரம்உபாயம், இரண்டுதாலூகாக்களில் அம்மை, மூன்றுதாலூகாக்களில் மாட்டுரோகம்.

**மலபார்.**—இரண்டாம்போக நெல்லறுப்பு, பலன்சராசரி ஒருதாலூகாவில் சுரம், எட்டுதாலூசாக்சளில் அம்மை உபாயம், இரண்டுதாலூசாக்சளில் மாட்டுரோகம்.

**திருவான்கூர்.**—இரண்டாம்போக நெல்லறுப்பு நடந்துவருகிறது. சிலவிடங்களில் அம்மையும் சுரமும் வியாபகம்.

**பேநம்பாலும்சுகம்.**—நன்று.

## அறிக்கை.

## மதிராஸ் சிக்கியுலர்சோசைட்டி.

சென்னை லௌகிகசங்கம்.

—o—

வேப்பேரி சில்வர்ஸ்ரோட்டிலே சேக்கிட்டேரி யவர்கள் கிரகத்தில், நிகழும் பிபர்வரி 27உ ஆதிவாரங்காலை (8) மணிக்கு, சங்கத்தின் மேம்பர்கள் மகாசபைகூடலாதும்.

நமது மெம்பர்களும கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிகமாக "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினுல், அடியிற்கண்டிருக்கிற குறைந்தவிகத்திற்குப பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச

தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ்பிரதியாயின் நான்கும் ஒரேதபாற்செலவில அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி—என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றிபெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணைபுரிவார்களென்று நம்புகிறோம.

இந்தியாவிலுள்ள

சுவக்கியாணிகளை

## மதிராஸ் சிக்கியுலர்சோசைட்டியில்

மெம்பர்களாகச் சேரும்படி

கேட்டுக்கொள்ளலாகின்றது.

## கையொப்பநேயருக்கு·

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறுதவர்கள் உடனேதெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

—o—

உள்ளூர்மெம்பர் - மூன்றுமாசத்திற்கு—ரூ 3— 0—0
வெளி ,, ,, —ரூ 1—14—0

செலுத்தவேண்டும். அப்படி சேருகிறவருக்கு "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகையாவது, "தத்துவவிவேசினி" யாவது இலவசமாக அனுப்பப்படும்.

## தத்துவவிவேசினி

**நான்குபக்கம், பிரதி 1க்கு விலை அணா 1.**

## தமிழ்சந்தாவிபரம்·

| | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணாவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணா வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத்தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

பத்திரிகைக்கு எழுதும்கடிதமுதலியவிஷயங்களை
மாத்திரம்
சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி
307 - வது நம்பர் வீட்டில்
**பு· முனிசுவாமிநாயகருக்கும் ;**
1886ம் - வருஷ முதல் சந்தாக்களையும்,
இங்கிலீஷ் பத்திரிகைகளையும்,
வேப்பேரி சில்வர்ஸ் ரோட்டில்
மதிருஸ் செகுலர்சொசைட்டி ஆனரிசெக்ரிட்டேரி
**மெஸ்டர்· அப்ஷன்துரை யவர்களுக்கும்**
அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 9.] MADRAS:—SUNDAY FEBRUARY, 27, 287. A. S. [Monthly, 4 Annas.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



"இந்துசுவக்கியானசங்கம்" என்னும்பெயர், இச்சங்கத்தில் இப்போது யூரோஷியர் முதலானவர்கள் சேர்ந்திருப்பதால், "மதிராஸ் சிக்யுலர் சோசைட்டி" என்னும் இங்கிலீஷ் பெயருக்கிணங்க, "சென்னை லௌகிக சங்கம்" என மாற்றப்பட்டது.

## வேகத்துவம்.

இத்தலைப்பெயர் சூட்டி வேகத்துவ இலக்கணங்களையும் வேகத்துவ பிரகிர்தி நியாயப்பிரமாணங்களையும் இப்பத்திரிகையின்மூலமாய் வியவகரிப்பாம். சாஸ்திரவிஷயங்களை எழுதுங்கால் முக்கியமாகிய பதங்களுக்கு முன்னர் பொருள்கூறிப் பின்னர் உபயோகித்தல்வேண்டுமாதலால் அங்ஙனமே ஆங்காங்கு பிரயோகிக்கப்படும் பிரதானமொழிகளுக்கு ஈங்கு பொருள் கூறப்படும்.

வேகத்துவம் என்பது இடம்மாறும்தன்மை என பொருள்படும். வேகத்துவம் என்பது ஒரு வஸ்துவல்ல; அது ஒருவகைத்தொழிலின்பெயர். தொழிலென்னுங்கால் தொழிலையுடைய வஸ்து ஒன்று இருத்தல் வேண்டுமென வெளிப்படும்.

வஸ்துக்களின் இடம் மாறுந்தன்மை அல்லது வேகத்துவம் மூவகைப்படும். அவை, சமவேகத்துவம், விருத்திவேகத்துவம்,க்ஷயவேகத்துவம்,எனப் பெயர் பெறும்.

சமவேகத்துவம் என்பது தொடர்ச்சியான சமகாலங்களில் சம இடஞ்செலலும் தன்மை. எங்ஙனமெனின், ஒரு புகைவண்டியானது முதல், ஒருமணிகாலத்தில் உ0 - மைமிலும், இரண்டாவது ஒருமணிகாலத்தில் உ0 - மையிலும் மூன்றுவது ஒருமணிகாலத்தில் உ0 - மையிலும் சென்று, இவ்வாறே தொடர்ச்சியான சமகாலங்கள்தோறும் சம இடஞ்சென்றுல், அவ்வண்டியின் வேகத்துவத்திற்கு சமவேகத்துவமென்று பெயா.

விருத்திவேகத்துவம் என்பது தொடர்ச்சியான சமகாலங்கள்தோறும் செல்லும் இடம் மிகுதிபட்டுக்கொண்டேயிருக்குந்தன்மை. அல்லது மாத்திரைப்பொழுதிற்கு மாத்திரைப்பொழுது வேகத்துவம் படிப்படிஅதிகரித்தல்,எங்ஙனமெனின், ஒரு புகைவண்டியானது முதல் ஒரு மணிகாலத்தில் உ0 - மையிலும், இரண்டாவது ஒரு மணிகாலத்தில் ௩0 - மையிலும், மூன்றுவது ஒருமணிகாலத்தில் ச0 - மையிலுஞ் சென்று, இவ்வாறே தொடர்ச்சியான சமகாலங்கள்தோறும் செல்லும் இடம் அதிகப்பட்டுக்கொண்டிருப்பின், அவ்வண்டியின் வேகத்துவத்திற்கு விருத்திவேகத்துவமென்று பெயர்.

க்ஷயவேகத்துவம் என்பது தொடர்ச்சியான சமகாலங்கள்தோறும் செல்லும் இடம் குறைந்துகொண்டேயிருக்குந்தன்மை. எங்ஙனமெனின், ஒரு புகைவண்டியானது முதல் ஒருமணிகாலத்தில் ௩0 - மையிலும், இரண்டாவது ஒருமணிகாலத்தில் உரு - மயிலும், மூன்றுவது ஒருமணிகாலத்தில் உ0 - மையிலும் சென்று, இவ்வாறே தொடர்ச்சியான சமகாலங்கள்தோறும் செல்லும் இடம் குறைந்துகொண்டேயிருந்தால், அவ்வேகத்துவத்திற்கு க்ஷயவேகத்துவமென்று பெயர்.

ஒருவஸ்துவின் வேகத்துவத்தை யறிதல் இடபேதத்தாலும், இடம் மாறும் தீவரத்தாலும், காலபேதத்தாலு மாதலால், ஈண்டு இடமென்பதனையும், வேகமென்பதனையும், காலமென்பதனையும்பற்றி சற்றே வியவகரிப்பாம். இ-மு.

(இன்னும்வரும்.)

## இலௌகிகப்பொறுப்பு.

வைதிகிகள் தாம்தாம் இகத்தில் புரிந்துவருங் கருமங்களுக்குப் பரத்தில் தம்முதல்வனுக்குத்தாமே உத்திரவளித்தல்வேண்டும் என்று உரையாடிவருவது உள்ளம் கவர்ந்தோங்கிய உரையோ கள்ளம் பரந்தோங்கிய உரையோ வென்று உற்றுநோக்குவாம். இகமும் பரமும் எதிர்முகத்துறைகள் என்பதனை எல்லோரும் அங்கிகரிப்பதனோடு அவ்விருதுறைகளையும் ஏககாலத்தில் கண்டுநின்றவர் எவருமேயில்லை என்று எல்லோருமே ஒப்புக்கொள்ளுவர். இகமாகிய துறையில் வசிக்கும் வைதிகிகள் பரமாகிய மற்றோர் துறையும் உளதென்று (தாமுங் காணுமல் கண்டோர் சொல்லவுங் கேட்காமல்) தாமே தமக்குள் மனோசிருட்டி செய்துகொண்டு நடிப்பது தக்கோர் செய்கையாமோ! இவ்வைதிகிகள் நடிப்பாளரல்லாதுவிடின் குற்றமென்பது உலகத்தில் முற்றுமே யில்லாதிருத்தல்வேண்டும். ஒருக்காலிருப்பினும் அக்குற்றம் பரக்கியானமில்லாத இலௌகிகிகள் பாலதாகவே இருத்தல்வேண்டும். நமது அனுபவபூர்வமாய் நோக்குமிடத்து குற்றம் புரிபவரெல்லாரும் பரக்கியானமில்லா இலௌகிகிகளுமல்லர். குற்றம் புரியாரெல்லாரும் பரக்கியானமுள்ள வைதிகிகளுமல்லர். ஆகையால் மனோசிருட்டியாகிய பரக்கியானம் மனிதரைக் குற்றம்புரிய வொட்டாமல் தடுக்கவல்லதன்று. பரத்தில் நம்பிக்கையுள்ளாரும் நம்பிக்கையில்லாரும் ஆகிய இருதிறவரும் யாதொரு பேதமுமில்லாமல் குற்றம்புரிந்து வருகின்றமையால், நீதியை நிலைநிறுத்தற்குக் கடவுள நம்பிக்கை காரணமன்று. நீதியை நிலைநிறுத்தற்குக் கடவுள் நம்பிக்கை காரணமல்லாதபோது, மற்று யாதுபயனைக் கருதியோ மனோசிருட்டி செய்துகொள்வது? வைதிகிகள் தாம்தாம் புரிந்துவரும் நன்மை தீமைகளுக்குத் தாமே உத்தரவளித்தலவேண்டும் என்பதனைச் சத்தியமாகவே நம்பினவர்களாயின், அவர்களுள்ள ஊரிலுங் கொலைகளவாதி குற்றங்கள் குடிபுகாவே. குடிபுகுந்திருக்கின்றமையான் அவர்கள் பகரும் வாசகம் நடிப்பே. ஆயினமையின் உண்மையாக நோக்குமிடத்து வைதிகப்பொறுப்பு நடிப்பே. ஆனல் இவ்வுலக அதிகாரிகளுக்கும் தம்மோடொத்தவர்களுக்கும் தத்தம் மனச்சாக்ஷிக்கும், இலௌகிகிகள் பொறுப்பாகின்றமையால், அன்னோர் வாக்கியம் நெஞ்சொளித்து நிகழ்வதன்று.

## இந்துசமயசாரவிளக்கம்.

(சிலநூல்களிலிருந்தெழுதியசங்கிரகம்.)

### சதுர்வேதங்களுக்கடுத்தவிவரங்கள்.

சதுர்வேதமென்பது நாலுவேதங்கள் என்றர்த்தமாம். அந்நாலுவேதங்கள் ஏதெனில் இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்பவையாம்.

இந்துமதஸ்தருடைய பிரபந்தங்களிலெழுதியிருக்கிறதைப்பார்த்தால் இந்த வேதாகமங்கள் தெய்வத்தால் மனுஷர்களுக்கு எழுதிக்கொடுக்கப்பட்டதுமலல, கட

வுள் சொல்லவே எழுதப்பட்டதுமல்ல. பிரமா அதுகளைச் சிலரிஷிகளுக்குப் படிப்பித்ததென்றும், அநேகங்காலம் அதுகள் பாரம்பரைமுறையாய்ப் படிப்பிக்கப்பட்டு வந்தபின்பு பலரிஷிகளால் எழுதப்பட்டு வேதவியாசனாலே சேர்க்கப்பட்டதென்றுஞ் சொல்லுகிறார்கள். பிராமணர் சாதனை இதுக்கு அத்தாட்சியா யிருக்கிறதொழிய வேறொன்றுமில்லை. ஆனாலவர்கள் சொல்வதைத்தானே நம்பவிடமில்லை. ஏனெனில் கனமான காரியத்திலே வெறுஞ்சாதனை போதாது. அதுக்குத்தக்க சாட்சியத்தாட்சி வேண்டாமோ? அந்தச்சாதனை எப்போ, எப்படி துவக்கினதென்றும், துவக்கத்திலே ஒருத்தனாலேமாத்திர முண்டாயிறதோ, அநேகராலே உண்டாயிற்றோவென்றும் அவர்கள் கொடுத்த உருசு சாட்சி யத்தாட்சி யென்னவென்றுந் தெளிய வேண்டாமோ? அது தெளியாதபோது அந்தச்சாதனையை நம்பவிடமில்லை. இதிலே வெறுஞ்சாதனை செல்லாது.

மீளவுஞ் சதுர்வேதங்கள் பிரமாவின் நாலுமுகங்களினின்று புறப்பட்டதென்று அநேகர் சொல்லுகிறார்கள். இதுவும் வெறுஞ்சாதனையொழிய உருசுவினால் மெய்ப்பிக்கப்பட்டதல்ல. அன்றியு முந்திக்காட்டின சாதனையோடே இது ஒவ்வாது. மேலும் பெரும் புத்தகங்கள் முகத்தினின்று புறப்படுகிறது எப்படிப்பட்ட பிதற்றலான கதையாம். அன்றியும் பூர்வத்திலே பிரமா பஞ்சமுகனா யிருந்தானென்று இந்துமதஸ்தர் சொல்லுகிறார்களே, ஐந்து வேதம் புறப்படா திருந்ததென்ன? அவன் பார்வதியை மோகித்ததைப்பற்றிச் சிவன் அவனுடைய முகங்களிலொன்றைக் கிள்ளினதற்குப்பின் மீதியான நாலுமுகங்களினின்று வேதங்கள் புறப்பட்டதென்பார்களாக்கும். அப்படியானால் வேதங்கள் ஆதியிலுண்டானதல்ல, மேலும் பிரமா அந்தத் தப்பிதத்தைச் செய்ததைப்பற்றியுந் தன்சொந்த மகளைத் தனக்குப் பெண்சாதியாகக் கட்டிக்கொண்டதைப்பற்றியும் இந்துமதஸ்தர் அவனைப் பிறக்கணித்துக் கோவிலும் ஆராதனைவணக்கமு மில்லாமல் விட்டதுபோலே அவன் முகங்களினின்று புறப்பட்டதாகச் சொல்லப்படுகிற வேதங்களையும் பிறக்கணித்துத் தள்ளவேண்டாமோ? அப்படிச்செய்வதுநியாயந்தானென்று பின்னாலே மேன்மேலும் விளங்கும். ஆயினும் அதுகளைச் சரியாய் விசாரிப்போமாக.

எசுர்வேதம் வெள்ளை (சுக்ல) எசுர்வேதமென்றுங் கரும் (கிருஷ்ண) எசுர்வேதமென்றும் இரண்டு பிரிவாம். கரும் எசுர்வேதம் தைத்திரியம் எனவும் படுகின்றது. அந்தப்பேரானது அந்த வேதவகுப்பைப் படிப்பித்த தித்திரிமுனியைப்பற்றி அதுக்குக் கொடுக்கப்பட்டதென்று சிலர் சொல்லுகிறார்கள். மற்றநேகர் அதற்குச்சொல்லுகிற காரணமென்னவெனில், வைசம்பாயனன் கரும் எசுர்வேதத்தை யாஞ்ஞவற்கியனென்னுந் தன் சீஷனுக்குப் படிப்பித்திருந்தான். ஆனால் இவன் வைசம்பாயனன் தெரியாமற்செய்த கொலையென்கிற பாவதோஷத்தைத் தன்பேரிற் சுமந்துகொள்ள மாட்டேனென்றதினால் தான் கற்றுக்கொண்டதைக் கண்டிப்புள்ள ரூபமாய்க் கக்கிப்போடக் கட்டாயப்பட்டான். அப்போது வைசம்பாயனன் கட்டளையிட்டபடி அவனுடைய மற்றச்சீஷாக்கள் ஓர்வகைக் கவுதாரியாகிய தித்திரிப்பறவையின் ரூபமெடுத்து யாஞ்ஞவற்கியன் கக்கினவேதத்தைப் பக்ஷித்துக்கொண்டு அதைப்பின்னும் வெளிப்படுத்தினார்கள். அதினால் கரும் எசுர்வேதம் தைத்திரியம் எனனப்பட்டதாம். இப்படிப்பட்ட கதைகளை உண்டுபண்ணினவர்களை நம்பி வேதங்கள் தேவ வாக்கென்று விசுவசிக்கத்தகுமோ?

சதுர்வேதங்களில் முதல் மூன்றுவேதங்கள் வெகுகாலந்துவக்கி வழங்குகிறதென்பது உண்மையானாலும் பிராமணர் சொல்லுகிற பெருந்தொகை வருஷப்பழமை அதுகளுக்கில்லையென்பதுறுதி. அதுகள் கிரிஸ்து பிறப்பதற்கு ஏறக்குறைய 1,300 வருஷத்துக்குமுன்னே உண்டாயிற்றென்று பல சஸ்திரிகள் எண்ணுகிறார்கள். அப்போதுமுதலிதுவரைக்கும் ஏறக்குறைய மூவாயிரத்து ஒருநூற்று எண்பது வருஷமாம். மீளவும் இவர்கள் அதர்வணவேதத்தைப் பரிசோதித்துவருகையில் அதுக்கும் மற்ற மூன்றுவேதங்களுக்கு முண்டான பல வித்தியாசங்களையும் இவைமுதலிய சில விசேஷங்களையும்பற்றி அதர்வணம் அதுகளுக்குப் பிந்தின காலங்களிலே உண்டாக்கப்பட்டதென்று நிச்சயிக்கிறார்கள்.

அதர்வணவேதத்தில் நரபலிகளுக்கும் பில்லி சூனிய முதலிய அக்கிரமங்களுக்கும் மந்திர தந்திர சடங்குகள் அடங்கியிருக்கின்றமையால் அது சதுர்வேதத்தார்களுக்குமுதலாய் வெட்கமாயிற்று. அதைப்பற்றிச் சிலகாலங்களுக்குமுந்திப் பிராமணர்முதலிய இந்துமதஸ்தர் மற்றவேதங்களைவிட அதை மகாபத்திரமாய் மறைத்து அது எங்குங்காணோமென்பார்கள். மேலும் அயக்கிரீவன் என்கிற இராக்ஷதன் பூர்வத்தில் சதுர்வேதங்களை அபகரித்துக்கொண்டு அதுகளை விழுங்கிக்கொண்டிருக்கையில் விஷ்ணு மச்சாவதாரஞ்செய்து அவனுடைய வயிற்றைப் பீறி அதுகளை யெடுக்கிறதுக்குள்ளே அதர்வணவேதம் அவனாலே சீரணிக்கப்பட்டதென்று சிலர் சொல்லியிருந்தார்கள். ஆயினும் இங்கிலீஷ்காரர் முதலிய சனத்தாரிற் சில கல்விமான்கள் பட்ட பிரயாசங்களினால் அந்தவேதத்தில் ஒரு பெரும் பங்காவது அகப்பட்டது. அது முழுமையும் அகப்பட்டிருக்குமோ தெரியாது.

அந்தந்தவேதம் மிகவும் வேற்றுமையான இரண்டுவகுப்பாம். சங்கிதை அல்லது மந்திரங்களென்னப்பட்ட முதல் வகுப்பேதென்றால், அக்காலத்தில் இந்துமதஸ்தர்களால் ஆராதிக்கப்பட்ட சில தேவர்களுக்கு ஸ்துதி அல்லது விண்ணப்பமான பாட்டுகளாம். அந்தந்த பாட்டின் முடிவிலே அதை யுண்டாக்கின புலவன் பேர் குறித்திருக்கின்றது. அப்படியிருக்க வேதங்கள் பிரமாவின் வாக்கியமல்லவென்றும் அவனாலே படிப்பிக்கப்பட்டதல்லவென்றும் அவன் முகங்களினின்று புறப்பட்டதல்லவென்றும் இதுவே மறுக்கப்படாத அத்தாட்சி. ஏனெனில் அது வேதங்களிலேதானே அடங்கியிருக்கின்றது. மேலுஞ் சங்கிதை என்னப்படுகிற பாட்டுகள் வேதங்களின் பிரதானபங்காம். பிராமண மென்னப்படுகிற மற்ற வகுப்பு அவ்வேதத்துக்கடுத்தயாகம், காணிக்கைமுதலிய சடங்குகளையும் மற்றச் சிலகற்பனைகளையும் வெளிப்படுத்தும். அதற்குப்பின் சில உபநிஷதம் சேருகிறதுண்டு. அதுகளில் அவ்வேதத்துக்கடுத்த சில போதனைகளுந் தர்க்க நியாயங்களும் அடங்கியிருக்கின்றது.

நாலுவேதங்களிலும் பல தேவர்கள் கொண்டாடப்பட்டிருக்கின்றது. விசேஷமாய் அக்கினி, வாயு, ஆகாசம், மருத்துகள், வருணம் அல்லது வருணன், சலம், இந்திரன், சூரியன், சந்திரன், பூமிமுதலிய வஸ்துக்கள் அதுகளிலே வணங்கப்படுகிறதாம். பின்னும் பன்னிரண்டு ஆதித்தர், இரண்டு அச்சுவினிகள், பதினொரு உருத்திரர், எட்டுவசுக்கள் சில ராஜாக்கள் முதலானவர்களு மிகவும் பாராட்டப்பட்டிருக்கிறார்கள். ஆயினும் அவர்களில் மேற்சொல்லிய வருணனுக்கும் இந்திரனுக்கும் இப்போது சமுத்திரத்தேவனாகப் பாராட்டப்படுகிற வருணனென்பவனுக்கும் தேவர்களின் ராசாவாக எண்ணப்படுகிற தேவேந்திரனுக்கும் மிகவும் வித்தியாசமுண்டு.

அக்காலத்திலே இந்துமதஸ்தர்களுக்குத் தேவாலயங்களும் மனுஷரூபமான விக்கிரகங்களு மிருந்ததுகாணோம். அப்போது பஞ்சபூதியங்களைப் பிரதானமாய் வணங்குவார்கள். ஆதலால் அப்பு தான் அவர்களாலே வருணமென்னவும் ஆகாயம் இந்திரனென்னவும்பட்டு வணங்கப்பட்டதென்று சொல்லத்தகும்.

பூர்வத்தில் இந்துமதஸ்தர் பஞ்சபூதியங்களை வணங்கிவந்தார்களென்பதற்கு அத்தாட்சியாக இன்னம் அ

வர்களுடைய முக்கியமான வேதஸ்தலங்களில் அதுகளின் குறிப்பு அல்லது நினைப்பு காப்பாற்றப்பட்டதாமே. அதைக்குறித்து அகராதி முதலிய நூற்களிற் சொல்லியிருக்கிறதாவது: இலிங்கம் ஐந்து. பிருதிவிலிங்கம் காஞ்சியில்; அப்புவிலிங்கம் திருவானைக்காவில்; வாயுவிலிங்கம் சீகாளத்தியில்; ஆகாயவிலிங்கஞ் சிதம்பரத்தில்; இவையே பஞ்சபூதவடிவங்களான பிரதான பஞ்சவிலிங்கம் என்பதேயாம். (இன்னும்வரும்.)

——o——

## சந்தியாவந்தனம்.

(31-வது பக்கத் தொடர்ச்சி.)

உத்திஷ்டந்து &c. இதன்கருத்து.—பூமிபாரகங்களான பூதபிசாசுகளின் தொந்தரவு இல்லா திருப்பதற்காக சந்தியாவந்தனம் செய்கிறேன்; அவைகள் விலகிப் போகக்கடவது.

ஆபோ ஹிஷ்டா &c. இதன்கருத்து.—ஓஜலங்களே! எங்களுக்குசவுக்கியத்தைக் கொடுக்கப்பட்டவர்கள் நீங்களல்லவா? அப்பேர்க்கொத்தநீங்கள் எங்களுக்கு அன்னத்தைக் கொடுத்தருளுங்கள். (அன்னமேனெனின்) எங்கள் இந்திரியங்களின் உறுதிக்காக மிகுந்தசுகத்தைக்கொடுக்கும் உங்கள்ரசத்தை இகத்தில் மிகவும் தயவுசெய்து, பிரியமுள்ள மாதாக்கள் தங்கள் குழந்தைகளுக்கு பால்கொடுத்துக் காப்பாற்றுவதுபோல எங்களைக் காப்பாற்றுங்கள். எந்தரசத்தை நீங்கள் அடைந்து சந்தோஷிக்கிறீர்களோ அந்தரசத்துக்காகவே உங்களைசீக்கிரத்தில் அடைகிறோம். ஓநீர்களே! உங்கள் ரசவிசேஷத்தினால் உண்டான எங்களுக்கு சந்ததிவிருத்தியை ஈந்தருளுங்கள்.

மாலை காலை ஜலபிராசனமந்திரம்.

అగ్నిశ్చమామన్యుశ్చ మన్యుపతయశ్చ మన్యుకృతేభ్యః పాపేభ్యో రక్షన్తామ్, యదహ్నాపాప మకార్షంమనసావాచా హస్తాభ్యాం పద్భ్యాముదరేణశిశ్నాఅహస్తదవలుమ్పతు, యత్కించదురితంమయి,ఇదమహం మామమృతయోనౌ సత్యేజ్యోతిషి జుహోమి, స్వాహా.

సూర్యశ్చమామన్యుశ్చ మన్యుపతయశ్చ మన్యుకృతేభ్యః పాపేభ్యో రక్షన్తామ్, యద్రాత్ర్యాపాప మకార్షం మనసావాచా హస్తాభ్యాం పద్భ్యాముదరేణశిశ్నా, రాత్రిస్తదవలుమ్పతు, యత్కించదురితంమయి, ఇదమహంమా మమృతయోనౌ సూర్యేజ్యోతిషి జుహోమి, స్వాహా.

அக்கினிஸ்ச மாமன்யுஸ்ச மன்யுபதயஸ்ச மன்யுகுருதேப்யஹ பாபேப்பியோ ரக்ஷந்தாம் யதஹ்ன பாபமகார்ஷம் மனஸா வாசா ஹஸ்தாப்யாம் பதப்பியா முதரேண ஸிஸ்னு அஹஸ்ததவலும்பது, யத்கிஞ்ச துரிதம்மயி, இதமஹம் மா மம்ருதயோனௌ சத்யே ஜோதிஷி, ஜுஹோமிசுவாஹா.

சூரியஸ்ச மாமன்யுஸ்ச மன்யுபதயஸ்ச மன்யு குருதேப்யஹ, பாபேப்பியோ ரக்ஷந்தாம் யத்ராத்ரியா பாபமகார்ஷம் மனஸா வாசா ஹஸ்தாப்பியாம் பத்ப்பியா முதரேண ஸிஸ்னு ராத்ரி ஸ்ததவலும்பது யத்கிஞ்ச துரிதம் மயி, இதமஹம் மாமம்ருதயோனௌ சூர்யே ஜோதிஷி, ஜுஹோமி சுவாஹா.

கருத்து.—நெருப்பும், சினமும், சினத்திற்குக் காரணமாகிய வைராக்கிய பிடிவாதமும், கோபத்தினாலுண்டான பாவங்களினின்று என்னை இரட்சிக்க வேண்டும். சென்ற பகலில் மனம் வாக்கு கை பாதம் உதிரம் குய்யம் இவைகளினால் நான்செய்த பாவங்களை பகல் காலத்துஅதிதேவதைஅப்பாவமுழுவதையும் போக்கடிக்க வேண்டும். இவையன்றியென்னை அறியாது நான் செய்த பாவங்களையும் மன்னிப்பவரான சூரியப்பிரகாசம் பொருந்தியவரை ஆராதிக்கிறேனென்று சொல்லி ஜலத்தை பானஞ்செய்கிறேன். [மாலை சந்தியாவந்தனத்தில் மாலை என்னும் மொழியைமட்டும் காலை என்னும் இடத்தில் சேர்த்துக்கொள்ள மாலை ஜெபமாகும்.]

மத்தியான ஜலபிராசனமந்திரம்.

ఆపఃపునన్తుపృథివీం, పృథివీపూతా పునాతుమాం పునన్తుబ్రహ్మణస్పతిర్ బ్రహ్మపూతా; పునాతుమాం యదుచ్ఛిష్టమభోజ్యం యద్వాదుశ్చరితంమమ, సర్వంపునన్తు మామాపో సతాంచ ప్రతిగ్రహగ్ స్వాహా.

ஆபஃ புனந்து ப்ருதவீம் ப்ருதவீபூதா புனாதுமாம் புனந்து ப்ரம்ஹண ஸ்பதிர் ப்ரம்ஹபூதா புனாதுமாம்யதுச்சிஷ்டமபோஜ்யம் யத்வா துஸ்சரிதம் மம சர்வம்புனந்து மாமாபோசதாம்ச ப்ரதிக்ரஹக் ஸ்வாஹா.

கருத்து.—மழை ஜலத்தினால் சுத்தியான பூமியே என்னை சுத்திசெய். சமஸ்த வேதங்களில் புகழ்ந்து பேசப்பட்ட கடவுளால் சுத்திசெய்யலான ஜலங்கள் என்னைசுத்திசெய்யவேண்டும். ஒருவர் உண்டு மீந்த போஜனத்தையும், உரோமம் புழு முதலியன விழுந்து அசுசியடைந்த போஜனத்தையும் உண்பதினால் உண்டாகும் குற்றத்தையும், முக்கருணங்களால் செய்யப்பட்ட பாவத்தையும், துஷ்ட சகவாசத்தினால் உண்டான குற்றத்தையும் நிராகரித்து ஜலம் என்னை சுத்திசெய்யக்கடவது என்று ஜபித்து சுவாஹா என்று ஜலபானஞ்செய்து என்பாவமுழுவதையும் நாசமாக்கிவிட்டேன் என்று ஜலத்தை கையிலெடுத்து கீழே விடவேண்டும்.

ததிக்ராவ்ண்ணஹ என்னும் யஜுர்மார்ஜன மந்திரம்.

దధిక్రావ్ణ్ణోఅకారిషం, జిష్ణోరశ్వస్యవాజినః, సురభినోముఖాకరత్ప్రణ ఆయూగ్ంషితారిషత్. ఆపోహిష్ఠేత్యాది.

ததிக்ராவ்ண்ணோ அகாரிஷம் ஜிஷ்ணோரஸ்வஸ்ய வாஜினஹ சுரபிநோ முகாகரத்ப்ரண ஆயூக் ஷிதாரிஷத். ஆபோ ஹிஷ்டேத்யாதி &c.,

கருத்து.—ஜெயசீலரும், சருவவியாபகரும், அடியார்களை காப்பாற்றுவதில் அதிதுரிதமுள்ளவருமான சைதன்னியனை நான் துதிக்கிறேன். சுத்தமான மனதும், சுத்தமான வாக்கும் உடையவனே கடவுளை துதிக்க பாத்திரன். ஆகையால், பகவானே! அப்பேர்கொத்த யோக்கியதையை எங்களுக்கு ஈந்தருள்வீராக.

சந்தியாவந்தனம் சம்ஸ்கிருத பாஷையில் எழுதியிருப்பதினாலும், அது அநேக வருஷங்களுக்குமுன் உண்டானதினாலும், பிராமணர் தவிர மற்ற ஜாதியார் அதனை உச்சரிக்கக்கூடாதென்பதினாலுமே அதனிடத்தில் மதிப்பு உண்டாயிருக்கிறதேயன்றி மற்றப்படி அதில் விசேஷமொன்றுங்காணோம்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவரும் கடவுளல்லரென்றும், பூதங்களென்றும், அப்பூதங்களையே கடவுளாக அலங்கரித்து ஆராதிக்கிறார்களென்றும் இதற்குமுன் பெயர்த்துப் பெயர்த்துக் காட்டினோம். அப்பூதங்களின் பரியாய நாமங்களான "கோவிந்தாகிஷ்ணு கேசவா" என்ற நாமவரிசைகளை காலைமாலை இருபொழுதும் வரட்டுத்தவளையைப்போல் கத்துவதில் என்னபிரயோசனம். அந்நாமங்கள் குறிக்கும் பூதங்களா பிராமணருக்கு சாயுச்சியத்தை அளிக்கத்தக்கது. அப்பிரத்தியேக பூதங்களில் மனம் புத்தி முதலிய தத்துவங்கள் சிறிதெனினுங் காணப்படாமையால் அவை இவர்கள் வேண்டுகோளிற்கு செவிசாய்ப்பதில்லை ஆகையால், சந்தியாவந்தனம் அப்பிரயோஜன கோட்பாடாயிற்று.

பிராமணர் பஞ்ச பூதங்களையே வணங்குகிறார்களென்பதற்கு சந்தியாவந்தனமே சாலுங்கரி. நிலம் நீர் தீ சூரியன் ஆகியஇவற்றை நோக்கி வேண்டிக்கொண்ட பிராமணரில் எவரேனும் அவற்றால் பிரயோஜனத்தை அடைந்தார்களா? பிரயோஜனத்தை யாவரும் அடைந்துகொண்டிருக்கிறார்களெனில், அப்பிரயோஜனங்கள்உண்டாயிருப்பது பிராமணரின் சந்தியாவந்தனத்தினாலல்ல; அவ்வவைகள் அவ்வப் பிரயோஜனங்களை அளித்துக்கொண்டிருப்பது அவ்வவற்றின் இயல்பாயிருப்பதால், பிராமணர் தங்கள் சந்தியாவந்தனத்தினால் அப்பூதங்கள் பிரயோஜனங்களைக் கொடுத்துக்கொண்டிருக்கிறதென்று எண்ணினஎண்ணம் பழுதடைத்து. அமெரிகா ஆஸ்திரேலியா இங்கிலாந்து முதலிய விடங்களில் பிராமணருமில்லை. பிராமண சந்தியாவந்தனமுமில்லையாதலால், அவ்விடங்களில் பூதங்கள் பிரயோஜனப்படுகிறதில்லையோ? அதாவது:—நெருப்பு சுடாமலும்,தண்ணீர் அசுத்தத்தைப்போக்காமலும்,காற்றுவீசாமலுமா இருக்கிறது? சந்தியாவந்தனம் செய்யினும் செய்யாவிடினும் அதனால் உண்டாகும் பிரயோசனம் உண்டாய்க்கொண்டேயிருக்கிறது. கோழி கூவுவதினால்தானா பொழுதுவிடிகிறது.

(இன்னும்வரும்.)

M. M.

——

## கடிதம்.

ஐயா, பத்திராதிபரவர்களே,

சென்னையில் நகைபூண்டிருக்கிறசிறுவர்கள் அடிக்கடி களவடமாய்க் கொண்டுபோகப்பட்டுக் கொலைசெய்யப்படுகிறார்கள். ஒரு சிறுவனைப் பட்டணத்திலிருந்து அடுத்தபெரம்பூருக்குக் கொண்டுபோய்க் கொலைசெய்யத்துணிந்த ஒருபாதகன் அகப்

பட்டுச்சைதாப்பேட்டையில் இன்னும் விசாரணைநடந்து கொண்டிருக்கும்போதே, தூர்த்தனைவனே ஒருவாரத்திற்கு முன்னே 9 வயதுள்ள ஒருசிறுவனைப் பட்டணத்திலிருந்து அடுத்த திருவொற்றியூருக்குச் சமீபத்தில் கொண்டுபோய்க் கொலைசெய்து குளத்திலெறிந்துவிட்டான். நெருங்கின ஒரு பாரத்தியன் தன்பேரில் அனுமானமுண்டாயிருக்கிறதாகக்கேள்வி. இவ்வாறு பலமுறை கொலை நடப்பதை யறிந்திருந்தும் நம்மவர்கள் குழந்தைகளுக்குப் பூஷணம் பூட்டுவது என்னமதிமோசமோ?

எனக்கு நெருங்கிய பந்துவாகிய ஒருவர் குழந்தையாயிருந்தபோது நகையோடு காணமற்போய் மூன்றுநாளைகளுக்குப்பின்பு புரசைபாக்கத்தில் அகப்பட்டனர். அவருடைய குழந்தைக்கு ஆபரணமிட்டு விளையாடவிட்டிருந்ததை யான்கண்டு, அனுபவமிருந்தும் இப்படிச்செய்வது சரியல்லவென்று நான கண்டித்ததற்கு, பிராரத்தவமிருந்தால் விட்டுவிடுமோ? நம்மாலென்ன ஆகிறது? நடக்கிறதுதானே நடக்குமென்று சமாதானஞ்சொல்லினர். இப்படிப்பட்டவர் பெட்டிக்குச் சாவியிட்டுப்பூட்டாமலும், இராக்காலத்தில் தெருக்கதவுக்குத் தாழக்கோல்மாட்டாமலுமல்லவோ யிருக்கவேண்டும்? அவரோடு நான் என்ன பேசலாம்! அவருடைய விவேகத்திற்கும் தெய்வ நம்பிக்கைக்கும் ஆச்சரியப்பட்டு வந்துவிட்டேன். அப்படியே, வெகுகாலஞ்சென்றாலும் மறப்பதற்கரிதாகியபீபில்ஸ்பார்க்கு அக்கினித்துன்பவிஷயத்திலே, சந்தைக்குப் போகாதிருந்த சிலர் "போகலாமென்று காலமேயெண்ணியிருந்தேன், சாயங்காலம் ஈஸ்வரன் அந்த புத்திகொடாமையால் போகாமல் தப்பித்துக்கொண்டேன்" என்று ஈஸ்வரன்பேரில் பாரத்தைப் போட்டுவிட்டார்கள்; போய் உதைபடடு மிதிபட்டுத் தப்பித்துக்கொண்டு வந்து விட்டவர்களும் ஈஸ்வரச்செயலால் பிழைத்தோமென்றார்கள்; சுட்டெரிந்து மாண்டவர்களைப்பற்றி ஈஸ்வரசங்கற்பமப்படியாயிருந்தது, நாமென்னசெய்யலாமென்றார்கள். அப்படிக்கானால், உபகாரமுதலிய நற்செயல்களையும், கொலை களவு முதலிய தீச்செயல்களையும் நடத்துவிப்பவன் அவனேயாகில், மனிதனுடையமுயற்சியொன்றும்வேண்டுவதில்லை யேயெனின், கடவுள் கொடுப்பான், ஊட்டுவானே என்கிறார்கள்; பின்னுங் கொஞ்சம் நெட்டிப்பேசுவோமாகில், அந்தக் காரியங்களைச்செய்யும்படிக்கு எண்ணங்கொடுத்தவன் அவன்தானென்கிறார்கள். அத்வைதமுதலிய பல இந்து சமயங்கள் பற்பலவாகப் போதிப்பதினுல் இப்படிப் பேசுவதற்கிடமுண்டாயிருக்கிறது. இவற்றையெல்லாம் யோசிக்குமிடத்து, எதற்கும் மனிதன் பொறுப்பாளனமையால், அவனைப்பிடித்த அரிஷ்டம் விட்டேபோகிறது. இவ்வாறுஅசப்பியவார்த்தைகளைப்பேசாமல்,பூர்வம் புத்திவிசாலத்தினுல் விர்த்தியடைந்திருந்த தேசத்தார் பின்பு புத்திகுறைவினுல் க்ஷீணித்துப்போனதையும், இதற்கு மாறாயிருந்த தேசத்தார் இப்போது புத்தி விசேஷத்தால் மேன்மையடைந்திருப்பதையும் பார்க்கிறோமாதலால், விவேகத்துடன் நடப்பதே விசேஷம்.

முத்தியாலுபேட்டையில் சில வருஷங்களுக்கு முன்னே ஒரு தனிக மகமதியர்வீட்டில் ஒரு பிரயோசனம் நடந்தபோது, ஆபரணங்களைப்பூட்டித் தாதியினிடம் ஒப்பித்திருந்த அவ்வீட்டுக்குழந்தையை அவள் கொண்டுபோய்க் கொலைசெய்துவிட்டதை அநேகர் அறிந்தேயிருக்கிறார்கள். பாதுகாக்கப்பட்ட குழந்தையின் கதியே இப்படிக்கானுல், பாதுகாக்கப்படாத குழந்தைகளின் கதியென்னமாகுமென்று நம்மவர்கள் யோசிப்பதில்லை. ஆயினும், ஊரில் ஏதாவதொரு குழந்தைக்குச் சங்கடம் நேர்ந்ததைப்பார்த்த மாத்திரத்திலும்கேட்டமாத்திரத்தினும்சமீபத்திலுள்ளவர்கள் தங்கள்குழந்தைகளின்மேலிருக்கிறஆபரணங்களைக்கழற்றிப்போடுகிறார்கள்; ஆனுல்அந்தக்கொதிப்பு அடங்கிவரவர,பழையமூடநம்பிக்கைமேற்கொள்ளக்கொள்ள, சிற்சில நிமித்தத்தினுல் மறுபடி பூண்பூட்டிவிடுகிறார்கள். தங்கள் மக்கள் ஏழைப்பிள்ளைகளோடு எண்ணிக்கை யுறுவார்களென்கிற நிமித்தமே பெரிதாயிருக்குமென்று நினைக்கிறேன். இதனுலே விவேகக்குறைவு வெளியாகிறதேயல்லாமல் வேறொன்றுமில்லை. ஆதலால், தாங்களும் மற்றப் பத்திராதிபர்களும் தங்கள் தங்கள் பத்திரிகைகளின் மூலமாய் இதுவிஷயத்தைப் பற்றி நமது தேசத்தவர்களுக்கு அடிக்கடி நினைப்பூட்டி, மதிமயங்காமலும், "வேண்டுதல் வேண்டாமையிலது" ஆகிய பொருளின்பேரில் பழிபோடாமலுமிருக்கும்படி உபதேசித்து வருவீர்களென்று கோருகின்றனன்.

ஓர் இந்து.

## வர்த்தமானசங்கிரகம்.

**தூங்குமூஞ்சி வண்டிக்காரர்கள்.**—நாட்டுப்புறத்து வண்டிக்காரர்கள் இராக்காலத்தில் தூங்கிக்கொண்டு, எருதுகளைத் தாமாய்ச்செல்லவிடுகிறார்கள்; இது வெகு கெட்டவழக்கம். சில நாளுக்குமுன்னே பெங்களூரைச்சேர்ந்த கிருஷ்ணராஜபுரத்துக்கருகே வண்டிக்காரன் நல்ல தூக்கம் தூங்கிவிட, ரெயில்வே லயனுக்குக் குறுக்காகப்போன எருதுகள் புல்லைத்தின்னலாமென்கிற அபேட்சையினலோ வழி சுளுவாயிருக்குமென்கிற எண்ணத்தினலோ இருப்புப்பாதைவழியே திரும்பிவிட்டன. காலை - 5 - மணிக்கு வந்துசேரவேண்டிய நீராவிவண்டித்தொடர் தூரத்தில் வருகையில், அதஷ்டவசத்தால் ஒரு காவற்காரன் அந்த மாட்டுவண்டியைப் புறம்பே ஒதுக்கி மடக்கி வண்டித்தொடருக்கு வழி விட்டுவிட்டான். பிராணத்துக்கு அபாய முண்டுபண்ணுவதென்னுங் குற்றத்திற்காக ஸ்டுவார்ட்டு துரையானவர் வண்டிக்காரனபேரில் போலீசு சம்மன் செய்திருக்கிறார்.

### சீனம்.

நேபால் என்னும் நீராவிக்கப்பலும் ஒரு நீராவி சீனக்கப்பலுந்தாக்கியது.—நேபால் கப்பல் போய்க்கொண்டிருக்கையில் விடியற்காலமே மூடுபனி மிகுதியால் இருள் சூழ்ந்திருந்தது பற்றிக் குழலூதி எச்சரிக்கை செய்துகொண்டே போயிற்று. சீனக்கப்பல் நெருங்கிவந்தபோது அதின் குழலோசைகேட்டு, இரண்டு கப்பல்களும் மாறப் பிரயத்தனப்பட்டும், மிஞ்சிப்போனமையால் நேபால் கப்பல் மோதி சீனக்கப்பல் சேதப்பட்டு அதிக உயிர்ச்சேத முண்டாயிற்று. நேபால் கப்பலிலிருந்தவர்கள் பலவித உபாயத்தால் சுமார் 190 பிராணிகளைக் காப்பாற்றினார்கள். முழுகிப் போனவர்கள் 50-க்கு மேல் 100-க்குள் இருக்குமென்பது உத்தேசம்.

ஹைதராபாதிலே பெண்களுக்கு வைத்தியசாலை விசேஷப்பட்டுவருகிறது. ஆயினும், இந்தியாவிலே மற்றபாகங்களில் நாளுக்குநாள் நகர்ந்துவருகிற மூடஆசாரத்துக்குப் பீடமாய் மகமதியம் நிலைபெற்றிருக்கிற ஹைதராபாதிலே அநேகவருஷகாலம் பொறுமையோடுசெய்யப்பட்ட முயற்சியால் கோஷா ஸ்திரீகளின் அறைகளுக்குச் செல்ல இப்போது வகையுண்டாயிருக்கிறது. மிகுந்த ஏழைகளிலும் சிலர்மாத்திரம் ஆசுபத்திரிக்கு வருகிறார்கள். வரவர விர்த்திக்குவருமென்பதற் கையமில்லை.

செங்கற்பட்டு ஜில்லா மதுராந்தகத்திலே விக்டோரியா ஜூபிலி சத்திரத்துக்கு 22௳ காலமே அஸ்திவாரக்கல போடப்பட்டதென்று தந்தி சமாச்சாரத்தினுல் தெரியவருகிறது.

பஞ்சாப் கவரன்மெண்டார் - பத்தியாலாவிலிருந்து பாட்டிண்டாவுக்கு இருப்புப்பாதை போடுவதற்காக அளவெடுக்கும்படி உத்தரவுசெய்திருக்கிறார்கள். நூறுமைல் நீளத்திற்கு பெரிய ஆறுகளாவது நீரோட்டங்களாவது இல்லாமையால் அந்த வேலைக்குத் தரை பக்குவமாயிருக்கிறது.

இம்பீரியல் சபையில் ஸ்தாபிக்கப்பட்ட மாதிரியை யனுசரித்து, பஞ்சாப் முழுவதும் சுமார் நானூறு சுதேச கனவான்களுக்கு மகாராணி ஜூபிலி உற்சவகாலத்தில் நல்லூழியத்திற்காகவும் ராஜவிஸ்வாசத்திற்காகவும் அத்தாட்சியாக அவ்விடத்திய லெப்டனண்டு கவர்னரவர்களுடைய கைகெழுத்துடனே சர்ட்டிபைகேட்டுகள் கொடுக்கப்பட்டன.

## அறிக்கை.

### மதிராஸ் ஸிக்கியுலர்சோசைட்டி.

சென்னை லௌகிகசங்கம்.

வேப்பேரி சில்வர்ஸ்ரோட்டிலே சேக்கிரிட்டேரியவர்கள் கிரகத்தில், நிகழும் பிபர்வரி 27௳ ஆதிவாரங்காலை (8) மணிக்கு, சங்கத்தின் மேம்பர்கள் மகாசபைகூடலாதும்.

## தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs. | A. | P. | |
|---|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 | முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள |
| ஷ | 3-க்கு | 0 | 10 | 0 | |
| ஷ | 6-க்கு | 1 | 2 | 0 | |

வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணுவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணு வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத்தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 10.] MADRAS:—SUNDAY MARCH, 6, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## வேகத்துவம்

(33-வது பக்கத் தொடர்ச்சி.)

இடம் என்பது இரண்டு குறிகளுக்கிடையேயுள்ள தூரத்தின் சம்பந்தமாம். அதை யொரு பதார்த்தமெனக் கொள்ளுதல் தவறு. வேகத்துவத்தை நாமறிதல் இடபேதத்தாலாதலாலும், வேகத்துவத்தினது தன்மையை யளவிடவேண்டியிருப்பின் இடபேதத்தை யளவிடுதல்வேண்டுமாதலாலும், ஓர் இட அளவை யிருக்கவேண்டியது ஆவசியகம். வேகத்துவ நூலில் ஒரு அடியையே இட அளவையாககொண்டு இருக்கின்றது.

காலம் என்பதும், ஒரு வஸ்துவன்று. வேகத்துவத்தை கால சம்பந்தத்துடன்நோக்குங்கால் வேகமென்பது இன்னதென நன்கு விளங்கும். காலத்திற்கும் அளவை வேண்டியிருப்பதால் ஒரு விநாடியைக் கால அளவையாகக்கொள்ளுதல் வேகத்துவ சாத்திரமரபு.

வேகம் என்பது ஒரு வஸ்துவின் இடமாறுந்திவரமே. வேகமென்பதில் காலமும் இடமும் அடங்கியிருக்கின்றது. காலமும், இடமும், அளவிட்டிருத்தல்போல, வேகத்தையும் அளவிடடிருக்கிறது. ஒரு வஸ்துவின் வேகம் - ௨௫ - என்றால், அதற்குப்பொருள், சமவேகத்துவத்தையுடைய அப்பொருள் ஒரு விநாடியில் - ௨௫ - அடி தூரம் செல்லுமென்பதே:

ஆக்கிருஷணவேகம் என்பது எதிர்ப்பட்ட பதார்த்தங்களை, வேகத்தோடு செல்லும் வஸ்துக்கள் மோதும் வலிமை. ஆக்கிருஷண வேகத்தையும் அளவிட்டுரைத்தல் கூடும். வேகத்துவத்தையுடைய பதார்த்தத்தினது எடையையும் வேகத்தையும் பெருக்கினால் அதுவே ஆக்கிருஷணவேகம் எனப்படும். (உதாரணம்) ௫ - பவுன் எடையுள்ள ஒரு கல் ஒரு விநாடியில் ௨௦ - அடி தூரம் சென்றால் - ௫ :: ௨௦ - அல்லது - ௧௦௦ - தான் அதன் ஆக்கிருஷண வேகம்.

பதார்த்தம் (அலலது வஸ்து) என்பது அகல, நிகள, பருமனையும் உடையதாயும் புலன்களுக்கு விஷயப்பட்டதாயும் உள்ளதே.

சத்துவம் என்பது வேகத்துவத்தை யுண்டாக்கும் காரணம்.

முக்கியமான பதங்களுக்கு நாம் பொருள்கூறிவிட்டோமாதலால் இனி வேகத்துவப்பிரகிர்தி நியாயப்பிரமாணங்களையும் வேகத்துவத்தின் தன்மையையும் இனி தெளிவுறக்கூறுவாம்.

குருத்துவவேகமென்பது எதிர்ப்பட்ட பதார்த்தங்களை வேகத்தோடு செல்லும் வஸ்துக்கள் மோதும் வலிமை என்றும். இவ்வேகத்தினைக் கணக்கிடுதல் கூடுமென்றும் கூறியுள்ளோம். இவ்வேகத்தால் நிகழும் தொழிலைப்பற்றிய சில விஷயங்களை ஈண்டு யாவருக்கும் தெளிவாய் விளங்கக்கூறுவோம். இவ்வேகத்தை யளவிடுதல் எங்ஙனமெனின் வேகத்தோடு செல்லும் பதார்த்தத்தின் எடையையும் அதனது வேகத்தையும் பெருக்கலேயாம். இக்கணக்கைககொண்டு எதிர்ப்பட்ட வஸ்துக்களின்மேல் வேகத்தோடு செல்லும் வஸ்துக்கள் விழுவதனால் உண்டாகும் கெடுதியை யளவிடுதல் கூடும்.

இரண்டு பலம் எடையுள்ள ஒரு சிறிய கல்லையும் - 20 - பலமுள்ள மற்றோர் கல்லையும் ஒரு சுவரிற்குச் சரியாக நாம் எறிவோமேயானால், இவ்விரண்டு கற்களில் சுவரை காயப்படுத்தும் வலிமை எதற்கு அதிகமாயிருக்கும்? இவ்வினாவிற்கு வேகத்துவப் பிரமாணங்களை யுணராதார் - 20 - பலமுள்ள கல்லுக்கே அதிக காயப்படுத்துந் தன்மை யிருக்கின்றதென வுரைப்பர். அவ்வாறுரைத்தல் தவறு. ஏனெனின், எதிர்ப்பட்ட பதார்த்தமாகிய சுவரை வேகத்துடன் செல்லும் வஸ்துக்களாகிய இவ்விரண்டு கற்களும், மோதும் வலிமையை அளவிடுதற்கு அவைகளினது எடையையும் வே[illegible]யும் பெருக்கவேண்டுமாதலால், அவைகளினது எடையாலே, [illegible]திர மறிந்துகொண்டு, அதிக எடையுள்ளது சுவரை ய[illegible] காயப்படுத்துமென கொள்ளுதல் தவறு. சிறிய வஸ்துக்கள் அதிக வேகத்தோடும் போவது கூடுமாதலாலும், பெரிய வஸ்துக்கள் சொற்பவேகத்தோடு போவது கூடுமாதலாலும், பெரிய வஸ்துக்களே எதிர்ப்பட்ட வஸ்துக்களை யதிக காயப்படுத்துமென கூறுதல் சரியன்று. இதை உதாரண வாயிலாக எடுத்துக்காட்டுவாம். 2 - பலமுள்ள கல் ஒரு விநாடிக்கு - 20 - அடி வீதம் செல்லும் விசையாய் ஒரு சுவரின்மேல் யெறியப்பட்டு, 20 - பலமுள்ள மற்றோர் கல் ஒரு விநாடிக்கு - 1 - அடி வீதம் செல்லும் விசையினது அதே சுவரின்மேல் யெறியப்பட்டால் இவற்றில் எது அதிகமாய் சுவரை காயப்படுத்தும்? (அல்லது) எது அதிக வலுவாய் சுவரைமோதும்? இவ்வினாவிற்கு விடை—

சிறியகல்.

இக்கல்லுக்கு எடை - 2 பலம்

,, வேகம் - 20 அடி

ஆகையால் இக்கல்லின் குருத்துவவேகம் - 2 : : 20=40.

பெரியகல்.

இக்கல்லுக்கு எடை - 20 பலம்

,, வேகம் - 1 அடி

ஆகையால் இக்கல்லின் குருத்துவவேகம் - 20 : : 1=20.

இதனாற் சிறிய கல்லுக்கு சுவரின்மேல் மோதும் வலுமை அதிகமானதைக் காண்க.

இ. மு.

## பகவத்கீதையிலுள்ள விந்தை.

பரமாத்மா எங்கும் நிறைந்திருக்கிறானென்று சொல்வதே போதுமே; அவன் ஒவ்வொருவருடைய ரேதஸிலுமிருந்து கொண்டு ஜநோற்பத்திசெய்து வருகிறானென்று பகவத்கீதை 12-ம் அத்தியாயத்திலும், பிருஹதாரண்ய உபநிஷத் 5-ம் அத்தியாயம் 7-வது பிராம்ஹணத்திலும் சொல்லியிருக்கிறது. அப்படியாயின், எல்லாச் சீவராசிகளிலுந்தான் அவ்வாறிருத்தல் வேண்டும். பரமாத்மா ஒவ்வொரு கர்ப்பத்திலுந்தங்கியிருந்து உருப்படுத்திக்கொண்டுவருகிறானோ அல்லது வெளிப்பட்டு விடுகிறானோதெரியவில்லை. சந்ததி யுண்டாகாதவர்களுடைய ரேதஸில் பரமாத்மா இல்லைபோலும், சிசுக்கள் உருப்படும்போது சலைச்குறை முண்டமாகவும் கூன் குருடு முடமாகவும் மணைக்கட்டையாகவும் விகாரரூபமடைவதற்குக் காரணம் கருமமென்பார்கள். கருமமேற்கொண்டு அதன்வசப்பட்ட பரமாத்மா உருப்படுத்திவர, அது கெடுத்துக்கொண்டுவருவதால், அவன் வீணுக்கு உருப்படுத்துவது அவனுடைய புத்திவிகாரமாக்கும்! இதிலுள்ள ஆபாசங்களை வாசிப்பவர்களே தெரிந்துகொள்ளுவார்களாகையால், சூசனையாகமாத்திரம் காட்டினோம்.

## இந்துசமயசாரவிளக்கம்.

### சதுர்வேதங்களுக்கடுத்தவிவரங்கள்.

(35-வது பக்கத்தொடர்ச்சி.)

இப்போது இந்துமதஸ்தர்கள் பிரதானமாய் ஆராதிக்கிற விஷ்ணு, சிவன், சுப்பிரமணியன், பிள்ளையார் முதலானவர்களுடைய ஆராதனையைக்குறித்து வேதங்களிலே யாதொன்றுங்காணோம். அக்காலத்தில் அவர்களின்னம் முக்கியமாகவில்லையென்பது நிச்சயமாமே. அவர்களில் விஷ்ணு, சிவன் என்பவர்களுடைய பேர் வேதங்களில் கிடைத்தால் மிகவும் அருமையாம். அவர்களுடைய ஆராதனையைக்குறித்து விசேஷம் ஒன்று

யில்லை. ஆதலால் அவர்களுடைய ஆராதனை வணக்கம் அக்காலத்தில் இன்னம்பிரபலியமாகவில்லை. அவர்களுடைய புத்திரர்களின்பேர் வேதங்களிலேகாணோம்.

வேதங்கள் மிகவும் விரிவாயிருந்தாலும் அதுகளில் தெய்வத்தைக்குறித்துத் தெளிவான போதனை யொன்றுமில்லை: அதுகளிலடங்கிய பாட்டுகளை யுண்டாக்கின புலவர்கள் அக்காலத்தும் பற்பலதேவர்களுடைய ஸ்துதிகளைத் தங்கள் சர்வ சாமர்த்தியத்தோடே மிதமிஞ்சினவிதமாய்ப் பாராட்டினதினால் அநேகரை ஏறக்குறைய ஒத்தபடி புகழ்ந்து உயர்த்தினார்கள். ஆகையால் அந்தப் பாட்டுகளை ஆராய்ந்து வாசிக்கிறவர்களுக்கும் பல சமுசயமும் உண்டாகின்றது. அதுகளே தெனில் அ[illegible]டி அந்தப் புலவர்களால் கொண்டாடப்பட்டவர்[illegible]ரும் வெவ்வேறே தேவர்களோ பல நாமமுள[illegible] தேவர்கள் மாத்திரமோ அல்லது புலமைவெறியி[illegible] அந்தப் புலவர்கள் தங்கள் மதஸ்தர் சில தேவர்களுக்குச் சாத்தின விசேஷதத்துவ வல்லமையிலக்ஷணங்களை ஒவ்வொரு தேவனுக்குச் சாத்தினார்களோ என்றிது முதலான சமுசயங்களுண்டாகின்றது.

மேலும் இருக்குவேதத்திலே விசேஷமாய்ச் சோமத்துக்கு ஸ்துதியான அநேகம் பாட்டுகளுண்டு. அதுகளைச் சரியாய்க் கவனியாமல் அநேகர் அந்தப் பாட்டுகளெல்லாஞ் சோமனென்னப்படுகிற சந்திரனுக்குப் புகழாமென்று நினைத்திருந்தார்கள். ஆனால் சாஸ்திரிகள் அதுகளைச் சரியாய் ஆராய்ந்து பரிசோதிக்கிறபோது அதுகளில் மிகுந்த பாட்டுகள் சோமத்துச்சாரமாகிய மதுவுக்குப் புகழ்ச்சியாமென்று திஷ்டாந்தமாய்க் கண்டுபிடித்தார்கள். அந்தப் பாட்டுகளை யுண்டாக்கின புலவர்கள் தேவர்களைப் பாராட்டுகிறதுப்போலே இந்த மதுவையுந் தங்கள் சர்வ திறமையோடே பாராட்டுகிறார்கள், அதுக்குச் சில விண்ணப்பங்களையுஞ் செய்கிறார்கள். தேவர்களை மன்றாடுகிறதுப்போலே அதையுமன்றாடிச் சில வரங்களைக்கேட்கிறார்கள். சோமச்சாரத்தைக் குடிக்கிற பிராமணருக்கு அது மிகவும் பிரியமாயிருப்பதினால் அதை அவ்வளவாகப் பாராட்டியிருப்பார்களென்னத்தகும். ஆயினுஞ் சோமச்சாரத்தை ஓர் தெய்வத்தைப்போலே பாராட்டி அதை வரங்கேட்கிறது நியாயமோ?

வேதங்களில் அடங்கிய பாட்டுகளை ஆராய்ந்து பார்த்தால் அதுகளில புலமைத்திறமையும் அதின் மருளும் மிதமிஞ்சின புகழ்ச்சிகளும் பிரதானமாய் விளங்குகிறதொழிய வேதத்துக்கு ஏற்ற ஞானமும் புத்தியும் பத்தியும் விளங்குகிறதில்லை. அக்கினி, வாயு, மருத்துகள், அச்சுவினிகள் முதலானவர்களுக்குப் புகழ்ச்சியாக மிகுந்த பாட்டுகளுண்டு. அதுகளை நன்றாய் ஆராய்ந்து பார்க்கிறபோது விளங்குகிறதாவது: ஓர் பள்ளிக்கூடத்திலே படிக்கிற மாணாக்கர்களுக்கு வாத்தியார் ஓர் விஷயத்தின்பேரில் பாட்டு செய்யச்சொன்னால் அவர்கள் செய்யும் பாட்டுகள் எத்தன்மையாய் வேற்றுமையும் ஒற்றுமையுமாமோ வேதங்களின் பாட்டுகள் அத்தன்மையாய் வேற்றுமையும் ஒற்றுமையுமாமே. சிலதுகள் புலமை மருளில் மிதமிஞ்சின மங்கலப்புகழ்ச்சிகளாமே. சிலதுகள் மிதந்தப்பின பாராட்டாகையில் புத்திக்கொவ்வாத அனர்த்தமாம்.

வேதங்களின் பாட்டுகளையும் அதுகளின் பிராமணங்களையும் உபநிஷதங்களையும எழுதினவர்கள் பலபேராகையில் அவர்களுடைய போதனை எப்போதுஞ் சரியாய் ஒத்துவராது. பூர்வந்துவக்கிப் பிராமணர்முதலிய இந்து மதஸ்தர் அதுகளுக்குரிய அர்த்தத்தின்பேரில் ஒத்துவராமல் மிகவும் விபரீதப்பட்டார்கள் முந்திச் சொன்னபடியே வேதங்களில் பூதியங்கள் முதலிய பல வஸ்துக்களுக்கு வணக்க தோத்திர ஆராதனை விண்ணப்பப்பாட்டுகள் அடங்கியிருக்கின்றது. ஆதலால் அதுகள் வெளிப்பட்ட காலத்தில் இந்துமதஸ்தர் பல வஸ்துகளுக்கு ஆராதனை செய்துகொண்டிருந்தார்கள். பின்னுஞ் சிலர் வேதங்களின் அர்த்தத்தைத் தங்களிஷ்டத்துக்கு நிதானம்பண்ண வருந்தி அதுகளின் பாட்டுகள் பல்பேருக்கு நியமிக்கப்பட்டிருந்தாலும் அதுகளெல்லாம் பூதியங்களுக்குச் சேரத்தக்கதென்றும அந்தப் பல நாமங்கள் அதுகளைக் குறிக்கிறதென்றும் அர்த்தம் பண்ணினார்கள். மற்றச் சிலர் பரமாத்துமா சகல வஸ்துக்களிலும் பரம்பியிருக்கிறதினாற் சகலமுந் தெய்வமாயிருக்கிறதென்று அல்லது அந்தந்த வஸ்துக்களுந் தெய்வத்தின் பங்காயிருக்கிறதென்று சொல்லி வெவ்வேறு வஸ்துக்களுக்குப் புகழ்ச்சியாகச் செய்யப்பட்ட பாட்டுகள் பரமாத்துமாவைச் சேர்ந்ததென்று போதித்தார்கள். மற்றநேகர் வேதங்களில் பாராட்டப்பட்டவர்களை வணங்கினார்களேயல்லாமல் நாள்வட்டத்தில் வேறநேக தேவர்களையுமேற்படுத்தி மேன்மேலுந் தவறிப்போனார்கள். இப்படி அநேகர் வேதங்களுக்குப் பற்பல அர்த்தஞ் சாத்தினதினால் வியாசன் காலந் துவக்கி இதுவரைக்கும் பிராமணர் பற்பல சமயங்களாய்ப் பிரிவினைப்பட்டு ஒவ்வாத பல போதகங்களையும் விபரீதமான சாஸ்திரங்களையும் ஏற்படுத்தினார்கள். இவ்வண்ணமே பூர்வந்துவக்கிப் பிராமணர்கள் முதலாய் வேதங்களுக்குரிய அர்த்தத்தின்பேரில் ஒற்றுமைபாயிராமல் பல விகற்பப்பட்டிருக்கிறார்கள்.

மீளவும் பல தேவர்களின் ஆராதனை மெய்ஞ்ஞானத்துக்கொவ்வாதென்று சிலர் கண்டுபிடித்து மேற்சொல்லியபடி வேதங்களில் கொண்டாடப்பட்டவர்கள் பல நாமங்களைக்கொண்ட சில தேவர்களாம், அல்லது ஒரே தெய்வமாத்திரமாயிருக்கிறதென்று நம்புவிக்கப் பிரயாசப்பட்டார்கள். ஆனால் இருக்குவேதத்திலடங்கிய ஒரு வாக்கியம் [காண்டம் 1, அத்தியாயம் 2, அநுவாகம் 6, சூக்தம் IV. 13.] திஷ்டாந்தமாய் அவர்களைமறுக்கின்றது. உள்ளபடி அதின்மொழிபெயர்ப்பாவது; பெரிய தேவர்களுக்குவணக்கமுஞ் சின்னதேவர்களுக்கு வணக்கமும் புதியவர்களுக்கு வணக்கமும் பழையவர்களுக்கு வணக்கமுமுண்டாக; எங்களாற்கூடியமட்டுஞ் சகல தேவர்களையும் ஆராதிக்கிறோம். பூர்வ தேவர்களுடைய ஸ்துதிகளை மறந்துவிடாதிருக்கக் கடவோமாக வென்பதேயாம். இதை இந்துமதஸ்தர் சரியாய் அநுசரிக்காமல் தங்கள் பூர்வ தேவர்களில் அநேகருடைய பேரை முதலாய் மறந்துவிட்டு வேறே தேவர்களை ஏற்படுத்தினார்கள்.

மீளவும் இந்த வாக்கியத்தில் விளங்குகிறபடியே சதுர்வேதங்களில் பெரியவர்களுஞ் சின்னவர்களும் புதியவர்களும் பழையவர்களுமாகிய பற்பல தேவர்கள் புகழ்ந்து ஆராதிக்கப்படுகிறதென்பது நிச்சயமாமே. அப்படி அதுகள் அநேக பொய்த்தேவர்களின் ஆராதனையைப் படிப்பிக்கிறதினால் அஞ்ஞான அந்தகாரத்துக்கு அஸ்திவாரமாயிற்று. அல்லாமலும் அக்காலத்தில் புதுத்தேவர்களிருந்ததென்று அந்த வாக்கியங் காட்டுகிறதினால பழைய வேதமுறை மாற்றப்பட்டதென்று திஷ்டாந்தமாமே. வேதமாறவே பொய்யாய்ப்போயிற்றென்பது உறுதியாமே.

## சந்தியாவந்தனம்.

(35-வது பக்கத்தொடர்ச்சி.)

ஹிரண்ய வர்ணாஹ என்ற மற்றொரு மார்ஜின மந்திரம்.

౧. హిరణ్యవర్ణాశ్శుచయః, పావకాయాసుజాతః కశ్యపోయాస్విన్ద్రః, అగ్నింయాగర్భందధిరే, విరూపాస్తాన ఆపశ్శగ్ స్యోనాభవన్తు.

౨. యాసాగ్ం రాజావరుణోయాతిమధ్యేసత్యానృతే అవపశ్యఞ్జనానాం మధుశ్చుతశ్శుచయోయాఃపావకాస్తాన ఆపశ్శగ్ం స్యోనాభవన్తు.

3. యాసాం దేవాది విక్ర్ణ్వన్తిభక్షం, యాఅన్తరి క్షేబహుధాభవన్తి, యాఃపృథివీం పయసోన్దన్తి, శుక్రాస్తాన ఆపశ్శగ్ స్యోనాభవన్తు.

४. శివేనమాచక్షుషా పశ్యతాపశ్శివయాతనువో ప స్పృశతత్వచమ్మే, సర్వాగ్ అగ్నీగ్ రప్సుషదో హువేవో మయివర్చోబలమోజోనిధత్త, ద్రుపదాదివముఞ్చతు, ద్రుపదాదివేన్ముముచానః, స్విన్నస్నాత్వీమలాదివ, పూతం పవిత్రేణేవాజ్యం, ఆపశ్శున్దన్తుమైనసః.

1. ஹிரண்ய வர்ணு ஸ்சுசடஹு, பாவகாயா ஸஹஜாதஹு கஸ்யபோ யாஸ்விந்த்ரஹு, அக்னிம்யா சர்ப்பம்ததிரே, விருபாஸ்தான ஆபஸ்ஸக் ஸ்யோனுபவந்து.

2. யாஸாக்ராஜா வருணேயாதிமக்யே சத்தியாந்ருதே அவபஸ்யந்ஜனுனும் மதுஸ்ச்யுத ஸ்ஸுசயோயாஃ பாவகாஸ்தான ஆபஸ்ஸக் ஸ்யோனுபவந்து.

3. யா ஸாம்தேவாதி விக்ருண்வந்திபக்ஷம், யா அந்தரிக்ஷே பஹுதாபவந்தி யாஃப்ருதிவீம் பயஸோந்தந்தி, ஸுக்ராஸ்தான ஆபஸ்ஸக் ஸ்யோனுபவந்து.

4. சிவேனமா சட்சுஷா பஸ்யதாபஸ் சிவயா தனுவோபஸ்ப்ருச தத்வசம்மே, ஸர்வாக் அக்னீக் ரப்ஸுஷதோ ஹுவே வோமயி வர்ச்சோ பலமோஜோ நிதத்த, த்ருபதாதிவமுஞ்சது, த்ருபதாதிவேன்முமுசானஹு, ஸ்வின்னஸ்னாத்வீ மலாதிவ, பூதம் பவித்ரேணேவாஜ்யம், ஆபஸ்சுந்தந்து மப்னஸஹு.

கருத்து.—எவை இயற்கையில் சுத்தமாயும், அன்னியரை சுத்திகரிக்கும்படி யானவையாயும், வடவாக்கினியை தம் கர்ப்பத்தில் வைத்துக்கொண்டிருப்பனவாயும், இருப்பன வெவையோ அந் நீர்கள் எங்கள் துக்கத்தை விலக்கி சுகத்தைத் தரக்கடவது. ஓ ஜலங்களே! குளிர்ந்த உங்கள் கண்களால் என்னை நோக்கிப் பாருங்கள்.

ஹக்யா என்னும் மத்தியான அர்க்கியப் பிரதான மந்திரம்.

హగ్ ంసశ్శుచిషద్వసుర న్తరిక్ష సద్ధోతా వేదిష దతిథిర్దురోణసత్, నృషద్వరసదృతసద్వ్యోమస దబ్జాగోజా ఋతజాఅద్రిజాఋతంబృహత్.

ஹக் ஸஸ்ஸுசி ஷத்வஸுரந்தரிக்ஷ ஸத்தோதாவேதிஷ ததிதிர்துரோணஸத், ன்ருஷத்வரஸத்ருத ஸத்வ்யோம ஸதப்ஜா கோஜாருதஜா அத்ரிஜாருதம்ப்ருஹத்.

கருத்து.—பூமிக்கு அதிபதியாய் புண்ணிய ஸ்தலங்களில் இருப்பவனும், சூரியனுய் ஆகாயத்தில் இருப்பவனும், அக்கினிரூபத்துடன் தேவர்களின் யாகத்தில் ஒரு தேவதையாக யாகமேடையில் இருப்பவனும், அகிலாண்டமென்னும் வீட்டில் இருப்பவனும், அக்கினிரூபத்துடன் மாந்தரிடத்தில இருப்பவனும், ஞான சொரூபத்துடன் சிரேஷ்டமான பண்டிதரிடத்தில் இருப்பவனும், யாகத்தில் இருப்பவனும், ஜலத்திலிருப்பவனும், பசுக்களிடத்திலிருப்பவனும், வேதத்தில் முக்கியமாகச் சொல்லப்பட்டு இருப்பவனும், பருவதத்தில் இருப்பவனுமாகிய சூரிய பகவான் சத்தியம்.

அர்க்கிய பிரதானம்.

స్మృత్యాచమనంకృత్వా ప్రాణానాయమ్య పూర్వోక్త...ప్రీత్యర్థం...సన్ధ్యాం గార్ఘ్యప్రధానానికరిష్యేకాలాతీతవిశుద్ధ్యర్థం చతుర్థార్ఘ్యప్రదానంకరిష్యే. ఓం భూః...చోదయాత్. అసవాదిత్యోబ్రహ్మ &c.

ஸ்மிருத்யாசமனம்க்ருத்வா ப்ராணுயம்ய பூர்வோக்த,... ப்ரீத்யர்த்தம்......சந்த்யாம்கார்க்ய ப்ரதானுனிகரிஷ்யே. காலாதீத விசுத்தியர்த்தம் சதுர்த்தார்க்ய ப்ரதானம் கரிஷ்யே. ஓம் பூஹு......சோதயாத். அஸவாதித்யோப்ரம்ம.

மூன்று சந்திகாலங்களிலும் ஓம புஹு...பிரஜோதயாத் என்று மூன்றுதடவை சொல்லி மூன்று அர்க்கிய பிரதானங்கள் செய்யவேண்டியது. காலந்தப்பி செய்தால் பிராயச்சித்தத்தற்காக மறுபடியும் ஒரு அர்க்கிய பிரதானம் செய்யவேண்டியது. இப்படி மந்திரித்து கையிலெடுத்து விட்ட ஜலத்திஞல் ராக்ஷதர்கள் மடிந்துவிடுவார்கள். அவர்களை அவ்வாறு கொன்ற அத்தோஷங்களைப் போக்கடிக்க—

ఉద్యన్తమస్తంయన్తమాదిత్యమభిధ్యాయన్ కుర్వన్ బ్రాహ్మణోవిద్వాన్ త్సకలంభద్రమశ్నుతేసావాదిత్యోబ్రహ్మేతిబ్రహ్మైవసన్ బ్రహ్మాప్యేతియఏవం వేద.

(உத்யந்தமஸ்தம் யனசமாதித்திய மபித்யாயன் குர்வன்ப்ராம்மணே வித்வான் த்ஸகலம்பத்ர மஸ்னுதே ஸாவாதித்யோ பிரம்மேதி பிரம்மயிவசன் பிரம்மாப்யேதி யயேவம் வேத) என்னும் மந்திரத்தை சொல்லிக்கொண்டு நீரை யேந்திக்கொண்டிருந்த கையினுல் தன்னை 3-தடவை சுற்றி ஜலத்தை கீழே விடவேண்டும்.

சந்தியா தர்ப்பணம்.

స్మృత్యాచమనం కృత్వా, పునఃస్మృత్యాచమనంకృత్వా ప్రాణానాయమ్య పూర్వోక్త...ప్రీత్యర్థంసాయం సన్ధ్యాఙ్గతర్పణంకరిష్యే-సన్ధ్యాంతర్పయామి, సరస్వతీం తర్పయామి, వైష్ణవీంతర్పయామి, నిమృజీంత యామి.

ప్రాతస్సన్ధ్యాఙ్గతర్పణంకరిష్యే - సన్ధ్యాంతర్ మి, గాయత్రీంతర్పయామి, బ్రాహ్మీంతర్పయామి, నిమ తర్పయామి.

మాధ్యాహ్నికసన్ధ్యాఙ్గతర్పణంకరిష్యే - సన్ధ్యాంతర్పయామి, సావిత్రీంతర్పయామి, రౌద్రీంతర్పయామి, నిమృజీంతర్పయామి.

ஸ்ம்ருத்யாசமனம் க்ருத்வா, புன: ஸ்ம்ருத்யாசமனம் க்ருத்வா பிராணுயம்ய பூர்வோக்த...ப்ரீத்யர்த்தம் ஸாயம் சந்தியாங்க தர்ப்பணம் கரிஷ்யே—சந்த்யாம் தர்ப்பயாமி, ஸரஸ்வதீம் தர்ப்பயாமி, வைஷ்ணவீம் தர்ப்பயாமி, நிம்ருஜீம் தர்ப்பயாமி.

ப்ராதஸ் ஸந்த்யாங்க தர்ப்பணம் கரிஷ்யே - ஸந்த்யாம் தர்ப்பயாமி, சாயத்ரீம் தர்ப்பயாமி, பிராஹ்மீம் தர்ப்பயாமி, நிம்ருஜீம் தர்ப்பயாமி.

மாத்தியாஹ்னிக ஸந்தியாங்க தர்ப்பணம் கரிஷ்யே - ஸந்த்யாம் தர்ப்பயாமி. ஸாவித்ரீம்தர்ப்பயாமி, ரௌத்ரீம்தர்ப்பயாமி, நிம்ருஜீம்சர்ப்பயாமி.

துஷ்ட கிருத்தியங்களைப் புரியும் பூதபிசாசுகளை பூமிக்கு பாரமாயும் பிராமணருக்கு விரோதமாயும் சூட்சும சரீரத்துடனே கடவுள் ஏன் படைத்தார்? ஊன் தேகத்தை உடையதாகஇராத இராட்சதர்களை வெறும்வாக்காகிய சந்தியாவந்தன மந்திரம் அவற்றை என்னசெய்யக்கூடும்? அத்தன்மையதான உருவத்தை ஒருவருங் கண்டதில்லையே. ஆகையால், சந்தியாவந்தனத்தை யேற்படுத்திய வியாசர் முதலியவர்களிடத்தில் அநேக மிருகங்களுக்கு விளங்கிய அறிவுங்கூடவிளங்கவில்லை.

உரோமம் விழுந்த அன்னத்தை உண்பதினுல் என்ன குற்றம்? போஜனத்திலிருக்கும் உரோமத்தை எடுத்துவிடுவதே போதுமான மந்திரமாயிருக்க, அதற்காக வேறே மந்திரம் ஜெபம் செய்வது எவ்வளவு அறிவீனம்.

குற்றமற்றவனே கடவுளை வணங்கவேண்டுமெனின், குற்றமுள்ளவன் சாயுச்சிய மடைவதெப்படி? வியாதி உள்ளவனுக்கல்லவோ அவிழ்தங் கொடுக்கவேண்டும், ஆகையால் சந்தியாவந்தனம் பயனற்ற கோட்பாடென்று நிராகரிக்கப்படுகின்றது. முதல்பாகம் முற்றிற்று. மற்ற உ-பாகங்களும் முறையே பிரசித்தப்படுத்தப்படும். இனி வருவது காயத்திரி &c.

(இன்னும்வரும்.)

M. M.

## கடிதம்.

"நண்பர்களைகேட்டுக்கொள்ளுதல்."

வாரிதிசூழ் புவியின்கண் வசிக்கும் வித்வஜனர்களுக் கோர் திலகமாய்ப பிரகாசிக்கும் "தத்துவவிவேசினி" நங்காய—நான் கீழ்வரைந்துள்ளவற்றை யெமது நேசர்கட் கறிவித்தவர்பால் தக்க விடைபெற்றெமது கோரிச்கையை நிறைவேற்றுவாயென மனமுருகின்றனன்.—ம-ா-ா-ஸ்ரீ, கிருஷ்ணகிரி உண்மை விரும்பியவர்களும், ம-ா-ா-ஸ்ரீ, முத்துசாமி முனிவ ரவர்களும், ம-ா-ா-ஸ்ரீ, இராயப்பேட்டை நேசனவர்களும், ம-ா-ா-ஸ்ரீ, D. அவர்களும் ம-ா-ா-ஸ்ரீ, C. A. அவர்களும் ம-ா-ா-ஸ்ரீ, தி. பு. வையாபுரி பிள்ளையவர்களும் சென்ற வாண்டுமுதல் விதுகாறும் பத்திரிகையில் யாதாமொரு சங்கதியும் தீட்டி வராமலிருப்பதைக் குறித்து மிக்க விசனம் மேவிடுகின்றது. தங்கள் தங்களுக்கெத்தனைத் தொல்லை யிருந்தபோதிலு மதனை யோர்புற மிருத்தி, சில வைஷ்ணவமத, சில சிவமத, சில கிறிஸ்துமதகண்டனைக் கீர்த்தனைகளாகவும் சில கண்டன விருத்தங்களாகவும் சில கண்டனச்சீட்டுக் கவிகளாகவு மியற்றிப் பத்திரிகையின்வாயி

லாக வெளிப்படுத்த மிக்க மேஹாயாய் வந்தித்துக் கேட்டுக்கொள்ளுகின்றனன். கிற்ச, தத்துவவிவேசினி நங்காய், சென்றவருடம் கினது தந்தை "விடுகதைகளை" இனி பத்திரிகையில் இட்டோமென்று கினது அங்கத்தி ஞேர் புறத்தில வரைந்தறிவித்தனர், இவ்வருடமாகிலும் எம்மைப்போன்ற விடுகதைப் பிரியர்களின் மனதைக் களிக்கச்செய்வாயென கினது விடைக்காக வெதிர்பார்த்திருக்கின்றனன். கிற்க; வருணபேதசருக்கமியற்றிய நண்பரீர, தாங்கள் ஷை புத்தகத்தி னிற்றட்டை மேற்புறத்தின் புத்தகவிளம்பரத்தில் ஷை புத்தகம் கோ-உமணமாநகர் - தி. சி. நாராயணசாமிபிள்ளை இடத்திலும் பெற்றுக்கொள்ளலாமெனத் தீட்டி யிதுகாறும் தாங்க ளெனக்கனுப்பாமலிருப்பசால் ஷை வருணபேத சருக்கம் விலைக்குவேணுமென் ...சாவிய வொவ்வொருவருக்கும் ஷை புத்தக மென்னிட ...லையென்றும் ஷை புத்தகத்தைப் பத்திரிகைவாயிலாத ...ன்றி புத்தகரூபமாக விதுகாறும் சண்டிலேனென்வா ...ரநேரிடுகின்றது. ஷைபுத்தகத்தையான் 12—2—87 நாம் ...கிரி நேசரிடம் கண்ணுற்றதால் தமக் கறிவிக்க நேரிட்டது.

ஷை ஒவ்வொருவருடைய விடைக்காக வெதிர்பார்த்திருக்கின்றவனுகிய—தி. சி. நாராயணசாமி பிள்ளை.

இந்து சுவக்கியான சங்கத்தான்,
உமணமாநகர்—கொயமுத்தூர்.

## வர்த்தமானசங்கிரகம்.

திருநேல்வேலியைச்சேர்ந்த தூத்துகொரின் பட்டணமானது கொஞ்சகாலமதொடங்கி தீவரமாய் முக்கியமான வியாபாரஸ்தலமாக விர்த்தியாகிவருகிறது. அது தென் இந்திய ரெயில்வேமுனை; அது கடற்றுறைப் பட்டணமாதலால் அங்கு அநேக நீராவிக்கப்பல்கள் போக்குவரவு செய்கின்றன. அதின் ஜன சங்கியை 1871௵த்தில் - 9000 - மாக இருந்து 1881௵த்திலே 16, 281-இ விர்த்தியாயிற்று, இப்போதைக்கு 22000-ச்குக் குறைவுபடாது. முக்கியமாய் அவ்விடத்திய ஏற்றுமதிச்சரச்கு பஞ்சும், பனவெல்லமும். அந்த ரேவுதுறைமூயாய்ச் செல்லுஞ் சரக்கு மொத்தம் 146 லட்சம் ரூபாய்க்கு மேற்படுகிறது. இந்த ராச்சியத்திலே வர்த்தக விஷயத்தில் அது சென்னைக்கு இரண்டாவதாயிருக்கிறது; சில காலேஜுகளேற்பட்டுக் கல்வியும் விர்த்தியாகிவருகிறது. ஜூபிலி உற்சவமானது அன்று காலமே 31 வெடிதீர்ந்து, பிரார்த்தனை முதலிய சகலமும் வெகு சிறப்பாகவே நடந்தன.

சென்னை தென் கடலோரத்து பாண்டு வாத்தியஸ்தானநிலையில், சென்னைக் காலாள் 9-வது ரிஜிமெண்டு வாத்தியக்காரர்கள் நிசமும் மார்ச்சிமீ ௫உ சனிவாரந்தொடங்கி, பிரதி சனிவாரம்சாயங்காலம் ௫௨ மணிக்குவாத்தியம்வாசிப்பார்கள்.

சென்னைக் காலாள் 10-வது ரிஜிமெண்டு இந்தமீ ௭உயிலும், 14-வது ரிஜிமெண்டு ௬௦உ முதல் கசவுக்குள்ளாகவும் ரங்கூனுக்குப்போகக் கப்பலேறும்.

சென்ற சுக்கிரவாரத்துக்கு முந்திய சுக்கிரவாரம் சாயங்காலம் ஈரோட்டிலிருந்து பெரம்பூர் ஸ்டேஷனுக்கு வண்டித்தொடர் வந்து சேர்ந்தபோது, அந்த வண்டிகளிலொன்றில் ஒரு சுதேச பயணக்காரி செத்துக்கிடக்கக்கண்டார்கள். அந்தப் பிரேதம் பிளாட்பாரத்தில் அலுவலின்பேரிலிருந்த ஒரு போலீஸ் உத்தியோகஸ்தன் வசம் உடனே யொப்பிக்கப்பட்டது.

நவாப்முனிர் - உல் - முல்க் அவர்கள் (ஸர்ஸாலார்ஜங் அவர்களுடைய இளைய சகோதரர்) ஏப்ரில் அல்லது மே மாசத்தில் ஹைதராபாத்திலிருந்து புறப்பட்டு, டர்க்கி, ரஷியா, ஜெர்மெனி, பிரான்ஸ், இத்தேசங்களைப் பார்வையிட்டுக்கொண்டு, மகாராணியவர்களுடைய ஜூபிலி உற்சவகாலத்தில் அருகிருக்கும்படியாக ஜூன் மாசத்தில் முன்னதாகவே இங்கிலாந்து போய்ச்சேர்வார்கள்.

சென்னை ரெயில்வேமார்க்கமாய்ப் பயணம் போவதற்கு டிக்கெட்டுவாங்க ஜனங்கள் சென்றல் ஸ்டேஷனுக்கும் ராயபுரம் ஸ்டேஷனுக்கும் போகாமல், சமீபத்தில் வாங்கிக்கொள்ளும்படி, ரெயில்வே அதிகாரிகள் தங்கசாலைக் கடுத்த நீலதொட்டிச்குச் சமீபத்தில் ஒருஸ்டேஷன் ஏற்படுத்தியிருக்கிறார்கள். மார்க்கத்திலுள்ள எல்லாஸ்டேஷன்களுக்கும் இங்கே டிக்கெட்டுகொடுக்கப்படும். ஆனால் இப்பொது ஏற்படுத்தியிருப்பது பரிட்சை செய்துபார்ப்பதற்குத்தான்.

பர்மா போலீசிற்கு வேண்டியிருக்கிற 2,000 சிபாய்கள் அவ்விடத்திலுள்ள ரிஜிமெண்டுகளிலிருந்து தங்களிஷ்டமாய் வருகிறவர்களைக்காணோம். இஷ்டமுள்ளவர்கள் வரலாமென்று இந்தியாவிலுள்ள சுதேச ராணுவ முழுமைக்கும் அறிவிப்பது நலம். பஞ்சாபிலும் பொம்பாயிலும் பர்மாவிற்காகச் சேர்க்கப்பட்ட போலீஸ் பட்டாளங்கள் கிட்டத்தட்ட பூர்த்தியாயின. வடமேற்கு மாகாணங்களில் சுத்தமாய்ச் சேகரமாகவில்லை,

ஜூபிலி உற்சவதினத்தில் விடுதலை செய்யப்பட்டவர்களில் இரண்டு பழய திருடர்கள் மறுநாளே திருட ஆரம்பித்து, ஒருவன் ஒரு கடையிலிருந்து ஒரு ரூபாய் அடித்துக்கொண்டுபோனதற்காகவும், மற்றொருவன் கொலுசுடனே கடியாரத்தைத் திருடிக்கொண்டுபோனதற்காகவும் குற்றவாளிகளானார்கள்.

## காலஸ்திதி.

சென்ற (பிபர்வரி) 16உ வரையில் ஒருவாரத்துச் சணக்கின் குறிப்புகளாவன - சென்னைப் பிரதேசத்தில் 5 ஜில்லாக்களில் அற்பமழை பெய்தது. மற்ற ஜில்லாக்களில் மழை கிடையாது. பஞ்சாபில் மழையில்லை என்ற கூச்சல் அதிகம். சென்னைப் பிரதேசத்தில் மூன்று ஜில்லாக்களில் பயிர் க்ஷீணித்திருக்கிறது. மழை மெத்த அவசியமாயிருக்கிறது. மைசூர், குடகுபக்கத்தில விவசாய விஷயத்தில் க்ஷேமம் தான். வங்காளத்தில் நெல் பயிர் நாற்று நடவு முடிந்தது. புது உழவு ஆரம்பிக்கப்பட்டது. பர்மாவில் நெல் அறுவடை முடிந்து ஒப்படியாகின்றது. வங்காளம், நாகப்பூர் ஆயாம் பிரதேசங்களில் ஆலையாடுகிறார்கள். வங்காளத்திலும் ஆஸாமிலும் கடுகு சேகரப்படுகின்றது. அயோத்திப் பிரதேசத்தில் கசகசா விளைவு செவ்வையாயிருக்கிறது; வங்காளத்திலே கங்காநதியின் தென் துக்குடிகளில் சேதப்பட்டது; மாளவப் பிரதேசத்திலும் ரஜபுத்ர ஸ்தானத்திலும் பனியால சேதப்பட்டது. சுகவிர்த்தி பொதுவக நலம்.

## விவசாயவிர்த்தி,

வங்காளத்தில் பிராமணர்கள்கூட எலும்பு எருவை உபயோகிக்கத் துணிந்தார்கள். இங்கிலீஷ் சீர்மை விதைகளைக்கொண்டும் முறைகளைக்கொண்டும் உருளைக்கிழங்கு முதலிய பதார்த்தப் பயிர் விர்த்திசெய்யப்படுகிறது. மோரீஸ் முறைப்படி கரும்பு பயிரிடப்படுகிறது. கலப்பைகள் சீர்மை முறைப்படி செய்யப்பட்டு விற்கப்படுகின்றன. முறை மாதிரித்தோட்டங்கள் வைக்கப்பட்டிருப்பதுமன்றி வெகுசாய் விநோதக் காட்சிச் சந்தைகளும் கூட்டப்படுகின்றன.

(இலலிதா.)

## அறிக்கை.

நமது மெம்பர்களும் கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிகமாக "தீன்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினுல், அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணு ச
தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணு உ

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ் பிரதியாயின் நான்கும் ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி—என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றிபெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணைபுரிவார்களென்று நம்புகிறோம.

நான்துபக்கம், பிரதி 1க்து விலை அணு 1.

## தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணுவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணு வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத்தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 11.] MADRAS:—SUNDAY MARCH, 13, 287. A. S. [Monthly, 4 Annas.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## சங்கற்பவாதம்.

1. "உலகத்திலெண்ணமிருக்கிறபடியால், எண்ணிச்செய்தவனிருக்கவேண்டும்; அவ்வாறு எண்ணிச்செய்தவன் கடவுள்" என்று கூறுவது சங்கற்பவாதம். சங்கற்பம் என்றால் எண்ணம்.

2. "உலகத்தில் எண்ணமிருக்கிறது" என்பது உத்தேசமென எண்ணாமல் நியாயவாயிலாய் நிலைநாட்டிய உண்மையென நினைக்கிறார்கள். இது இவ்வாதத்திலுள்ள முதல் குற்றம். "உலகத்தில் எண்ணமிருக்கிறது" என்பது உத்தேசமேயல்லது உண்மையல்லவெனக் காட்டுவோம்.

3. "உலகத்தில் எண்ணமிருக்கிறது" என்று காட்டத்தொடங்குஞ் சங்கற்பவாதிகள், தாங்கள் எடுத்துக்காட்டும் ஒவ்வொரு உதாரணமும் உத்தேச அளவில் நிற்கின்றபடியால் "உலகத்திலெண்ணமிருக்கிற" தென்பது உத்தேச அளவாகவே நின்று பழுதுபடுகின்றது. இதை உதாரணவாயிலாக எடுத்துக் காட்டுவோம்.

4. சங்கற்பவாதிகள்; 'கண்ணைஉண்டாக்கியதில்எண்ணமிருக்கிறது. ஏனென்றால், கண்பார்ப்பதை நாம் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம். பார்ப்பதற்காகக் கண் உண்டாக்கப்பட்டிருக்கிறது.' என்று கூறுகிறார்கள்.

5. இது தப்பான நியாயம். இதனது போலிநியாயத்தைக்காட்டுவோம்; உடைந்த பாலத்தைக்கண்டு உடைந்ததில் அதன் ஆக்கியோன் எண்ணமிருக்கிறது, ஏனென்றால் இதிலிருந்துவிழுந்து இறப்பதை நாம் பிரத்தியட்சமாய் பார்க்கிறோம். ஜனங்கள் இறப்பதற்காக உடைந்தது. ஆகையால் ஜனங்கள் இறக்கவேண்டுமென்னும் எண்ணத்தை உடைந்த பாலத்திலிருந்து அதன் ஆக்கியோன் சித்தமென நாமறிகிறோமென்று சொல்லுவதை மேற்கூறிய நியாயம் ஒக்கும்.

6. நாம் கண்ணிருக்கிறபடியால் பார்க்கிறோமா? அல்லது, பார்ப்பதற்காகக் கண்ணிருக்கிறதா? காலிருக்கிறபடியால் நடக்கிறோமா? அல்லது, நடக்கிறதற்காகக்காலிருக்கிறதா? இதை, யோசித்துப்பார்த்தால், கண்ணிருக்கிறபடியால் பார்க்கிறோம் காலிருக்கிறபடியால் நடக்கிறோம், எனத்தெளிவாய் விளங்கும். ஆனால் சங்கற்பவாதிகள் பார்ப்பதற்காகக் கண்ணிருக்கிறதென்றும், நடப்பதற்காகக் காலிருக்கிறதென்றும் கூறுவார்கள். அவ்வாறு கூறுதற்கு நியாயங் காட்டவேண்டியது அவர்கள் கடனும். அங்ஙனம் செய்யாவிடில அது உத்தேசமே யல்லாது, பிரமாணமன்று.

7. பாலம் உடைந்ததால் ஜனங்களிறந்தார்களா ! அல்லது ஜனங்கள் இறப்பதற்காகப் பாலம் உடைந்ததா? பாலம உடைந்ததால் ஜனங்களிறந்தார்களென்பது நிச்சயம். ஆனால், ஜனங்களிறப்பதற்காகப் பாலம் உடைந்ததெனக்கூறுவது தவறல்லவா? அதுபோலவே, பார்ப்பதற்காகக் கண்செய்யப்பட்டதென்றும், நடப்பதற்காகக் காலிருக்கிறதென்றும் எவ்வாறு சொல்லக்கூடும்? கண் ணிருப்பதால் பார்க்கின்றோம்; காலிருக்கிறபடியால் நடக்கின்றோம் என்பது நிச்சயமென வெளிப்படும்.

8. ... நாற்காலியிலே எண்ணமிருக்கிறதே! உட்காருவதற்காக ... செய்கிறார்களே! அதுபோலவே, நமது கண்களும் ... பதற்காகச் செய்யப்பட்டிருக்கவேண்டுமெனச் சங்கற்பவாதிகள் கூறுவார்கள். உட்காரும் பிரயோசனத்தைக் கருதி நாற்காலி செய்யப்படுவதை நாம் பிரத்தியட்சமாய் கண் ...பால் உட்காருவதற்காக நாற்காலி செய்யப்பட்டதென ...லக்கூடும். ஆனால், பார்ப்பதற்காகவே கண்ணைச்செய்ய ...ர்த்ததில்லை யாதலாலும், கண்செய்யப்பட்டவஸ்துவல்லவாதலாலும், பார்ப்பதற்காகக் கண் செய்யப்பட்டதென எவ்வாறுகொள்ளக்கூடும்? ஏன், கொள்ளக்கூடாது, என்று சங்கற்பவாதிகள் கூறுவரேயானால், இதுவரையிலும் நாற்காலியைக் காணாத ஓர் சங்கற்பவாதிக்கு நாற்காலியை நாம் காட்டினால், அதில் மேட்டுப்பூச்சியை யிருக்கக்கண்ட அச்சங்கற்பவாதி யாதுகூறுவன? இந்த நாற்காலியினிடத்து எண்ணமிருக்கிறது. மேட்டுப்பூச்சியிருக்க நாம் பிரத்தியட்சமாய்ப் பார்த்திருக்குறோமாதலால், மேட்டுப்பூச்சி தங்குவதற்காக நாற்காலி செய்யப்பட்டதென இச்சங்கற்பவாதி கூறுவானன்றோ? ஆகையால், மேட்டுப்பூச்சி குடியிருப்பதற்காக நாற்காலி செய்யப்பட்டது எனபது தவறெனதெள்ளிதின் விளங்கும். நாற்காலியிருக்கிறபடியால் மேட்டுப் பூச்சி யிருக்கிறதென்பதே நிச்சயம்.

9. இந்த நியாயத்தால், பார்ப்பதற்காகக் கண் உண்டாக்கப்பட்டதென்பதும், நடப்பதற்காகக் காலுண்டாக்கப்பட்டதென்பதும் உத்தேச அளவாகவே நின்றதேயல்லாமல், நியாயவாயிலாய் நிலைநாட்டப்படவில்லை. கண்ணிருக்கிறபடியால் நாம் பார்க்கிறோம், காலிருக்கிறபடியால் நடக்கிறோமென்பது தெளிவாய்விளங்கும். இதற்கு திருஷ்டாந்தம், முடவன காலில்லாமையால் நகர்வன்.

10. உலகத்தில் எண்ணமிருக்கிறதென்பது உத்தேச அளவாக நினறதெனக் காட்டினோம். அதைநியாய வாயிலாய காட்டியதுபோல், ஒப்புக்கொண்டால், சங்கற்பவாதிகளது நிலைமை நியாயபாணத்திற்கு முன்நிற்குமா என்பதை சற்றே பரியாலோசிப்பாம்.

11. கடவுளுக்கு உலகத்தை யுண்டுசெய்யவேண்டுமென்று எண்ணமிருந்தால், இவ்வெண்ணம், அநாதியாக உதித்திருக்கவேண்டும், அல்லது ஓர் காலத்தில் உதித்திருக்கவேண்டும், ஆனால் அநாதியாக உதித்ததென்றால் ஆபாசமாம். ஆதியாக உதித்ததென்றால், அவ்வாறு உதித்ததற்குக் காரணம் யாது? நிர்விகாரியாகிய கடவுளுக்கு விகாரதோஷம்வருகின்றதல்லவா!

12. ஆகையால், எண்ண மிருக்கிறதென ஒப்புக்கொண்டால் அவரது நிர்விகாரகுணத்துடன் முரண்பட்டு ஆபாசமாய்விடுகிறது. கடவுளுக்கு எண்ணம் உதிக்கக்காரணமில்லையென்பதைப் பின் விளக்குவாம்.

13. எண்ணம் என்பது மனக்கிளர்ச்சி. ஆகவே, எண்ணமிருக்கிறது என்னும்போதே, மனக்கிளர்ச்சி யிருந்திருக்கவேண்டும். மனக்கிளர்ச்சியுள்ளபோது, மனக்கிளர்ச்சியை யுண்டுபண்ணின (தனக்கன்னியமாகிய) வஸ்து ஒன்றிருக்கவேண்டும். பிரபஞ்சசிருஷ்டிக்குமுன்னே, கடவுளைத் தவிர வேறுவஸ்துவில்லையாதலால் அப்போது அவருக்கு எண்ணமுதித்தது என்பது பழுதுடைத்து.

14. மேலும் எண்ணமிருக்கும்போது எண்ணிச்செய்தவனிருக்கவேண்டுமென்பது கடவுள்விஷயத்தில் பொருந்தாது. செய்தல் எனனும் பதத்திற்கு இரண்டுபொருள்களிருக்கின்றன. இவை ஆஸ்திகரை மயக்குகின்றன. (க) முன்னுள்ள பொருளைக்கொண்டு வேற்றுருவு செய்தல் என்பதும் (உ) இல்லாமையிலிருந்து உண்டாக்குதல் அதாவது சிருஷ்டி என்பதும் ஆக இரண்டுபொருள்கள் அச்சொல்லுக்கு இருக்கின்றன. எண்ணமுள்ளபோது எண்ணிச்செய்தவன் இருக்கவேண்டுமென்பதை ஸ்தாபிக்கும்போது, சங்கற்பவாதிகள், வேற்றுருவாக்கல் என்னும் பிரயோகத்தில், "செய்தல" என்னும் பதத்தை யுபயோகிக்கிறார்கள், ஆகையால் எண்ணிச்செய்தவனுக்கு (=எண்ணி சிருஷ்டித்தவனுக்குப்) பொருந்தாது. ஆகையால் இவ்வாதம் கடவுள்விஷயத்தில பழுதுபட்டதைக் கண்டு உணர்வோமாக.

இ-மு.

—o—

## இந்துசமயசாரவிளக்கம்.

(விநாயகர் உற்பத்தி.)

ஓர் காலத்தில் பார்வதியார் கங்காநதியில் மஞ்சனநீராடப்போனபோது அவரதுபாங்கிமார் அவருக்குத்

தைலமிட்டு, நலங்குமாதேய்த்து உருட்டித்தள்ளின அழுக்கை ஒருபாங்கிதிரட்டி, முகத்தை யானைமுகம் போலவும், மற்ற அவயவங்களை மானிட அவயவங்கள் போலவும் உருப்படுத்திக்கொஞ்சநேரம் வைத்து விளையாடிக் கொண்டிருந்து, பின்னர் கங்கையிலெறிந்து விட்டனள். உடனே அவ்வுரு உயிர்த்து பிரமாண்டமானரூபமாகிவர, அதைப்பார்வதி ஏந்தித்தனக்குப் புத்திரனாக்கிக்கொண்டனள்; தேவர்கள் வந்து தெரிசித்து, கணங்களுக்கெல்லாம் அதிபதியாகிய 'கணபதி' எனவாழ்த்தினரென்று, பதினெண்புராணங்களிலொன்றாகிய மச்சியபுராணம் 153வது அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறது. இவ்வித அவதாரம் விநாயக புராணத்தில் கிடையாது.

பதினெண் புராணங்களை முற்காலத்தில் கைலாசபதியினிடத்திலே பெற்றுக்கொண்ட நந்திதேவர் சனற்குமாரமுனிவருக்கு உபதேசிக்க, அதை யவரிடத்தில் வியாசமுனிகேட்டுச் சுலோகங்களாகச் செய்தாரென்றும், அவற்றைச்சூதமாமுனிவரும் நைமிசாரண்ணியருஷிகளுக்குச் சொன்னாரென்றும் கூறியிருக்கிறது. விநாயகபுராணத்தை, முற்காலத்தில் பிரமதேவன் அநேகதவங்களைச்செய்து, அத்தவ முதிர்ச்சியினால் சிவபிரானாலுபதேசிக்கப்பெற்று, வியாசமுனிக்கு உபதேசித்தான்; அவரிடத்தில் பிருகு முனிகேட்டுச்சுலோகங்கள் செய்து ஒருபுராணமாக்கினாரென்று விநாயகபுராணம் கூறுகின்றது.

இதனாலே, இப்புராணங்களெல்லாம் ஆதியில் கர்னபரம்பரையாய்ச் சொல்லப்பட்டுவந்ததினால், வெவ்வேறு திசைகளில் வெவ்வேறு விதமாக மாறிச்சொல்லப்பட்டகதைகள் ஒன்றற்கொன்று விரோதமாயிருக்கிறதென்று தெரியவருகிறது. அன்றியும், இப்புராணசங்கதிகளில் பிரமனமுதலானதேவர்கள் அடிக்கடி சம்பந்தப்பட்டே யிருப்பதாலும், அவ்விருத்தாந்தங்கள் நடந்தகாலத்திலுள்ளவர்கள் அவற்றை அறிந்து சொல்லக்கூடுமாதலாலும், அப்படிப்பட்டதைப் பரமசிவனிடத்திற்கேட்க பிரமன் முதலானவர்கள் அரிய தவஞ்செய்ததை யோசிக்குமிடத்து, புராணவிருத்தாந்தங்கள் நடப்பதற்கு முன்னமேதானே நடந்ததாகப் பரமசிவனார் உபதேசித்தார்போலும்; புராணங்களிலே சொல்லியிருக்கிற சில சங்கதிகள் ஏதோ ஒவ்வொரு கற்பத்தில் நடந்ததாகச் சொல்லியிருக்கிறதே யல்லாமல், இன்னின்னது இன்னின்ன கற்பத்தில் நடந்ததாகச் சொல்லக்கூடாமையால், மாறுபடுகிறசங்கதிகளில், அது ஒருகற்பத்தில்நடந்தது இது ஒருகற்பத்தில் நடந்தது என்றுசொல்லவல்லவர் அநேகருண்டு. ஆதலால், முந்தியகற்பங்களில் நடந்தவைகளை இந்தக்கற்பத்தின் முதலில் பரமசிவன் உபதேசித்தான்போலும்.

விநாயகபுராணத்திலே கணபதி அவதாரப்படலத்தில் சொல்லியிருப்பதாவது:—இளவேனிற்காலம்வந்தபோதுசாம்பசிவமூர்த்திகுளிர்ச்சிவேண்டித் தமது தேவியாரோடும் உய்யானனத்தை யடைந்து, பலவிருட்சங்கள் மலிந்திருக்கிற அலங்காரங்களைப் பார்த்துக்கொண்டேவந்து அங்கிருந்த ஓர் சித்திரமண்டபத்து ளெழுந்தருளினர். (1) சுவர்களி லெழுதியிருந்த பலசித்திரங்களோடு ஆணானையும் பெண்ணானையும் புணர்ச்சிசெய்துகொண்டிருக்கும் பாவனையாக எழுதியிருப்பதை உமாதேவிகண்டு, இதென்னவென்றுகேட்க; சிவபிரான்-பெண்ணே, யாம் உன்னோடு சம்பந்தமாகி லோகங்கட் குபகாரமாய் நடப்பிக்கத்தக்க கருணாரசமாகுமென்று திருவாய்மலர்ந்து, புணர்ச்சிசெய்திருக்கின்ற அந்த யானைகளில் ஆணானையைத்தாமும் பெண்ணானையை உமாதேவியும் இன்போடுபார்த்துக் கொண்டிருத்தலும்(2), அந்தயானைகளுடைய புணர்ச்சி முடிவில், பிரணவஸ்வரூபியாயிருக்கிற விநாயகமூர்த்தி உதித்து சிவனையும் உமையையும் பணிந்தனர். அவ்விருவரும் தமக்குப் புத்திரனாகப்பிறந்த அக்குழந்தையைத்தழுவியெடுத்துக் கொண்டபின்பு, சிவபிரான் அதைக்கணங்களுக்கெல்லாம் நாதனாகக் கணபதியென யாவரும் அழைக்கக்கடவார்களென்று பெயரிட்டு பலவாறு ஆசீர்வதித்துக் கணபதியை அழைத்துக்கொண்டுபோய் கயிலாயவாய்தலின் முகப்பிலிருக்கவைத்து, மனைவியோடு அந்தப் புரத்திற் சென்றனர். விஷ்ணு முதலான தேவர்கள் வந்து கணபதியைத் துதித்து விடைபெற்றுக்கொண்டுபோனார்கள் (3.)

அந்தப் புரத்திற் சென்ற சிவபிரானும் உமாதேவியும் மகிழ்ச்சிபொங்க சரச சல்லாபத்துடனே அளவளாவியிருக்கின்றபோது, நாயகன் நாயகியைத் தத்தம் ஆபரணங்களைப் யந்தயமாகவைத்து சூதாடவழைத்து, அங்கு சிவதரிசனத்துக்கு வந்திருந்த விஷ்ணுவைச்சாட்சியாக வைத்துக்கொண்டு ஆடி, சிவன் தோற்கவே, அவர் - பரியாசத்தினாலோ மற்ற யாதுகாரணத்தினாலோ தான் கெலித்ததாகப் பொய் சொன்னதுமல்லாமல், தனது புருவத்தை நெரித்துச் சைகைகாட்டி விட்டுணுவையும் பொய்ச்சாட்சி சொல்லுவித்தார். உமாதேவி கோபித்து விஷ்ணுவைக் கண்கெட்டமலைப்பாம்பாகித் துன்பமுறக்கடவையென்று சபித்தனள். திருமால் நடு நடுங்கி சிவனைப்பிரார்த்திக்க, நீ வடதீவிற்சென்று நமது திருவடிகளைத் தியானஞ்செய்துகொண்டிரு, சில தினத்துள் கஜமுகாசுரனைச் சங்காரஞ்செய்து அவ்வழியே வருகிற கணபதியை நீ பார்த்தபோது உன் சாபம் நீங்குமென்றனர் (4).

பின்பு தேவர்களுடைய துயரத்தை நீக்க விநாயகர் பூதகணங்களுடனே எழுந்தருளி, விண்டு முதலிய உயர்திணைகளினாலும், யானை முதலிய அஃறிணையினாலும், அத்திர சத்திரங்கள் முதலிய ஆயுதங்களினாலும் எக்காலத்தும் அழிவில்லாதிருக்கும்படி பரமசிவனிடத்தில் வரம்பெற்றிருந்த கஜமுகாசுரனோடு உலக்கை முதலிய பல வாயுதங்களைப் பிரயோகித்துச் சண்டைசெய்து, கடைசியில் அவன் ஆயுதங்களினாலழியாதபடி பெற்றிருக்கிற வரத்தை யோசித்து, யானைமுகவிநாயகர் தனது கொம்பையொடித்துப் பிரயோகிக்கவே, அது அவனுடைய மார்பைப்பிளந்துபோய் சமுத்திரத்தில் ஸ்நானஞ்செய்து மீட்டும் சுவாமியிடத்தில் வந்துசேர, அதை அவர் ஒரு ஆயுதமாகத் தனதுகரத்தில் ஏந்திக்கொண்டனர். கீழே வீழ்ந்த அந்த அசுரன் பெருச்சாளி வடிவமெடுத்துவர, அதன்மேல் அக்கடவுள் ஆரோகணித்தருளி, அப்படுகளத்தில் ஓர் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து பூசித்து, வடதீவினை நோக்கிச்சென்று விட்டுணுவின் சாபத்தைத் தீர்த்துக் கயிலாயத்திற்குச்சென்று, தனது யதாஸ்தானமாகிய முதற்கோபுர வாய்தலின் முகப்பிலெழுந்தருளினர்(5).

---

(1) பல ரிதுக்களின் சுக துக்கங்களை அனுபவிக்குஞ் சிவனுக்கும் மனிதருக்கும் என்ன பேதமோ?

(2) இக்காலத்தில் அப்படிப்பட்ட படம் வைத்திருப்பவர்களுக்கு காமாதுரசம்பந்தமான சட்டப்படி சிட்சை கிடைக்குமல்லவா? பரம சிவனது திருவருளே பராசத்தியாயிருக்கிற உமாதேவி அந்தச் சித்திரத்தை யின்னதென்று தெரிந்துகொள்ளமாட்டாமற் கேட்டது என்ன அஞ்ஞானம்? 'அரவகலல்குலார்பாலாசை நீத்தவர்க்கே வீடு, தருவமென் றளவில்வேதஞ் சாற்றிய தலைவன்,'' எனத் திருவிளையாடற் புராணத்தில் சொல்லியிருக்கிறபடி, சிற்றின்பத்தை யொழித்தவர்களுக்கு மோட்சந் தருவமென்று சொன்ன பரம்பொருளும் அவரது பத்தினியும் அந்த மிருகப்புணர்ச்சியைப் பார்க்கப் பார்க்க வெகு ஆனந்தமடைந்தார்களாக்கும்?

(3) எக்காலத்திலெழுதப்பட்டோ விடாப்புணர்ச்சியிலிருந்த அச்சித்திரங்களை அதுவரையில் அவர்கள் பாராதிருந்ததும், அவர்கள் இன்பத்துடனே அதைப் பார்த்துக்கொண்டிருந்த[illegible] பின்பு அதற்கு முடிவு நேரிட்டு யானையின் வயிற்றில் அ[illegible] களுக்குப் பிள்ளை பிறந்ததும் அதிசயமே.—பிரணவப்பெ[illegible]ளாய், பிர்ம விஷ்ணு ருத்திரர்களைப் படைத்தவராயச் செ[illegible]லப்பட்டிருக்கிற விநாயகர் சமயம் பார்த்திருந்து தமது [illegible]ஷ்டிப்பொருள்களுக்குத் தாம் புத்திரனாய்ப் பிறந்ததினா[illegible] அவர்களை வணங்கினார்போலும். சிவனைப்போன்ற வி[illegible] முதலிய மற்றைத் தேவர்க ளெல்லோரும் இவரை வந்[illegible]ணங்கினார்கள்.

(4) யானைகளின் சரச சல்லாபத்தைப் பார்த்திரு[illegible] லுண்டாகிய காமநோய் பார்வதி பரமசிவனை விடாது[illegible]

தாகத் தெரியவருகிறது. இவ்வுலகத்தில் விலக்கப்பட்ட சூது பரமலோகத்தில் ஞான சொரூபிகளால் ஆடப்பட்டது.—இருவரும் மெய்யர்களா யிருந்திருப்பார்களாகில், சூதாடுவதற்கு சாட்சி யொருவன் வேண்டுவதில்லை.—பொய் சொல்லச்சொன்ன சிவன் தானே முதல்வனாதலால் தப்பித்துக்கொண்டான், அவனுடைய பிரேரேபணையின்படி பொய் சொல்லாவிட்டால் ஒருவேளை சபித்துவிடுவானென்று பயந்து பொய்சொன்ன விட்டுணுவுக்குக் கிடைத்த லாபம் மிகுதியே; விநாயகரால் சிவனைப்போலவே சிருட்டிக்கப்பட்ட விட்டுணு சிவனுக்கு ஏன் அடங்கி யிருத்தல் வேண்டுமோ தெரியவில்லை. இப்படிப்பட்ட கதையை வைஷ்ணவர்கள் ஒப்புக்கொள்வார்களாகில், சரியென்னலாம். சூதாடல், காமம் முதலிய துர்க்குணங்க ளமைந்திருந்த பாராசக்தியினுடைய சாபம் பலித்தது அவளுடைய கற்பு நிலைமையினு லாக்கும். தான் கெலித்ததாகப் பரியாசத்தினாலோ சிவன் பொய் சொன்னானென்று புராணிகர் சொன்னபடி சிவனுடைய விளையாட்டு விஷ்ணுவுக்கு வினையாக முடிந்தது; தன்னை யடுத்திருந்து தன்னுடைய ஏவலின்படி பொய் சொன்ன விஷ்ணுவுக்குப் பரிகாசத்தினால் விளைந்த தீவினைக்கு உடனே பரிகாரஞ்செய்யச் சக்தியில்லாமல், சில நாள் சென்றுவது விநாயகர் தரிசனத்தால் அச்சாப வினை தீருமென்றதும் சிவனுடைய பேரருளே.

(5) நினைத்தமாத்திரத்தில்அழிக்கத்தக்க சர்வவல்லமையுடைய பிர்மசொரூபியாகிய விநாயகர் சண்டைசெய்தற்குப் பூசகணங்களின் சகாயம் வேண்டியிருந்தது.—அவ்வரக்கன் உயர்திணையினாலும் அஃறிணையினாலும் அழியா வரம்பெற்றதனால், அவனை வதைக்க மனித உடலும் யானைமுகமுமுடைய விநாயகர் தோன்றினர்; இவர் மக்களுக்கும் மிருகங்களுக்கும் பொதுவாகிய பொதுத்திணையாக்கும்; மானிடவுடலோடும் யானை முகத்தோடும் பொதுத்திணையாகத் தானிருக்கிறதை அறிந்திருக்கிற அக் கஜமுகாசுரன் தன்னைப்போன்ற பொதுத்திணையால் அழியாவரங் கேளாது விட்டது அவனுடைய மதிமோசமோ, அல்லது கதை கற்பித்தவன் முன்னும் பின்னும் ஆலோசித்துக் கதைக்கேற்க எழுதியமதிநுட்பமோ!—உலக்கை - தடி - மூங்கிற்கோல் முதலியவை ஆயுதமாயிருக்க, யானைக்கொம்பு பிரயோகிககப்பட்டபோது ஆயுதமாகாமல், அதவதை யுண்டுபண்ணின பின்பு ஆயுதந்தானென்று கணபதிதெரிந்தெடுத்துக்கொண்டது அவருடைய புத்திவிசாலமே.—ஒடிந்த கொம்பு சமுத்திர ஸ்நானஞ்செய்து திரும்பிவந்து சேர்ந்தது அற்புதமே.—பற்பல ஆயுதங்களினால் பலவாறுன சண்டைசெய்தபின், அவ்வசுரன் ஆயுதத்தா லழியாவரம் பெற்றிருந்ததை நினைத்து கடவுள் கொம்பை யொடித்துக்கொண்டு சண்டைசெய்தது முற்று முணருந்தன்மையே.—இவ்விதமாய்ப்பரமசிவனருளிய வரம்பாழானது அவருக்குப் பெருமையே; பிரமாதம் விளையுமென வறியாது வரந்தந்ததும் அவருடைய நெற்றிக்கண் ஞானமே. விநாயகர் பிரமசொரூபியாயிருந்து கொண்டு சிவன் முதலிய திரிமூர்த்திகளைச் சிருஷ்டிசெய்திருக்க, அவர் கஜமுகாசுரனைக்கொன்ற படுகளத்திலே சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தது தான் செய்த கொலைபாதகந்திரவாக்கும்? சிவன் முதலிய தேவர்களுக்குத் தனித்தனி பதவிஸ்தலங்களிருப்பதுபோல விநாயகருக்குத் தனக்கென ஒன்றுமில்லாமையால், அவரை நம்பினவர்கள் அவரைப்போல வாயிற்படியண்டைதான் விழுந்து கிடக்கவேண்டும். என்ன ஆபாசம்!

## சந்தியாவந்தனம்.

(39-வது பக்கத்தொடர்ச்சி.)

ஓமித்யேகாக்ஷர பிரம்மமென்னும் காயத்திரி ஹ்ருதயம்.

ఓమిత్యేకాక్షరంబ్రహ్మ, అగ్నిర్దేవతా, బ్రహ్మఇత్యార్షం, గాయత్రంఛన్దం, పరమాత్మంసరూపం, సాయజ్యం వినియోగం.

ஓமித்தியேகாக்ஷரம் பிரம்ம, அக்னிர்தேவதா ப்ரஹ்ம இத்தியார்ஷம், காயத்ரம் சந்தம், பரமாத்மம் ஸரூபம், ஸாயஜ்யம் வினியோகம்.

இதன் உரை.—பிரணவத்திற்கு தேவதை அக்கினி, அக்கினி எனின் பரமாத்மா, அப்பிரணவத்திற்கு இருஷி பிர்ம்மா, இருஷி எனின் பிரணவம் குறிக்கும் தேவதை. அப்பிரணவத்திற்குச் சந்தசு காயத்திரி, சந்தசு எனின் அக்ஷரப் பிரமாணம், அப் பிரணவம் பரமாத்மா சொரூபம். அதன் பிரயோகம் மோக்ஷத்தைப்பற்றியது.

விசேஷ உரை.—பிரணவமானது ருக் - எஜுர் - சாமவே களினின்று கிரமமாய் அகர உகர மகரங்கள் உதித்து று சேர்ந்து ஓம் என்றுயிற்று. இம்மூன்று அக்ஷரங்கூடி பிரணவத்தில் முதலெழுத்தான அகரம் விஷ்ணுவையும், கடையெழுத்தானமகரம் ஜீவனையும், மத்திய வெழுத்தான உகரம் பரமாத்துமாவுக்கும ஜீவாத்துமாவுச்கும் உள்ள நித்திய ஐக்கியத்தையும் பற்றிச்சொல்லுகின்றது. அகரத்தில் சிருஷ்டி திதி சங்காரமென்னும் முக்கிரியைகளும் அடங்கியிருக்கின்றன.

கருத்து.—அகரத்தினால் சொல்லப்பட்டிருக்கிற பரமாத்துமாவுக்கு மகரத்தினால்சொல்லப்பட்டிருக்கிற சீவன் சேஷபூதன். அத்வைதிகள் ஜீவாத்துமாவுக்கும் பரமாத்துமாவுக்கும் உள்ள ஐக்கியத்தை சொல்லுவார்கள். சிலர் உகரத்தை இலட்சுமிக்கு உரியதென்பார்கள்.

ஆயாது வரதாதேவீ எனும் காயத்திரியாஹ்வானம்.

౧. ఆయాతువరదా దేవీఅక్షరంబ్రహ్మసమ్మితం, గాయత్రీంఛన్దసాంమా తేదంబ్రహ్మజుషస్వమే.

౨. యదహ్నాత్కురుతేపాపంతదహ్నాత్ప్రతిముచ్యతే, యద్రాత్ర్యాత్కురుతేపాపం తద్రాత్ర్యాత్ప్రతిముచ్యతే, సర్వవర్ణేమహాదేవిసన్ధ్యావిద్యేసరస్వతి.

3. ఓజోసి సహోసి బలమసి, భ్రాజోసి, దేవానాం ధామనామాసి విశ్వమసి విశ్వాయుః సర్వమసి సర్వాయురభిభూరోమ్ గాయత్రీమావాహయామి.

౪. సావిత్రీ మావాహయామి, సరస్వతీమావాహయామి, ఛన్దఋషీ నావాహయామి, శ్రియ మావాహయామి.

1. ஆயாது வரதாதேவீ அக்ஷரம் பிரம்மஸம்மிதம் காயத்ரீம் ச்சந்தஸாம் மாதேதம் பிரமஜுஷஸ்வமே.

2. யதஃஹ்நாத் குருதேபாபம் ததஃஹ்நாத் ப்ரதிமுச்யதே, யத்ராத்ரியாத் குருதேபாபம் தத்ராத்ர்யாத் ப்ரதிமுச்யதே, ஸர்வவர்ணே மஹாதேவி ஸந்தியாவித்யே ஸரஸ்வதி.

3. ஓஜோஸி ஸஹோஸி பலமஸி, ப்ராஜோஸி, தேவாநாம் தாமநாமாஸி விஸ்வமஸி விஸ்வாயுஹு ஸர்வமஸி ஸர்வாயுரபிபூரோம் காயத்ரீமாவாஹயாமி.

4. ஸாவித்ரீமாவாஹயாமி, ஸரஸ்வதீமாவாஹயாமி, ச்சந்தருஷீநாவாஹயாமி, ஸ்ரியமாவாஹயாமி.

இம்மந்திரத்தினால் காயத்திரி பிரார்த்திககப்படும்.

கருத்து.—1. வரத்தைக்கொடுத்து சதா ஆனந்திக்கிற தாயான காயத்திரி என்னிடத்திற்கு வரக்கடவது. அழிவில்லாததும், சத்தியமானதுமான வேதாந்த பிரமாணத்தினால் யேற்படுத்தப்பட்ட பரமாத்மா அல்லது வேதத்திற்கு சமானமுமானது பிரம்மம். பிரணவம் எனின் பிரணவத்தைப்போல் சர்வார்த்த சங்கரஹம்காயத்திரி யல்லவா. மற்றொருவிதம் வரத்தைக்கொடுக்கும் தாயான காயத்திரி சத்தியத்தையும் வேதாந்த பிரமாண நிச்சயமான பரமாத்தும தத்துவத்தையும் போதிக்க வரக்கடவது. படிப்பின் ஆரம்பத்திற்குத் தாயான காயத்திரி நான் செய்யும் இந்த பிரம்ம தவத்தை அல்லது இந்த பரதத்துவத்தை உபதேசிக்கக்கடவது. அல்லது அனுக்கிரகிக்கக்கடவது.

2. சமஸ்த நிறங்களுடைய மஹாதேவி பகலில் செய்த பாவத்தைப் பகலிலும், இராத்திரியில் செய்த பாவத்தை இராத்திரியிலும் இந்த உபாசகனுக்கு நீக்கிவிடும்.

3. இந்திரியங்களுடைய வலிவானாய். பகையாளியை வெல்லும் சக்தி அல்லது துரிதமுள்ளவருடைய துரிதமானாய். தேகவலிவு ரூபமானாய். தேஜசை உடையவள் இந்திராதிதேவர்களுக்கு தேஜசு எதுவோ அந்த நாமத்தை அடைந்திருக்கிறாய். அல்லது, தேவர்களுக்கு பிரசித்த ஸ்தானமானாய். சமஸ்தமும் நீயே. பூர்ணாயுசு சொரூபமுள்ளவளும் நீயே. அசரங்களாகவும், அவற்றின் சத்தாகாலமாகவும், இயங்குந் திணைப்பொருள்களாகவும், அவற்றின் ஆயுளாகவும் இருந்து எல்லா இடர்களையும் விலக்குங்காரணம் நீயே, ஓம் பிரணவத்தினால் பிரதிபாத்தியமான பரமாத்மா நீயே. இப்பேர்க்கொத்த காயத்ரியை நான் ஜபிக்கிறேன்.

4. காலபேதத்தினால் நாமபேதங்களால் கூப்பிடுகிறதுதகுதி. ஆகையால், உதயத்தில் காயத்ரி என்றும், மத்தியானத்தில் சாவித்திரி என்றும், சாயங்காலத்தில் சரஸ்வதி என்றுங் கூப்பிடப்படும். சுத்தமுள்ள மனதுடன் துதிப்பவனை காப்பாற்றுவது காயத்ரி. சூரியமண்டல மத்தியவாயில் வியாபித்திருப்பது சாவித்ரி. ஜகத்திற்கு தாயாக இருப்பதினால்சரஸ்வதி எனப்படும். தேஜோமயத்துவம், ஜகத்சிருட்டித்துவம், இரக்ஷகத்துவம், பரமாத்மாவினிடத்தில் காணப்படுவதினால், காயத்திரி என்றுசொல்லப்பட்டதேவதை பரமாத்துமா என்று அறிக. காயத்ரிமுதலிய சந்தசுகளையும் விஸ்வாமித்திரர்முதலிய இருஷிகளையும் இலட்சுமியையும் கூப்பிடுகிறேன்.

காயத்திரியின் ச்சந்தருஷியாதிகம்.

గాయత్ర్యా గాయత్రీఛన్దో విశ్వామిత్ర ఋషిస్సవి
తాదేవతాగ్నిర్ముఖం బ్రహ్మశిరోవిష్ణుర్హృదయగ్ం రుద్ర
శ్శిఖాపృథివీయోనిః ప్రాణాపానవ్యానోదాన సమానా
సప్రాణా, శ్వేతవర్ణాసాంఖ్యాయన సగోత్రా గాయత్రీచ
తుర్విగ్ంశత్యక్షరా త్రిపదాషట్కుక్షిః పఞ్చశీర్షోపనయనే
వినియోగః.

காயத்திரியா காயத்ரீச்சந்தோ விஸ்வாமித்ரருஷிஸ் ஸவிதாதேவதாக்னிர்முகம் பிரஹமாசிரோ விஷ்ணுர் ஹ்ருதயச் ருத்ரஸ்ஷிகா ப்ருத்வீயோனி: ப்ராணபான வ்யானோதான ஸமானஸப்ராண, ஸ்வேதவர்ண ஸாங்கியாயன ஸகோத்ரா காயத்ரீ சதுர்விக் ஸத்தியக்ஷரா த்ரிபதா ஷட்குக்ஷி: பஞ்ச சிர்ஷோபநயனே வினியோகஹ.

கருத்து.—காயத்ரி மந்திரத்தின் சந்தசு காயத்ரி. இருஷிவிஸ்வாமித்திரர். தேவதை சூரியன். முகம் அக்கினி. சிரசு பிரம்மா. இருதயம் விஷ்ணு. குடுமி ருத்திரன். யோனி பூமி. தேவதத்தம் கூர்மம். தநஞ்செயம் நாக க்ருகரஙகளும் உபபிராணங்களுடன் கூடிய பிராணாதி பஞ்சகங்களை உடையது. அது வெண்ணிறமுடையது; எப்படி எனின், காயத்ரி செந்நிறமும், சாவித்ரி வெண்ணிறமும், சரஸ்வதி கருநிறமுமென அறிந்துகொள்க. சாங்கியான இருஷிக்கு சகோத்ரா. இத்தன்மையான காயத்ரி உச-எழுத்துடையது. ருக் யஜுர் சாமவேதரூபங்களான மூன்று பாதங்களையும், நான்கு திக்குகளும்கீழ்மேல் உ-ம் ஆக சுஎ-ம் வயிராகவும், இலக்கணம் சிட்சை கல்பம் நிருக்தம் சோதிடம் என்ற-ரு-சிரசுகளையும் உடையது. இதன் உபயோகம் உபநயனத்தில்தான்.

வேதங்கள் ஒருகாலத்தில் உண்டானதல்லவென்றும், அநாதியென்றும் பிராமணர் கூறுகின்றனர். சந்தியாவந்தனம் ருக் யஜுர் சாமவேதங்களின் தொகுதி. பூர்வகாலத்தில் தங்கள் பாவங்களைப் போக்கடித்து மோக்ஷமடைய கடவுளை நோக்கி தவஞ்செய்த சாங்கியாயன இருஷி விஸ்வாமித்திர இருஷி முதலியவர்களின் நாமங்கள் வேதங்களின் சங்கிரகமான சந்தியாவந்தனத்தில் வருவதால், சந்தியாவந்தனம் அவர்களால் எழுதப்பட்டதென்றும் அநாதியல்லவென்றும் தெளிவாகக் காணப்படுகின்றது.

(இன்னும்வரும்.)
M. M.

## வர்த்தமானசங்கிரகம்.

**வங்காளத்திலே** ஜனங்களுடைய சுகத்தை விர்த்தி செய்வதற்கான முயற்சி செய்யத்தக்க "பிரஜாரோக்கிய சங்கம்" என்பதொன்று ஏற்பட்டிருக்கிறது. இனி அதனால் வெகு நன்மையுண்டாகலாம்.

**பஞ்சாபிலே** மழையில்லாமையால் பயிர்விஷயத்தில் வெகுகவலையுண்டாயிருக்கிறது. அந்த நாடுமுழுவதும் மழை முறைப்பாடு பெரிது. அநேகவிடங்களில் இளம்பயிர் சாவியாய்ப்போகிறது. நாடுமுழுவதும் அகவிலை ஏறிக்கொண்டு வருகிறது.

**கண்டோன்மெண்டுக்கு** நாலுமயல்தூரத்திலே குவாலியர் ரோட்டில் நாளதுமீ 3உ பெருங்கொள்ளை யடிக்கப்பட்டது. இருபத்திரண்டு வண்டிகளைக் கொள்ளையடித்து மூவாயிரம் ரூபாய் சொத்து அடித்துக்கொண்டு போய்விட்டார்கள். வெடியாயுதங்கள் வைத்துக்கொண்டு குதிரையேறிவந்த கொள்ளைக்காரர்கள் நூறுபேருக்கு அதிகமாகவேயிருக்கும்.

**நாகப்பட்டணத்துக்கு** சிலமயல்தூரத்திலிருக்கிற நாகூரில் சிறப்புற்ற மீராசாயபு மக்கான்மசூதியிலே இப்போது மகமதியர்களால் இவ்வருஷபண்டிகை கொண்டாடப்படுகிறது. இந்தியாவில் பலபாகங்களிலிருந்து மகமதிய யாத்திரிகள் இந்த மசூதிக்கு வருகிறார்கள். இதற்கு வரும்படி சுமார் 70,000 ரூபாய்.

**ஜூபிலி** கொண்டாட்டத்நிமித்தம் போர்ட்டுபிளேயரில் விடுதலை செய்யப்பட்ட குற்றவாளிகளுள் அனேகர் ஹைதராபாத்தார்; அவர்கள் கும்புகூடி கொள்ளையடித்ததற்காகக் கிட்டத்தட்ட ஐம்பது வருஷத்துக்குமுன்னே ஆயுசுவரையில் சிறைச்சாலை சிட்சையடைந்தவர்கள்.

**பரோடாவின்** கிவிக்வாரவர்கள் இப்போது சரீராரோக்கியத்துக்காக சிலோனிலே நூராலியாவில் நின்றிருக்கிறார். காண்டியில் நிறைவேறிய நாடகத்திலே அவர் தரித்திருந்த வைரங்கள் மிகுந்த கவனத்தை கிரகித்ததென்று கொழம்பு பத்திரிகையில் கண்டிருக்கிறது.

## அறிக்கை.

நமது மெம்பர்களும் கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிசமாக "தீன்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினால், அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச

தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ் பிரதியாயின் நான்கும் ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி----என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றி பெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணை புரிவார்களென்று நம்புகிறோம.

இந்தியாவிலுள்ள

சுவக்கியாணிகளை

### மதிராஸ் சிக்கியுலர்சோசைட்டியில்

மெம்பர்களாகச் சேரும்படி

கேட்டுக்கொள்ளலாகின்றது.

## கையொப்பநேயருக்கு

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறுதவர்கள் உடனேதெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

—o—

உள்ளூர்மெம்பர் - மூன்றுமாசத்திற்கு—ரூ 3— 0—0

வெளி ,, ,, —ரூ 1—14—0

செலுத்தவேண்டும். அப்படி சேருகிறவருக்கு "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகையாவது, "தத்துவவிவேசினி" யாவது இலவசமாக அனுப்பப்படும்.

## தத்துவவிவேசினி

**நான்குபக்கம், பிரதி 1க்கு விலை அணா 1.**

## தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணாவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணா வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத் தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

பத்திரிகைக்கு எழுதும்கடிதமுதலியவிஷயங்களை

மாத்திரம்

சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி

307 - வது நம்பர் வீட்டில்

**பு. முனிசுவாமிநாயகருக்கும் ;**

1886ம் - வருஷ முதல் சந்தாக்களையும்,

இங்கிலீஷ் பத்திரிகைகளையும்,

வேப்பேரி சில்வர்ஸ் ரோட்டில்

மதிருஸ் செகுலர்சொசைட்டி ஆனரரிசெக்ரிட்டேரி

**மெஸ்டர். அப்ஷன்துரை யவர்களுக்கும்**

அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 12.] MADRAS:—SUNDAY MARCH, 20, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## நவீனசாஸ்திரம்.

இப்படிப்பட்ட உபயோகமான சாஸ்திரவிர்த்தியினலே புதபுதுவஸ்துகள் இடைவிடாது கண்டுபிடிக்கப்படுகின்றன. ஒருவஸ்துவை உபயோகிக்கலாமென்று நாம் யோசித்துக்கொண்டிருக்கும்போதே அதைப்பார்க்கினும் சீரான வேமொருவஸ்து அதற்கு பர்த்தியாக வருகிறது. ஓர்காலத்தில் வியர்த்தமானதென்று எண்ணப்பட்டிருந்த வஸ்து இக்காலத்தில எவ்வளவோ உபயோகப்பட்டுவருகிறது. நெல்லூரில் கொஞ்சகாலத்திற்குமுன்னமே முருங்கைக்காய்களை மாட்டுக்குப் போட்டுவந்தார்கள்; தென்தேசத்தார் சிலர் அவ்வூர்போய்ச் சேர்ந்தபின்பு மனிதருக்கு உபயோகமானவையென்று தெரிந்தெடுத்துக்கொண்டார்கள். இப்போது வாள்தூளினது உபயோகம் மிகுதி. சில வருஷங்களுக்கு முன்னமே ஒரு வெள்ளாட்டுத் தோல் கால் ரூபாயும் ஒரு செம்மறியாட்டுத் தோல் நான்கு தம்மிடியும் விற்றது. ஐரோப்பியர்கள் அதைப் பலவாறு உபயோகப்படுத்தத் தெளிந்தமையால் ஒரு செம்மறியாட்டுத்தோல் முக்கால்ரூபாய் ஒரு ரூபாயும் விற்கிறது. மனிதர்கள் புத்திநுட்பத்தால் கண்டறிந்த மின்சாரம் "காஸ்" வாயு, தைலமுதலிய பலவஸ்துக்களின் பிரயோசனத்தை நாம் அறிந்தேயிருக்கிறோம். புதுபுது வஸ்துக்களையும் அவற்றாலாகும் உருவங்களையும் கண்டுபிடிக்காவிடில் உலக வாழ்க்கை சீராய் நடப்பது துர்லபமே. உண்மையான வைரக்கல் செய்யப்படக்கூடுமென்று பலமுறை சொல்லப்பட்டிருந்தது; அதுவிஷயத்தில் எடிம்பரோபட்டணத்திலே இப்போதுதான செய்து பார்த்த பரிசோதனையினால் அப்படிப்பட்ட ஆலோசனை மனப்பிராந்தியல்லவென்று தெரியவருகிறது. இது நிறைவேறின், வைரக்கற்கள் விலையுயர்ந்த பொருளாக மதிக்கப்படுவதொழிந்து, கடையிலுள்ள பூண்டுக்குச்சமானமாய்விடும். இப்படிப்பட்ட மகத்தான பிரயோசனமும் மானிடவிவேகவிசேஷத்தினலல்லவா!

## ஆன்மாவும் சரீரமும்.

மீண்டும் சென்றமதி நமது நண்பர் ஸ்ரீமான் ஸ்ரீநிவாசசாஸ்திரியார் அவர்கள பரிகாசாஸ்திரம் வீணவார்த்தைமுதலிய யாதொன்றும் மருந்திற்குங் கிடைக்கவொட்டாமலெழுதிய சமாதானப்போலிகட்கு யாமெழுதும் மறுமொழி யாதெனின் கூறுவாம்.

### சாஸ்திரியார்கூற்று.

"இவர் திருவாக்கின் பலத்தால் **அவ்வியாப்தி அதிவியாப்தி** இரண்டிலும் **வியாப்தி** யென்ற சொல்லிருததலால், இரண்டும் வியாப்தியா தங்கால், **அசத்து சத்து அதிசத்து** இம்மூன்றும் சத்தும், **அயோக்கியம் யோக்கியம்** இவ்விரண்டும் யோக்கியம் என்றும்........பகுத்தறிவுடையவர் வழங்குவதாய் ஏற்படினும், அவ்வளகப் பகுத்தறிவு தற்காலம் நமது நண்பரிடமே கண்டோம்" என்கின்றார்.

### விடை.

அறிவாலமைந்த விவேகிகளே! அதிவியாப்திதோஷம் அவ்வியாப்திதோஷம் என்னப்பட்ட தோஷங்களிரண்டினையுஞ் சொற்சுருங்கக் கூறவேண்டில் **வியாப்திதோஷம்** என்று கூறலாகுமென்றோமேயல்லாமல் **வியாப்தி** யெனக் கூறலாகுமென்றிலம். இதனை இன்னொருக்கால் பத்திரிகையிற் பார்த்துச் சந்தேக நிவர்த்தி செய்துகொள்ளலாம். இப்படியே அசத்து சத்து அதிசத்து இம்மூன்றையும் சத்தத்திரையம் என்றும, யோக்கியம் அயோக்கியம் என்பதை யோக்கியதாத்துவயம் என்றும் கூறுதலேன் தகாது? மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை என்பனவற்றைச் சொற்சுருக்கமாய் மூவாசையென்றுதமிழிலும் ஈஷணாத்திரயம் என்று சமஸ்கிரதத்திலும் கூறுகின்றிலரா? (முற்பவப் பகைபிற்பவப் பகை இவ்விரண்டும் ஒழியும்) என்னுங் கருத்தை யமைத்து நூலாசிரியர் "ஒழித்திடும் பவப் பகை" என்று கூறிலரா? பாருங்கள் பாருங்கள். ஆதலால் இனியேனும் நமது நண்பர் எவரும் பாஷாவாதப் பாறையில் தலைமுட்டாரெனப் பிரார்த்திக்கின்றோம்.

### சாஸ்திரியார்கூற்று.

"நாம் ஒருதேசமாவது நாத்திகர் நிறைந்தது இல்லையென்று (எழுதியதைக்கண்டு அதனால் நாத்திகருக்கு வருங்குறையாது என்று நமது நண்பர் கேட்டதற்கு யாம் (தேசங்கள் க்ஷேமமடைவது மதங்களின் பிரயோசனங்களில் ஒன்று) என்று முதல் பத்திரிகையிலேயே விரித்தாமாகையால் ஒருதேசம் முழுவதும் நாத்திகம் நிறைந்தால் அங்கு உலகக்ஷேமங் குறையுமென்பது கருத்தாம்)" என்றார்.

### விடை.

பகுத்தறிவுடைய புத்திமான்களே! ஒரு தேசமாவது நாத்திகர் நிறைந்தது இல்லை என்று நமது நண்பர் கூறியதில, நாத்திகர் வெகு சொற்பமெனப் பொருள் விளங்குவதால், நாம் அதனாலே நாத்திகருக்கு வருங்குறையாது என்றோம். இங்ஙனம் கேட்ட வினாவிற்கு அவர் "தேசங்கள் க்ஷேமமடைவது மதங்களின் பிரயோசனங்களில் ஒன்று" எனப் பொருந்தாத உத்தரமளித்தனர். நாம் மனிதரைச் சுட்டிக் கேட்ட கேள்விக்கு தேசத்தைச் சுட்டிக்காட்டுவது விடையாமா? மிடில் இஸ்கூல் பரீக்ஷைக்குப் படிக்கும் வித்தியார்த்திகளும் மனிதரைச் சுட்டிக்கேட்ட கேள்விக்கு இடத்தைச் சுட்டி விடைபகராரே என்றோம். இதற்கு நமது நண்பர் "ஒரு தேசம் முழுவதும் நாத்திகம் நிறைந்தால் அங்கு உலகக்ஷேமம் குறையுமென்பது கருத்து" என்று கூறுகின்றார். இவர் கருத்து இவரது சொற்களால் பிறர்க்கு விளங்கவேண்டுமேயல்லாமல் வேறல்லவாதலால் இவர் "ஒரு தேசமாவது நாத்திகர் நிறைந்தது இல்லை" என்ற வாக்கியத்தில் தேசம் என்பதற்கு என்ன பொருள் கொண்டார்? இடத்தையா ஜனங்களையா? இடத்தையேயாதலால், அதற்குத் தக்க விடைதராமல், அதை யடுத்த வாக்கியத்தில் இவர் "தேசங்கள் க்ஷேமமடைவது மதங்களின் பிரயோசனங்களில் ஒன்று" எனத் தேசமென்பது **ஆகுபெய**ராய்த் தேசத்தாரெனப் பொருள் தரத்தக்க வாக்கியத்தைப் பிரயோகித்து, முன்னதை விட்டுப் பின்னதைமேற்கொண்டு, "உலகம்" என்பது இடத்தையும் உயிர்களையும் குறிக்கும் பதம் என்று தொல்காப்பியரையும் பரிமேலழகரையும் திருவள்ளுவரையும் மேற்கோள் காட்டுவதேன்? [தேசமென்பதை யாம் **இடவாகுபெய**ரென்னாமல் சும்மா **ஆகுபெய**ரென்றது குற்றமென இனிவாதிப்பார்போலும்.] விஷயத்தைவிட்டுச் சொற்களைப் பிடித்துக்கொண்டு வீண் வாதஞ் செயவதினலே பிரயோஜனமொன்றுமில்லை.

### சாஸ்திரியார்கூற்று.

"இவர் ஒற்றுமை என்பது **பலர்** ஒன்றுபட்டு (பொதுவாய் சுகதுக்கங்களை அனுபவிப்பதன்றி,) வேறு யாதென வெண்ணினரோ அறிகிலேம்" என்கின்றார்.

### விடை.

ஒற்றுமை என்பது ஒன்றாந் தன்மை. சகலரும் ஜாதி சமயாதி வேறுபாடின்றி ஒன்றுபட்டுப் பொதுவாய் சுகதுக்கங்களை அனுபவிப்பதவே ஒற்றுமை என்பதற்கு நாம் கொண்ட பொருள். ஜாதிவேறுபாடு சமயவேறுபாடு உண்டானவிடத்து ஒற்றுமை ஒருக்காலும் சித்திக்காது. சமயப்பன்மை ஜாதிப்பன்மை யுள்ளவிடத்து ஒன்றாந்தன்மை எங்கு சித்திக்கும்! சைவர் சமணர் வைணவர் மகமதியர் கிறீஸ்தவர் முதலியவர்கள் அவ்வவர்க்ள்மட்டில் குழுக்குழுவாக ஒன்றுபட்டிலரோவெ

,னின் அப்படிப் பல குழுவினருள்ளமையால அக்குழுவினர் ஒன்றுந்தன்மையடையார்.

விவேகிகளே, மூளையென்பது மனத்திற்கு ஸ்தானந்தான் என்றும் அதற்கு அறியுந்தன்மையில்லையென்றும் சாஸ்திரியார் கூற, அதனமேல் மனம் என்பதுதான் யாது என்று யாம் வினவ; அது அறிவின் தெளிவென்றும், அறிவுயாதெனில், அது புலனுணர்ச்சியென்றும்; புலன்கள் யாவெனின் அவைகருவிகள் என்றும், கூறிவந்த நமது நண்பராகிய சாஸ்திரியாரவர்களைநோக்கி, நாம் மனத்திற்கு இலக்கணம் என்னையென்று கேட்டால்; அதற்கு அறிவின்தெளிவென்பது முதலிய பிரதிபதங்களைக்கூறிவந்தார். இதனைநோக்கி நாம், இவரைக்கேட்பவற்றிற்கெல்லாம் இலக்கணம் கூறுமல் பிரதிபதங்கூறி விலகிப்போகின்றுரோ என்றேமே யொழிய வேறல்ல. கொள்கை வேறுபட்ட இருவரில் ஒருவரது கேள்விக்கு ஒருவர் நேர்விடை கொடுக்காமல எட்டப்போய்விட்டால் விவகாரம் எங்ஙனம் சிக்கறும்? வீட்டின் இலக்கணம் என்னைஎன்றகேள்விக்கு மனை என்பது தானுவிடை? இங்ஙனம் நாமொன்று கேட்கத்தாமொன்று கூறிவந்தாரோ; இதனுலேனும் "மனம்" **பிரத்தியேகப்பொருள்** என்று ஏற்படுகின்றதா பார்ப்போம். நமது நண்பர் மேலே சொல்லிய பிரதிபதங்களைக் கூட்டிப் பொருள்படுத்துங்கால் "மனமென்பது கருவிகளின் உணர்ச்சியின் தெளிவே" யென்றுகின்றது. ஆகவே உணர்ச்சி அக்கருவிகளா? அல்லது அக்கருவிகளைக் கதுவிய பிற பொருள்கள்தாமாமா? ஆகா. ஆதலால் உணாச்சி அக்கருவிகளும் அவற்றைக் கதுவிய பிறபொருள்களு மாகாமல் அவற்றின் தன்மையேயாம். அத்தன்மை அல்லது "அத்தன்மையின் தெளிவு" யாண்டும் பிரத்தியேகமாய் நிகழ்தல் காணுமாதலால் "உணர்ச்சியின் தெளிவாகிய மனம்" பிரத்தியேகப் பொருளென்று காட்டப்படவில்லை.

**சாஸ்திரியார்கூற்று.**

"கடவுளின்மை குறித்து நாம் பார்த்துவரும் சுமார் 4௵ பத்திரிகைக்குள் எழுதினுர் இல்லையாதலால் அவசியம் எழுதவாரோல் அப்புஸ்தகங்களி லுள்ள நியாயங்களால் கண்டிக்கும்பொழுது அவை வெளிசகு வரக்கூடியவையாகும்."

**விடை.**

கடவுள் என்னும் சொல்லிற்கு இதுகாறும் நிராக்ஷேபமாகிய இலக்கணம் கூறினுர் ஒருவரும் இல்லையாதலால், அச்சொல்லிற்கு எமக்கும் பொருள் தோன்றவில்லை. எமக்குப் பொருள்படாத ஒன்றைப்பற்றி அஃது இல்லையென்று நாம் எப்படி எழுதுவோம். ஆதலால் நாம் எழுதப்போகிறதுமில்லை, அதைச்சுட்டி இவர்நூல்களின் நியாயம் வெளிக்குவரப்போகிறது மில்லை. இவரோ அந்நூல்களின் ஆதாரங்களால் கடவுளை நிலைநாட்டுவாரோல் அவற்றின் நியாயா நியாயங்களைப் பார்ப்போம். பகுத்தறிவுடைய நண்பர்களே;

நமது நண்பர் ஸ்ரீமான் சினிவாச சாஸ்திரியாரவர்கள் மனத்தின் இலக்கணம் சொல்லத் தமக்குத் தெரியாது என்று ஸ்பஷ்டமாய் சொல்லிவிடின், பின் மனத்தின இலக்கணம் இதுவென்று சொல்லி, பின்பு அம்மனம சில்காலம்வரையில் குழந்தைக்கு இல்லையென்றும் அக்காலத்தில் ஜீவன்மாத்திரம்உண்டு என்றும் ஸ்பஷ்டமாய்க்காட்டச்சித்தமாகவேயிருக்கின்றேம்.

நமது நண்பர் முன்னம் ஆன்மாவென்பது இதுவென்று அதன் லக்ஷணத்தைக் கூறியலலவா அவ்விலக்கணி இன்னவிடத்திலுண்டு என்று காட்டுதல்வேண்டும்? அங்ஙனம செய்யாமல் பெயர்மாத்திரையில் ஆன்மாவென்று கூறி இங்குண்டு அங்கில்லை என்று சொல்லுதல் முயற்கொம்பை முழம்போட்டேனென்பது போலல்லவா விருக்கின்றது. நாம் கேட்டதொன்றிருக்க, நமது நண்பர் இனியேனும் மந்தமதிகள் மலைவெய்தும்படி வேறுெனறுகூறிவருதலாகிய சொற்சாலங் காட்டாமல் கேட்ட கேள்விக்கு அஞ்சாமல் தக்கவிடை கொடுத்து தமது பத்திரிகையையும் கீர்த்தியையும் பரிமளிக்கச் செய்வாரெனக் கேட்டுக்கொள்ளுகின்றேம்.

## இந்துசமயசாரவிளக்கம்.

### பிரமப்பிரளயம்.

(43-வது பக்கத்தொடர்ச்சி.)

நவீன சாஸ்திரிகள் கூறும் பிரபஞ்ச தத்துவங்களை நாம் அறிவதற்குமுன்னமே நம்முன்னேர்கள் கூறியிருப்பனவற்றை ஆராய்வது அத்தியாவசியகம்.—விநாயகபுராணத்திலே திரிமூர்த்திகள் வரம்பெற்ற படலத்தின் பிரதமத்தில் பிரபஞ்சம்உருவழிந்து ஒடுங்குவதையும் மறுபடி விர்த்தியாவதையும்பற்றிச் சொல்லியிருக்கிறது. அதாவது.—(1) பூர்வத்தில் ஒரு பிரமப் பிரளயமுண்டானபோது, பன்னிரண்டு சூரியர்களும் உதயமாய் நூறுவருடம் மழையில்லாமல் எரித்து, சகத்துக்களையெல்லாம் பஸ்பஞ்செய்து, பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிற ஆதிசேஷனுடைய பணுமகுடங்களைத் தகிக்க, அவனுடைய முகங்களினின்றுங் காளகூட விஷாக்கினி பிறந்து, அந்த அக்கினியும் சூரியாக்கினியும் ஒன்றுகக்கூடி, ஆதிசேடன்முதல் பன்னிரண்டு சூரியர்களையும் எரித்து நீறுக்கி, அவ்வாறு நீறுக்கிய அக்கினிகளினின்றும் சத்தமேகங்கள் பிறந்து நூறுவருடபரியந்தம் மகத்தான பெருமழைபெய்து, அந்தஜலமும் பூமிபஸ்பமும் ஒன்றுகக்கலந்து வாயுஸ்தம்பமாய் நிற்க, அதினின்றும வடவாமுகாக்கினிபிறந்து ஜலத்தையெல்லாம் கிரகித்தது. பின்னர் அவ்வடவாக்கினி பிரசண்ட வாயுவி லொடுங்க, அவ்வாயு ஆகாயத்திலொடுங்கி, ஆகாயம் ஆத்மாவி லொடுங்கி ஆத்மா பிரமாவி லொடுங்கி, பிரமா விண்டுவி லொடுங்கி, விண்டு உருத்திரனி லொடுங்கி, உருத்திரன் மகேச்சுரனி லொடுங்கி, மகேச்சுரன் சதாசிவனி லொடுங்கி, சதாசிவன் விந்துவிலொடுங்கி, விந்து நாதத்திலொடுங்கி, நாதஞ் சத்தியிலொடுங்கி, சத்தி சிவத்திலொடுங்கி, சிவம் பரத்திலொடுங்கி, பரம் பராபரத்திலொடுங்கியது. அப்பராபரமொன்றுமே எல்லாங்கடந்த தத்துவமுடிவிலே பரப்பிரம சொரூபமாகியிருந்தது.

(1) நண்பர்களே, இந்தமட்டில் பரியாலோசிப்போம். இதில் ஏதோ ஒரு பிரளயத்தில் நடந்த சங்கதியைத் சொல்லியிருப்பதாகத் தெரியவருகிறதேயல்லாமல், இதற்கு முந்திய பிரளயத்தின் சங்கதியாகக் காணவில்லை. அதுவரையில் மற்றைப்பதினெரு சூரியர்களும் தங்கள் ஒளியை அடக்கிக்கொண்டு எங்கே மறைந்திருந்தார்களோ? சகத்துகளை பஸ்பஞ்செய்வதற்கு நூறுவருஷகாலமும், மழையினுல் தீயை அவிக்க நூறு வருஷகாலமும் சென்றதாம். விநாயகர் அண்டாண்ட பிரமாண்டங்களையெல்லாம் நினைத்தமாத்திரத்தில் அழிக்கத்தக்க நெற்றிக்கண் ணுடையவரென்று விநாயக புராணத்தில் வேறேரிடத்தில் சொல்லியிருக்கிறது. அவர் தன் சித்தத்தின்படித்தானே அப்பிரளயத்தை அனுப்பியிருக்கவேண்டும்? பிரளயத்தினு நெடுங்காலம் வதைத்ததைப்பார்க்கினும் ஒருநொடியில் எரித்துப்போடுவது சுகுணமாமே. இப்படிப்பட்டவர்தான் பிரளய முடிவுவரையில் ஆன்மகோடிகளை இளைப்பாறத் தன்னுடைய கர்ப்பத்தில் வைத்திருந்தனராம். இவர் செய்த கொடுமையையும் பின்பிவருக்குண்டாகிய சொற்ப அருளையும் நாம் சற்றே யோசிக்கவேண்டும். பீபில்ஸ்பார்க்கிலுண்டான தீ தற்செயலாய் நேரிடாமல், ஒருவனுல் மூட்டப்பட்டதாகத் தெரியவருமாகில், அவனை நாம் என்னென்று நினைப்போம்? புராணிகனுடைய கற்பனை கதையாயிராமல், சகத்துகளையெல்லாம் நீறுக்குவித்த ஒருசண்டாளன் உண்மையாயிருப்பானுகில், அவனை நாம் கடவுளென்று சொல்லுவோமா? அவன் அப்படிச் சுட்டெரித்ததுயாது பிரயோசனத்தைக் கருதி? பூர்வ கன்மமாவது ஒழிந்ததா, இல்லை. (இது சங்கதி பின்னுல்வரும்.) கிரிஸ்துமார்க்கத்திலே, உலகத்தில் பாவம் நிறைந்துவிட, கடவுள் பொறுக்காதவராய், நீதிமானுகிய நோவா என்பவனும் அவனுடைய குடும்பத்தாருமாகிய ஆக எட்டுப்பெயரை ஓர் பேழையில் காப்பாற்றி, மற்றவர்களை சலப் பிரளயத்தினுலழித்து அதுவரையிலுள்ள பாபத்தை ஒழித்தாரென்றும், பின்பு உண்டான பாவங்களை 1886 வருஷத்துக்கு முன்னமே ஏசுக்கிரிஸ்து அவதாரஞ் செய்து தன்னுடைய ரத்தத்தினுலே கழுவிப்போட்டாரென்றும் சொல்லியிருக்கிறது. இதனுலே அதுவரையிலுண்டானபாவமாவது ஒழிந்தது. கிரிஸ்துமார்க்கத்தில் சிருஷ்டிப்பு தொடங்கி உலகத்தின் வயசு ஆறுயிரம் வருஷமாம். அதற்குள் பாவபரிகாரத்துக்கு இரண்டுதரம் முயற்சிசெய்துண்டான அனுபவத்தினுல அக்கடவுள் இனி என்னசெய்வாரோ தெரியவில்லை. ஆயினும் இக்காலத்து மனிதர்கள் அக்காலத்து மடையர்களாயிரார்களாதலால், இவர்களே பிரபஞ்சதத்துவங்களைய

ராய்ந்தறிந்து சாஸ்திரங்களேற்படுத்திக்கொண்டு, உண்மையை புணர்ந்து சீராயொழுகும்படி விட்டுவிடுவார் போலும். இந்துக்கள் சொல்லுகிற சிருஷ்டிகாலம் அப்படிக்கல்ல. அழித்தழித்து சிருஷ்டிசெய்து செய்து எத்தனையோகற்பங்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. இவ்வளவு அனுபவமிருந்தும், பழய மலங்களைப் போக்கி ஆன்மாக்களை நிர்மலமாக்கி, அடிக்கடி படைத்தல் அழித்தலாகிய தனது வீணன தொழிலை நிவர்த்திசெய்துகொள்ள வகைதெரியாத அஞ்ஞான சொரூபியும் ஒருகடவுளோ? ஒருவேளை அவர் இப்படி திருவிளையாடல் புரிந்துகொண்டு ஆனந்தித்துக்கொண்டிருக்கிறாராக்கும். இது నీకు ఒక మాట నాకు ఒక మూట (நீகு ஒக மாட்ட நாகு ஒக மூட்ட) என்பதுபோலத்தான். ஒரு சிறுபிள்ளையும் ஈயைப்பிடித்துப் பிதுக்கி ஒரு துண்டு நூலை இணைத்துப்பறக்கவிட்டுப் பார்த்து ஆனந்தித்துக்கொண்டுதானிருக்கிறான். மானிடர்களை சிருஷ்டித்து, கன்மபாசங்களைத் தொடுத்து இவ்வுலகத்தில் வருத்துவதுமல்லாமல, நரகாக்கினியிலும் விழ்த்தி, (சுடுகாட்டில் வெட்டியான் பிரேதங்களைப் பொசுக்கினல்) இவர் ஆன்மாக்களைப் பொசுக்கி, நரமாமிசபக்ஷணியும் வெறுக்கத்தக்க சண்டாள தொழில் புரிவதைப்பார்க்கிலும், "வேலையிலாவேதன்" என்று தாயுமானவர் சொன்னபடி வேலைவேண்டுமானல்,சமுத்திர சலத்தை இறை கூடையால் இறைத்துக்கொண்டும், அதை மறுபடி தூர்த்தும், பள்ளம் வெட்டிச் சமுத்திரமாக்கியும், மலைகளையும் பூமியையும் சம்மட்டியால் தகர்த்துத் தூசாக்கி ஓரிடத்திலெடுத்துப் போட்டுக் கொண்டும், இவ்வாறு அளவிலாக்காலம் குற்றமற்ற வேலை செய்துகொண்டிருக்கலாமே. கருணாநிதியாகிய கடவுளென்பவரொருவரிருந்தால், அவர் எள்ளளவேனும் உபத்திரவமான காரியஞ் செய்யத்தக்க மூடனுயிருக்கமாட்டார். தானறியாத பொருளொன்றைக் கற்பித்து மூடசனங்கள் கேட்டுச் சந்தோஷித்துத் தன்னை வியந்து பெருமை பாராட்டும்படி, தான் அரிய தவஞ் செய்து உம்பருலகிற் சென்று உபதேசம்பெற்றுத் தெரிந்துவந்ததாக (மகம்மது செய்ததுபோல) நடித்து சில வீணன கதைகளைக் கட்டினவனே பெரிய மூடன்.

சூரிய வெப்பத்தினலே கடல் ஏரி குளம் குட்டை முதலியவற்றினின்று எழும்பும் நீராவிகள் கடித்து மேகக்கூட்டங்களாய் மறுபடி கரைந்து மழையாகவும் பனியாகவும் பூமியின்கண் விழுகின்றனவென்று சிறுவர்கள் வாசிக்கும் பாடபுஸ்தகங்களிலும் காணலாம். அந்தப்படி பன்னிரண்டு சூரியர்கள் வெப்பத்தினல் பன்னிரண்டு பங்கு அதிகமாக ஆவியெழும்பி மழையும்பனியும் பெய்யவேண்டியதாயிருக்க, நூறுவருஷகாலம் மழையில்லாமற்போனதிருக்கட்டும்; நீராவி மேகமாவதொழிந்து, பிரத்தியேகமாய், சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம், என்னும் சப்தமேகங்களிருப்பதாகவும், அவை தேவேந்திரனுடைய ஆக்கினைக்குள்ளடங்கினதாகவும் சொல்லுவது இந்துக்களுடைய சித்தாந்தம். மேலே அவ்வாறு நீருக்கிய அக்கினிகளினின்றும் சத்தமேகங்கள் பிறந்தனவென்றமையால், அந்தக் கற்பமுடிவுக்கு முந்தி மேகங்களும் மழையுமே யில்லையோ, அல்லது நீருப்ப்போன மேகங்கள் மறுபடி உற்பத்தியாயினவோ?—பூமி உருண்டை வடிவாய்ச்சுற்றிக்கொண்டிருக்கிறதென்பதை சர்வத்திர சாதாரணமாய் அறிந்து நம்பிக்கையுண்டாயிருக்க, அதை ஆதிசேஷன் தாங்கிக்கொண்டிருக்கிறானென்கிற பிரமையின்னும் விடவில்லை.—ஜலமும் பூமி பஸ்பமும் ஒன்றாய்க்கலந்து நின்ற வாயுஸ்தம்பத்தி லிருந்து வடவாமுகாக்கினி பிறந்து ஜலத்தையெல்லாம் கிரகித்துக்கொண்டு, அவ்வடவாக்கினி பிரசண்ட வாயுவிலும், அவ்வாயு ஆகாயத்திலும், இவ்வாறாக ஒன்று மற்றொன்றிலொடுங்கி, முடிவில் பராபரமொன்றுமே நிலைத்ததாம். இதில் வடவாக்கினி வாயு ஸ்தம்பத்திலிருந்த ஜலத்தைக் கிரகித்துக்கொண்டபின்பு, அந்தஸ்தம்பத்தில் மிகுதியாகநின்ற பூமிபஸ்பம் ஒன்றிலும் ஒடுங்கக்காணேம். மறுபடி சிருஷ்டிக்கு ஒரு வஸ்துவேண்டுமாதலால் அதற்காக அந்த பஸ்பம நிறுத்திக்கொள்ளப்பட்டதுபோலும்!—கற்பமுடிவில் வடவாமுகாக்கினி பிறந்ததென்றால், அதற்குமுன் அந்த அக்கினியில்லை போலும்; சமுத்திரத்தின் மத்தியில் வடவாக்கினி நின்றுகரையில்லாத ஜலத்தைப் புரளவொட்டாமல் இழுத்துக்கொண்டிருக்கிறதென்கிற சித்தாந்தத்தை நம்பித் தாயுமானவரும் "அக்கடலின்மீது வடவனல் நிற்கவில்லையோ" வென்று கூறியிருப்பதினல்,இப்போது மிருப்பதாக விளங்குகிறது.—ஆகயவெளி ஆத்மாவிலொடுங்கிவிட்டதென்றால், ஆத்மா, பிரமா, விண்டு முதலான தேவதைகளிருப்பதற்கிடமில்லையாதலால், வெளி நித்தியமும் அநாதியுமாகவே யிருக்கவேண்டும். காலமும் அவ்வாறுதான். மேற்படி தத்துவங்களை யோசிப்போமாகில், ஒரு வஸ்து மற்றொன்றிலொடுங்கிற்றென்பதினலே, எதுவும் சுத்தமாயழிந்து இன்மையாய்ப்போகாமல் ரூபம் மாறியாயினும் நித்தியமாயிருக்கிறதென்று விளங்குகிறது.

A. M. (இன்னும்வரும்.)

—o—

## சந்தியாவந்தனம்.

(44-வது பக்கத் தொடர்ச்சி.)

காயத்திரி.

ఓం - తత్సవితుర్వ రేణ్యం, భర్గో దేవస్య ధీమహి, ధియో యోనః ప్రచోదయాత్.

ஓம் * தத்ஸ விதுர்வரேண்யம், பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோன: ப்ரசோ தயாத்.

சூரியனுக்கும், சிவனுக்கும், அத்வைத விசிட்டாத்வைத மதங்களுக்கும், பரப்பிரம்மத்திற்கும் பொருளாகும்படி உச எழுத்துடைய இக்காயத்திரிக்கு உரை செய்வார்கள்.

இ-பொ—1. சூரியன் ஆகாய விரிவில் ஓர் மணிபோல் பிரகாசித்துக்கொண்டு உதயாஸ்தமன மென்னும் பூலோக யாத்திரை புரிபவராக இருப்பதால் அவரைக் கடவுளென்றும், சர்வஜன சுக ஏதுவான மழைக்கு முக்கியகாரணராக இருப்பதால் சவிதையென்றும், பெயர்பெற்று துர்க்கிரியையைப் பகைத்து நற்கிரியையே புரியும்படி நமது புத்தியை தூண்டுகிறவரும், இருளைப் போக்கடித்து பிரகாசிக்கும்படி செய்கிறவருமான பிரகாசம்பொருந்திய சூரியனை தியானிக்கிறேன்.

2. அஞ்ஞான மெனுங் கடலினின்று ஞான மெனுங் கரையேற்றுபவரும், சூரியமண்டல மத்தியில் சஞ்சரிப்பவரும், பிரமணரின் சிரேஷ்டமான தேவதையாக இருப்பவருமான சிவபெருமானை தியானிக்கிறேன்.

3. அகண்டாகாரமான பேரின்பமும், ஜகத்திற்கு உபாதான காரணமும், சம்பூரண சோதியும், அந்தக்கரணத்தில் தத்தர்மாபாசகமான சாக்ஷியும், பிம்பத்தை ஸ்தானமாகக் கொண்டிருக்கும் சாக்ஷிரூபமாகிய பரப்பிரம்மத்தை தியானிக்கிறேன்.

4. பிராணவாயு உள்ளது மில்லது மாகிய ஸமஸ்த இருவகைத் தோற்றங்களாய் ஜகத் கிரீடையினல் ஆநந்தித்த சூரிய மண்டல மத்தியில் சஞ்சரிப்பவரும், தேஜோமயரு மானவருமாகிய விஷ்ணுவை தியானிக்கிறேன். அப்புருஷ உத்தமர் எத்தன்மையரெனின்:—ஹானோபாதானுதி விஷயங்களானஞானங்களை பிரகாசிப்பிக்கிறவர்.

காயத்ரியின் முடி.

ఓమాపో జ్యోతీరసో మృతం బ్రహ్మ భూర్భువస్సువరోమ్.

ஓமாபோ ஜ்யோதீ ரஸோம்ருதம் பிரம்ஹ பூர் புவஸ் ஸுவரோம்.

இ-பொ.—1. ஜலம் தேஜசு அறுசுவை அவிர்ப்பாகம் சாமவேதம் பூமண்டலமுதலிய ஸப்த உலோசங்களாகிய இவை அனைத்திற்கும் கடவுளே மூலபாத்தியராக இருப்பதால் அவ்வனைத்தும் பிரம்மத்திலை ஐக்கியம். பிரம்மம் ஓமென்னும் பிரணவத்தில் ஐக்கியமாகையால், அப்பிரணவமே பிரம்மமெனப்படும்.

2. ஜலம் தேஜசு மற்ற பூதசத்துவங்களும் ஸப்த ஸ்பரிசரூப ரஸ கந்தங்களும், காலம்பிரகிருதி (சடவுள் அனுகைசெல்லுமிடம்) பூர் புவ சுவர்லோகங்களும், மற்ற ச லோகங்களும் பரமாத்மாவின் செயலாக இருக்கின்றன. மந்திரத்தின் முத

* இவ்விடத்தில் பூர்-புவ-சுவஹ என்னும் மொழிகளைச் சேர்த்துப்படிக்கவும்.

விலும் இறுதியிலும் ஓம என்னும் மொழியைக்கூட்டி உச்சரிப்பதினால் அதில் தோற்ற ஒடுக்கங்கள் அடங்கி இருக்கிறதென்பது பொருள்.

காயத்ரியின் அடி.

పరోరజసేసావదోమ్.

பரோ ரஜஸே ஸாவதோம்.

இ-பொ.—சாத்துவித இராசத தாமத குணங்களுடைய பிரகிருதியிலும் அதித (மேற்பட்டவ) ரும் ஓம் என்னும் பிரணவத்தில் சொல்லப்பட்டவருமான பரமாத்மா எனக்கு சுகத்தைத் தரக்கடவது.

శ్రౌతాచమనంకృత్వా ప్రాణాయామ్యపూర్వోక్త...ప్రీత్యర్థం...సన్ధ్యాఙ్గం యథాశక్తి గాయత్రీ జపం కరిష్యే.

ஸ்ரௌதாசமனம் க்ருத்வா ப்ராணாயம்ய பூர்வோக்த...ப்ரீதியர்த்தம்...ஸந்தியாங்கம் யதாஸக்தி காயத்ரீ ஜபம் கரிஷ்யே.

కరన్యాసః.—తత్సవితురఙ్గుష్ఠాభ్యాంనమః, వరేణ్యం తర్జనీభ్యాంనమః, భర్గోదేవస్యమధ్యమాభ్యాంనమః, ధీమహి అనామికాభ్యాంనమః, ధియోయోనఃకనిష్ఠికాభ్యాంనమః, ప్రచోదయాత్కరతలకరపృష్ఠాభ్యాంనమః.

హృదయన్యాసః.—తత్సవితుర్బ్రహ్మాత్మనే హృదయాయనమః, వరేణ్యంవిష్ణ్వాత్మనేశిరసేస్వాహా, భర్గోదేవస్యరుద్రాత్మనే శిఖాయైవషట్, ధీమహిసత్యాత్మనే శ్రోత్రాయ కవచాయహుం, ధియోయోనఃజ్ఞానాత్మనే నేత్రాభ్యాంవషట్, ప్రచోదయాత్సర్వాత్మనేస్త్రాయఫట్, భూర్భువస్సువరోమితిదిగ్బన్ధః.

க. கரன்யாசஹ.—தத்ஸவிது ரங்குஷ்டாப்யாம் நமஹ வரேண்யம் தர்ஜனீப்யாம் நமஹ, பர்கோதேவஸ்ய மத்யமாப்யாம் நமஹ, தீமஹி அநாமிகாப்யாம் நமஹ, தியோயோன: கனிஷ்டிகாப்யாம் நமஹ, ப்ரசோதயாத் கரதல கரப்ருஷ்டாப்யாம் நமஹ.

உ. ஹ்ருதயன்யாஸஹ.—தத்ஸவிதுர் ப்ரம்ஹாத்மனே ஹ்ருதயாயநமஹ, வரேண்யம் விஷ்ணுவாத்மனே சிரஸே ஸ்வாஹா, பர்கோதேவஸ்ய ருத்ராத்மனே ஸிகாயைவஷட் தீமஹி ஸத்யாத்மனே ஸ்ரோத்ராய கவசாயஹும் தியோயோன: ஞானாத்மனே நேத்ராப்யாம் வஷட், ப்ரசோதயாத் ஸர்வாத்மனே ஸ்த்ராயபட், பூர் புவஸ் ஸுவரோமிதி திக்பந்தஹ.

ముక్తావిద్రుమహేమనీలధవళచ్ఛాయైర్ముఖైస్త్రీక్షణైః - యుక్తామిన్దునిబద్ధరత్నమకుటాం తత్త్వార్థవర్ణాత్మికాం - గాయత్రీంవరదాభయాఙ్కుశకశాశ్శుభ్రం కపాలంగదాం- శఙ్ఖంచక్రమథారవిన్దయుగళంహస్తైర్వహన్తీం భజే.

காயத்ரியின் தியான சுலோகம்.—முக்தாவித்ரும ஹேமநீல தவளச் சாயைர்முகைஸ்த்ரீக்ஷணை:-யுக்தாமிந்து நிபத்த ரத்னமகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம்-காயத்ரீம் வரதா பயாங்குச கஸாஸ் ஸுப்ரம் கபாலம்கதாம்-ஸங்கம் சக்ரமதாரவிந்த யுகளம் ஹஸ்தைர் வஹந்திப்பஜே.

ஜெபம்.—ஜெபமென்பது அவரவருடைய வல்லமை (பிரியம்) க்குத்தக்கவளவு முறை காயத்ரியை தியானஞ் செய்தலாம். (உருவேற்றுதலாம்.)

శ్రౌతాచమనంకృత్వా ప్రాణాయామ్యఙ్గన్యాసాదికంధ్యానంచకృత్వా.

ஸ்ரௌதாசமனம் க்ருத்வா ப்ராணாயம்யாங்கந்யாஸாதிகம் தியானஞ்ச க்ருத்வா.

இரண்டாம் பாகம் முற்றிற்று.

M. M.

———o———

## வர்த்தமானசங்கிரகம்.

**டங்காரிட்டாவிலே** சென்றமீ 31௳ காலை 9மணிக்கு பிரன்சு கப்பலொன்று வந்துசேர்ந்து, இரண்டுபடகிலே ஆயுதபாணிகள் வந்திறங்கி, பிரன்சுகொடி ஏற்றி மங்களவெடி தீர்த்தார்கள். இதைக் கேட்டமாத்திரத்தில், கடற்கரையிலுள்ள சோமாலிசாதியார் கலங்கி, ஒட்டகசவாரிக்காரர்களும் குதிரைசவாரிக்காரர்களும் கால்நடைக்காரர்களுமாய் ஓடிவந்து கண்ணுக்கெட்டும் வரையில் நிறைந்துவிட்டார்கள். அவர்களுள் மூன்று சுல்த்தான்களும் அநேக தலைவர்களும் பெரிய தனக்காரர்களும் வந்திருந்தார்கள். இங்கிலீஷ் கொடியில்லாமையைக்கண்டு ஜனங்கள் சற்று பிரமித்தார்கள்.

அவ்விடத்திய விசாரணைத்தலைவராகிய அசிஸ்டாண்டு பொலிட்டிக்கல் ரிசிடெண்டை ஏற்றிக்கொண்டு, மறுநாள் உதயத்தில் புல்தார்பிரதேசத்திலிருந்து இங்கிலீஷ் கப்பல் வந்து சேர்ந்தது. டங்காரிட்டாவிலே இங்கிலீஷ்காரர் சுவரட்சணார்த்தமாக நாலைந்துஜனம் ஸ்தாபித்திருக்கிறபடியால், பிரெஞ்சுகொடி போடுவது (இங்கிலீஷ்காரருக்கும் பிரெஞ்சுக்காரருக்கு முண்டாயிருக்கிற) இன்டர்நாஷனல் சட்டத்துக்கு விரோதமென்று அந்தரிசிடெண்டு ஆட்சேபித்து, பிரஞ்சுகொடிக்குக்கிழக்கே 800 சஜதூரத்தில் இங்கிலீஷ் கொடி போட்டனர்.

பிரெஞ்சுக்கப்பற்றலைவர் கரைக்குவந்து, சோமாலிசாதித்தலைவர்களைச் சேர்த்து ஒரு கூட்டங் கூட்டி ஆலோசனைசெய்ததில், பொலிட்டிகல் ஏஜெண்டினுடைய ஆக்ஷேபனைநிமித்தமில்லையென்றும், பிரெஞ்சுக்கொடிதான் பறக்கவேண்டுமென்றும் தீர்மானித்தார்கள். பிரிட்டிஷ் ஏஜெண்டும் தமது கொள்கையை நிலைநாட்டத் தீர்மானித்தார். அன்று சாயங்காலம் பிரெஞ்சுகப்பல் ஒபாக்குக்கும், இங்கிஷ்கப்பல் ஜீலாவுக்கும் போய்விட்டன. நாளதுமீ 3௳ இங்கிலீஷ்கப்பலில் இருபது இஜிப்ஷன் துருப்புகள் வந்து, இங்கிலீஷ் கொடிமரத்தைச் சுற்றிலுமிறங்கியிருக்கின்றன.

டங்காரிட்டாவுக்கு நூறுமயல்தூரத்திலிருக்கிற ஹாராருக்கு பிரான்சியர்கள் ரெயில்வேபோட எத்தனிப்பதாகவும், சோமாலிசாதியார் எந்தப்பட்சத்தில் தங்களுக்கு அதிக பிரயோசனங்கிடைக்குமோ அந்தப்பட்சத்தில் சேருவார்களென்றும் வதந்தி.—(பாம்பேகேஜெட்.)

**சிலோனிலுள்ளவர்கள்** இந்தியாவிலுள்ளவர்களைப்போல ஜூபிலி உற்சவத்தை சென்றமீ 16௳ நடத்தாமல், மற்ற நாடுகளொப்பந்தம் ஜூன்மீ 20௳ நடத்த உத்தேசித்திருக்கிறார்கள்.

**பாம்பே** பிரிசிடென்சி அசோசியேஷன் என்னுஞ் சபையில், உயர்ந்த படிப்பைக்குறித்து கவரன்மெண்டார் செய்திருக்கிற ஏற்பாட்டை மறுக்க விண்ணப்பங் கொடுத்துக்கொள்ளும்படி தீர்மானஞ்செய்யப்பட்டிருக்கிறது. சென்னை ராச்சியத்திலுள்ளோர் பெரும்பாலார் கடன்வாங்கியாவது ஐம்பமாகக் கலியாணஞ்செய்வதுபோன்ற டம்பத்திற்கு முந்துவார்கள்.

**நீராவி** எந்திரத்தினிமித்தம் நிலக்கரிக்குவதிலாக மிதச்செலவுள்ள தகுதியான புது எரிப்புவஸ்து ஒன்று நூதனமாய்க் கண்டுபிடிக்கப்பட்டது. அதற்கு ஆதாரம் தார்த்தைலமும் அதி உஷ்ணமான நீராவியும் கலப்பதே. இதனாலே நூற்றுக்கு முப்பதுவீதம் கூடிவருமாம்.

**கல்கத்தாவிலே** செய்யப்பட்ட ஜூபிலி பாணவேடிக்கையில் மூன்று பெரிய ஆகாயகூண்டுகள் விடப்பட்டன; அவற்றிலொன்று கல்கத்தாவுக்கு வெளியில் பன்னிரண்டு மயல்தூரத்தில் வாசஞ்செய்கிற சுதேசியாகிய தானிய வியாபாரியின் விழற்கூறைவீட்டின்மேல் விழுந்தது. அந்த உரத்த சத்தத்தைக் கேட்டு வீட்டுக்காரன் வெளியில்வந்து, தன் குடிசையின்மேல் கூண்டுபற்றி எரிகிறதைக்கண்டு அதை எடுத்துப்போடப்பார்த்தான்: ஆனால் அவன் அப்படிச் செய்வதற்கு முன்னமே, தீயானது குடிசை முழுவதும்பறவி, பின்னும் பதினாறு குடிசைகளையும் அவற்றிலுள்ள மிக்க தானியங்களையும் நாசஞ் செய்தது. சுமார் இரண்டாயிரம் ரூபாய் நஷ்டம். பிராணச்சேதமில்லை. அந்த கூண்டில் தொங்கக்கட்டியிருந்த ஒரு துண்டுகெடுதாசியிலே, இதைக் கண்டெடுக்கிறவர்கள் தயவு செய்து பாணக்காரர்களிடத்திலே ஒப்பிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

## தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணாவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணா வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத்தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில் பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 13.] MADRAS:—SUNDAY MARCH, 27, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



தெரிந்துகொள்ளாமலும், தெரிந்துகொள்ள முயற்சிசெய்யாமலும், பூர்த்தியாய் தெரிந்துகொண்டவர்களைப்போல நடிப்பவர்கள் எப்போதும் மூடர்களாகவேயிருப்பார்கள்.

பொன் நெருப்பினால் சோதிக்கப்படுகிறது, சிநேகிதன் ஆபத்துகாலத்தில் சோதிக்கப்படுகிறான்.

ஒருவனுடைய குற்றத்தையாராயாதே; உன்னுடையகுற்றத்தைப் பொறுமையோடு ஆராய்ந்துபார்.

துன்பத்திற்கு நல்ல அவிழ்தம் அதை மறந்துவிடுவதே.

## நாணமற்றசெய்கை.

—o—

பயிரங்கத்தில் நாணமற்ற செய்கை செய்யலாகாதென்பதும் நாணமற்ற சொற்கள் பேசலாகாதென்பதும் இக்காலத்தயாவராலும் ஒப்புக்கொள்ளப்படத் தக்கவையே; ஆயினும், வைத்திய சாஸ்திரத்தில் அப்படிப்பட்ட சில சங்கதிகள் விதியில்லாமல் எழுதவேண்டியிருக்கின்றன. பட்சிகளில் காகமுதலிய சிலவற்றின் புணர்ச்சியைக் காண்பகரிது; மிருகங்களில் பூனை முதலிய சிலவற்றின் புணர்ச்சியுமப்படியே. ஆனால் ஊர்க்குருவி முதலிய சில பறவைகளும் ஆடுமாடு குதிரை நாய் முதலிய சில மிருகங்களும் கண்டவிடத்தில் நினைத்தபோது புணர்வதைப் பார்க்கிறோம். இதற்குக் காரணமென்னை? ஆஸ்திகர்கள ஞானபூரணனென்று கூறும் கடவுளினது சித்தம் அப்படியிருக்கிறதாக்கும்! அவ்விதச் செய்கையில் அப்படிப்பட்டமிருகாதிகளை தர்மார்க்கவழிப்போக்கர்களும் சிறுவர்களும் நின்று பார்த்துகொண்டு களிப்படைகிறார்களே; இதை அக்கடவுள் கண்ணுறுதிருக்கின்றனரோ! உண்மையாய் அப்படிப்பட்ட கடவுளொருவரிருப்பாராகில், அவர் நாணமுற்ற மிருகஜாதிகளுக்கு உணர்வு ஊட்டியதுபோல நாணமற்ற மிருகஜாதிகளுக்கும் ஊட்டியிருக்கலாமே; அப்படிப்பட்ட ஸ்தலங்களை வஸ்திரமுதலியவற்றால் மூடிக்கொள்ள அதற்குவேண்டிய செடிசெட்டுமுதலிய வஸ்துகளையும் அவற்றை உபயோகித்துக்கொள்ள அறிவையும் மானிடர்களுக்கு ஈந்தருளியதுபோல மிருகங்களுக்குத் தாம் கொடாதிருப்பதை இப்போதாவது அவர் தெரிந்துகொண்டிருப்பதால், மானிடர்களுடையதிருஷ்டிக்குத் தென்படாதபடி மிருகங்களுக்குரிய அந்தஸ்தலங்கள் தோலினால் மறைந்திருக்கத்தக்கதாக இனியாவது சிருஷ்டி செய்யலாகாதா? கடவுளினுடைய திருவருளை நாம் கண்டறியக்கூடாமை, அவருக்குச் சித்தமுண்டானால் அப்படியே செய்வாரென்று மதுரமான வார்த்தைகள் சொல்வார்கள் போலும். இதனாலே, ஆதியில் மனித உற்பத்தியுண்டானபோது, மானிடர்கள் மிருகங்களைப்போலவே நிர்வாணிகளாயிருந்தார்களென்றும், நாள் செல்லச்செல்ல நாணமென்பதுதோன்ற, இலை, தழை, புல் தோல்முதலியவற்றால் மூடிக்கொண்டார்களென்றும், அறிவு விளங்க விளங்க, அந்தந்த தேசத்தில் கிடைக்கும் பொருள்களுக்கேற்ற முரட்டு உடைகள் செய்துகொண்டார்களென்றும், நாகரீகம் வளரவளர, அவற்றை நாணயமாகச் செய்து சிரேஷ்டபடுத்திக்கொண்டு வருகிறார்களென்றும் தெரிந்து தெளியலாமே.

சிலவிஷ்ணுவாலயங்களிலே கடவுளர்கள் மலோபாதை செய்தபாவனையாக,பிராமணர்கள் விக்கிரகங்களுக்குக்குதமிருப்பதுபோல எண்ணிக்கொண்டு அவ்விடத்திலே சந்தன உருண்டையை மலம்போலத் திரியாகப்பிழிந்து அப்புற மெடுத்துவிடுகிறார்கள். ஸ்திரீவிக்கிரகங்களுக்கும் இவ்வாறுதானே. இந்த மூடச் செய்கையை நாணமற்ற செய்கையென்று சொன்னாலுஞ் சொல்லலாமே.

## பாலர் முன் பகடிகள்.

குட்டுதற்கோ பிள்ளைபாண் டியனிங்கில்லை
　குறும்பியள வாக்காதைக் குடைந்துதோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லியில்லை
　இரண்டொன்றாய் முடிந்துதலை யிறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை
　விளையாட்டாய்க் கவிதைதனை விரைந்துபாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைகளுண்டு
　தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே.

என்று கூறியபடிக் காசுத் தம்பிரான் உரைக்கிணங்கச் சில பத்திரிகாசிரியர்கள் தற்காலம் ஏற்பட்டுத் தற்கால கல்விமான்கள் பெரும்பாலும் மேனிகுலைந்து வைதவ்வியமடைந்த பாஷைகளிற் பயின்றிராது அரசு பாஷையையே தேடிக் கற்றனராதலாலும், அங்ஙனங் கற்றவர்களால் அசட்டை செய்யப்பட்ட பாஷைகளிற் பிரசுரமாகிவரும் பத்திரிகைகளையும், அவற்றிற்கு ஆசிரியத்தன்மைபூண்டொழுகும் பத்திரிகாசிரியர்களையும் பொருட்படுத்தாதிருக்கின்றமையாலும், அப்பத்திரிகைகளிற்பிரசுரித்துவரும் டம்பவாசகங்களையும் தற்புகழ்ச்சியையும் அநியாய விருத்தங்களையும் கண்டு கண்டிக்கின்றிலர். ஆனால் மேற்சொன்ன அவ்வைதவ்விய பாஷையிற் பயின்றோர்தாமும் ஏன் கண்டிக்கின்றிலரெனின், அவர்களுக்கு வேறு பாஷா சாஸ்திரங்களோடு தங்கள் சுபாஷையிலுள்ள சாஸ்திரங்களை ஒப்பிடவும் அங்ஙனம் ஒப்பிட்டு விசேஷா விசேஷங்களைக் காணவும் தேற்சிபோதாமையால், "பொரிமாவை மெச்சும் பொக்கைவாய்க் கிழவிபோலும்" "எறும்பின் கண்ணிற்கு எருமை மூத்திரம் ஏகப்பெருவெளி யென்பதுபோலும்" பாஷா பயிற்சியில்பாமரராய்ப் பாலர்போல்வாரைப்பகட்டித் தற்புகழ்ச்சி செய்துகொண்டுஜீவிக்கின்றார்கள். இவர்கள் சொற்சாலத்தின் ஆபாசத்தையுணருஞ் சத்தியற்ற பேதைச்சனங்கள் இவர் இவ்வளவு பட்டபடப்பாய் மூச்சுவிடாமல் வாயில் ஈ நுழையாமல் பேசுகின்றாரே, இவர்தான் உப்பில்லாமல் கலக்கஞ்சி குடிக்கவல்லார், இவரையொப்பார் யார் இருக்கின்றார்கள், இவர் ஓர் அவதாரமாக்கும் என்று மெச்சிப்புகழ்ந்து மேன்மை பாராட்டுகின்றார்கள். இங்ஙனம் வஞ்சிக்கப்பட்ட ஏழைமதிகளை நோக்கி யாரேனும் சிறிது நியாயங்கூறி மறுப்பின், இது கலிகாலம் என்றும், கலியின் கொடுமையென்றும் தங்களுக்குள்ளேதாமே பரிகாரம் செய்துகொண்டு திருப்தியடைகின்றார்கள். காலத்தின்மேலே கொடுமையை ஏற்றுகின்ற இவர்கள் புத்தியே புத்தி! கலியுகத்தில்தானா நடக்கத்தகாதனவாய அக்கிரமங்களெல்லாம் நிலைபெற்றுவருகின்றன!

## தத்துவப்பிரமாணங்கள்

அடியில்வரும் நான்கு பிரமாணங்களை மனதில் நன்றாய்ப் பதிந்துகொண்டு அப்பிரமாணங்களுக்கேற்ற உதாரணங்களையும் தெரிந்துகொண்டால், உலகத்தில் தோற்றமாகிற ஒவ்வொரு காரியத்திற்கும் காரணம் இன்னதென்று சொல்லலாம்: எவ்வாறெனின், கல் மணல் உருண்டுபோகாமல் இருக்க ஜலம் உருண்டுபோகவேண்டியதென்னவென்று கேட்கின், ஆத்திகர் மணலை உருண்டுபோகாதபடியும் நீரை உருண்டுபோகும்படியும் கடவுள் விதித்தாரென மொழிகின்றனர். தத்துவத்தை யேற்றபடி ஆராய்ந்த நிறைமொழிமாக்தரோ இன்னின்ன காரணத்தினாலே உருண்டுசெல்லுகிறதென்று பகருவரேயன்றி ஆத்திகர்களைப்போல சொல்லார்கள். ஆகையால், அந்தந்தக்காரியத்தின் சத்துவின்போக்கு எப்படியோ அப்படியே

அதுஅது செல்லும்; அவற்றைத் தெரிந்துகொள்வதற்குமுன்னே தத்துவப்பிரமாணங்களைத் தெரிந்துகொள்வது ஆவசியமாகும்.

உலகத்தில் நம்முடைய கண்ணுக்குத் தோற்றுகிற வனைத்தும் 4 பிரதானபிரமாணங்களினாலே விளங்கும். எனவையெனில், அணு, கவர்ச்சி, தள்ளுதல, தன்நிலைமை காத்தல் ஆகிய நான்கே. இவைகளைத் தத்துவப்பிரமாணங்களென்பார்கள். இந்நான்கும் பூலோகத்தில் தோற்றுகிற எவ்வித அரிதான பொருள்களையும் அறிந்து வகுக்கிறதற்கு அநுகூலப்படுகின்றன. இவற்றுள்—

1. அணு (Atom) சடப்பொருளாயிருக்கிற யாவும்மிகுந்த நுட்பமும், அழியாமையுமுள்ள மாறுப பங்குகளாக வகுக்கப்படும். அப்படிப்பட்டபங்குகளுக்கு அணுக்களென்றுசொல்லப்படும். உதாரணம்—ஒரு தங்கத்துண்டையெடுத்து, அதைராவினாலும், அறுத்தாலும், கரையச்செய்தாலும், அதைஎத்தனைபங்காக்கிக்கொண்டாலும், அதன்ரூபம் மாறினாலும், அதிலுள்ள ஜடமாகியதங்கம் மாறாமல், பின்னும் அது தங்கமாகவே இருக்கும். பிரிக்கப்பட்ட அந்த அணுக்களைச்சேர்த்தால், அது முன்போல ஒருதுண்டு தங்கமாகவே யிருக்கும்.இப்படிச்சடபொருளை அநேகநுட்பமான பிரிவுகளாய்ப் பிரிக்க அந்த நுட்பமான பிரிவுகள் இனிப் பிரிக்கக்கூடாதபடிக்கு நிற்கின்ற அந்தமாகிய பகுதியே அணுஎன்று சொல்லப்படும்.

2. கவர்ச்சி (Attraction) மேற்சொல்லிய அணுக்கள் தனியேயிருந்தாலும், சேர்க்கையாயிருந்தாலும், மற்றெல்லாத் தனி அணுக்களோடும் சேர்க்கையோடும் சேர்ந்துகொள்ளும் தன்மையுள்ளதாம். உ-ம்.—கட்டியாயிருக்கிற எந்தப் பொருளினுடைய அணுக்களும் ஒன்றோடொன்று பற்றுதலாயிருக்கிறதும், பூமியில் இருக்கிற ஒரு கற்பாளம் பூமியோடு ஒட்டுகிற சேர்க்கையால் கனத்திருக்கிறதும், சமுத்திரத்திலுள்ள ஏற்றமாகிய அலை சந்திரனைநோக்கி எழும்புகிறதும், ஆகிய இவ்வகையுள்ளதெல்லாம் பாசமென்றும், கவர்ச்சியென்றும் சொல்லப்படும். பொருளகளுடைய அணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற பாசத்தைப் பற்றுக்கவர்ச்சி என்றும், பூமியின்மேல் பாரமாக ஒட்டிய பொருளினுடைய பாசத்தையும், கடலினுடைய அலை சந்திரனைநோக்கி எழும்புகிற பாசத்தையும் திண்மைக்கவர்ச்சி என்றும் இழுப்புக்கவர்ச்சி என்றும் சொல்லலாகும்.

3. தள்ளுதல் (Repulsion) சேர்க்கையாயிருக்கிற அணுக்களுக்குள்ளே ஊஷ்ணத்தை ஊட்டினால், முன்னுள்ள பற்றுக்கவர்ச்சி தளர்ந்துபோக, அந்த அணுக்கள் ஒன்றுக்கொன்று விலகவும், அல்லது ஒன்று மற்றொன்றைத் தள்ளவுந் தக்கதன்மையுள்ளதாம். உ-ம்.—நீர்க்கட்டிக்கு ஊஷ்ணத்தை யேற்றினால், அதுதண்ணீராயிளகிப்போம், தண்ணீருக்கு உஷ்ணத்தை யேற்றினால, அதன்அணுக்கள் ஆவியாகப் பிரிந்துபோய்விடும். வெடிமருந்துக்கு தீயைக் காண்பித்தவுடனே அது ஆவியாக விரிந்து சப்தமாய்வெடிக்கிறது. இவ்வுதாரணங்கள் அணுக்களுடைய தள்ளுதலின் பிரமாணத்தைக்காண்பிக்கின்றன.

4. தன்னிலைமைகாத்தல் (Inertia) உலகத்தில் அசையாதிருக்கிற பொருள் என்றைக்கும் அசையாமலும், அசைந்துகொண்டிருக்கிறபொருள் என்றைக்கும் அசைந்துகொண்டிருக்குந்தன்மையுள்ளதாம். உ-ம்.—குயவன் தன சக்கரத்தை சுற்றாமல் சும்மாயிருக்கிறபோது அது அசைவின்றி சும்மாயிருக்கும். அதற்குப் பலவந்தமாய் விசைகொடுக்கும்போது விரைவாய்ச்சுற்றும். அது விரைவாய்ச் சுற்றுகிறதற்குத் தக்கதாய் அதை நிறுத்துகிறது வருத்தம். அப்படியே உலகத்திலுள்ள எல்லாப் பொருளகளுக்கும் ஒருவகையான இணங்காமை யுண்டு. சும்மாயிருக்கிற பொருளகள் சும்மாயும், அசைந்துகொண்டிருக்கிறவைகள் அசைந்துகொண்டி மிருக்கும். அசையாதவைகளை அசைவிக்கவும், அசைகிறவைகளை அசையாதிருக்கச் செய்யவும் யேதாவது சத்துவேண்டும். குயவனுடைய சக்கரம் சும்மாயிருக்கையில் அது சுற்றும்படியாய் குயவன்கையால் விசை கொடுக்கிறதைக் காண்கிறோம். ஆனாலுங் கொஞ்நேரத்திற்குள்ளாக அது மற்ற எதுவினாலே தடுக்கப்படாமலிருக்க, வரவரத் தானாய் நின்றுகொள்ளுகிறதைக் காண்கிறோமேயென்று ஆட்சேபித்தால், அது தடையில்லாமல் தானாய் நின்றுகொள்ளுகிறதென்று சொல்வது தப்பிதம். அதற்கு இரண்டுவகையான தடைகளுண்டு. க. ஆகாயத்திலுண்டாகிய தடையும், உ. சக்கரம் ஆடுகிற அச்சுத்தேய்வினாலுண்டாகிய தடையுமுண்டென்று அறிக.

M. M.

---

## கண்ணிகள்.

---

ஞானகண்ணியிவை செப்புதற்கியாவனாயான்
போனகாப்பாகப் பெற்றனைப்பேன்பேசேடா. (1)
நயமானவாச்தீகர்கள் நவிலுமந்தவஸ்துவையே
சுயஞானியானொருவன் சொல்லுமிதைக்கேளடா. (2)
உனக்குள்ளேநானிருப்ப துண்மையெனினிந்தபெரு
மனசசலேப்பதுக்கென வழக்காடிவருவேண்டா. (3)
எனக்குள்ளேநீயிருக்கி னெம்பிரானென்பதுமார்
பினத்தலீதுவெனவே பின்னும்வழக்காடுவண்டா. (4)
உன்னாலேயான்பிழைத்தா லுனக்கேகவலையன்றி
என்னாலேயேதுமுண்டோ வென்றவந்துநிற்பனடா. (5)
என்னாலேயேதுமின்றே லெனக்குசகவலையுண்டோ
உன்னாலேவந்ததெனறே யுனக்குமிதுவுண்மையடா. (6)
செயலெல்லாமுன்னதெனின் செயல்தானெனக்குமுண்டோ
செயல்தானிருப்பதினாற் செயலிதுவுமாருச்கடா. (7)
நானியற்றுஞ்செயலெல்லாம் நாதனீயுன்னதென்றால்
ஏனிந்ததுன்பமெனக் கேதுக்கிருப்பதடா. (8)
எல்லாமுன்செயலென்னி னென்செயலுமுன்செயலே
அல்லாம லென்செயலு மார்செயலோசொல்லேடா. (9)
அணுவுநின்செயலன்றி யசையாதெனவுரைத்தால்
அணுவுமிடந்தரா தனிவழக்காய்வருவேண்டா. (10)
வழக்காடவேண்டாமுன் வாதனைகளத்தனையும்
கிழக்கதையென்றேமுடித்துக்கிட்டேநெருங்குவண்டா. (11)
வாதமிடுகின்றவிந்த வழக்கெல்லாமுன்செயலே
நாதனீயில்லையென்றால் நான்விடுக்கமாட்டேண்டா. (12)
ஆண்டவனென்றேனு மதட்டியுனைக்கின்றோ
தாண்டவமிட்டோடிவந்து தடுத்துவழக்காடுவண்டா. (13)
கடவுளெனல்கண்டசொல்லோ காதினாற்கேட்டசொல்லோ
திடமாயுனைத்திடென திட்டிவழக்காடுவண்டா. (14)
காணாமற் கேட்டசொல்லைக் காரணமாய்க்கொண்டேதான்
வீணவாதமிடல் விதியோவென்றுரைப்பனடா. (15)
வாய்ஞானம்பேசுவதால் வருமோசுகப்பேறு
நாய்போற்குலைப்பதென்ன ஞானமென்றுசொல்வேண்டா. (16)
வெறும்பேச்சைக்கற்றுசிலர் வேதாந்தமென்றுசொல்லி
குறும்பாகப்பேசுவதாற் குணமுண்டோவென்பேண்டா. (17)
வாய்வாதக்கள்ளரவர் வாதனைகளத்தனையும்
பேய்க்குரலென்றேயெதிர்த்துப் பேசியே நிற்பேண்டா. (18)
மெச்சியேயவர்பேச்சின் மேட்டிமையைக்கண்டவர்க்கு
எச்சிற்கலையிடுவா ரெவரென்றேநகைப்பனடா. (19)
கய்தவங்கள்கொண்டேயவர் கடைத்தேறலாமெனவே
செய்தவங்களில்லாச்செயலைநானறிவேண்டா. (20)
சர்வமுமவன்படைப்பாய்ச் சகத்தோர்கள்கூறுகின்றார்
சர்வமுமவனதென்றால் சம்மதிக்கமாட்டேண்டா. (21)
சர்வமுமவனதென்று சாற்றுவரேலையையோ
கர்மமெனக்குமுண்டோ காட்டுமென்றுநிற்பனடா. (22)
அவன்படைப்பேயனைத்து மென்றாலோவப்போது
இவனுமவன்படைப்பா யியம்புவேன்பாரேடா. (23)
நானுமவன்படைப்பாய் நாட்டுமந்நியாயத்தால்,
நானுமவன்சொற்செயற்கு நடுங்கிநிற்கவேண்டுமடா (24)
வேண்டாதவன்பேச்சை வெட்டியேபேசிநிற்கும்
ஆண்டான்நிலையையா னடைந்ததுவுமென்னேடா. (25)
நானவன்படைப்பாயின் நானவனடிமையன்றோ
நானடிமையல்லவென்றே நாட்டியேநிற்பனேடா. (26)
என்னையவன்படைக்க ஏவினதாரையையோ
என்னையவன்படைப்பென்னி னெவ்விதமாய்நம்புவண்டா.(27)
நம்பும்படிசெய்தலன்றோ நல்லோர்கட்கழகன்றி
வம்பிடுவதாரெனவே வழக்காடிநிற்பனடா. (28)
என்னையவனென்படைத்தா னெங்கேயிருந்தெனிலோ
பின்னையவர்விடைகள் பிதற்றலேயென்பேண்டா. (29)
என்னைப்படைத்தவ னென்றந்தையல்லாமல்
என்னைப்படைக்கவவ னெவனென்றேகேட்பனடா. (30)

கிருஷ்ணகிரி உண்மைவிரும்பி.

(இன்னும் வரும்.)

---

## சங்கம்.

---

உலகத்தில் சகல விவகாரங்களும்சேர்க்கையாலேயே பிரகாசமடைகின்றனவென்பது நிர்விவாதமான விஷயம். சேர்க்கை யென்பது உலகத்தில்லாவிடின் உலக விவகாரம் அதற்குமுன்னரே இல்லையாய்விடும். நாம் நமது எண்ணத்தைப் பிறர்க்குத் தெரிவிக்கவல்ல சக்தியைப்பெற்றதும், பிறர் எண்ணங்களை நாம் உணரும்படியான கியானத்தையுற்றதும், சேர்க்கையின் வல்லபத்தாலல்லாமல் வேறுவல்லபத்தாலன்று. நாம் ஒரு கருமத்தை முற்றுவிக்கும்படி மனபிலாஷங்கொள்ளின், அக்கொள்கை ஈடேறுவதற்கு நமது கை கால்முதலிய உறுப்புகளும், கண் மூக்குமுதலிய விந்திரியங்களும், இவற்றிற்குத் தத்துவத்தையுண்டாக்கவல்ல உணவாதிகளும், இவற்றை மனம் செலுத்தும்வழியிற் செலுத்தப்பழக்கமும் ஆகிய சகல சேர்க்கை விசேஷத்துவங்களும் இன்றியமையாது வே

ண்டற்பாலனவாயிருக்கின்றன. ஒருவன் உலகத்தில் சீவிக்கவேண்டில் அவன் மனத்தோடு சருவிகாணுதி உறுப்புகள் உடனொத்து இயங்கவேண்டியது ஆவசியகமாக விருக்கின்றது. ஒருவன் இச்சித்த தனஜீவாக்ஷணார்த்தம் (தேகவருத்தத்தைப் பாராட்டாதபடி) அவனது கண்ணினுடைய உதவியால் கால் செல்லவேண்டிய விடத்திற்குச் சென்று, கை செய்யவேண்டிய கருமங்களைச் செய்து, வாய்பேசவேண்டிய விஷயங்களைப் பேசிப் பெறவேண்டிய ஊதியத்தைப்பெற்று, பண்டமாற்றஞ் செய்து, குக்ஷிக்கிட்டு, ஜீவரக்ஷணையடைந்தால் சுகமுறுவது அவன் தேகமுழுதுமேயன்ரு? அதுபோல, மானுஷீகமென்னும் தேகத்திற்கு உறுப்புகள்போலுமுள்ள நாம் ஒவ்வொருவரும் உடனொத்து மனமொழிமெய்களிணங்கச் செய்யவேண்டிய சுகஹேதுவாகிய கருமங்களைச் செய்தாலன்ரு மானுஷீகப் பொதுநலம் மலிவடையும்? மானுஷீகப பொதுநலம் மலிவெய்தினுலல்லாமல், நாம் ஒவ்வொருவரும் தனித்தனி சுகமுறுதல் கூடாதே; எங்ஙனமெனின் வயிற்ருேடு வைராக்கியங்கொண்டு, கைகால்முதலிய உறுப்புகள் தத்தம்மாலாகிய தொழில்களைச்செய்து குக்ஷிக்கிட்டு இரக்ஷிக்காவிடின், கைகால்கள் வலுவிழந்து, தேகமுந் தொழிலிழந்து, சித்தமுஞ் செயலழிந்து முற்றும் நாசமாயழிந்துவிடுவது பிரத்தியக்ஷமன்ரு? தேகத்தினது உறுப்புகளாகிய கருவிகாணுக்கள் ஒத்து இயங்காவிடின், தேகமுற்றும் நாசமடைவதுபோல், மானுஷீக உறுப்புகளாகிய நாம் ஒவ்வொருவரும் ஒத்து ஒருங்கமைந்து இயங்காவிடின், மானுஷீகமே முழுதும் நாசமடையுமென்பதற்கு வேறு தாட்டாந்தமும் வேண்டற்பாலதோ? ஆதலால் தாம்தாம் சுகமடையவேண்டுமென்னும் சித்தத்தையுடைய ஒவ்வொருவரும் மானுஷீகத்தையும் மானுஷீக சுகத்தையும் மலிவிக்க ஒருங்கு சேரவேண்டியது ஆவசியகத்தில் அதியாவசியகமும், பிரதமத்திற் பிரதமமும், பிரதானத்தில் அதிபிரதானமுமான காரியம். சம்பந்த நியாய அளவில் நின்று பேசுங்கால், ஒருவரால் தனியே ஆகத்தக்க காரியம் ஒன்றுமேயில்லை, பலர் சேர்ந்தபோது ஆகாதகாரியமும் ஒன்றுமேயில்லை! ஆதலால் சுகவிர்த்தியை விரும்பும் அதிவிவேகமும் பெருந்தகையுமுடைய நண்பர் சகலருஞ் சேர்ந்து ஓர் சங்கமாவது அதியாவசியகம். "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" நம்மவருள் ஒற்றுமை இல்லாமலே அநேகர் கியானசிரஞ்சீவிகளாகவே இருக்கின்ருர்கள். ஐரோப்பியர்முதலிய தேசத்தார்கள் ஒற்றுமையினுலேயே நாளுக்குநாள் வளர்பிறைபோல கியானவிர்த்தியடைகின்ருர்கள். இதுவே நம்மனைவருக்கும் அனுபவதாட்டாந்தமாகும்.

## நாமதாரணம்·

உலகத்திலுள்ள மானிடர்களிற் சுவஞானமில்லாதவர்களாலேற்படுத்தப்பட்ட மதங்களை யனுசரிக்கின்றவர்களில் நாமதாரிகளென்னும் பெயருடையோர் பூமியிலே விளையு மோர்வகைப் பசையுள்ள * வெண் மண் விளைவுற்றிருக்குமிடஞ் சென்று, இந்திரதிக்கையாயினும் குபேரதிக்கையாயினும் நோக்கி நின்று நாராயண நமவென்னும் மந்திரத்தை நாவினுல் நூற்றெட்டுதரஞ் சொல்லி சலத்தை அம்மண்ணின்மேல் புரோக்ஷித்து அம்மண்ணை மண்வெட்டியினுலாயினுங் கைக்கோலினுலாயினுங் கெல்லி வேண்டியமட்டுங் கூடைகளில் நிறைத்துத் தங்கள் கிரகங்களுக்குக் கொண்டுபோய் இடித்துத் அரித்து அம்மண்ணினுள்ளே பச்சரிசிக் கஞ்சியையாயினும் பசைகளோடு கலந்த நீரையாயினும்விட்டுப்பிசைந்துருட்டி ஒவ்வோரங்குலப்பிரமாணமாகவும்நாற்சதுரமாகவுஞ்செய்து சூரியகிரணத்திலே காயவைத்து அம்மண்ணுங்கட்டிக்கு நாமக்கட்டியென்றுபெயராக் கற்பித்து, அம்மண்ணுங்கட்டியையும் அம்மண்ணுங்கட்டியங்குலப்பிரமாணமோர் தென்னீர்க்கையும் பட்டினுற் செய்யப்பட்ட பைகளிலேனும் ஓலைகளினுற் செய்யப்பட்ட சிறுபெட்டிகளிலேனும் பத்திரப்படுத்தி காலைமாலைகடோறும் கை கால் முதலிய அவையவங்களைச் சுத்திசெய்து, கிழக்குமுகமாயினும் வடக்குமுகமாயினும், இருள் இடி முதலிய உற்பாத நேரங்களினும் பிறவூர்க்குச் சென்றபொழுது திக்குத் தெரியாத காலங்களினுமெம்முகமாயினு மிருந்து சலபாத்திரத்திலுள்ள சலத்தை உத்தரணியென்னுஞ் சிறு கரண்டியினு லுமுழுந்தப்பிரமாணநீரா வலவுள்ளங்கையில் விட்டுக் கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த என்னு மந்திரங்களைச் சொல்லி மூன்றுதரமாசமித்து விஷ்ணு, மதுசூதன, திரிவிக்கிரம, வாமன, ஸ்ரீதர, ஹிருஷீகேச, பத்மநாப, தாமோதர, சங்கர்ஷண, வாசுதேவ, பிரத்தியும்ன, அனிருத்த, புருஷோத்தம, அதோக்ஷஜ, நாரசிம்ம, அச்சுத, ஜநார்த்தன, உபேந்திர, ஹரேஸ்ரீகிருஷ்ணுயநம, என்னும்விஷ்ணுவினுடைய பெயர்களை வாக்கினுற் சொல்லி, மூக்கு முதலிய அவயவங்களைக் கைப் பெருவிரலினுற் ருெட்டுக் கும்பிட்டு

* வெண் மண் பூமியின் வேற்றுமைகளினுல ஆறு அல்லது குளமுதலியவைகளில் விளையும்.

நாமக்கட்டி யென்னும் மணுணங்கட்டியை உரைத்துக் குழைத்துத் தென்னீர்க்கினுல் கோணல் முதலிய குற்றங்களில்லாது நெற்றியிற் புருவரோமத்தடிகளினின்றும் மேல்ரோமவரையும் அரையங்குல அகலமுடைய பாதம்போலடி சிறுக்க நுனிபெறுக்க இரண்டுகீறிழுத்து, அதனடுவே * திருச்சூரணமென்னுஞ் சிவப்புத் தூளைச் சலத்திலே குழைத்து மூக்கு நுனிமுதலாகச் சிரரோமம்வரையு மொரு கோடிழுத்துவிடுகின்ருர்கள். இவ்வாறிழுக்கிறவர்களிற் சிலர் சூலம்போல நாமந்தரிப்பவராம்; சிலர் மர்மஸ்தலம்போன்ற நாமம் பூசுபவராம்; சிலர் ஒற்றைநாமமிடுபவராம்; சிலர் கோபிகை நாமம் போடுபவராம்; சிலர் தென்கலையாம்; சிலர் வடகலையாம். இப்படிப்பட்ட பேதங்களை யுடையவர்களாகி, ஒரே கடவுளைக்குறித்து வேறுவகைப்படாத மண்ணையுஞ் சூரணத்தையுந் தரிப்பவர்கள் வெவ்வேறுவிதமாய் நாமந்தரிப்பதை யுற்றுநோக்கின், விஷ்ணுவென்னும் பிரான் பதிவிரதா ஸ்திரீகளைக் கற்பழித்தலிலே மிகமுயற்சியுடையவனென்பதனைப் புராணங்கள் தெள்ளிதில் விளக்குதலினுலே விஷ்ணுவினிடத்துப் பிரீதியுள்ளார் மர்மஸ்தலநாமத்தையும் விஷ்ணு மோகினியுருவெடுத்து சிவனோடு வாழ்ந்திருத்தலினுலே சிவவிஷ்ணுக்களிடத்துப் பிரீதியுள்ளார் சூல நாமத்தையும் விஷ்ணுவை ஸ்ரீயாகவுடைய சிவனிடத்துப் பிரீதியுள்ளார் ஒற்றை நாமத்தையும் விஷ்ணுவின் பெண்டுகளாகிய கோபிகா ஸ்திரீகளிடத்துப் பிரீதியுள்ளார் அவர்களதுபோன்ற கோபிகா நாமத்தையுந் தரிக்கின்ருர்களென்றே கூறவேண்டும். இங்ஙனமுள்ளதை யுள்ளபடி தெளிவாய்க்காட்டியுந்தெளியார்க்குச் சிதம்பரத்திலே சிவன்நடனஞ்செய்யும்பொழுது விஷ்ணுபார்த்துச் சிரித்ததினிமித்தந் துவேஷங்கொண்ட சிவன்விஷ்ணுவினது நெற்றியிலுதைக்க, அவ்வுதையினுலறிவுமயங்கிப்பொழுதங்கிடக்கின்ருனென்றும், அவ்விஷ்ணுவினது நெற்றியிற்பட்டசிவனது பாதங்களையேவெண்மண்ணினுலிடப்பட்ட அடையாளங்களாகவும், அப்பாதங்களின் மிதிப்பினுல் நெற்றியில் பீறுண்டரத்தம் சிவப்புச்சூரணத்தினு லிடப்பட்ட அடையாளமாகவும், மிதியுண்ட அடையாளங்களை மறைத்த விஷ்ணுவுக்கு நாமஞ் சாற்றுவதுமன்றித் தாங்களுந் தரிக்கின்ருர்களென்றும், முன்னோர் காலத்து ராமனுனவன் சீதையைச் சிரமேல்தூக்கிக் காட்டுவழிச்சென்றபொழுது, அவளது மர்மஸ்தானத்தினின்றும நெற்றிவழியாக வழிந்த இரத்தவடையாளத்தையே நாமமாகத்தரிக்கின்ருர்களென்று சகலருக்கும் விளங்கும்படி சைவர்கள் காட்டவும், சிங்கப்பூர் பினுங்கு முதலான வூர்களில் தங்களபிப்பிராய வடையாளங்களைத்தரித்தடிமைகளை விற்றுச் சீவனஞ் செய்யும் வியாபரிகளைப்போல் விஷ்ணு வென்னும் பெயருடையோன் தனதபிப்பிராய நாமங்களைப் பேதைச் சனங்களுக்கிட்டு அடிமைகளாக்கி வியாபாரஞ் செய்திருக்கவேண்டுமென்றும், அக்காலத்தில் விஷ்ணு புத்தியுள்ளவனுனதினுல் பேதைமைச் சனங்களுக்குத் தன்னையே கடவுளென்று போதித்து நாமம் என்னும் விபரீதவடையாளங்களைத் தரிக்கும்படி செய்தானென்றும் பிரமக்கியானிகள் பலசமையத்தவர்க்கு விளங்கும்படி சாத்தவும், இன்னோரன்னவாபாசங்களைப் பலசமயத்தவர் கூட்டிச்சுமிக்கவும், இக்கும்பல்களுக்குள் அணையாது சுவக்கியானிகளின் ஞானக்கினி சுவாலித்தெரித்து உள்ளதையுள்ளபடி காட்டவுமாயிற்று. அங்ஙனம் உள்ளதை யுள்ளபடி விளங்கக் காட்டும் சுவக்கியானிகள் கூற்றை யங்கிகரியாது அசங்கிதமாகிய மண்ணையுந் தூளையுங் குழைத்துத் தரித்தலினுலென்ன பலனை அடைவீர்களோ சுவக்கியானிகளாகவேண்டியவர்களே சிந்தியுங்கள் சிந்தியுங்கள்.

இங்ஙனம், சுவஞானகுரு
பரித்தித்துறை, யாழ்ப்பாணம்.

## ஹிந்துஉடுப்பு விரோதக்கூட்டம்.

இம்மகுடஞ்சூட்டி, இலலிதா பிரஸந்நோதய பத்திரிகையில் எழுதியிருப்பதாவது.—"இவ்வகைக் கூட்டங் கூடுவது ஐரோப்பியர்களுக்கு வழக்கம். இம்மாதிரி ஹிந்துக்கள் கூடியதில்லை. இம்முதற்கூட்டமானது செவ்வையாய் நிறைவேறியதாகவே அறிந்து சந்தோஷிக்கிருேம். சென்ற 9உ இக்கூட்டம் சேதுகோகுலதாஸ் என்பவர் பங்களாவிலே கூடியதாம். ஷ தேதி புதன்கிழமை ஹோலிபண்டிகை முக்கியதினமாகையால், அன்று வழக்கம்போல ஒருவர்மேல் ஒருவர் சிவப்புச் சாயநீரை ஊற்றிக்கொள்வதும் ஒருவர்க்கொருவர் தெருக்களில் அசங்கியமான வார்த்தையாடிக்கொள்வதும் அநாகரிகமென்று தேர்ந்த பணமும் கல்வியும் மிகுந்த சிலசிறுவர் பழையதுர்வழக்கத்தைப் பகைத்து விதம்விதமான விநோத உடுப்புகள் தரித்துக்கொண்டு வேடிக்கை காட்டினுர்கள். இவ்வாறே

* மஞ்சளைத் தொலிபோக்கி எலுமிச்சம்பழ ரசத்தில ஊரவைத்து உப்பச்செய்து சூரியகிரணத்திலே யுலரவைத்து அம்மஞ்சளோடு பொரிகாரமும் பச்சரிசியுஞ் சேர்த்து இடித்துத் தூளாக்குவதே திருச்சூரணமெனப்படும்.

கல்விமான்கள் அநாகரிகமான பழைய வழக்கங்களையெல்லாம் வேரறுத்து வரவேண்டும்." [இதை, 'தொன்மைமறவேல' என ஒளவையார் கூறிய வாக்கியத்திலே, தொன்மை என்பது பழமையெனப் பொதுப்படவிருந்தபோதிலும், 'பழமை' என்னும் அதிகாரத்தில் நட்பைப்பற்றியும். 'பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல், சுற்றத்தார்கண்ணேயுள', என்று சுற்றத்தாரைப் பற்றியும் நாயனார் கூறியபடித் தொன்மையென்பதற்குப் பொருள் செய்யவேண்டியதைவிட்டு, முன்னோர்கள் செய்துவந்த பழமையான காரியங்களிலெதையுங் கைசோரவிடாது அநுசரித்து வரவேண்டுமென்று வீண் வார்த்தைகள் பேசும் வீணாவீணர்கள் கவனிக்கவேண்டும்.]

———o———

## வர்த்தமானசங்கிரகம்.

இரண்டு மாசத்திற்கு முன்னமே நாய்க் கடியுண்ட ஒரு சிறுவன் குணமடைந்தவனைப்போலிருந்து, சடுதியில் சென்ற சனிவாரம் போசனம் ஏற்றுக்கொள்ளாமல், மறுநாள் காலமே கொஞ்சம் சுரங்கண்டது. அவனைப் பெற்றார் பேதிக்குக் கொடுத்தார்கள். ஆயினும், அச்சிறுவன் தொண்டை ரணமாயிருக்கிறதென்றும், தண்ணீர் குடித்தால் அடைத்துக்கொள்ளுகிறதுபோலிருக்கிற தென்றும் முறையிட்டான். அதன்மேல் அவனை டாக்ட்டரிடத்திற்கு கொண்டுபோனார்கள். அவர் பரிசோதித்துப் பார்த்துத் தொண்டையில் ஒன்றுமில்லையென்று தெரிந்துகொண்டு கொஞ்சம் தண்ணீர்குடிக்கச்சொன்னார். அவன் குடிக்கமாட்டேனென்றான். உடனே அவனிடத்து நாய்க்கடிக் குறிகள் காணப்பட்டன. அன்று ராத்திரி அக்குறிகள் அதிகப்பட்டு, திங்கட்கிழமை காலமே யிறந்துபோனான்.—நாய்கடித்தால் அசட்டைசெய்யாமல உடனே விஷம்போகும்படியான தகுந்த சிகிச்சை செய்யவேண்டுமென்பதை ஞாபகமூட்ட முக்கியமாயிது தெரிவிக்கப்பட்டது.

பதினைந்துவயதுள்ள ஒரு பெண் தன் கணவனோடும் மாமியாரோடும் வாழ்ந்துகொண்டிருக்கையில், சென்ற திங்கட்கிழமை ராத்திரி வயிறுநோகிறதென்று முறையிட்டாள். மாமியார் சில பரிகாரஞ்செய்து அவளைப் படுக்கவைத்துப்போனாள். மறுநாள் காலமே கிழவி எழுந்து வீடு பெருக்குகையில், ஒரு கிண்ணத்திலே அபினிமருந்து கலக்கிக் குமரியின் படுக்கையின்கிழ் வைத்திருந்ததைக் கண்டு அனுமானித்து, அந்தப் பெண்ணைப் பார்க்கையில் புத்தி மாறாட்டமாயிருக்கக் கண்டு உடனே வைத்தியசாலைக்குக் கொண்டுபோகையில் வழியி லிறந்துபோனாள்.—இக்காலத்தில் கல்விப் பயிற்சி முதலிய நாகரீகத்தால் நாத்தி ஓரகத்தி மாமிமார்களுடைய உபத்திரவமும் போராட்டமும் வெகுவாய் ஒழிந்திருந்தபோதிலும், சில விடங்களிலே இன்னும் நடமாட்டமுறுதலால், கெடுதிக் கிடமுண்டாயிருக்கிறது; அதுவும் ஒழியவேண்டும்.

ஏசுநாதர் மரித்த புதுவெள்ளிக்கிழமை பண்டிகை நாள்களாகிய வருகிற ஏப்ரல ௴ 4௳ திங்கட்கிழமை முதல 12௳ செவ்வாய்க்கிழமைவரையில் (அவ்விரண்டுநாள்களுமுளபட) ஒரேகட்டணத்திற்கு பஸ்டுகிளாஸ் செகன்கிளாஸ் ரிட்டரன் டிக்கெட்டுகள் கொடுக்கப்படுமாம் 20௳க்குள்ளாக எந்ததினத்திலாவது திரும்பிவரக்கூடும; அதற்குமேற்பட்டு அந்தட்டிக்கெட்டுகள் செல்லாது. எந்தஸ்டேஷனிலிருந்து எந்தஸ்டேஷனுக்குப் போகிறதாகடிக்கெட்டில் கண்டிருக்கிறதோ அந்தப்படியேதான் போகவேண்டும். ஒவ்வொருமார்க்கத்திற்கும் அந்த டிக்கெட்டை ஒரேதடவைதான் உபயோகிக்கவேண்டியது; வேறொருவருக்கு கொடுக்கக்கூடாது.

ஜபான் தேசத்திலே யோகோஹாமாவில் சென்ற ஜனவரிமாசத்திலே பூகம்பமுண்டாயதாம், 1880௵த்தில்நேரிட்டதைவிட இது மிகவும்கொடியதாயிருந்தது: பின்னுஞ் சற்றுநேரமில்லாமற்போனது அதிர்ஷ்டவசமே, இன்னும் ஐந்து செகண்டுமாத்திரமிருந்திருக்குமாகில், தோகியோ-யோகோஹாமா இந்த இரண்டு பட்டணமும் தரைமட்டமாய்விடுமென்று அவ்விடத்தியநட்சத்திர கணிதசாலை புரொபெஸ்ஸர் மில்னெஸ் என்பவர் சொல்லுகிறார். [இதுவுங் கடவுளுடைய சித்தந்தான்! யோசித்துப் பார்க்கவேண்டும்.]

லோயர்பர்மாவிலே 4,600,000 ஏகராசாகுபடி நிலங்களில, 3,700,000ஏகராநெல்சாகுபடியாம்.1886ம் வருஷத்திலே பர்மாவிலிருந்து இந்தத்தானியம் ஏற்றுமதியானது 10,27,000டன்.—பர்மாவிற்குஜவுளியையும் இரும்புசாமான்களையும் வரவழைக்கிறவர்கள் அநேகவருஷமாய்த் தாங்க ளறியாத அவ்வளவு சீராய் வியாபாரம் சிலமாசங்களாய் நடந்துவருகிறதென்று சொல்லுகிறார்கள். சகல சரக்குகளும் பரபரப்பாய் விற்பனையாவதால் கையிருப்புச் சரக்கு செலவாய் விடுவதுபற்றி, கொள்வன செய்வதற்காக வியாபாரிகளுக்கு அதிகபணம் வேண்டியிருக்கிறது.

ஒரு ஆங்கிலேய ரசாயன சாஸ்திரியானவர் கடற்பூண்டிலிருந்து விளாம்பிசினைப்பார்க்கினும் அதிக பந்தனையாயும் பலவிதமான விடுதி வஸ்துக்களைக் கெட்டிப்படுத்துவதற்கு மிகவும் அனுகூலமானதாயுமிருக்கிற ஓர் பசைசத்து கண்டுபிடித்திருக்கிறார். அது சிரப் செய்வதற்கும் சில சமயல் வேலைகளுக்கும் வெகு உபயோகமானதாயிருக்குமாம். ரசமெடுத்துக்கொண்டு சழித்துவிடப்பட்ட திப்பிக் கோதினால எழுதுவதற்கு மிகவும் நாணயமான கடுதாசி நயமாய்ச் செய்யக்கூடும். (விவேகத்தை வீணான மனோராச்சியத்தில் செலுத்தாமல், லவுகிகவிஷயத்தில் செலுத்தினால் சுகம்பெறலாம்.)

ரிஜிஸ்தர் செய்யப்படாத கடிதங்களையும், போஸ்டுகார்டுகளையும், சிப்பங்களையும், காலாதீதமாய்க் கொண்டுவந்து ரெயில்வேஸ்டேஷன் தபாலில்போட்டால், அதற்காக வாங்கிவந்த இரண்டணாகட்டணம் ஒரு அணாவாகக்குறைக்கப்பட்டது.

குண்டகல்லிலிருந்து நந்தியாலுக்குப் போடப்பட்ட பல்லாரி கிருஷ்ணா ரெயில்வேமார்க்கமானது இப்போது வேலை முடிந்து வியாபாரத்திற்குச் சித்தமாயிருக்கிறது. வருகிற ஏப்ரில் ௴ க௳ வண்டித்தொடர் விடப்படும்.

சென்னை மரணரிஜிஸ்தர்—நாளது ௴ 12௳ முதல் 18௳ வரையில், ஒரு யூரோப்பியனும், ஆறு ஈஸ்டிண்டியர்களும், பதினொரு சுதேச கிறிஸ்தவர்களும், 216 இந்துக்களும், 42 மகமதியர்களும், ஆக-276 பேர் இறந்துபோனார்கள். சென்ற பத்துவருஷத்திற்கு அதே வாரத்திலே சராசரியில் மரணம் 326 ஆகிறது. மேற்படி 276 பேரில், சின்னம்மையினால் 3, சுரத்தினால் 79, சீதபேதியினால்23, அதிசாரத்தினால் 26, வாந்திபேதியினால் 3- மற்றவியாதிகளினால் 142.

## அறிக்கை.

நமது மெம்பர்களும் கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிசமாக "தீன்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினால்,அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச
தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ் பிரதியாயின் நான்கும் ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி---என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றி பெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணைபுரிவார்களென்று நம்புகிறோம.

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS. No. 174,
Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 14.] MADRAS:—SUNDAY APRIL, 3, 287. A. S. [Monthly, 4 Annas.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



ராஜா ஸர் டி. மாதவராவ் K. C. S. I. அவர்களால் கன்வொகேஷனில் வாசிக்கப்பட்ட உபந்நியாசத்தின் பாகம்.

## படிப்பும் அனுபவமும்.

படிப்புக்கும் அனுபவத்திற்கு மிருக்கிற வித்தியாசத்தை நாம் அசட்டைசெய்யலாகாது. நலலஷ்ரந்தங்களிலிருந்து நீந்தும் வகை கற்றறிந்த ஒருவன் சில நிமிஷமாவது நீந்தி மிதக்கவல்லனாகான்; ஆனாலோ, நீந்தக்கற்று அனுபவப்பட்டவன் சுலபமாய்ச் சந்தோஷத்துடனே நெடுநேரம் நீந்துவான். எழுத நமக்கு நன்றாய்த் தெரியும. நம்முடைய இரண்டு கைகளும் நம்மதே; ஆயினும், வழக்கத்தினாலே வலதுகைக்கும் இடதுகைக்கு முண்டாயிருக்கிற அதிக வித்தியாசத்தை நாம் கவனிககவேணடும். வலதுகையினால் சுலபமா யெழுதுகிறோம். இடதுகையினா லெழுதுவதரிது. இதை யோசித்துப்பார்ப்போமாகில், படிப்பினாலமாத்திரம் கியான மடைந்திருப்பவனைப்பார்க்கிலும் அனுபவசாலியான தொழிலாளியை உலகத்தார் ஏன் அதிகமாய் மதிக்கிறார்களென்று சுலபமாய்த் தெரிந்துகொள்வோம். ஆகையால் படிப்புகியானத்தோடு அனுபவத்தையும் சேர்க்கவேண்டும்; அப்படிச் செய்யாவிட்டால், அனுபவசாலியானவன் வெறும்படிப்புக் கியானியை முறியடித்து மிஞ்சுவான்; அப்போது அந்தக் கியானி முறையிட்டா லாவதொன்றுமில்லை. கலவிச்சாலைகளிலும் காலீஜுகளிலுமிருந்து நூதனமாய் வெளிவந்த வாலிபர்கள் வெறும்படிப்புக் கியானமாத்திர மடைந்தவர்களா யிருக்கிறார்கள். அனுபவசாலிகளுமாகித் தங்கள் மதிப்பை உயர்த்திக்கொள்ள அவர்கள் பாடுபடவேண்டும்.

## கடைதிறப்பு.

(ஜோசெப் சைம்ஸ் அவர்களால் எழுதப்பட்டது)

"வானத்துக்குரிய மேனிகளுமுண்டு, பூமிக்குரிய மேனிகளுமுண்டு; வானத்துக்குரிய மேனிகளுடைய மகிமையும் வேறே, பூமிக்குரிய மேனிகளுடைய மகிமையும் வேறே;—சூரியனுடைய மகிமையும் வேறே. சந்திரனுடைய மகிமையும் வேறே, நட்சத்திரங்களுடைய மகிமையும்வேறே; மகிமையிலே நட்சத்திரத்துக்கு நட்சத்திரம் விசேஷித்திருக்கிறது." 1 வது கொரிந்தியர், XV, 40, 41.

மேற்கண்ட பத்திரிகையில் எத்தனை வாக்கியங்களிருக்கின்றனவோ அத்தனை ஆபாசங்களிருக்கின்றன. பிரேதத்தை மண்ணுக்கும்படி அடக்கஞ் செய்யும்போது பிரேதக் குழியண்டை பாதிரியார் நிறைவேற்றுகிற சடங்கில் முக்கிய பாகமாயிருக்கிற அத்தியாயத்தில் மேற்படி வாக்கியங்கள் வருகின்றன: "அது மரித்தவன் நித்திய ஜீவியாய் வாழும்படி சந்தோஷத்துடனே உயிர்த்தெழுந்திருக்கும்படியானகோரிக்கையே." மரித்தவன் உயிர்த்தெழுந்திருக்குஞ் சித்தாந்தத்தில் நம்பிக்கைவைப்பதற்கு நிச்சயமாகவே நியாயமொன்றையுங் காணோம்; யோசனை புருஷனாகிய கிரிஸ்தவனுடைய நம்பிக்கையை அழிப்பதற்கு ஒன்றையொன்று மிஞ்சினது ஏதாவதிருக்குமாயின் அது உயிர்த்தெழுந்திருக்குஞ் சித்தாந்தத்தை எவருடைய வார்த்தைகளின்பேரில் ஒப்புக்கொள்ளுகிறானோ அவர்கள் மற்ற விஷயங்களைப்பற்றி ஆபாசமாகக் கூறியிருக்கிறார்களென்று கண்டறிந்துகொள்வதுதான். கடவுளனுக்கிரகம் பெற்றவர்களென்று சொல்லிக்கொண்டபோதிலும் சடமாகிய பிரபஞ்சத்தைப்பற்றிசுத்தமூடர்களாயிருந்தவர்களிடத்து என்ன நம்பிக்கை வைக்கக்கூடும்! எவர்கள் பிரபஞ்சத்தைப்பற்றி ஆபாசங்களைக் கூறியிருக்கிறார்களோ, எவர்களுடைய முக்கியமான சித்தாந்தங்கள அந்த ஆபாசங்களை ஆதாரமாகக்கொண்டிருக்கின்றனவோ அப்படிப்பட்டவர்களிடத்து நாம் என்ன நம்பிக்கை வைக்கக் கூடும்?

புதிய ஏற்பாட்டு வேத புஸ்தகத்திலுள்ள சகல தத்துவங்களும் வான சம்பந்தமான பொருள்களுக்கும் பூமிசம்பந்தமான பொருள்களுக்கும் முக்கிய விகற்பத்தைப் போதிக்கின்றன; இந்த விகற்பத்தையே கிரிஸ்து மதம் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. பிரபஞ்சத்தின் தன்மையை—அதாவது, அடுத்தாற்போல நம்மைச் சூழ்ந்து நிற்கிற பிரபஞ்சபாகத்தின்தன்மையை—மனிதர்கண்டறிந்திராவிட்டால்,காலாந்தவரையில் இந்த ஆதாரத்தின்பேரிலேயே அந்த மதம் நிலைபெற்றிருக்கத்தக்கதே. ஆனால், உண்மை யறிந்துகொள்ளப்பட்டது,பிழையையும்தேவஅருள்வாக்கென்பதையும் அவசியம் தூற்றவேண்டிவந்தது. நவீனமான சாஸ்திரத்திற்கு வந்தனம். இதனாலே, வானத்திற்கும் பூமிக்கும் பூர்வகாலத்தில் மனிதர்களால் விதியில்லாமல் கற்பிக்கப்பட்ட பேதம் உளறலென்றும், பிரத்தியக்ஷசாதனங்களில் அது திருத்தப்பட்டதென்றும் நாம் தெரிந்துகொள்ளுகிறோம்; மனிதர்கள் உண்மையை யேற்றுக்கொள்ளுகையில் பூர்வீக பிழைகளைத் தள்ளவேண்டியதுபோலவே, அப்படிப்பட்ட பிழைகளில் முழுகியிருக்கிற சகலத்தையும், அவற்றை ஆதாரமாகக்கொண்டிருக்கிற சகலத்தையும், மற்ற மூடபக்திகளுக்குள்ளே கிரிஸ்தவ ரிவிலேஷன் என்னும் வெளிப்படுத்தப்பட்ட வாக்கியங்களனைத்தையும் தள்ளவேண்டியவர்கள்தான். உள்ளபடி சங்கதி என்னமாயிருக்கிறதென்று பார்ப்போம்.

1. காபர்னிகஸ் என்பவராற் செய்யப்பட்டு, காபர்னிகன்சிஸ்டம் ஆவ் அஸ்திரானொமி யென்று வழங்குகிற வான சாஸ்திர ஏற்பாட்டை யறிந்திருப்பவ ரெவரும் அந்த ஏற்பாட்டின் மத்திய ஸ்தானத்தை சூரியன் கொண்டிருப்பதாக அறிந்தே யிருக்கவேண்டும்.—அந்த ஏற்பாடு (ஒரு தோராயமாகக்கூறுமிடத்து) ஒரு பொதுஸ்தானத்தைக் கொண்டிருப்பதாகச் சொல்லும்படியான ஏற்பாடே. வாசிப்பவர் குறுக்களவிலே சுமார் 600,00,00,000 மயல்விரிந்த வட்டமான ஒரு மகாசமுத்திரத்தைப் பாவித்துக்கொள்வதினால் கிட்டத்தட்ட என் கருத்தை யறியலாம். இந்த சமுத்திரத்தின் மத்தியில் சூரியன் தன்னுடைய காத்திரத்தில் பாதியை தண்ணீரில் அமிழ்த்திக்கொண்டு மிதக்கிறான். சுமார் 3,60,00,000 மயல் தூரத்திலே சூரியனைச்சுற்றி மிதந்துகொண்டு, புதன் இருக்கிறான். சுமார் 6,60,00,000 மயலிலே சுக்கிரன இருக்கிறான். 9,15,00,000 மயல்தூரத்திலே பூமி சுற்றிக்கொண்டிருக்கிறது; அங்காரகன் கிட்டத்தட்ட 14,00,00,000 மயலிலிருக்கிறது. (கண்டுபிடிக்கப்பட்டிருக்கிற) இருநூற்று இருபத்திரண்டு சிறு கிரகங்கள் சராசரியில் சுமார் 25,00,00,000 மயல்தூரத்திலே சூரியனைச் சுற்றிவருகின்றன; பிரகஸ்பதி 47,60,00,000 மயலிலும், சனி 87,80,00,000 மயலிலும், யூரனஸ் 175,35,90,000 மயலிலும், நெப்ட்டியூன் 274,55,00,000 மயலிலும் வருகின்றன. தூமகேதுக்களையும் உபக்கிரகங்களையும் பிரஸ்தாபத்தில் நீக்கிவைப்போம். இந்தப் பாவனையான சமுத்திரத்தின் உதவியைக்கொண்டு அண்டகோள அடுக்குகளை ஒருவிதமாயில் அமைத்துக்கொண்டதினால், அதை இப்போது தள்ளிவைத்துக் கிரகங்களைப்பற்றி ஆலோசிப்போம்.

நாம் சூரியனைப் பார்க்கும்போது அது ஆகாயவெளியிலிருப்பதாகக் காணுகிறது; அது மற்ற கிரகங்களினின்றுப்பந்தமாக வேயிருக்கிறது—அவற்றை ஆகாயத்தில் தவிர வேறெங்கும் நாம் பார்ப்பதில்லை. புதனும் சுக்கிரனும் சூரியனஸ்தமித்தவுடனேயாவது சூரியோதயமானவுடனேயாவது சூரியனுக்குத் தொலைதூரத்தில காணப்படுவதில்லை. சூரியனுதித்து மேலே வந்தபின்பும் தென்கீழ்த்திசைவானத்தில் சுக்கிரன் பளபளப்பான பிரகாசத்துடனே சொலித்துக்கொண்டிருப்பதை நாம் நன்றாய்க்காணலாம். மற்றக்கிரகங்களும் அங்காரகனும் பிரகஸ்பதியும் சனியும் 'ஜோடியாக்' என்று சொல்லப்பட்ட ராசி

வட்டப்பாதை நெடுக ஆகாயத்தில் சிலவருஷகால அளவிலே
ஒழுங்காய்ச் சுற்றிவந்து சேருவதைக் காணலாம். பிரகஸ்ப
தியும் சனியும் தற்காலத்திலே கிட்டத்தட்ட இராமுழுவதும்
கண்ணுக்குப் புலப்படத்தக்க கிரகங்கள்.

மேலே குறித்த தோற்றங்களைப் பூர்வீகாள் அறிந்திருந்தார்
கள், தோற்றங்களை உண்மையானவையாகவே எண்ணியிருந்
தார்கள்; பூமி ஆகாயவெளியிலிருப்பதாக அவர்கள் அறிந்த
தில்லை, ஒரு நட்சத்திரத்தைப்போல அதற்கு ஒளியிருக்கிறதெ
ன்று தெரிந்துகொண்டாரில்லை. ஆகையால் பூமியானது இருள்
சூழ்ந்த கறடுமுறடான இழிந்த உருவென்று முடிவுகட்டியிருந்
தார்கள். வானம் அல்லது ஆகாயவிரிவிலுள்ள உருக்களோ
அவர்களுக்கு பிரகாசமும் மகிமையும் பொருந்திய வேறான
தன்மையுள்ளவையாயிருந்தன. இப்படிப்பட்ட ஆபாசமான
எண்ணத்திலிருந்துதான் சகல சித்தாந்தங்களு மேற்பட்டன;
வான வுருக்களும் பூமியும் வேற்றுமையுள்ளவையாயின; வான
த்திருமேனிகள் (?) பூமிக்கு அளவற்ற பங்கு மேன்மையடைந்
திருந்தன; பூமி இருள்சூழ்ந்ததாயும் வானவுருக்கள் ஒளிநிறை
ந்ததாயு மேற்பட்டன; பூமியில் வசிப்பவர்கள் மூடர்களானார்
கள், ஆகாயத்தில் வசிப்பவர்கள் அளவற்ற ஞானமுடையவர்க
ளாய், நமக்குக் கற்பனை கொடுக்கத்தக்க கிருபாசமுத்திரமா
னார்கள். பூமியும் அதிலுள்ள சகலவாசிகளும் பரிசுத்தமில்
லாத பாபிகளானார்கள், ஆகாயவாசிகளுக்கு விரோதமாய்
நாம் பாவஞ் செய்கிறபடியால், நமக்குப் பரிசுத்தத்தையும்
மன்னிபபையும் ஈந்தருளத்தக்கவர்களானார்கள்!

மடமையும் ஒரு அதிகாரமுமாகிய கலக்கமுற்றஇராக்காலத்
திலேஇவ்வாறுபூர்வீகாள்கனவுகண்டார்கள், ஆனால் இவையெல்
லாம் உளறலேயென்றுஉண்மைநமக்குப்போதிக்கின்றது. பூமி
யானதுமற்றக்கிரகங்களைப்பார்க்கிலும்இருண்டதல்ல. சூரியனு
டைய ஒளிப்பிரதிஜொலியினால் அவையெல்லாம்பிரகாசிக்கின
றன; அப்படியே பூமியும் பிரகாசிக்கிறது. நமது குடியிரு
ப்பு வீடாகிய இவ்வுலகு அவற்றைப்போலவே பிரகாசம் பொ
ருந்தியது. சந்திரன் இரண்டாம்பிறை அல்லது மூன்றாம்பி
றையாயிருக்கும்போது, (புது சந்திரன் பழைய சந்திரனைமார்
பில் அணைத்துக்கொண்டிருக்கிறதென்று ஐரோப்பிய ஜனங்க
ள்சொல்லிக்கொண்டபடி) ஒளிவிளிம்போடுங் கூடிய பாதி
வட்டத்திற்கு அதிகமாகவே மங்கலான சிவப்பு உருவாயிரு
ப்பதைக் காணுகிறோம். அந்தத் தேய்வீகமான (?) சிவப்ப
வொளி பூமியின் ஒளியே; பூமிக்குச் சந்திரன் துணைபுரிவது
போல் சந்திரனுக்கு பூமி துணைபுரிகிறது. எவ்வளவேனும்
சந்திரன் தோன்றாத அமாவாசியையாயிருக்கும்போது பூமி
பூரணவொளியுள்ளதாயிருக்கிறது; அப்போது, பதின்மூன்று
பதினான்காம்நாள் வளர்பிறைச் சந்திரனிலிருந்து நமக்கு வரு
கிற ஒளிக்குச் சமானமான பூமியின் பூரணபிரகாசத்தில் சந்
திரன் அமிழ்ந்திகிடக்கிறான். நாம் சந்திரனிடத்தில் போயிரு
ப்பதாகப் பாவித்துக்கொள்வோம். அப்போது ககல காரிய
ங்களுக்குஞ் சந்திரன் நமக்கு பூமியாயிருக்கிறது; ஆனால் பின்
னுஞ் சிறியது, முக்கியமல்லாத சிலவிஷயங்களிலேவித்தியாச
முள்ளது. நாம் சந்திரனிலிருக்கையில் பூமி நமக்குச் சந்திர
னாயிருந்துகொண்டு, நமக்கிப்போதுண்டாயிருக்கிறபடி வளர்
பிறை தேய்பிறை அமாவாசியை பூரணை முதலிய சகல திதிக
ளையுங் கொடுத்துக்கொண்டிருக்கும்.நாம் இப்போது இடங்களை
மாற்றிக்கொண்டோமல்லவா? பூமி ஆகாய வெளியிலிருக்கி
றது, சந்திரன் நமது காலடி மிதியிலிருக்கிறது. இப்போது
பூமியும்பிரபஞ்சத்திலுள்ள மற்றொன்றைப்போலவே பிரகாச
ம்பொருந்திய வானத்திருமேனியாயிருக்கிறது.

இந்த ஆராய்ச்சியினாலே, பூமியானது ஆகாயவெளியில் நாம
றிந்திருக்கிற யாதொரு உருவைப்போலவே யொரு உருவாயி
ருக்கிறதாகத் தெரியவருகிறது; இவ்வகையான ஆராய்ச்சி பின்
னுங் கொஞ்சஞ் செய்வோமாகில், யாவும் ஸ்பஷ்டமாய் விள
ங்கும். (பிரகஸ்பதிவெகுதூரத்திலிருப்பதால் அதிலிருந்துகொ
ண்டு பூமியைப் பார்க்கத் தவறிப்போவோம்.) நாம் அங்கார
கனிலிருப்பதாகப் பாவித்துக்கொள்வோம்; அவ்விடத்திருந்து
நாம் சூரியனைப் பார்க்கும்போது, அது உருவத்தில் சிறிதாக
வும் பிரகாசத்தில் குறைவாகவுந் தோற்றும். பூமியும் இப்
போது பிரகாசமுள்ள காலைநட்சத்திரம்போலவும் பின்பு மா
லைநட்சத்திரம்போலவும் மிக்க பிரகாசம்பொருந்திய கிரகமா
கத் தோற்றுகிறது. நாம் டெல்லெஸ்கோப் கண்ணாடிக் கருவி
யினால் பார்ப்போமாகில, சுக்கிரன் அல்லது புதன் மாறிமாறி
வளர்பிறைதேய்பிறைரூபமாகத்தோன்றுவதை நாம் இப்போது
காண்பதுபோலவே பூமியையுங் காண்போம்.

நாம் சுக்கிரனில்போயிருந்தால் அப்போது பூமியை, நாம்
இராசி வட்டவழியாய் அங்காரகன் செல்வதை இப்போது
கவனமாய்ப் பார்த்தறிவதுபோலப் பார்ப்போமாகில் பூமியா
னது வருஷங்கள் செல்லச்செல்ல அந்த ராசிவட்டவழியாய்
ஒழுங்காகச் செல்வதைக் காண்போம். மேற்கண்ட விஷயங்
களில் ஒவ்வொன்றிலும், நாம் வசிக்கிற அந்தந்த கிரகமும்
நமது காலடிமிதிக்குட்பட்டதாகவே யிருக்கும்.—பிரஸ்தாபத்
திலிருக்கிற உருவாகிய கிரகம் அங்காரகனாயினும், சுக்கிரனாயி
னும், பூமியாயினும், காலை - மாலை - நடுஇராக் காலத்து வான
த்தில் பளபளப்பான வைரக்கல்போலக் காணப்படும். இவ்வி
தமாய் நாம், நமது பூர்வீகாள் பூமிக்கு அதிசமீபமாய்த் தங்
கள் வெளிச்சத்திலேதானே யிருந்ததனால் அதனுடைய மேன்
மையை அறியக்கூடாதவர்களாயிருந்தபடியால அவர்கள் பூமி
யை அலட்சியஞ் செய்தார்களென்றும்; தூரத்தினால் திருஷ்
டிக்குப் பிரமையுண்டானபடியாலும், அவற்றின் ஸ்தானபேத
த்தினால் புத்தி மயங்கியபடியாலும், அவர்கள் கண்ட மற்ற
கிரகங்களை ஒருமிக்க அதிமேலான சிறந்த வகுப்பு (தேவ)
ஸ்வரூபங்களென மதித்தார்களென்றும், தெரிந்துகொள்ளுகி
றோம். எப்போது மனிதர்கள் அப்படிப்பட்ட மூலாதாரமான
விஷயங்களில் மோசம்போனார்களோ அப்போதே தெய்வீக
சித்தாந்தங்களேற்பட்டன. பிரபஞ்சத்தின்தன்மையைத் தெரி
ந்துகொண்டவனெவனும் வானத்திலிருந்து வேதத்தை யொரு
க்காலும் பெற்றுக்கொண்டவனல்லன்; இந்தப் பிரபஞ்ச தத்
துவக் கியானத்தை மனிதர்கள் ஒருக்கால் தாராளமாய்அடை
ந்திருப்பார்களாகில், அது எவ்வளவேனும் கிருபையில்லாமல்
மனிதர்கள்மேல் கொடுங்கோலரசு செலுத்திவந்த வைதிக
கனவுகளை எப்போதும் ஹதமாக்கிவிடும்.

(இன்னும்வரும்.)
A. M.

---

## இந்துசமயசாரவிளக்கம்.

### முத்தேவர்களுற்பத்தி.

(47-வது பக்கத்தொடர்ச்சி.)

விநாயகபுராணம்.—(2) எல்லாங் கடந்த தத்துவமு
டிவிலே பரப்பிரம சொரூபமாகியிருந்த பரமாத்மாவா
னவர் எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்களா
யுள்ள (3) சீவாத்துமாக்களெல்லாம் கன்மங்கட்கிடான
சரீரங்களை எடுத்து, தாபத்திரயாக்கினிகளாற் றகிக்கப்
பட்டு வருந்தும் துயரங்களை நீங்கிச் சிறிது இளைப்பா
றும்படித் தமமிடத்தி லொடுக்கி வைத்துக்கொண்டிரு
ந்து;—(4) பிரளயம் நீங்கியவுடன் முன்போலவே அ
வைகட்குத் தனுகரண புவன போகங்களைத் தந்து,
கன்மங்களைப்புசிப்பித்து, அக்கன்மவொப்பில் மலசம்
பந்தமாயிராநின்ற பாசபந்தங்களைப்போக்கி, முத்தியிற்
சேர்க்குநிமித்தம்,—மீளவுஞ் சிருட்டி திதி சங்காரங்
களை நடப்பிப்பதற்கு (5) வக்கிரதுண்டவிநாயக அவ
தாரஞ் செய்து, தமது முக்குணங்களினின்றும் திரிமூர்
த்திகளுதித்துவருமாறு அவர்கட்கு உருவையும் அறி
வையு முண்டாக்கி யருள; அவர்கள் உற்பத்தி யா
கித், தங்களைப் படைத்த பரப்பிரமசொரூப மின்ன
தென்று அறியவேண்டி. வெறும்வெளிகளெங்குந் தே
டிக் காணமல், ஆயிரம் தேவவருடம் தவஞ்செய்தார்
கள். (6) வக்கிரதுண்டருக்குக் கிருபை சுரந்து, கோ
டிசூரியப்பிரகாசத்திலும் அதிக சோதியை வீசுகின்
ற திருவுருக்கொண்டு, சரப்பளி பதக்கமுதலிய சகல
பூஷணாலங்கிருதராய், கத்தி கேடயமுதலிய ஆயுதங்
கள் தரித்தவராய். மதத்தைப் பொழிகின்ற யானைமுக
மும் நான்கு கையும் இரண்டுகாலும், (ஆனால்) சகல
லோகங்களையும் ஓர் நொடிப்போதில் பஸ்மீபடலமாக்க
வல்ல நுதல்விழியுங்கொண்டு அம்மூவர்களெதிரிற் பிர
த்தியக்ஷமானார். அவர்கள் கண்டு களித்து சாஷ்டாங்
கமாக நமஸ்கரித்து ஆனந்தக்கூத்தாடி தோத்திரஞ்
செய்தார்கள்.

(2) விளக்கம்—பரப்பிரம சொரூபமென்பதும், பர
மாத்மாவென்பதும் இன்னதென்று விளங்கக் கட்டின
ரில்லை. அதைக் கண்டவர் யாரோ, அந்தப் பெயரிட்
டவர் யாரோ? யோனிபேதங்களின் தொகை யேற்படு
த்தினவர்கள் மகா புத்திமான்களா யிருக்கவேண்டும்!
இதில் ஒன்றுஏறவாவது குறையவாவது இராதாக்கும்?
இன்னும் கண்டறியப்படாதவைகளும் இனி உற்பத்தி
யாகவேண்டியவைகளும் எத்தனையோயிருந்தபோதிலு
ம், கடவுளருளிய வேதமுதலியவற்றால் கண்டறிந்து
வரையறுத்திருக்கிற அதிசயத்தை வாசிப்பவர்கள்தான்
ஆலோசிக்கவேண்டும்.—

(3) சீவாத்துமாக்களெல்லாம் சரீரமெடுத்து வருந்
துவதினின்றும் சற்று இளைப்பாறும்படி பிரளயம் நீங்

கும்வளையில் தமதிடத்திலொடுக்கி வைத்துக்கொள்ள சிற்றருள்காட்டிய கடவுள் எப்போதும் தம்மிடத்து வைத்துக்கொள்ளும்படியான தமது பேரருளைக்காட்டலாகாதா? கிருபாசமுத்திரருக்கு இவ்வளவு கோபமும் வஞ்சமுமா? ஆன்மாக்களைப் பிரளயம் அடித்துக்கொண்டுபோய் நாசஞ்செய்துவிட்டால், மறுபடி சிருஷ்டிக்குப் புது ஆன்மாக்கள் அகப்படாவென்கிற அச்சத்தினாலோ, பழய கன்மங்களுக்கீடாய் பழய ஆன்மாக்களே அலையவேண்டுமென்கிற எண்ணத்தினாலோ அப்படி யடக்கிக்கொண்டனர்?

(4) பிரளயம் நீங்கினவுடன் ஆன்மாக்களுக்கு போசங்களைத் தந்து, கன்மங்களைப் புசிப்பித்து, ** பாசபந்தங்களைப்போக்கி, முத்தியிற் சேர்க்கு நிமித்தம் சிருட்டிமுதலியவை நடத்தத்தொடங்கி இப்போது நான்காவது யுகம் நடக்கிறதென்றாவது சொல்லலாமே யுகத்துக்கு யுகம் பாபம் வளர்ந்துவருகிறதென்று புராணங்களும் கதைகளும் முறையிடுவதுமன்றி, இப்போது ஜனங்களும் சொல்லிக்கொள்ளுகிறார்களே. இன்னும் முத்தியில் சேர்ப்பது எப்போது? கடவுளுடைய எண்ணம் குலைந்துபோகிறதே. கலியுகமுடிவில் பிரளயத்தினால் மறுபடியழிப்பதே மூததியாக்கும்? முன்னேயழித்ததினாலென்ன பிரயோசனம்? கன்மமாவது தொலையவில்லை; 'பழயகுருடிகதவைத்திறடி' என்றேயானதைப் பார்க்கினும், அழிக்காமல் விடுவது நலமாயிருந்திருக்குமே; கடவுளுக்கும் மார்பால் நகர்ந்து மண்ணெடுத்த வீண் பிரயாசையும் நீங்கியிருக்குமே. சிறுமிகள் மண்ணாற் சிறு வீடு கட்டி விளையாடி அயர்வுற்று வெறுத்து; அதை யழித்து மறுபடி வேறேவீடு கட்டுவதையொத்திருக்கிறது.

(5) சிருட்டி செய்வதற்கு பரப்பிரமம் யானைமுக சொரூபமெடுப்பானேன்? அது அவருடைய சித்தமாக்கும்! தான் படைக்கப்போகிற சிருஷ்டியை யுணர்ந்து அவ்வுருவமெடுத்தனரோ, அல்லது யானையையும் மனிதனையுங் கண்டவர்கள் இருதிறத்து அவயவங்களையுஞ் சேர்த்து அவ்வுருவேற்படுத்தினார்களோ யோசிக்கவேண்டும்.—மனிதர்களுக்கிருக்கிற இராசதம்-சாத்துவிகம் தாமதம் என்கின்ற முக்குணங்களும் கடவுளுக்குமிருக்கின்றமையால்,அவரும் மனிதர்களைப்போலத்தான் நடப்பவர். இதில் விநாயகர்வழியாய் திரிமூர்த்திகள் உற்பத்தியானார்களென்று சொலலியிருக்கிறது; சைவத்திலோ, முத்தொழிலின்பொருட்டு பரப்பிரமம் முத்தேவர்களாகச் சகளீகரித்ததென்று சொல்லியிருக்கிறது; வைஷ்ணவத்திலோ, மூலகாரணனாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய நாபிகமலத்தில் பிரமன் தோன்றி, பிரமனுடைய முகத்தில் சிவன் தோன்றினதாகவும் சொல்லியிருப்பதுமன்றி, விநாயகனை ஒரு ஏவலாளாக அதோகெதியில் தள்ளி யிருக்கிறது.—அன்றியும் முன் பத்திரிகையிலே, பிரமா, விண்டு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவம், பரம், பராபரம், இவை ஒன்றிலொன்று ஒடுங்கியதாகச்சொல்லியிருக்கிற முறையே தோற்றமுண்டாகாமல், பராபரமொன்றுமே பரப்பிரமசொரூபமாய் விளங்கி, வக்கிரதுண்டவிநாயக அவதாரஞ் செய்ய, அவருடையமுக்குணங்களினின்றும் நேராய் மும்மூர்த்திகளுண்டானதினால், இடையிலொழிந்த சிவம் சத்தி முதலியவற்றைப் பிடித்த பீடை ஒழிந்தேபோயிற்று—படைக்கப்பட்ட திரிமூர்த்திகள் குழந்தைகளாக உற்பவியாமல் நல்ல ஆள்களாகஉற்பத்தியானதாய்த் தெரியவருகிறது அவர்கள் தங்களைப்படைத்தது எதுவோவென்று சந்தேகியாமல் பரப்பிரம சொரூபமென்றுகிரகித்தது அவர்களுக்குஅளிக்கப்பட்ட அறிவின்பயனாயிருக்கலாம். அவர்களெங்கெங்குதேடியுங்காணாதிருக்கும்படி, யானைத்தலையும் துதிக்கையும்செவியும்நான்குகையும்இரண்டுகாலும்பேழைவயிறுமுடைய சடவுருவாயிருக்கிற வக்கிரதுண்டன் எங்கேபோய் ஒளித்தனனோ? அல்லது பழயபடி பிரம்மமாகி, "முப்பாழும்பாழாய் முடிவிலொருசூனியமாய் அப்பாலும்பாழாயறும்" என்று நாயனாருளிய இடம்புக்கனனோ!—எங்கும் வெட்டவெளியாயிருந்ததனால், பிரபஞ்சத்திலுள்ள உருக்கள் ஆகர்ஷணாசக்தியினாலே ஒன்றையொன்று கவர்ந்துநிற்கின்றன வென்கிறசித்தாந்தப்படி, திரிமூர்த்திகளும் பரப்பிரமமும் ஒருவரை யொருவர் கவர்ந்துகொண்டு அந்தரத்தில தொங்கினார்களாக்கும்.—பிரமத்தைக் காணாமுன்னமே மும்மூர்த்திகளுக்குத் தவஞ் செய்யுமுறை கற்பித்தவர் யாரோ? ஆயிரந் தேவவருடம் தவஞ்செய்தார்கள். நம்முடைய ஆறுமாசகாலமாகிய உத்தராயனம் தேவர்களுக்கு ஒருபகலும், ஆறுமாசகாலமாகிய தட்சணாயனம் ஒரு இரவுமாக நமது ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாளாம். இதனாலே, விடாது ஆறுமாசகாலம் உத்தராயன சூரியப்பிரகாசத்தினால் பகலும், சூரியன் தட்சணமாகத் திரும்பிவிடுவதினால் விடாது ஆறுமாசகாலம் இரவுமாயிருக்கிற பூமியின் வடமுனைச்சக்கரத்தில் வாசஞ்செய்பவர்கள்தான் (தங்கள் தேவர்கள் வடக்கே வாசஞ் செய்கிறார்களென்று ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறபடி) இந்துக்களுக்கு தேவர்களாயிருக்கவேண்டும். தென்முனை (திசை) யில் வசிப்பவவர்கள் பிதிரர்கள். நமது ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒருநாளாகிற கணக்கின்படி ஆயிரதேவவருஷம் நம்முடைய மூன்றுலட்சத்து அறுபத்தையாயிர வருஷ காலமாகின்றது. இவ்வாறு கதைக்காரர் ஆலோசியாமலெழுதி, பிரளயம் நீங்கியவுடன் சிருஷ்டிமுதலியவை நடாத்தி ஆன்மாக்களைமுத்தியிற் சேர்க்கப் பரப்பிரமங் கொண்டிருந்த திருவுளத்திற்கு உல்லங்கனமுண்டுபண்ணினார்!

(6) ஒரு சூரியனது கிரணத்தைப்போல இரண்டுமூன்று சூரியகிரணங்களைச் சேர்த்து சோதியை அளவிடமாட்டாதவர்கள் பிரத்தியட்சத்தில் கண்டு அளவிட்டவர்கள்போல வெறும்வாய்ச்சொல்லினால் எத்தனை கோடி சூரியப்பிரகாசத்தைச் சொன்னாலுஞ் சொல்லலாமே!—உலகத்திலுள்ள செக்கு, கழுமரம், சுரிவாள்போன்றவை நரகத்திலிருப்பதாகச் சொல்லியிருப்பதுபோல, உலகத்திலுள்ள ஆபரணங்களும் ஆயுதங்களுந்தவிர விசேஷமொன்றுமில்லை.—மதத்தைப்பொழிகின்ற யானை யென்பதனால் துஷ்டகுணத்தை வெளிப்படுத்துகிறோமென்று புராணிகர் யோசியாமற்போனார். நுதல்விழியின் வல்லமை வியர்த்தமாயிருந்ததைமேலே சங்காரகிருத்தியத்தில் கூறியிருக்கிறோம். முறம்போற்காதுகளும் உலக்கைபோல துதிக்கையுமுடைய விகாரமிருகரூபம் பல ஆயுதங்களைத் தரித்திருப்பதைப்பார்த்து, அம்மூவர்கள் பேயோ பிசாசோ பூதமோ வேறே என்னரூபமோவென்று மலைவுறாமல், தங்களைப்படைத்த பிரமமென்று உடனே தெரிந்துகொண்டதும் அவ்விநாயகருடைய திருவருள்தான்!

(இன்னும்வரும்.) A. M.

## கடிதம்.

ஐயா பத்திராதிபரவர்களே,

சிலவாரங்களுக்கு முந்திய பத்திரிகையில், சர்வேஸ்வரன் அநாதி, வேசம அநாதி, ஆன்மா அநாதி, ஆகாயம் அநாதியென்று ஒருசாஸ்திரியார் கூறியிருந்ததாகக் கண்டிருந்ததைக் கண்ணுற்றேன். இரண்டொரு வாரத்திற்கு முந்திய பத்திரிகையில், பஞ்சபூதங்கள் ஒன்றிலொன்று ஒடுங்கிக், கடைசியாய் நின்ற ஆகாயம் ஆன்மாவிலொடுங்கி, ஆன்மா பிரமாவிலும் பிரமா விட்டுணுவிலும், இவ்வாறாக ஒன்றிலொன்று ஒடுங்கிக்கொண்டேபோய், முடிவில் பராபரமொன்றுமே நிலைக்குமென்று புராணங் கூறுவதாகச் சொல்லியிருக்கிறது. இவ்விருவகையையும் யோசித்து, எது புராதனமோ, எது நவீனமோ வாசிப்பவர்கள் அறியவேண்டும். கிரிஸ்துமார்க்கத்தவர்கள்—தங்கள் பராபரன் பிரபஞ்சத்தை ஆறுநாள் சிருஷ்டித்து, ஏழாம் நாள் இளைப்பாறினானென்பதை நம்பித் தாங்களும் ஆறுநாள் ஜீவனத்திற்காக உழைத்து, ஏழாம் நாளை ஓய்வு நாளாக அனுஷ்டித்துவருகிறார்கள். சூரியன் இன்னும் இளம்பிராயியாகத்தானிருக்கிறானென்றும், அவனைச்சுற்றிலும் அநேகம் மயல் தூரத்திற்குத் திரவமாக ஜொலித்துக்கொண்டு சூழ்ந்து

நிற்கிற பதார்த்தம் அவனோடு சேர்ந்து பிண்டமாவதற்கு இன்னும் வெகுகாலஞ்செல்லுமென்றும், இவ்வாறாகவே ஆதியில் திரவபதார்த்தம் அணு அணுவாய்த் திரண்டு, அவ்வணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்து பிண்டப்பொருளாகிப் பூமிமுதலிய சொரூபமடைந்ததற்கு எவ்வளவோகாலஞ்சென்றதாகத் தத்துவப்பிரமாணங்களினால் ருசுப்படுத்தி நிலைநாட்டியிருப்பதினால், அதை மறுக்கக்கூடாதவர்களாய், கிறிஸ்துமார்க்கப்போதகர்கள், "கோடிவிதிமாளிற் குலாவுங்கமலக்கண்ணன், ஓடிவடவாலுறங்குவான்; அச்கண்ணர் கோடியழிகில் அருணகிரி, நக்கனருள் சற்றேநகும்" என்று இவ்வாறாகச் சைவர்கள் தங்கள் சிவனுக்கு ஆயுள் விர்த்தியும் பெருமையும் சம்பாதித்துக்கொடுத்ததுபோல, தங்கள் வேதவாக்கியம் பொய்யாய்ப்போகாமல், நவீனசாஸ்திரத்திற்கு ஒத்திருக்கச் செய்யவேண்டுமென்கிற கருத்துக்கொண்டு, ஒவ்வொரு பொருளைச் செய்யத் தேவன் எவ்வளவோகாலம் மார்பால் நகர்ந்து மண்ணெடுத்தாரோ என்கிற கேள்வி பிறந்தபோதிலும் அதற்குச் சமாதானம் அப்போது பார்த்துக்கொள்வோம், இப்போது தப்பித்துக்கொள்ள வேண்டுமேயென விருப்புற்று, ஒரு சிருட்டிநாளென்பது எத்தனையோயுகமென்று போதிக்கத்தலைப்பட்டார்கள். அதுபோலவே, மேலேகண்ட ஒடுக்கம் புராதனமாயிருக்க; பரப்பிரமமு மிருப்பதற்கு ஆகாயவெளிவேண்டுமே, ஆதலால், ஆகாயமுன்னு, பிரமமுன்னுவென்றும்; கன்மங்களுக்கீடாய் ஜனனமுண்டாகிறதென்பதினால், ஆதியில் ஜனன முண்டாகிறதற்குக் கர்மம் எங்கிருந்துவந்ததென்றும், இவ்விதமான வினாக்கள் நிகழ்கின்றமையால், அவற்றிற்குச் சமாதானங்கூறவேண்டி, பிரமம், ஆகாயம் முதலியனவை அநாதியென்று சொல்லத்துணிந்தார்களென்று நாம் நினைக்கவேண்டும்.—கணபதி அவதாரத்தைப்பற்றி மச்சியபுராணத்திலும் விநாயகபுராணத்திலும் வெவ்வேறுவிதமாகச் சொல்லியிருப்பதை ஒருமுகமாகப் பிரசாரஞ்செய்வித்ததுபோல; ஒரோவிஷயத்தைப்பற்றி பலபுராணங்களில் பலவாறாகக் கூறியிருப்பதை எடுத்து ஒருமுகமாகப் பிரசாரஞ்செய்துவந்தால், ஒன்றுக்கொன்று முரண்படுவதையும் அவற்றிலுள்ள ஆபாசங்களையும் வாசிப்பவர்கள் ஒருமிக்கச் சுலபமாய்த் தெரிந்துகொள்வார்களென்று நம்புகிறேன். ஆனால் அப்படிச் செய்யச்சொல்லி நான் கேட்டுக்கொள்வது சுலபமே; செய்பவருக்குக் கஷ்டமே. ஆயினும் கூடியவரையில் நடத்திவரப்படுமாகில், வெகு அனுகூலமாயிருக்குமென்று மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகின்றனன். மன்னிக்கவும்.

பத்திரிகைப்பிரியன்.

## வர்த்தமானசங்கிரகம்.

குறிப்பு.—தத்துவவிசாரணைசெய்யும் இப்பத்திரிகையில் வர்த்தமானம் அவசியமில்லையென்பது சிலருடைய அபிப்பிராயம். ஆயினும், இப்பத்திரிகையின் முதலாவது சஞ்சிகையில் குறித்தபடி, இப்பத்திரிகை நிறைவேறிவருகிற ஒன்பது வருஷகாலமாய்ச் சில முக்கியமான வர்த்தமானங்கள் பிரசுரிக்கப்பட்டேவந்தன. ஆனால் சென்றவருஷம் சிலமாசங்களில் வீணர்களோடு விதியில்லாமல் வாதஞ்செய்யவேண்டியிருந்ததால், இடம்போதாமைபற்றி வர்த்தமானம் நிறுத்தப்பட்டது. வர்த்தமானங்களையும் பிரசுரித்துவருவதாகப் பிரதமபத்திரிகையில கூறியிருக்கிறபடி நடத்துவது நமது கடமையாதலாலும், இப்பத்திரிகையோடுகூட வேறே சமாச்சார பத்திரிகை வாங்கக்கூடாமையான சில நண்பர்கள் கேட்டுக்கொண்டதினாலும், பழயபடி வர்த்தமானம் பிரசுரிக்கப்பட்டுவருகிறதென அறிக.

சென்னையில் புதுவெள்ளிக்கிழமை பண்டிகைக்காக நாளது மீ 7உ குருவாரமுதல் 11உ சோமவாரம்வரையில் (இரண்டுநாள்களும் உள்பட) ஹைகோர்ட்டும், ஸ்மால்காஸ் கோர்ட்டுகளும், பாங்கிகளும், வியாபாரச்சாலைகளும் மூடப்படும்.

மதுரை செஷன்ஜட்ஜியவர்களால் கொலைக்குற்றஸ்தாபனை செய்யப்பட்ட ஐந்து கைதிகள்பட்சத்தில் சென்ற செவ்வாய்க்கிழமை ஹைகோர்ட்டு அப்பெல்லேட்டுசைடில் பாரிஸ்டர்பேச எழுந்தபோது, மஞ்சூர்செய்யப்பட்டவனுடைய சாட்சியத்தின்பேரில் முக்கியமாய்க் கைதிகள் குற்றவாளிகளாக்கப்பட்டார்களென்றும், கொலையுண்டவனுடைய பிரேதம் தண்ணீரில் விழுந்துகிடந்தது இருபதுநாளைக்குக் குறையாதிருந்திருக்கவேணுமென்று சர்ஜியன் சொல்லுகிற சாட்சியம் திருப்திகரமாயில்லையென்றும், மற்ற சாட்சியத்தின்படி எட்டொன்பது நாளுக்கு மேற்பட்டுப் பிரேதம் தண்ணீரிலிருந்திருக்கமாட்டாதென்றும், சீவ் ஜஸ்டீஸ் அவர்கள் சொல்லி, பிரேதத்தின்பேரில் தண்ணீருக்கிருக்கிற வலுவைப்பற்றி சாட்சியங் கேட்கும்பொருட்டு சென்னையிலுள்ள தேர்ந்த வைத்திய உத்தியோகஸ்தரை வரவழைக்கும்படி உத்தரவுசெய்தார்.

காசியில் விஷபேதி குறைந்துவருகிறது. அந்த வியாதி சுத்தமாய் ஒழியாவிட்டாலும், சென்றமீ 14உ சாயங்காலம் 5½ மணிக்கு தூசிப்படலக் காற்றெழும்பி மூன்றுமணிநேரம் அடித்து, அந்தவியாதியின் விஷவித்தை வாரிக்கொண்டுபோனபடியால், இனிக்கவலைப்படாதபடி போதுமானமட்டில் ஒடுங்கிப்போயிற்று.

இந்தியாவிலே பஞ்சாப் மாகாணமொன்றுதான் பயிர்குன்றி சுத்தமாய்க்கெட்டுப்போயிற்று. வடமேற்கு மாகாணங்களிலும் அயோத்தியிலும் மாசூல் அனுகூலமாயிருக்கிறது. கடைகளில் போதுமான தானிய மிருக்கிறது, அகவிலையும் நிதானமா யிருக்கிறது. பங்காளத்திலே பலனுண்டாயிருக்கிறது; கொஞ்சம் மழைபெய்து புழுகி உழவுசெய்கிறார்கள்.

ரஷியாவிலே பாகுப்பிரதேசத்தில் சென்ற அக்டோபர்மீ 5உ கரோசீன எண்ணெய்போன்ற 'பிட்ரோலியம் (பாறைஎண்ணெய்) ஊற்றுவெடித்து வெளிப்பட்டது; அது இதுவரையிலுண்டானதைவிட மகா பெரிதென்று நம்பப்படுகிறது. 224 அடி உயரம் எழும்பி, ஒருமணிநேரத்துக்குக் கிட்டத்தட்ட 500 டன் விழுக்காடு ஒருநாளைக்கு 11,000 டன் எண்ணை கிடைத்தது. வெடிவாயிலிருந் துண்டான வாயுகர்ச்சனை பயங்கரமாயிருந்ததாம்.

பாம்பே.—தாதாபாயி நவுரோஜியவர்கள் பார்லிமெண்டு மகாசபையில் சேரக்கருதி, மறுபடியும் இங்கிலாந்துக்குப் போயிருக்கிறார். இப்போது அவர் தவறிப்போனபோதிலும், அவர் அங்கே தங்கியிருந்து, அடுத்துச் செய்யப்படும் நேமனகாலத்தில் நேமிக்கப்பட முயற்சி செய்வார்போலும். நேமிக்கப்படுவாராகில், இந்துக்களுக்குள்ளே பார்லிமெண்டில் மெம்பராவது இவர்தான்முதல். இங்கிலீஷ்சபையிலே சிலவருஷமிருப்பாராகில் வெகுபிரயோசனகாரியாவார்.

பெங்களூர்.—ஜகதாம்பாளம்மாளென்னும்இந்துசாதி12வயதுள்ள பெண் ஸ்பெஷல் அப்பர் பிரைமெரி எக்ஜாமினேஷன் என்னும் பரிட்சையில் முதல் வகுப்பிலே தேறினள்; அச்சிறுமிக்குக் கிடைத்தமொத்தஎண் 202. அவ்விடத்தியபாலிகாபாடசாலைப்பெண். பெண்கள் வித்தியாபிவிர்த்திவிஷயத்தில்விடாமுயற்சிசெய்துவரும் அப்பாடசாலைச் சபைத்தலைவராகிய சி. வரதராஜபிள்ளை யவர்களுக்கு நாம் நன்றிகூர்ந்த வந்தனஞ் செலுத்தவேண்டும்.



### கையொப்பநேயருக்கு

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறாதவர்கள் உடனேதெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

உள்ளூர்மெம்பர் - மூன்றுமாசத்திற்கு—ரூ 3— 0—0
வெளி ,, ,, —ரூ 1—14—0

செலுத்தவேண்டும். அப்படி சேருகிறவருக்கு "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகையாவது, "தத்துவவிவேசினி" யாவது இலவசமாக அனுப்பப்படும்.

### தத்துவவிவேசினி

நான்குபக்கம், பிரதி 1க்கு விலை அணா 1.

### தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs | A. | P. | |
|---|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 | முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 | |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 | |

வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணாவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணா வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத் தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS. No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 15.] MADRAS:—SUNDAY APRIL, 10, 287. A. S. [Monthly, 4 Annas.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



*ராஜா ஸர். டி. மாதவராவ் K. C. S. I. அவர்களால் கன்வோகேஷனில் வாசிக்கப்பட்ட உபந்நியாசத்தின் பாகம்.*

## அபிப்பிராயபேதம்.

அடிக்கடி அபிப்பிராயத்தில் வேறுபடுவது சுதேசிகளுடைய தன்மையாயிருப்பதால் துக்குடிதுக்குடியாகப் பிரிந்துபோகிறார்கள். இதனாலே, பலவகைப்பட்ட உயர்வுதாழ்வான அறிவினளவும், தீர்மானிப்பதற்கு ஏற்றத்தாழ்வான பலவித சக்தியும், நானாவிதமான பற்றும், குணகுணங்களும், பிடிவாதமும், சரி-தப்பு என்பதற்குரிய பிரமாணங்களுக்கு மிஞ்சின பல பிரமாணங்களும் பரவுவதாக விளங்குகிறது. பாருங்கள், அபிப்பிராயங்கள் எவ்வளவு வேறுபடுகின்றனவோ அவ்வளவு சனப்பிரிவுகளு முண்டாகு மென்று தெரிந்துகொள்ளவேண்டும்; அதினாலே பலவீன முண்டாகவேண்டியதுதான். கல்வி விர்த்தியாக ஆக வேறுபடுதலும் குறையும்; விர்த்தி வளரவளர ஐக்கியபத்தியமும் வளருமென்று கோரத் தக்கதே. ஒவ்வொரு கல்விமானும் தன்தன் கொள்கையை ஆராய்ந்துபார்ப்பதற்கும், தன்தன் கொளகை குறைவறவிருக்கிறதாவென்றும், தன்தன் நியாயம் உறுதியாயிருக்கிறதாவென்றும் யோசித்தறிவதற்கும், முடிவாய் சரியான தீர்மானத்திற்கு வருவதற்கும் முயற்சி செய்யக்கடவர். உடனே ஒத்துக்கொண்டால், புத்தியீனத்தால் ஒத்துக்கொண்டதாய் நினைப்பார்களென்கிற தரபிப்பிராயத்தினாலாவது, ஒத்துக்கொள்ளாவிட்டால் புத்தி விசேஷத்தால் ஒத்துக்கொள்ளவில்லையென்று நினைப்பார்களென்கிற தரபிப்பிராயத்தினாலாவது வேறுபடலாகாது. ஆலோசனையும் அனுபவமுமுள்ள அநேகர் ஒரு அபிப்பிராயத்தில் கலக்கும்போது, அதினின்றும் வேறுபடுவதற்கு அவசரப்படலாகாது. வேறுபடுவதைப்பார்க்கினும் ஒத்துக்கொள்வதே விசேஷம். பேசுவதற்காவது வாதிக்குஞ் சாமர்த்தியத்தைக் காட்டவாவது இது சமயமெனக் கருதிமாத்திரம் வேறுபடலாகாது. ஐக்கியபத்தியம் பலிதமாகும்படி அற்ப வேறுபாடுகளை விட்டுவிட இஷ்டங்கொள்ளவேண்டும். எவ்வளவுசாக்கிரதையாய் யோசித்து அபிப்பிராயங் கொள்ளுகிறீர்களோ, யோசனையும் அனுபவமு முள்ளவர்களுக்கு எவ்வளவு மரியாதை செய்கிறீர்களோ அவ்வளவும் வேறுபடுதற்குரிய முகாந்தரங்கள் குறையும். ஒருசங்கத்திலுள்ள உத்தமர்கள் சொல்லைக்கேட்டு அந்தச் சங்கத்தார் நடப்பதற்கேற்ற அளவாக அந்தச்சங்கம் முன்னுக்குவருமென்று ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

———o———

## வியவசாயரசாயனம்.

———o———

சாதாரணமாக நம்மவர்கள் உலகத்திலுள்ள பொருள்கள் யாவும் பஞ்சபூதங்களின் விகாரமென்று சொல்லுவார்கள். பஞ்சபூதங்களாவன பிருதிவி, அப்பு, வாயு, தேஜஸ், ஆகாயம். பிருதிவிஎன்றால் மண், அப்பு ஜலம், வாயு காற்று, தேஜஸ் நெருப்பு, ஆகாயமென்பதைப் பிரகிருதவிஷயத்தின்பொருட்டு ஒரு தனியான பொருளாக நினைக்கவேண்டியதில்லை. இஃது நமது உணர்ச்சிக்கும் புலப்படாத அதிநுட்பமான காற்றை யொக்குமென்பார்கள். ஆயினும் பொருள்கள் இதனால் விகாரப்படுவதில்லையாதலால், மற்ற நான்கு பொருள்களும் தனியாகவாவது விகாரப்பட்டாவது வீற்றிருக்க இடமாயிருக்கும் ஓர் வெளியே ஆகாயமென்று கொள்வோம். ஒரு சுவனாத் தோண்டினால் தோண்டியெடுக்கப்பட்ட அம்மண்ணிருந்தவிடமே ஆகாயம். ஆனால் மண்தோண்டப்பட்ட உடனே அங்கு காற்று நுழைந்து பரவும். இங்கு ஒரு வஸ்துவில்லாதவிடம் கிடையாது. இதை தந்திரத்தால்தான் உண்டாக்கவேண்டும். ஒரு பீச்சாங்குழலைக் கொண்டுவந்து அதன் இழுப்புக்குச்சியாகிய மேல்மூடிக்குள்காற்றுக்கிடங்கொடாதபடி துணிசுற்றி அமிழ்த்தினால் அக்குழலில் உள்ள காற்றெல்லாம் அடித்துவாரத்தின்வழியாக ஓடிப்போய்விடும். அப்போது அந்தத் துவாரத்தைக் காற்றுநுழையாதபடி பந்தனஞ் செய்து பின்பு மேறபடி குச்சியை மேலுக்கிழுத்துக்கொண்டால் அக்குழலில் காற்றொன்றுமில்லாத வெறறவெளி அல்லது ஆகாயமுண்டாகும். இவ்வாறு ஆகாயம் மற்ற பூதங்களுக்கிருப்பிடமாயிருப்பதேயன்றி இது தனியான பூதமல்ல. இவ்வாகாயமில்லாது உலகத்தில் யாதொரு பொருளுமிருப்பது அசாத்தியமாதலால் இதை ஒரு பூதமாக வைத்துக்கொண்டார்கள். ஆயினும் உண்மையாகவே உலகத்தில் உள்ள பொருள்யாவும் பிருதிவி, அப்பு, வாயு, தேஜஸ் என்னும் நான்குபூதங்களின் விகாரமாகவே யிருக்கின்றன. இவைகளையன்றி ஒருபொருளுமில்லை. ஆதலால் இவற்றின குணாகுணங்களை செம்மையாகக் கண்டறிந்தோமாயின் சகல பொருள்களின் உற்பத்திலய வேறுபாடுகளை எளிதில் கண்டறியலாம்.

தன்னில் தனியாகி கலப்பல்லாததாய் இதர பொருளாகப் பிரிக்கக்கூடாததாய் இதரபொருள் உண்டாவதற்கு ஒரு மூலகாரணமாயாவதே பூதமென்றுசொல்லப்படும். இப்பூதங்கள் தனியாகவும் பிரத்தியேகமாகவும் பெரும்பாலும் காணப்படுகிறதில்லை. இரண்டல்லது பலகலந்தேயிருக்கும். சாதாரணமாக பூதங்களென்று சொல்லப்பட்ட பிருதிவி, அப்பு, வாயு, தேஜஸ் இவைகள் நிஜமாகவே பூதங்களல்ல. இவைகளெல்லாம கலப்பு வஸ்துக்கள்தான். மண்ணில் அனேகபொருள்கள் அமைந்திருக்கின்றன. இவைகளையெல்லாம் ரசாயனசாஸ்திரிகள் வெவ்வேறாகப் பிரித்துக் காட்டமாட்டுவார்கள். இவ்வாறே ஜலமுதலியவும் வேறுவேறாகப் பிரிக்கக்கூடிய மற்றபொருள்களின் கலப்பாலுண்டாகின்றன. ஆயினும் வேறு பொருளகளாக பிரிக்கக்கூடாதனவாயும் தம்மில்தாமே விகாரப்படமாட்டாதனவாயும் சிலவஸ்துக்களிருக்கின்றன. இவைகள்தான் பூதங்களென்று சொல்லப்படும். உலகத்திலுள்ள எவ்விதப் பொருள்களையும் நுட்பமாக பரிசோதித்தறிந்த இரசாயனசாஸ்திரிகள் மேற்கண்டபடி பிரிக்கக்கூடாதனவாயும் தன்னில் தனியாகி மற்றபொருள்கள் யாவற்றிற்கு மூலகாரணமாயிருக்கிற பூதங்கள் 67 இதுவரையில் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவைகளின் குணங்களெல்லாம் இரசாயன கிரந்தத்தில் விஸ்தாரமாக சொல்லப்படும். இரசாயனத்தைப்பற்றி நாம் பிரத்தியேகமாய் எழுதக் கருதியிருப்பதால் இங்கு அவைகளையெல்லாம் சொல்லுவது அவசியமன்று. கந்தமூலாதிகள் உத்பத்தியாவதற்குக் காரணமாயிருக்கும் பூதங்களைமாத்திரம் அடியில் விவரித்துக் காட்டுவோம.

காட்டில் தாமாய் விளைகின்றனவும் நாட்டில் பயிரிடப்படுகின்றனவும் ஆன எல்லாக் கந்தமூலாதிகளில் அமைந்திருக்கும் பூதங்கள், கஅ. அவைகளாவன, ஜீவிமூலம், ஜலமூலம், நிர்ஜீவமூலம், கரிமூலம், சுத்தகந்தகம், காடிக்காரமூலம், இலவணமூலம், லவணத்திப்பி, பிளோரயின், ஸ்படிகமூலம், காரமூலம், இலவணகாரம், சுண்ணமூலம், காந்தக்கல், படிகாரமூலம், அயம், காந்தத்போலியேயாம். இப்பதினெட்டு பூதங்களுள் முதற்கூறப்பட்ட பதினொன்றும் லோகதாதுக்களை அடக்காதபடியால் லோகசூன்னியங்களெனப்படும், பின் கூறப்பட்ட ஏழும்சிலலோகங்களுக்கு ஆதாரமாயிருப்பதால் லோககாரிகளெனப்படும். (இன்னும்வரும்.)

த—ணி.

## கடைதிறப்பு.

(ஜோசெப் சைம்ஸ் அவர்களால் எழுதப்பட்டது.)

(54-வது பக்கத்தொடர்ச்சி.)

II. ஆனால் வேறே முக்கியமான விஷயமொன்றிருக்கிறது. அநேக தலைமுறைகளுக்கு முந்தி பூமிக்கும் சூரியனுக்கும் உறவு சம்பந்தமுண்டாயிருந்ததென்று அனுமானிக்கப்பட்டிருந்தது. விசேஷ மகிமையுள்ள மேனியாய, மற்றெல்லா ஒளிகளும் அதற்கெதிரில் தலைகாட்டினபோது மழுங்கிப்போகச் செய்யத் தக்க பிரகாசமுடையதாயிருக்கிற சூரியன்உண்மையிலேயாது? அது என்ன? சூரியனானது அக்கினியின்பேரிலில்லாமல், அதிக ஊஷ்ணமாயிருக்கிற வெகு காத்திரமான பூமியாயிருக்கிறது. இப்போது சூரியன் பிரகாசிப்பதுபோலவே, பூமியும் ஊஷ்ணமடங்கிக் குளிர்ந்துபோகிறவரையில் அநேககோடி வருஷகாலம் ஜொலித்துக்கொண்டிருந்தது. பூமியானது ஓர்காலத்தில் பெரிய சூரியனைச் சுற்றி ஓடுகிற சிறிய சூரியனாயிருந்தது. பூமியானது தனது பருவத்தை யொழித்த சூரியனாகவும் அவிந்துபோன விளக்காகவுமிருந்துகொண்டு, ஜீவராசிகள் வாழ்வதற்கிடமான பொருளாயிற்று; சூரியன் இன்னும் அப்படிப்பட்ட தெசைக்கு வரவில்லை. சில தலைமுறைக்குமுன்னே சூரியனுக்கும் பூமிக்கும் நெருங்கிய உறவு இருந்ததென்கிற கருத்து யூகையாகமாத்திரமிருந்தது; ஆனால் அது இப்போது நிச்சயப்பட்டது. அதுமுதல் ஸ்பெக்திரஸ்கோப் என்னுங் கண்ணாடிக்கருவி உண்டுபண்ணப்பட்டது, பதார்த்தங்களிலுள்ள தத்துவங்களை வகுத்தறியத்தக்க நூதனமான ரசாயனசாகை ஏற்படுத்தப்பட்டது, சூரியனில் கலப்புற்றிருப்பவற்றைக் குறித்து நாம் இப்போது கொஞ்சந் தெரிந்துகொள்ளுகிறோம், ரசாயனக்காரர்களுடைய தொழிற்சாலைகளிலே மிகவும் நன்றாய் அறிந்திருக்கிற தாதுக்களில் (மூலப்பிரகிருதிப்பொருள்களில்) அநேகம் காத்திரமான உருவாகிய சூரியனில் காணுகிறோம் !-ஸோடியம், இரும்பு செம்பு, நாகம், கல்சியம், கிரோமியம், நிக்கெல், காந்தமண், பாரியம், ஸ்திரான்டியம், காட்மியம், ஆக்சிஜன் ஹைத்ரோஜன் என்னும் வாயுக்கள், ஆகிய தாதுக்கள் சூரியனில்விஸ்தாரமிருக்கிறதென்று கண்டறியப்பட்டிருக்கிறது. ஆகையால் சூரியன் (மனித உற்பத்தியாகி) மானிடர் வாழத்தக்க ஸ்தானமாகும்படி போதுமானமட்டில் குளிர்ந்துபோமாகில், அவர்களுக்கு பூமியிலுள்ளாருக்குண்டாயிருப்பது போலவே நாகரீகம் உண்டாகக்கூடும், நாமறிந்திருக்கிற அநேக வஸ்துக்களைப்போன்ற வஸ்துக்களை அவர்கள் செய்தாலும் செய்யலாம். இதனாலே அங்கஜீவ தத்துவங்களை ஆராய்ந்த சாஸ்திரிகள் (வெகு சிரேஷ்டமாக மதிக்கப்பட்டிருந்த) மானிட ஜன்மத்தைக் குறைவாக(மிருகத்தன்மைக்கு)கொண்டுவந்து விளங்கக்காட்டிய நிலைமைக்கே, (வெகுமகிமையுள்ளதாகப் பாராட்டப்பட்ட) பொய்யான நிலையிலிருந்து சூரியனும் உள்ளபடிக்கிட்டத்தட்ட இறங்கிவிடவேண்டியதுதான், மனிதனும் மற்றப் பிராணிகளும் முக்கியமானவற்றில் ஒரு விதந்தானென்றும், பலவிதமான ஊன்களிலுண்டாயிருக்கிற பேதங்களைசகுறித்துப்பால் என்பவர் உளறியிருக்கிறானென்றும் நாம் இப்போது அறிந்துகொள்ளுகிறோம்.அப்படியே, சூரியனுக்கு இயற்கையாய் உரித்தானதெதுவோ அதைமாத்திரம் அதற்குவிட்டு, அதைப்பற்றி அபத்தமாய்க் கூறப்பட்டிருக்கிற மகிமையை வானசாஸ்திரிகள் சுத்தமாய் ஹதஞ்செய்துவிட்டார்கள்; நிச்சயமாய் அதுவே போதுமானது.

சூரியனைப்பற்றி உண்மையாய் என்னசொல்லியிருக்கிறதோ அதுவே வெகுவாய் நட்சத்திரங்களைப்பற்றியும். அவைகள் நமக்கு வெகுதூரத்திலிருக்கிற சூரியர்கள்தான்; அவை காத்திரத்திலும் ஒளியிலும் நமது சூரியனுக்கு வெகுவாய் மிஞ்சியிருந்தபோதிலும், அவை தொலைதூரததிலிருக்கிறபடியால், வெளிச்சமான புள்ளிகளாகத் தோன்றுகின்றன. நிலையான நட்சத்திரங்களி லநேகம் ஸ்பெக்திரஸ்கோப் கண்ணாடிக்கருவிமூலமாய்ப் பரிசோதிக்கப்பட்டன; பூமியில் என்னென்ன ரசாயன தாதுக்கள் சேர்ந்திருக்கின்றனவோ அவைகளே ஏறக்குறைய அந்த நட்சத்திரங்களில் சேர்ந்திருப்பதாகத் தெரியவருகிறது. நிபியூலே நட்சத்திரமும் வால்நட்சத்திரங்களும் அவ்வாறுதான்; இவ்விதமாய் பிரபஞ்சம் ஒரேதன்மையதாயிருக்கிறதென்று வானசாஸ்திரத்தினால் தெரியவருகிறது. நாம் யார் சொல்வதை நம்பலாம்? அறிந்துகொள்வதற்கு வெறுங்காட்சியும் கடவுள் காதில் ஊதினானென்பதுந்தவிர வேறுவகை தெரியாதவர்களாய், விரிவான மனோராச்சியத்திலே தங்களுக்கென்று சிருஷ்டி செய்துகொண்ட (மேல்) உலகத்தில் நம்பிக்கைவைத்து, இத்தன்மையதென்று தாங்கள் ஒருபோதுமறியாத இவ்வுலகத்தை இகழ்ச்சிசெய்த மதோன்மத்தர்களை நம்பலாமா? அல்லது நன்மைசெய்வதில் மகத்தான பொறுமையோடு தங்கள் விசாலமான புத்தியை கணிதசாஸ்திரங்களிலும் கருவிகள் கண்டுபிடிப்பதிலும் உபயோகப்படுத்தி, வானசாஸ்திரமென்னும் சிறப்புற்ற சாஸ்திரத்தை நிலைநாட்டி விர்த்தி செய்துவந்தவர்களை நம்பவேண்டியதா?

இந்த ஆச்சரியமான சாஸ்திரத்துக்கெதிரிலே, "சூரியனுடைய மகிமையும்வேறு, சந்திரனுடைய மகிமையும்வேறு" என்பதாகப் பேய்த்தனமான உளறல் எவ்வளவு பேதமையும் சிறுபிள்ளைத்தனமுமா யிருக்கின்றது! அதைச்சேர்ந்த மற்றவைகளும் அப்படியே. தீர்க்கதரிசிகளும், குருக்கள்மாரும், பூர்வக்கியானிகளும், இரட்சகர்களும், அப்போஸ்தலர்களும், பதார்த்த லட்சண தத்துவ சாஸ்தரங்களிலும், வானசாஸ்திரத்திலும் நன்றாய்த் தேர்ச்சியடைந்திருப்பார்களாகில, வெளிப்படுத்தப்பட்ட வாக்கியங்கள் உலகத்திற்கு ஆசீர்வதிக்கப்பட்டிரா; மதங்களும், வேதங்களும், தேவகற்பனையும், குருகாணிக்கையும், பயமுறுத்தலும் உண்டாகியேயிரா. பதார்த்தலட்சண தத்துவ சாஸ்திரங்கள் வைதிகத்தைத் தலைநிமிரவொட்டாமல் அடக்கிப்போட்டேயிருக்கும். அதற்குப் பதார்த்தலட்சண தத்துவசாஸ்திரங்களே நல்ல அவிழ்தம. அதிஷ்டவசாத்தாய் குருக்கள்மார்களே அந்த அவிழ்தப் பிரயோகஞ் செய்துவருகிறார்கள். அவர்களில் சிலர் வானசாஸ்திரம் வாசிக்கிறார்கள், கற்றுங்கொடுக்கிறார்கள். உண்மையானபலன் சித்திக்கவே சித்திக்கும். இப்போது அஞ்ஞானம் அரசாளுகிறவிடத்திலே உண்மையாகிய ஞானோதயம் உண்டாகவேவேண்டும். மானிடபுத்தியிலே எப்போது ஒருகால் ஞானஒளி ஊறுகிறதோ அப்போதே, எவனாவது இப்போதுசெய்வதுபோல, வெட்டவெளியிலுள்ள பிரேதக்குழியண்டை நின்றுகொண்டு, "வானத்துக்குரிய மேனிகளுமுணடு, பூமிக்குரிய மேனிகளுமுண்டு" என்பதாக பக்தியாய் வாசிப்பது கூடாமையாய்விடும். மரித்தெழுந்திருப்போம், மறுஉலகில் வாழ்வோம் எனகிற ஆபாசமான எண்ணம் எப்போது அழிந்துபோகிறதோ அப்போது மனிதர்கள் எதை நிந்திக்கும்படித தங்களை வைதிகம் தூண்டுகிறதோ அந்த பூமிக்குத் திரும்பி, அதில் வற்றாச்சமுத்திரமா யிருக்கிற களஞ்சியத்திலிருந்து கல்வியறிவுடையவர்கள் விரும்பக்கூடிய சகல நன்மைகளையும் பெறுவார்கள்,

A. M.

## கண்ணிகள்.

(50-வது பக்கத்தொடர்ச்சி.)

படைப்பெல்லாநமக்காகப் படைத்துள்ளானென்றாலோ
அடைவொடதைநம்மதென்றே யன்பாகக்கூறுவண்டா. (31)
நம்பொருளையனுபவிக்க நம்மையன்றிவேறொருவர்
தம்பொருளென்றேயுரைக்கச் சமர்த்துண்டோவென்பேண்டா.
மானிடருக்காகவேதான் வஸ்துகளுண்டானதெனின் .
ஏனிதனாற்பாவமையோ எப்படிமூளைக்குமடா. (33)
என்பொருளையநுபவிக்க வெனக்கதனாற்பாவமென்றால்
என்னநியதமிது வெங்கேனுஞ்செல்லுமோடா. (34)
கூடியென்றன்மனைவியுடன் குலாவியிருப்பதையோ
நாடிநீபாவமென்றால் நானுமதைக்கேட்பனேடா. (35)
எல்லாமுநம்மதென்று லென்மனைவிகைபிடித்தல்
பொல்லாதெனவுரைக்கப் பொருந்துமோபாரேடா. (36)
விதியாயிதையொழிகில் விபசாரக்குற்றமுண்டோ
மதியுளிதைப்புகட்டி மானத்தைக்காரேடா. (37)
இங்ஙனேபாவமெல்லா மில்லாமற்போவதற்கு
சங்கையற்றார்தம்மொழியே சான்றாகநிற்குதடா. (38)
எல்லாமுநம்மதென்றே யியம்பிவிட்டுமூடனைப்போல்
சொல்லானபாவமென்று சொல்லினதுமாரோடா. (39)
இல்லதுவும்வாரா திருப்பதுவும்போகாதாய்ச்
சொல்லுமிந்தச்சொலலுந் தோஷமோசாற்றேடா. (40)
இல்லதுவாராதெனிலோ ஈசனார்சிருஷ்டியென்ற
சொல்லினதுபொருளைச் சொல்லவுந்தான்வேணுமடா. (41)
படைப்பிற்குமுன்முகூர்த்தம் பராபரனென்செய்தனரோ
விடைவேண்டுமிந்த வினாவினுக்குப்பாரேடா. (42)
படைபபினதுகாரணத்தைப் பண்பாய்ச்சொல்லாவிடிலோ
படைப்பென்னுமப்பெயரைப் பகரலடாதென்பேண்டா. (43)
என்னபயன்கருதி யெல்லாம்படைத்தனனோ
சொன்னவருக்கேயதுதான் சோர்வடையச்செய்யுமடா. (44)
எங்கிருந்தெங்கே யெதைப்படைத்தானென்றாலோ
இங்கொன்றிதற்கியம்ப ஏலாதுபாரோடா. (45)
கர்மமெனச்சொல்லிடுவார் கர்மமதையின்னதென்று
மர்மமறச்சொல்லுமட்டும் வழக்கைவிடமாட்டேண்டா. (46)
சர்வமுமவனதென்றாற் சங்கையற்றுக்கர்மமுந்தான்
சர்வத்திலடங்கியுள்ள சாட்சியையும்பாரோடா. (47)
அவனதாங்கர்மமதை யனைவருக்குங்கூறிடினோ
அவனையன்றிவேறே யணுவேனுமுண்டோடா. (48)
அவனையன்றியணுவேனு மில்லையெனவுரைப்பாரேல்
இவனைக்கருமியென்றே யியம்பிடவும்போமோடா. (49)

எனைக்கருமியென்றே எள்ளளவுஞ்சொல்வதற்கு
என்னநியாயமுண்டென் றெதிர்த்துநான்கிற்பனடா. (50)
கர்மமெனக்கில்லையென்ற காரணத்தாலையையோ
சர்வத்திற்கிவ்விதியைச் சாற்றுவேன்பாரேடா. (51)
வினைக்கிடாந்தேகம் விளைந்ததெனஉரைக்கில்
வினைமுன்னோதேகமுன்னோமெய்யெதெனவினவுவண்டா. (52)
வினைதானுமுன்னதென்றே விடையீயினையையோ
வினைதானுந்தேகமின்றி விளைவதுண்டோவென்பேண்டா. (53)
உடலில்லாக்காலமதிற் கர்மமுந்தானுண்டென்றே
மடமைபூண்டுளறுமிந்த மடையருக்கேதுரைப்பேண்டா. (54)
தேகமிலலாக்காலமதில் திருவருளையன்றியுண்டோ
ஏகமாந்திருவருளுக் கேதுவினையென்பேண்டா. (55)
திருவருட்கேவினையிருக்கின் தீவினையாற்கட்டுண்டு
உருவாகிவந்தோமென் றுளறுதலேதுக்கேடா. (56)
நம்மாலேயொன்றுமில்லை நடந்தெல்லாந்திருவருளால்
அம்மாபிறந்ததென வதட்டியேநிற்பனடா. (57)
அருளேயித்தேகமதை யன்பாயெடுத்ததென்றால்
அருளையன்றிதேகத்திற் கறிவுண்டோசொல்லேண்டா. (58)
அறிவற்றதேகமதை அருளுந்தானெடுப்பதுண்டோ
நெறியற்றுப்பிதற்றுமிந்த நெஞ்சினர்க்கேதோதுவண்டா. (59
திருவருளேயான்மவன்றி தேகியெனின்மற்றென்றோ
திருவருளேதீவர்த்தித் திரிஜீவனன்றோடா. (60;

(இன்னும்வரும்.)

கிருஷ்ணகிரி உண்மைவிரும்பி.

---

## நாத்திகமெது?

ஓதஞ்சூழுலகுதன்னில் உத்தமவறிஞர்போற்றத்
தாதுவாந்தத்துவத்தைத் தகையுடன்கண்டுகொள்ளச்
சோதியாஞ்சுவக்கியானச் சுகுணர்கள்கொண்டகொள்கை
பேதமாஞ்சமயத்தோர்கள் பேசுவதென்னதேவோ.

கடவுள் உண்டென்பவருக்கும் கடவுளின்னதென்று அறியாதவருக்கும் உள்ள முக்கிய பேதமென்னவெனில்—அறியாதவும் அறியப்படாதவுமாகிய கடவுளைப்பற்றி முழுமையு மறிந்ததாக ஆத்திகர்கொள்ள, நாத்திகர்களோ, ஜனங்கள் அறியாமையால் கடவுளென்று பெயரிட்டழைக்கும் வஸ்து மனதிற்கு இன்னதென அவகாஹப்படவில்லை யென்று உண்மையாய் உரைப்பார்கள். ஏனெனில், கடவுள் ரூபத்திலும்,புத்தியிலும், ஞானத்திலும் பூரணரென்கின்ற கொள்கையால், அபூரணனாகிய மனிதன் அறிவுக்கரிதாய் அகண்டமாய் நின்ற நிறைவைக் (கடவுளை) திரிகரணங்களாலும் அவகாஹப்படுத்தல் கூடாமை. ஆத்திகர்களால் கூறும் கடவுள் என்னுஞ் சப்தம் சுவக்கியானிகள் மனதிற்குத் தெளிவாயும் விவரமாயும் அருத்தந் தரவில்லை. பொன்னைப்போல் எவ்வித சோதனையினாலேயும் சந்தேகந் தராமல் கடவுளென்னுஞ் சப்தத்திற்கு உரியபொருளின்னதென சுவக்கியானிகளின் எதிரிகள் ரூடி நியாயமாய் விவகரித்தால் அப்போது அவர்கள் ஆத்திகர் கொள்கையை நம்புகிறதற்கு யாதொரு தடையுமிராது. இப்படியிருக்கச் சுவக்கியானிகள் கடவுளில்லையென்று ஒருபோதும் உரையார். மேலும் அவர்கள் தங்கள்மனதில் இன்னதென்று அவகாஹப்படாத ஒன்றை யிலலையென்று சொல்லுதல் கூடாமையாலும், அது உண்டென்றுரைக்கும் ஒருவனுக்கே அது இன்னதென்று இவர்களுக்கு (சுயக்கியானிகளுக்கு) விரித்துரைக்க அவர்கள் புத்திக்கே அபூரணமாயிருப்பதினாலும், கடவுள் இல்லவேயில்லையென்று அஞ்ஞானிகளைப்போல ஒருக்காலும் சொல்லார் சுவக்கியானிகள். நாத்திகம் என்னும் பதத்திற்குச் சுவக்கியானிகள்கொண்ட அருத்தம் கடவுள இன்னதெனறு அறியாமை. (நாத்திகம்=ஆத்திகர்கொண்ட கடவுள் அல்லாமை.) இங்ஙனமாக சில நவீனவிவேகிகள் இவர்கள் கடவுளில்லையென்றுரைப்பார் என்பார். இனியேனு மங்ஙனங்கொள்ளாமல் உண்மை ஈதென உணர்வாராக.

C. A.

---

## கடிதம்.

## ஸ்ரீமான் ஏகாங்கிஸ்வாமிகள் நாராயண சமாஜவள்ளல்.

பிரம்மம் எங்குமிருப்பதால் கல்லிலில்லை யென விக்கிரக ஆராதனையைத் தியாஜிக்குமவனும், அர்ச்சாமார்க்கமொழிபதியான மார்க்கத்தைக் கேவலிக்குமவனும், சுத்த மூடனெனவும் கேவலம் மூடர்களுக்கே விக்கிரக ஆராதனையெனவும் பிரம்மமே உலகமாய்த் தேவாய் மற்றதுமாய் அனைத்துமாயதெனவும் போதமிகுந்து ஓதப்புகுந்த ஸ்வாமிகாள்:—

எங்குமிருப்பதைக் கல்லில் தேடுவானேன்? மண்ணையும் சாம்பலையும் தேம்பலையும் கழுதையையும் குதிரையையும் மற்றதையும் விடுவானேன? எங்குமுள்ளதுண்மையாயின் கல்லிற்குப்பிராணப்பிரதிஷ்டைசெய்வானேன்! இதுவேதவிதியோ! பேதைவிதியோ? பிராணப் பிரதிஷ்டை செய்தபின்னுயினும் பிரதிஷ்டையாலாயசெயலைப்பிரதிஷ்டையுற்றகலலில்கண்டாருண்டா? கண்டுதானோ தாசி வேசி பாண மத்தாப்புதோசைவடையிவை முதலானதுகளால்கலலைப்பிரீதிசெய்துவருவது! இவற்றால்விக்கிரகாபிமானிகள் ஓட்டாண்டியாய் மேகாதி ரோகங்களால் துன்புற்று தர்மரணமொன்றைத் தவிர அடைவது வேறுண்டென விவேகிகள் சொல்லத்தான் நாவெடுப்பாரா! வேறுண்டெனப் புகலும் விவேகி உண்டானுல் இவற்றால் (தாசிவேசிமுதலானதுகளால்) 'யாது பிரயோசனம்? புகலல் வேண்டும். விக்கிரகங்கள் எழுந்தருளியிருக்கும் கட்டடங்களில் அதி நீச்சத்துவம் உண்டெனக்கண் டுணர்ந்தும் "தீமைமற, நன்மைகடைப்பிடி" என்னும் திருவாக்கைத் தெருவாக்காக்கி, அர்ச்சையெனும் அக்கிரமத்தை அதிகரிக்கச்செய்வதும் விவேகச்செயலாமா?

பிரம்மம் உலகமாய்த் தேவாய் மற்றதாய் அனைத்துமாயதெனப் பறையடிக்கும் வேதக்கடலைவாய்மடுத்துண்ட ஸ்வாமிகாள்! உலகமென்றாலென்னை? தேவு மற்றதென்றாலென்னை? உலகமென்பது பூதபௌதிகங்களாயின் தேவு மற்றதென்பதும் எதன் பிரிவுகள்? இவையனைத்தும் பிரம்மபவுதிகங்களெனில் (ப்ரம்மம் பூதபௌதிகங்களாய்விட்டபின) ப்ரம்மமெனும்பேரோ பரவெளியாகின்றனவே? ஆகவே சுவாமிகள் வேதம் அப்படியும் ஓதும், இப்படியுமோதும்போலும்; பளா! பளா!! வியப்பினும் வியப்பு!!

பிரமத்தை உலகமாய்த் தேவாய் மற்ற சாமிகளாய் மண்ணும்பொன்னுமாய் வராகம் பெருச்சாளி கருடன் கோணக்கூத்து கோமுட்டி மெலிவு வலிவு கழுதை குதிரை நாய் நரி நண்டு நத்தை மரம் மட்டை யிவைமுதலிய உயர்வுதாழ்வுள்ளபொருள்களாய்க் கூறுபோட்டுக் கூகூவெனக் கூவிக் களித்து எக்கூறு எக்கூறை வணங்க, எக்கூறு விக்கிரகமாகவும் பிர்ம்மமாகவும் இருக்கிறது! வராகம் ரிஷபமான கூறெது? கழுதை குதிரையான கூறெது? மண்ணு கல்லு ஆன கூறெது? கிருஷ்ணனாய் கோபிகளாய் இராமனாய் இராட்சதனாய் ஆனகூறெது? நாமக்கூறெது? சாம்பற்கூறெது? இவ்வோதலை முன்னிட்டோ சுவாமிகள் குழாங்கள் இவரை பெரியகல் (பெரியமலை) யென்றும் மற்றவர்களை சிறுகல் (சிறுமலை) யென்றும் தெருவிலும் திண்ணையிலும் படிப்பது அறியாமை! அறியாமை!!

பிரம்மகூறில் மோக்ஷ நரகமாய கூறெது? மோக்ஷத்திற்கும் நரகத்திற்கும் செல்லும் கூறெது? இப்படி அப்படியெனச் சொல்லுவதும் செய்வதும் எக்கூறு? இன்னோ ரன்னவைகளை ஓதியது வேதவிதியோ தம்விதியோ? பிர்ம்மம் உலகமாய்த் தேவாய் மற்ற கழுதை குதிரை மண்ணும் சாணமுமாகா முன் எங்கே என்னமாயிருந்தது! இவைமுதலானவற்றால் வேதக்கடலையும் புராணக்கடலையும் பூவாய்ப்பொங்கி வழியும் ஸ்வாமிகள் விக்கிரகத்தை ஓதவந்து விக்கினமாக்கி மோதியும், பிரம்மத்தை நாட்ட வந்து பங்குகளாக்கி நாஸ்தி செய்தும் விடத்தானா பிரசங்கி நாமமிட்டு வெளிவந்தது? பாவம்! பாவம்!! ஐயோ பாவம், உபதேசம் செய்யவென வெளிவந்தது கல்லைக் காற்றில்விட்டு பிரம்மத்தைப் பாழாக்கிப் படுசூரணித்து, பிரம்மஹத்தி பாவத்திற்குள்ளாவானேன்! ஐயம் திரிபறக்கற்ற விஞ்ஞானபானுக்கள் "கேழ்வரகில் நெய் வடிகின்றதென நீ சொன்னாலுங் கேட்போருக்கு மதியில்லாமற்போமா"! என வாழ்த்துவார்களா அல்லது தாழ்த்துவார்களா? இச்சாமிகளும் இவர்போன்றோரும் ஆத்திகரா, ஆத்திகநாத்திகரா, சுத்த நாத்திகரா? இவரும் இவர்போன்றோருமே ஏகாந்தத்தில் சிந்தித்தடங்குவது நன்று. இத்தகைய ஸ்வாமிகள்இன்னோரன்ன ஆபாசங்களையெடுத்துக்காட்டுமவர்களைநாத்திகரெனவும் ஆத்திகநாத்திகரெனவும் கவனமின்றி சொல்வதை செவிமடுக்கும் நண்பர் சிரிப்பது எத்தாலோ! இப்பிரசங்கத்தால் நாராயண சமாஜம் சமாதியாயினமையைக் கண்டு, ஓட்டோட்டமாயோடிக் கூகூவெனக்கூவி (யுக்த்தி அனுபவத்துக்கு முற்றுமே முரணான) வேதமெனும் பேதத்தைவிட்டுய்மின் ,விட்டுய்மின்.

இராயப்பேட்டை நேசன்.

---

## வர்த்தமானசங்கிரகம்.

கில்ஜைதேசத்திலே கலகத்தைக்குறித்து நிகழுமீ 1௳ முதற்கொண்டு ஒன்றும் கேள்விப்படவில்லையென்றும், ஆனல் காஜ்னியில் குழப்பமுண்டாகுமென்று அங்குள்ளார் சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் பயனீர்பத்திரிகைகூறுகின்றது.

இங்கிலாந்துதேவாலய காரியங்க[illegible]க்காகச் சென்ற இருபத்தைந்து வருஷகாலத்திலே [illegible]ங்களால்இஷ்டமாய்க்கொடுக்கப்பட்ட எண்பத்தெ[illegible]றனாகோடி

ரூபாய்க்குக்குறையாமல செலவிடப்பட்டது. அத்தொகையில் பூர்த்தியான படிப்புக்காக இருபத்திரண்டுகோடிரூபாய் உபயோகிக்கப்பட்டது.

**கிரிஸ்தவனான** சீனதேசத்தானொருவன் நவீனகலகத்திலே சம்பந்தப்பட்டிருந்த தற்காக ஜீகியுன்மாகாணத்து கவர்னரவர்களுடைய உத்தரவினால் சென்ற ஜனவரிமீ 31வ தலைவெட்டுண்டு, மற்றவர்களுக்கு எச்சரிக்கையாக எல்லாரும்பார்க்கும்படி அந்ததலை ஒரு ஸ்தம்பத்தில்கட்டித் தொங்கவிடப்பட்டது.

**ஹாங்காங்கில்** P. & O. கம்பெனியாரால் கையாளப்பட்டிருந்த இடத்தையும் கட்டடங்களையும் புதிதாகமத்தியமார்க்கட்டுக்கட்டுவதற்கென்றே ஆறுலட்சம் ரூபாய்க்கு துரைத்தனத்தார் வாங்கியிருக்கிறார்கள். அந்தகம்பெனியார் அந்தப்பட்டணமத்திக்குச் சமீபமாய்ப்புதுஆபீசுகள்கட்டப்போகிறார்கள்.

**டான்கின்**பட்டணத்திலே பிரான்சியர்களுடைய வியாபாரம் சீராய்நடப்பதற்குத் தடையொன்றிருக்கிறது. அந்த சாதி வர்த்தகர்களுக்குத் தேசபாஷைகள்தெரியாமையினாலே துபாசிகளைநம்பி விடவேண்டியிருக்கிறது. [தேசபாஷைகளில கொஞ்சமாவது பயின்றிருப்பதுநலம்.]

**ஹைபாங்**அபிவிர்த்திச்சங்கமென்னும் பேரால் ஒருகூட்டத்தார் டான்கினிலுள்ள கைத்தொழில்களைப்பரவச்செய்வதற்காகவும், அமெரிக்காவிலுற்பத்தியாகிறவைகளை நுழைப்பதற்காகவும் பெருந்தொகை முதற்பணமாகவைத்து ஹைபாங்கில் வேலைநடத்தஏற்பட்டிருக்கிறார்கள். இந்தமுதற்பணம் முக்கியமாய் அமெரிக்கர்களுதே. நீராவிஎந்திர வாள் சாலை யேற்படுத்தவும், மிஸிஸ்ஸிபி நதியிலிருப்பவைகள்போல ஒருபெரியநதிஸ்டீமர்செய்யவும் உத்தேசம். [யோக்கியதையும் நம்பிக்கையுமில்லாத தேசத்தில் இப்படிப்பட்டசங்கமேது,இவ்விதகாரியம் ஏன்னநடக்கும்!]

**போர்ட்டி** ரீசாவைச்சேர்ந்த டைமர் பட்டணத்திலே நிலையாயிருக்கிற சுதேசசேனைக்குள் கலகம்நேரிட்டதாம். கவர்னரவர்களுக்காக அவருடையமாளிகைக்குச்சமீபத்திலே பதுங்கியிருந்த சிலசிபாய்கள் அவனைக்கொலைசெய்துபோட்டார்கள்; அனேக ஆபீசர்களைக் காயப்படுத்தினார்கள். யூரோப்பியன் சோல்ஜர்கள் அவ்விடத்திலருமையாயிருப்பதால், கலகம்கொஞ்சம் மும்முரமாகலாம்.

**ஜபானில்**இப்போதிய கணக்கின்படி சென்ற வருஷத்தில விஷபேதிகண்டவர்கள் 150,000; மூன்றிலிரண்டுபங்கு சேதம். ஒசாக்காநாட்டிலே பேதிகண்டவர்கள் 20,000 பேரில் இறந்தவர்கள் 15,000. தாயமாவிலே 16000 பேரில் மாண்டவர்கள் 10,000. மற்றதுக்குடிகளிலே தொகைகுறைவாயிருந்தபோதிலும்; அந்தவியாதிகண்டவர்கள்தொகையும் அதனால் மாண்டவர்கள்தொகையும்மேற்கண்ட அளவினதாகவேயிருக்கிறது.

**பெக்கின்**பட்டணத்திலே பிபர்வரிமீ 16வ சீனதேசத்துச்சக்கரவர்த்திநேமனமாகிப் பட்டங்கட்டினார்கள். இராஜஅரமனைக்குவெளியில் விசேஷசடங்குஒன்றும்நடக்கவில்லை. உள்ளேநடந்ததைக்குறித்துக் கேள்விப்படாதவர்களுக்கு இப்படிப்பட்ட முக்கியமானகாரியம் நிறைவேறியதென்று தெரியமாட்டாது. முந்தியசக்கரவர்த்தினியாருக்கு ராச்சியத்தைத்தாங்கும்பார மொழியாமல், ராசகாரியநிர்வாகத்தில் சக்கரவர்த்திக்கு இன்னும் துணைபுரிந்து வருவாளென்றுசொல்லலாம்.

**பர்மாவிலே** கஷ்ட நிஷ்டூரமான காலங் கழிந்தபின்பு, ஜனங்கள் சீரான வாழ்க்கையடைந்துவருகிறார்கள். வர்த்தகம் நிலையாய் விர்த்தியாகிவருகிறது. அப்பர் பர்மாவிலே சிறு கலகங்களுண்டு, அது வரவுசெலவல்ல. அந்த நாடு சென்ற அநேக வருஷங்களிலிருந்ததைப் பார்க்கிலும் இப்போது மிகுதியாய் அமர்ந்திருக்கிறது. இந்தியா கவர்ன்மெண்டானது தன்னுடைய எல்லைக்கப்பாலுள் விச[illegible]பிராணனுக்கும் சொத்துக்கும் உத்தரவாதியல்ல. பர்மாவானது இந்தியாவோடு சேர்த்துக்கொள்ளப்பட்ட ஒரு வருஷத்துக்குள்ளே வர்த்தகம் தற்கால நிலைக்கு வந்திருக்கிறது. அப்பர் பர்மாவிலும் விர்த்தியில்லாமற் போகவில்லை.

**திருவாங்கூர்** அசழியிலே சென்ற திங்கட்கிழமை பகல் 2 மணிக்கு துணிச்சலான கொள்ளை யடிக்கப்பட்டது. குவிலோனிலிருந்து இரண்டு பேர் 38 பாரம கொப்பரை கொண்டுவந்து 2000 ரூபாய்க்கு விற்று ஊருக்குத் திரும்பிப் போகையில், சில திருடர்கள் இலக்குவைத்திருந்து முஸ்தீதுடனே ஒருபடகிலேறிப் பின்தொடர்ந்தார்கள். அவர்களில் தலைவன் போலீஸ் இன்ஸ்பெக்டர் உடுப்புப்போட்டுக்கொண்டான். பக்குவமான இடத்திலே வர்த்தகரதுபடகைமடக்கி அதிலேறி, திருட்டுசரக்கு ஏதாவதிருக்கிறதாவென்று இன்ஸ்பெக்டர் சோதனைபோடுகிறபாவனையாக சோதனைபோட்டுப் பணப்பெட்டியை எடுத்துக் கொண்டு தங்கள்படகேறி ஓட்டம்பிடித்தார்கள். பொருளிழந்தவர்கள் அலறிக் கூச்சல்போட்டும் தாமசமாய் சகாயம் கிடைத்தபடியால், திருடர்கள் அகப்படவில்லை. போலீசார் விசாரணையும் பிரயோசனமற்றதாயிற்று.

## அறிக்கை.

நமது மெம்பர்களும கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிகமாக "தீன்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினால்,அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

**இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச**

**தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ**

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ் பிரதியாயின் நான்கும் ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி—என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றி பெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணை புரிவார்களென்று நம்புகிறோம.

இந்தியாவிலுள்ள

சுவக்கியானிகளை

**மதிராஸ் சிக்கியுலர்சோசைட்டியில்**

மெம்பர்களாகச் சேரும்படி

கேட்டுக்கொள்ளலாகின்றது.

## கையொப்பநேயருக்கு.

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறாதவர்கள் உடனேதெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

உள்ளூர்மெம்பர் - மூன்றுமாசத்திற்கு—ரூ 3— 0—0

வெளி ,, ,, —ரூ 1—14—0

செலுத்தவேண்டும். அப்படி சேருகிறவருக்கு "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகையாவது, "தத்துவவிவேசினி" யாவது இலவசமாக அனுப்பப்படும்.

## தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலுமுள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணாவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணா வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத்தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174, Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 16.] MADRAS:—SUNDAY APRIL, 17, 287. A. S. [Monthly, 4 Annas.

சோல்லுகசோல்லைப்பிறிதோர்சோலச்சோல்லை
வெல்லுஞ்சோலின்மையறிந்து.—குறள்.



*ராஜா ஸர். டி. மாதவராவ் K. C. S. I. அவர்களால் கன்வோகேஷனில் வாசிக்கப்பட்ட உபந்நியாசத்தின் பாகம்.*

## கொள்கையை வெளியிடுந்தீரம்.

தகுந்த விசாரணையும் யோசனையுஞ் செய்தபின்பு, உபயோகமான நம்பிக்கைக்கு வருவீர்களாகில், பயம் தயைதாட்சணியம் பாராமல்வெளிவந்து பேசுங்கள். அப்படிச்செய்தால், ஜனப்பொதுபிரயோசனத்திற்கு மிகவும் முக்கியமானதாயிருக்கிற உண்மைவிர்த்திக்கும் படர்ச்சிக்கும் நீங்கள் உதவிசெய்கிறவர்களாவீர்கள். திருஷ்டாந்தமாக, சிறுபருவத்தில் விவாகஞ் செய்விப்பது கேட்டைப்பயக்குமென்று நீங்கள் தெரிந்துகொண்டால், பட்டதும்படாததுமாய்க்கூடமாகப்பேசாமல், அப்படிப்பட்ட விவாகம் கூடாதென்று கண்டிதமாய்ச்சொல்லுங்கள். சோதிடசாஸ்திரம் அபத்தமானதென்று நீங்கள் நம்பினால், அதை நிர்மலமாய் வெளியிட்டுச் சொல்லுங்கள். நற்சகுனங்கள் துர்ச்சகுனங்கள் என்பவற்றைப்பற்றியும் மூடபக்தி முதலிய வழுக்களைப்பற்றியும் அவ்வாறே பேசவேண்டும். உங்கள் கொள்கைகளை நீங்கள் பயிரங்கமாய்ப் பேசுவதுமல்லாமல், முக்கியமாய்க் கூடியமட்டில் அவற்றின்படி நடப்பதே தகுதி.

## எண்ணத்தை மாற்றுதல்.

உங்கள் எண்ணத்தை மாற்றுவதற்குத் தகுந்த நியாயங்களிருந்தால், அப்படிமாற்றிப்போடுவதற்குப் பயப்படலுமாகாது பின்னுக்கு வாங்கலுமாகாது. பிசகான எண்ணங்கொள்வது நம்மெல்லோருக்கு மியல்பு. கியானமும் அனுபவமும் வளர வளர, பிசகைக்கண்டுகொள்ளுகிறோம். பழைய பிசகான அபிப்பிராயத்தையே பின்னுங்கொண்டிருப்பது ஜனங்களின் யோகக்ஷேமத்திற்குத் தடையான பிடிவாதமாகும். பழமையையேவிடாது பின்பற்றிவரவேண்டுமென்கிற தகாத ஆசையினாலே, சீர்திருத்தம் விர்த்தியாவதற்கு மிகுந்த தடையுண்டாகும். மனிதர்கள் எவ்வளவு அதிகமாய் வாசிக்கிறார்களோ அவ்வளவும் நியாயமென்னும் செங்கோன்மைக்கு உட்பட்டவர்களாகி, வழுவான அபிப்பிராயங்களை உடனே உதறிவிட்டு, சரியான அபிப்பிராயங்களை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அப்பிரகாரமே உலகத்திலே மகாசிறந்தவர்கள் சிலர் உண்மையையும் நியாயத்தையும் அனுசரித்து அப்படியே செய்திருக்கிறார்களென்று தெரியவருகிறது.

## சேர்க்கையும் சம்பாஷணையும்.

இவற்றை கியானமும் சற்குணமும் விர்த்தியாவதற்குக் கருவியாகக்கொள்ளவேண்டும். சமயம் வாய்க்கும்போதெல்லாம் உங்கள் மேலோர்களிடத்திலே கற்கவேண்டும், தாழ்ந்தவர்களுக்குக் கற்பிக்கவேண்டும், ஒருவனைப் புகழவேண்டுமானாலும், இகழவேண்டுமானாலும் வாக்கி லொன்றும் மனதிலொன்றுமாகப் பேசாமல்கூட்டத்திலுள்ளவர்கள்சரியென்றுமெச்சும்படி தக்க அளவினதாகச் சாக்கிரதையாய்ச்சொல்லவேண்டும். கூட்டத்திலும் சம்பாஷணையிலும் பிரகாசிக்கவேண்டுமென்கிற பேரவா கொள்ளலாகாது; கொள்ளின், அதனால் உங்களுக்குப் பிரயோசனமுமொன்றுமிராது, உங்களைப்பற்றி நீங்களே மிகுதியாய் யோசிக்கவேண்டியவர்களாய், கற்பதும் கற்பிப்பதும் ஒழியும்.

---o---

## இசிலாமதம்.

கலியப்தம் மூவாயிரத்தெழுநூற்றொன்றின் மேலே, [கி. பி. 600] அரபிதேசத்திலே, மக்க பட்டணத்திலே அப்துல்லாம் என்பவனுக்கு எம்மின என்பவளிடத்திற் பிறந்த புத்திரனாகிய மகம்மது என்பவன், கல்வி கேள்விகளிலும் மிகவல்லவனாகி, அந்த நாட்டிலே வியாபாரஞ் செய்துகொண்டிருந்தான். பின்பு, யூத மதத்திலுங் கிறிஸ்துமதத்திலும் உள்ள சில சில விஷயங்களைத் தெரிந்தெடுத்துக்கொண்டு, தனது புத்தியினாலே சிலவற்றைக் கற்பித்து, ஒரு புத்தகம் எழுதி, அதற்குக் கோரான் என்று பெயர் இட்டுக்கொண்டான். முன்னே ஆதாம், சேத், ஏனேக், ஆபிராம் நூறு ஆகமங்களைக் கொடுத்தார்கள், அவைகள் இப்பொழுது இல்லை என்றும், மூசாநபி [அல்லது மோசே] தபிரேத்என்ற சாத்திரத்தையும், தாவீதுநபி [அல்லது தாவீது] சபூர் என்ற சாத்திரத்தையும், ஈசாநபி (அல்லது யேசு) இஞ்சில் என்ற சாத்திரத்தையுஞ் சொன்னார்கள்; அவைகளெல்லாம் அல்லாவுடைய (அல்லது யேகோவாவுடைய) சித்தத்தின்படியே அந்தந்தக்காலங்களுக்கேவழங்கத்தகும்என்று நியமிக்கப்பட்டன; பின்பு மனிதர்கள் அவைகளைத் தலைதடுமாறச் செய்தார்கள் என்றுஞ் சொன்னான். மோசே செய்த வஞ்சனைபோலவே, தானுஞ்செய்யத்துணிந்து, தான் அல்லாவினால்ஏவப்பட்டு ஒருமலைக் குகையினுள்ளே புகுந்திருந்து, அங்கே கபிரியேல் என்னுந் தூதனாலே சோரான் என்னுஞ் சாத்திரத்தைப் பெற்றுக்கொண்டான் என்று காட்டினான். கிறிஸ்தவர்கள்யேசுவைக் குறித்துக் கற்பித்து எழுதிவைத்ததுபோலவே, தானுஞ் செய்யத் துணிந்து, அல்லாவுடன் பரதீசில் இருக்கிறவர்கள் சகலருக்குந் தான் தலைவன் என்றும், முடிவுநாளிலே சகலரையும் விசாரித்தற்குந் தன்னை விசுவசித்தவர்கள் எல்லாரையும் ஈடேற்றுதற்கும், அல்லாவையும் மனிதரையும் பொருத்துகிற மத்தியஸ்தனாதற்கும், அல்லாவிடத்திலே தான் வரம் பெற்றுக்கொண்டான் என்றும், பின்னும், பற்பல விஷயங்களையும் எழுதி யெழுதிச் சேர்த்துக்கொண்டான்.

இப்படியே, மகம்மது, ஒரு மதத்தை உண்டாக்கி, அதற்கு இசிலாமதம் என்றுபெயரிட்டு "இந்த மதத்தை அங்கீகரிப்பிக்கும்பொருட்டு யாவர் ஒருவரையும் நான் வலாத்காரஞ்செய்யேன்" என்று பிரசித்தஞ்செய்தான். அவன் வீட்டாரும் அவன் சுற்றத்தாருட் சிலருமன்றி, மற்றவர்கள், அம்மதத்தை அங்கீகரியாது, அவனைக் கொல்ல முயன்றார்கள். அதை மகம்மது அறிந்து, தான் இருந்த மக்க பட்டணத்தை விட்டோடிப்போய், மிரோனே பட்டணத்திற் புகுந்து, அங்கிருந்துகொண்டு, கிரிஸ்தவர்கள் தங்கள் சமயத்திலே சகலரும் பிரவேசிக்கும்படி "யாவனொருவன் யேசுக்கிறிஸ்துவை விசுவாசித்தால் அவன் சகல பாவங்களினும் நீங்கிப் பரிசுத்தனாவான்" என்று எழுதிவைத்த உபாயம்போலவே, தானுஞ் செய்யத்துணிந்து, தான் கோரானை ஸ்தாபிக்கும்பொருட்டுயுத்தம் பண்ணுதற்குஅல்லாவிடத்தில் அநுமதிபெற்றான் என்றும், அந்த யுத்த

த்தில் இறந்தவர்கள் சகல பாவங்களினும் நீங்கிப் பரதீசிலே சேர்ந்து ஆனந்தம் அடைவார்கள் என்றும், கோரானில் எழுதிக்கொண்டு, அங்கே சிலரைத் தனக்குப் படைகளாகச்சேர்த்துக்கொண்டு, கோரானை அங்கீகரியாதவர்களைக்கொன்று, பாப்புமார் செய்ததுபோல வாளினாலே பற்பலவிடங்களிலுந் தன் மதத்தைப் பரப்பினான். அவன், லுத்தேர்கல்வீன் மதத்தார்போலவே, மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை என்னுந்துராசைகளில் அமிழ்ந்தித், தான் விரும்பிய போகங்களெல்லாம் அனுபவித்துக்கொண்டிருந்தான்.

மகம்மது பரதீசிலே சேர்ந்தபோது, யேசுக்கிறிஸ்துவினுடைய மாதாவாகிய மரியாள்முதலிய பன்னிரண்டு பெண்களை, அல்லா, மகம்மதுவுக்கு உபகாரமாகக்கொடுத்து, அங்கே விவாகம்பண்ணிவைத்தார் என்றும், இப்படியே அவன் பரதீசிலே வாழ்ந்திருக்கிறான் என்றும், தங்கள் பொருட்டு அல்லாவிடத்தில் இரந்து கேட்கிறான் என்றும், அவனை விசுவசித்து அவனுடைய சமயத்தை அங்கிகரித்து நடப்பதே கடன் என்றும், கோரானிலே விதிக்கப்பட்ட ஓதல், நீராடல், தருமங்கொடுத்தல், நோன்பு அநுட்டித்தல், மக்கத்துக்குப்போய் அச்சுச்செய்கல் என்னும் பஞ்சகர்மங்களினாலேபாவந்தீர்ந்து பரதீசிலே சேரலாம் என்றும், மகம்மதியர்கள் சொல்லுகிறார்கள். மகம்மதுவின் சரித்திரமும், பிறவுங்கோரானிலே காண்க.

---

## வியவசாயரசாயனம்.

(57-வது பக்கத் தொடர்ச்சி.)

—o—

### உலோகசூன்னியபூதங்கள்.

**ஜீவமூலம்.** மூலகாரணமாகிய பூதங்கள் பலவற்றுள்ளும் பிரகிருதியின்கண்விசேஷமாக அமைந்த ஜீவகோடிகளுக்கு சர்வாவசியகமாயிருப்பது இந்தபூதமே. இதுவாயு அல்லது ஆவிரூபமுள்ளது. இதைஜலரூபமாக்கப்பிரயத்தனப்பட்டும் இதுவரையில் முடியவில்லை. இது ஸ்வேச்சையாகவும் பிரத்தியேகமாகவும் நம்மைச்சுற்றியிருக்கும் ககனவாயுவில் தங்கியிருக்கின்றது. வாயுவில்ஐந்திலொருபாகம்ஜீவமூலமென்றுசொல்லுவார்கள். இதுஜலத்திலும்மணற்கல்லிலும்மற்றுஞ்சிலகற்களிலும்களிமண்ணிலும்உயிர்ப்பிராணிகளிலும் கலந்திருக்கின்றது. உலகத்தில்ஒருபாதிமுழுதும் இந்தஉபயோகமுள்ளபூதமாயிருக்கலாமென்று சிலர் எண்ணுகிறார்கள். இந்தமூலத்தை (கிளோரயிட் ஆப் பொடாஸ் என்னும்)சாம்பலுப்பைச்சுடுவதினால் எளிதிலுண்டாக்கலாம். இன்னும் அநேகஸாதனங்கள் இரசாயனகிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆயினும் இவைகள் நமக்குப்பயன்படுதல் அருமையாதலால் அவைகளைச்சொல்லாதொழிக்கின்றோம். இந்தமூலத்திற்குநிறமில்லை, கண்ணுக்குத்தோன்றாது. சமான அளவுள்ள சாதாரணகாற்றையும் ஜீவமூலத்தையும் நிறுத்துப்பார்த்தால் காற்றைப்பார்க்கிலுங்கொஞ்சங்கனமாயிருக்கும். இதுஜலத்தோடு எளிதில் கலக்கிறதில்லை. இதில்பிரகாசமாய்த் தோன்றும் குணம் யாதெனில் நெருப்பைப்பெருக்கிவளர்க்கிறதேயாம். ஒருவர்த்தியைக்கொளுத்தி இந்தவாயு நிறைந்தஜாடிக்குள்விட்டால் அது ஜகஜ்ஜோதியாய்எரியும்; மேலும்வர்த்தியைவெளியில்வாங்கிஅவித்துச்செகப்பாயிருக்கும் அதின் நுனியைமறுபடியும் சாடிக்குள்விட்டால் அதுமுன்போலபிரகாசமாகப்பற்றியெரியும். சாதாரணவாயுவில் இதுவிசேஷமாகக் கலந்திருப்பதினாலேதான் அதனிடத்து நெருப்பையூட்டி வளர்க்குந்தன்மை யிருக்கிறது. மேலும் காற்றிலிந்தபூதம் இல்லாவிட்டால் பிராணிகள் ஒன்றும் பிழைத்திருக்கமாட்டா. காற்றில்லாதவிடத்துப் பிராணிகளிறந்து போவதே இதற்குசாக்ஷியாம். அதிகசந்தோஷத்தால் ஜனங்கள் பொங்கி இறந்துபோவதுபோல் இந்தஜீவமூலத்தை மாத்திரங்கொண்டாலும் பிராணிகள் இறந்துபோகும். ஆதலால் இதுதனியாயிராமல் சகலவிதவஸ்துக்களோடுஞ் சேர்ந்திருக்கின்றது. இதன்சேர்க்கையினாலேதான் பஸ்பங்களென்று சொல்லப்படும் பலவிதமருந்துகள் உண்டாகின்றன. இதன் முக்கியகுணங்கள் அவிந்துபோன வர்த்தியைக்கொளுத்துவதும் குளிர்ந்தஜலத்தோடு எளிதில் கலவாதிருத்தலும் வர்ணம் வாசனையற்றிருப்பதுமே.

**ஜலமூலம்.** இது விசேஷமாக மேற்கண்ட ஜீவமூலத்துடன் ஜலத்தில் கலந்திருக்கின்றது. ஒரு அளவு ஜீவமூலமும் இரண்டளவு ஜலமூலமும் சேர்ந்துதான் ஜலமாகிறது. மேலும் ௧௬- அளவு ஜலமூலத்தின் நிறை ஒரு அளவு ஜீவமூலத்தின நிறைக்குச் சமானமாயிருக்கும். ஆதலால் ஒருஜல அணுவில் - ௮ - நிறைஜீவமூலமும் ஒரு நிறைஜலமூலமும் இருக்கின்றன. இந்த ஜலமூலத்தை எளிதில் செய்துகொள்ளலாம். எப்படியெனில் ஒருபழைய துப்பாக்கியின் குழை அல்லது வேறு இருப்புக்குழைகொண்டுவந்து அதில் இரும்பு அராப்பொடி போட்டு நெருப்புக்குக் குறுக்கேவைத்துபழுக்கக்காய்ச்சினால் அக்குழையின்ஒருபக்கத்தில் ஒருபானையில் கொதிக்குஞ்சலத்திலிருந்து எழும் ஆவிநுழையும்படிவிட்டால் மற்றொருவழியாக ஷை ஜலமூலம் உண்டாகும். இந்தவாயின்பக்கத்தில் ஒருவத்தியை கொளுத்திக்காட்டினால் ஷை ஜலமூலம் வெளுத்து சற்றே பசுமையான ஜ்வாலையோடு எரிவதைப் பார்க்கலாம். இந்த இருப்புக்குழையில் ஆவிரூபமாய் நுழைகிறஜலமானது பிரிக்கபடுகின்றது. ஜீவமூலமும் இரும்புடன் கலக்குந்தன்மையுள்ளதாதலால் குழையிலிருக்கும் இரும்புசன்னத்தோடுசேர்ந்து அதை பஸ்பமாக்கிவிடும். விடப்பட்ட ஜலமூலமோ அக்குழையின் மற்றொருவாயால் வெளியேவந்து விடுகின்றது. மேற்கண்டவிதமான ஜீவமூலம் இரும்போடு மிசிரமிக்கிறதென்கிறதை ஷை சன்னத்தைக் குழையில் வைக்குமுன் நிறுத்து மறுபடியும் பஸ்பமானபிறகு நிறுத்துப்பார்ப்பதினால் பிரத்தியக்ஷமாகக்காணலாம். என்றால் ஸன்னத்திலும் பஸ்பம் அதிகபளுவாயிருக்கும். ஜலமூலத்தைச் செய்யுஞ் சாதாரணவிதம் மற்றொன்று உண்டு. ஒரு புட்டியில் கொஞ்சஞ்சலமும் சில துத்தநாகத்துண்டுகளும் கொஞ்சம் கந்தகத்திராவகமும் விட்டால் ஷை ஜலமூலம் உண்டாகும். அந்தப்புட்டியின் வாயில் ஒரு குழையைவைத்துமூடி ஜலத்தில் ஜலத்துடன் கவிழ்க்கப்பட்ட மற்றொரு புட்டியின்வாயில் சேர்த்தால் அந்த ஜலமூலம் கவிழ்த்த புட்டியிலிருக்கும் ஜலத்தைநீக்கித் தான் அதில்சேரும். இந்த ஜலமூலம் எல்லாவஸ்துக்களைப் பார்க்கிலும் மெத்தலகுவானபதார்த்தம். ஆதலால் இதைத்தான் புகைக்கூண்டு என்று சொல்லப்படும் ககனக்கூண்டுகளுக்குள் விடுவார்கள். இதுசுத்தமாயிருக்கும்பொழுது இதற்கு நாற்றமும் கிடையாது விஷத்தன்மையுமில்லை. ஆயினும் இது பிராணத்தைக்காக்க உதவாது. ஜலத்தில் கலக்கமாட்டாது. நெருப்பின்மீதுவைத்தால் வெளுத்த பசுமைநிறமுடைய ஜ்வாலையோடு எரிந்து விசேஷகாங்கை யுண்டாக்கினபோதிலும் மெத்தவெளிச்சங் கொடுக்கமாட்டாது.

**நிர்ஜீவமூலம்.** ஜலமும் எவ்விதமாகஜீவமூலத்தோடு சேர்ந்து ஜலமுண்டாக்குகிறதோ அதுபோலவே நிர்ஜீவமூலம் ஜீவமூலத்தோடுகலந்து சாதாரணமான வாயுவை யுண்டாக்கும்; வாயுவில் இன்னுஞ்சில பூதங்கள் இருந்தபோதிலும் ஜீவாஜீவமூலங்களிரண்டுமே முக்கியமானவை. இந்த நிர்ஜீவமூலத்தை மிகவும் இலேசாகச் செய்யலாம். காற்றுள்ள ஒருபுட்டியை ஜலத்தில்வைத்து அதில்கொஞ்சம் காடிக்கார (பாஸ்பரஸ்) த்தைச்சுட்டால் இந்த நிர்ஜீவமூலம் உண்டாகும். சுடுகிறதினால் காற்றிலுள்ள ஜீவமூலம் காடிகாரத்தோடுகலந்து எரிந்துபோவதினால் நிர்ஜீவமூலம்புட்டியில்தானே நிற்கின்றது. இதை ஜலரூபமாகவாவது கட்டியாகவாவது செய்யக்கூடாது. இதற்கும் வாஸனையில்லை. இதில் ஒருதீபத்தைக்காட்டினால் உடனே அவிந்துபோகும். இதனிடத்தில் பிராணத்தைக் காக்கும் குணமில்லை. ஒரு புழுபூச்சியை இதில்விட்டால் உடனே செத்துப்போகும். இதினாலே இது விஷத்தன்மையுடையதென்று நினைக்கக்கூடாது. இதை ஸ்வாசிக்கும் பொழுது பிராணாதாரமான ஜீவமூலம் இல்லாமையினாலேதானே இதில்விட்ட பிராணிகள் இறந்துபோகின்றன,

த—னி.

(இன்னும்வரும்.)

---

## மனித தூஷணை.

---

ஒருவரையொருவர் பொறாமைகொண்டாயினும் கோபங்கொண்டாயினும் நியாயவிருத்தமான மொழிகளைப் புறத்தே கூறுதலாவது முன் கூறுதலாவது மனித தூஷணை யெனப்படும். இஃது சிறியோர் முதியோரைநோக்கியாவது முதியோர் சிறியோரைநோக்கியாவது உபயோகிக்கப்படும். கீழோராயினுந் தாழவுரை யென்னும் முதுமொழியைக் கைக்கொண்டு நடத்தலே மானுஷீகம். இதனையறவே கைசோரவிட்டு வெறியோரைப்போல் அயுக்தமொழிகளை ஆண் பெண் என்னும் அந்தஸ்து இன்றியே கற்றோரும் மற்றோரைப்போல் உபயோகிக்கத் தலைப்படுகின்றார்கள். இதைப்பெரும்பான்மையாய் நாகரீகமற்றவரிடத்திற் காணலாம்; ஆனால் நாகரீகமுள்ளவரிற் சிலர் மேலையோருக்கு யாதேனும் வித்தியாசமில்லாத அடுக்கு மொழிகளை முடுக்காய் மொழிவார்கள். தீராக்கோபம் போராய்முடியுமென்பதைப்போல் இருதிறத்தாரும் இடைவிடாமல் தூஷித்துக்கொண்டே வருவாராயின் முடிவில் சண்டையே சம்பவிக்கும். இத்தகைய முடிவு பெறுதற்குமுன் ஒவ்வொருவரும் தமது அறியாமையை அகற்றி நன்மார்க்கத்தைத் தேடுதலே உத்தமம்.

இவ்வுண்மை யொருவழியிருக்க, வைணவராலும் சைவராலும் வெளியிட்டுவரும் தூஷணபத்திரிகைகளை நோக்குழி அவர்களால் வணங்கபபட்டுவரும் தெய்வங்கள்மனிதர்களுக்குச்சமானமும் உயர்வுமின்றி இருப்பதாக அவர்கள் பத்திரிகைகளின் மூலமாய் உணரலாம். சாராயத்தைவார்த்தப பூராயத்தைக் கேள் என்பதைப்போல் இவர்கள வெளியிடும் தூஷணபத்திரிகைகளின் வாயிலாய் அவர்களால் கற்பித்தகடவுளர்களின் இலக்ஷணமும் நடத்தையும் இன்னதென உணர்வார்கள் உத்தமர்கள். இவர்களுக்குள் நேரிட்ட போராட்டமென்னவெனில் தத்தம் கடவுளே மேலானவர் என்பதாம். சைவர் மூர்த்தியை வைணவர் உண்டெனவும் வைணவர் மூர்த்தியைச் சைவர்உண்டெனவும் ஒப்பிப் பரத்துவத்தில அவர்கள் பேதிக்கிறார்கள்.

ஈஸ்வரர் இருவராயின் உயர்வு, தாழ்வு, சமானம் என்னும் நிலையுள்ளவராவார். உயர்வு தாழ்வு உடைத்தாயிருப்பின் இம்மதஸ்தர்களுக்குள் எவ்வாறு துவேஷம் நேரிட்டதோ அவ்வாறு அத்தேவர்களுக்குள்ளும் சண்டைசச்சரவு நேரிடவேண்டுமே. அங்ஙனம் இருக்ககாணோமே. அவர்களுக்கே இல்லாத துவேஷம் இவர்கள் வரவழைத்துக்கொண்டது என்ன அறியாமை. இஃது தலையாடாதமுன் வாலாடுவதையொக்கும். அல்லது அவர்கள் ஒருவருக்கொருவர் ஐக்கியமாயிருப்பதினால் சச்சரவு அவர்களுக்குள் நேரிடவில்லை யென்போமானால் இருவர் பெருந்தன்மை யுடைத்தாயிருத்தலை எக்காலத்திலும் வெளி யிட்டிருக்கக் காணோமே. அங்ஙனமே வெளியிட்டுள்ளார், ஆனால் மற்றய சமயத்தார் பொறாமைகொண்டு பொய்க் கதை யெழுதித் தத்தம் தேவரையே பெரியோனெனப் பாவிக்கப் புராணங்களைப் புகன்றார் என்றால் ஏனைய மதஸ்தர்களும் அவ்வண்ணம் அறைதற்கு என்னதடை? இவர்கள் புரட்டிப் பொய்க்கதைகளைப் புகலுகையில் சர்வக்கியானமுடைய பெரியோன் சும்மாவிருந்ததற்குக் காரணமென்னை? அப்படிச் சும்மாவிருந்ததினாலன்றோ நகத்தால் கிள்ளிவிடுவதை கோடரிகொண்டு வெட்டவேண்டியதாயிற்று? ஒருவேளை அவர்களுக்குள் பெரியது சிறியதென்னும் தாரதம்மிய மில்லையென்போமானால் பதினெட்டுப்புராணங்களிலும் தாரதம்மியங் கற்பித்தகாரணமென்னை! அப்படிச் செய்வித்தது திருவிளையாட்டென்றால் சிறுபிள்ளைகளுக்கே (தெரு) விளையாட்டு. ஈஸ்வரன்கொண்ட ஆனந்தத்தால் இத்தியாதி சொரூபங்கள் கொண்டு திருவிளையாட்டடைந்ததினாலல்லவா மதங்கள் வேறுபட்டு மனிதர்கள் ஒருவரை ஒருவர் துர்ப்பாஷையால் தூஷிக்கலாயினார்? நிர்க்குண நிர்விகற்பக்கடவுளுக்குத் திருவிளையாட்டேது என்போமானால் புராண இதிகாசங்கள் பொய்யாகும். பொய்யல்லவென்றால் நிர்க்குண நிர்விகற்பமுதலிய அடைமொழிகளின் காரணார்த்தம் அப்பிரயோசனமுடையனவாம். மதங்கள் வேறுபட்டதற்கு மனிதர்கள் காரணமோ கடவுளர் காரணமோ! மனிதர்கள் காண்பதற்கரிய அவர் சொரூபத்தைக் கண்டுசொன்னபடியே வேறுபட்டதென்றால், மனிதர்காட்சி ஒன்றுக்கொன்று ஒவ்வாமையால் அவர்கள் காட்சி பொய்யாகும். அவ்வவர் பக்திக்குத்தக்கவாறு நின்றதென்போமாயின் நினைப்பெழுதற்கு நாமரூபங்காரணம். நாமரூபமில்லாதபோது எழுந்த ரூபங்கள் மனோபிராந்தியாலாகிய கற்பிதரூபங்களே. எங்ஙனமெனில் கானல்நீரைப்போலவும் மருண்டவன் கண்ணுக்கு ஆகாயமெல்லாம் பிசாசு என்பதைப்போலவும். பக்தியாலாகிய எண்ணமில்லாதமுன் பகவன் தன்னைக் கண்டுகொள்ளும்பொருட்டு வெவ்வேறு சொரூபங்களடைந்தாரென்போமானால், ஓர்கடவுள் சொருபம் அதினுடைய மற்றொரு சொரூபத்தால் வணங்கப்பட்டதாகப் புராணங்கள் கூறுகின்றன. விகாரியல்லாத சர்வவியாபி விகார சொரூபங்கொண்டு, அபூரண வியாபியானதினாலன்றோ சைவமென்றும வைணவமென்றும் அனேகமதங்களாய், ஒன்றுக்கொன்று ஒவ்வாமையாய், ஒருவருக்கொருவர் மதவாதங்கொண்டு, வாயில் வழங்காமொழிகளைப் பத்திரிகைகளின்மூலமாய் வெளியிட்டுப் படிப்போர்க்கு வெறுப்பும் வெட்கமும் வருவிக்கின்றனர். இத்தமிழ்ப்பாஷையில் தூஷணமொழிகளைக் கற்கத்தக்க புத்தகமில்லையென்று எண்ணியா துர்மார்க்கமாய்த் தூஷிக்கத்தலைப்படுகின்றது? அல்லது இச்சமயிகளுக்குள் நியாயவாயிலாய்த் தர்க்கிக்காமல் இழியமொழிகளை வழியிலாமல் வழங்குவது சமய சாம்பிரதாயமென்று புறச்சமயத்தாரெண்ணவா? இது விலங்கினத்திற்கு மடாது. சூதும்வாதும் வேதனைசெயயுமென்று பரியாலோசித்துத் துர்மார்க்கத்தைவிட்டு சன்மார்க்கத்தைப் பெறுதலே மனிதப்பேறு.

அபிமானி.

---

## முயற்சி.

---

இவ்வார்த்தையின் அருமைபெருமையைக் கண்டுணர்ந்தவராகிய திருவள்ளுவநாயனார் இதைப்பற்றி ஓர் அதிகாரம் வரைந்திருக்கிறார். இவ்விஷயத்தைப்பற்றி இங்கிலீஷ்வித்வசிகாமணிகள் அளவற்றநூல்களியற்றியிருக்கின்றார்கள். நம் தமிழ்த்தேயத்தின்கண் இது அவலமாகக் கொளளப்படுகின்றது. முயற்சியானது நன்முயற்சி அன்முயற்சியென இருவகைப்படும். நன்முயற்சியித்தகைமையதென்றும் அன்முயற்சி யித்தன்மையதென்றும்செவ்வையாய்க்கற்றறியவேண்டும். நாட்டுக்குஐசுவரியந்தேடவர்த்தகத்தில்முயல்வது நன்முயற்சி, அடிமை வேலையென்னத்தக்க உத்தியோகத்தில் பிரவேசிப்பதே கண்ணியமென உத்தேசித்துத் தாழ்வடைவது அன்முயற்சி. துரைத்தனத்தைச் சீர்திருத்தவகை பார்ப்பது நன்முயற்சி, மதாவேச ஆபாசங்களில தலையிட்டுக்கொண்டு வீண் போராட்டம் முயல்வது அன்முயற்சி. ஏழைகளைப்பார்த்து அன்னவஸ்திரமளித்து அவர்களின் சமயோசிதத்தின் குறிப்பறிந்து மாத்திரம் மகிழ்விப்பது நன்முயற்சி, தேவடியாட்களுக்கு திருடியாவது கொண்டுபோய்க்கொடுத்து அவர்கள் காலில்விழுந்துகிடக்கும் தடிராமர்களுக்கு வேண்டிவேண்டிச்சாப்பாடுபோட்டுதக்ஷிணை கொடுத்துசோம்புத்தன்மையை உலகில் விர்த்திசெய்யப்பார்ப்பது அன்முயற்சி. ஸ்திரீகளுக்குக் கல்விகற்பித்து அவர்கள்பால் அறிவுவிர்த்தியாக்கமுயல்வது நன்முயற்சி, ஸ்திரீகள் மடமையில் மூழ்கி வீண் தெய்வபக்தியாலும் பழையவழக்கங்களை விடாவுறுதியாலும் வீண்விரயமுண்டுபண்ணி சமுசாரங்களை அலலலபடுத்தும்படி விட்டுப்பார்ப்பது அன்முயற்சி. சிறுவர்களை இளமையிலேயே நற்குணங்களில் பழகும்வகையைக்கவனிப்பது நன்முயற்சி, அவர்களை துன்மார்க்கர்களாக்கி பின்பு அவர்கள்மீது பழிகூறப்பார்ப்பது அன்முயற்சி. அதிகாரம் வந்தபோது குடிகளுக்கு துரைத்தனசகாயவிதிகளை போதித்து அவர்களைத்தனது குழந்தைகளாகக்கொண்டு காப்பாற்றி அவர்களுடைய செல்வப்பொருள் மிகுதியாம்வகைகளுக்குத்தக்க யோசனைகள்சொல்லி அவர்களுள் ஒற்றுமையை விர்த்திசெய்து புகழைத்தேடுவது நன்முயற்சி. அதிகாரிகள் குடிகளுக்குத்துன்பம்செய்துசுயலாபத்தைநாடி அவர்களுடைய விவகார ஒழுங்குகளுக்குக் கேடுநினைத்து, அவர்களுக்குப் பலவாறாய் பயத்தையும் விசனத்தையும் பெருகச்செய்து வீண்பெருமையை நாடுவது அன்முயற்சி. இவ்வாறே எதிலும் நன்முயற்சி அன்முயற்சியென்ற தரங்களைப் பிரித்தறியவேண்டும்.

(இலலிதாபிரசங்கோதயம்).

---

## வர்த்தமானசங்கிரகம்.

---

நமது சிறப்புற்றோங்கிய புது கவர்னரவர்கள் நீலகிரிக்குச் செல்லுமார்க்கத்தில் சேலத்திலிறங்கினார்கள். இவர்களுடையவரவுக்காக வீதிகளும் சில மாளிகைகளும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. கலெக்ட்டர்முதலாகிய பெரியமனிதர்கள் எதிர்கொண்டழைத்துப்போனார்கள். நமது காருணிய கவர்னரவர்கள் 1882௵த்திலே சேலங் கலகம் நடந்த தெருக்களின்வழியாய்ச் சென்று சேவாப்பேட்டையடைந்து, அங்கு சித்தஞ்செய்யப்பட்டிருந்த அலங்காரப் பந்தலில் வீற்றிருந்தார். அப்போது சேவாப்பேட்டை குடிகள் விண்ணப்பமூலமாய் அவரது நல் வரவினால் தாங்கள் ஆனந்தங்கொண் டிருப்பதையும். அவரது ஆளுகை முற்றும் அதிக நன்மை பயக்குமென்பதற்கு ஆரம்பத்திலேதானே அத்தாட்சி காணுகிறதையும், பின்னுஞ் சில உரித்தான உபசார வார்த்தைகளையுஞ் சொல்லி, சில வருஷகாலமாய்த் தங்களுக்குண்டாயிருக்கிற மனோசஞ்சலங்களைப்பிரபு அவர்கள் அவ்விடத்திற்கு வந்த இந்த முதல்தடவையிலேதானே தெரிவித்துக்கொள்ளின், குற்றம்பாராட்டமாட்டார்களென்கிற உறுதியுண்டு, அத்துயரத்திற்குக் காரணம் பலவாதலால் விவரித்துச் சொல்லுவது இது சமயமல்ல; தங்கள்மேன்மையான வர்த்தகர்களிலனேகர் வலியவலசை வாங்கிப்போய்விட்டதினால் வியாபாரமுஞ் செல்வமுங் குறைந்துவிட்டது; ஊரைவிட்டுக்கொண்டுபோய்விடப்பட்ட தங்கள் பட்டணத்தாரும் இப்போதுதான் தங்களிடம் வந்துசேர்ந்தார்கள்; தங்கள் வர்த்தகம் இன்னும் தலைநிமிர்வது கஷ்டமாகவேயிருக்கிறது;—

இந்துக்கள் ஆட்சேபித்துக்கொண்டிருக்கும்போதே, வழக்கமாய் அவர்களுடைய கோலஞ் செல்லுமார்க்கத்திலே அவர்களுடைய ஆலயங்களுக்குச் சமீபத்தில் மசூதிகட்டவொட்டப்பட்டது; ஹோபார்ட்பிரபு அவர்களுடைய துரைத்தனத்தில் பிறந்த உத்தரவின்படி இந்த உற்சவாதிகோலங்கள் மசூதிவழியாய்ச்செல்லக்கூடாதென்று பிரதேசமாஜிஸ்திரேட்டினால் தடை செய்யப்பட்டது; இந்த சங்கதி ஹைகோர்ட்டில் விவரிக்கப்பட்டதினமேல், இஷ்டமான இடத்திலே மசூதி கட்டிக்கொள்ளுவதற்கும் ஆராதனைகாலத்திலே கோலத்துக்குரிய கீதவாத்தியங்களை நிறுத்திப்போடும்படி பிடிவாதஞ் செய்வதற்கும் மகமதியர்களுக்குச் சுதந்தரமிருக்கிறதென்னும்போது, மற்றக்காலங்களிலே ராஜபாட்டையில் வாத்தியத்துடனே ஊர்கோலம் போக இந்துக்களுக்குச் சுதந்தரமிருக்கிறதென்று அந்தக் கோர்ட்டார் தீர்மானித்தார்கள். அந்தத் தீர்மானத்தின்படி அப்போதிய கலெக்ட்டர் நடத்திவந்தார். பிந்தி வந்தவர் அதற்கு மாறாக நடத்தியதால், கலகத்துக்கிடமுண்டாயது; ஆகவே பிராணச்சேதமுண்டாகியது, மசூதி இடிக்கப்பட்டது. பெருந்தன்மையுள்ள பட்டணத்தாரநேகர் விசாரணையின்பேரில் தீவாந்தரத்துக்கு அனுப்பப்பட்டார்கள். அழிக்கப்பட்ட மசூதியை அவ்விடத்திலேதானே மறுபடி கட்டக்கூடாதென்று அடிஷனல்செஷன்ஜட்ஜி சிபாரிசு செய்தார், ஆனால் அவரவருக்குரிய சுதந்தரங்களில் குறுக்கிடுவது எவ்வளவேனும் தகுதியல்லவென்று ஹைகோர்ட்டார் தீர்மானித்தார்கள். கவர்ன்மெண்டு செலவிலும் விசாரணையிலும் அவ்விடத்திலேதானே மறுபடி மசூதி கட்டிக்கொடுக்கப்பட்டது. இவ்விதமாய் ஹைகோர்ட்டாருடைய தீர்மானத்தின்படி மகமதியருடைய சுதந்தரத்தைப் பாராட்டிவரும்போது, இந்துக்களுடைய சுதந்தரத்துக்குச் சம்பந்தப்படுகிறமட்டிலே அந்த கோர்ட்டு தீர்மானம் அலட்சியஞ்செய்யப்பட்டது. அதுமுதல் இரண்டுசாதியாருக்குமுள்ள விவாதமடைசலாகவேணுமென்பதை முன்னிட்டுக்கொண்டு மசூதிபக்கத்திலுள்ளமார்க்கமாய் வழக்கமான இந்துகோலம் செல்வது நிறுத்திப்போடப்பட்டது. இந்துக்கள் தங்கள் தங்கள் மதத்தைப் பிராணாதாரமாக எண்ணியிருக்கிறவர்கள்; முக்கியமாய்த் தாழ்ந்த வகுப்பினர்களுக்குமதத்திலுள்ள மேன்மையானபாகத்தைப்பார்க்கிலும் (உற்சவமுதலிய) சடங்குபாகம் அகத்தியமானது. இந்த நான்குவருஷகாலமாய்ப் பிரமோற்சவாதிகள் நிறுத்தப்பட்டிருப்பது அதிக வருத்தத்தை விளைத்திருக்கிறதென்று கூறி, இருதிறத்தாருக்குரிய சுதந்தரங்களைச் சமமாய்ப்பாராட்டவேண்டுமென்பதற்குண்டான சில நியாயங்களை எடுத்துக்காட்டி வாழ்த்திவிண்ணப்பத்தை முடித்தார்கள். சிறப்புற்றோங்கிய கவர்னரவர்கள் விண்ணப்பத்தில் தமக்குத் தெரிவித்திருக்கிற சகல சங்கதிகளையும்பற்றி ஆலோசிப்பதாக வாக்குறுதிசொல்லியிருப்பதால், நியாயங்கிடைப்பதற்கு சந்தேகமிராது.

சென்னை முனிசிபல் கமீஷனர்கள் கூடிய விசேஷ சபையிலே முனிசிபல் ஆக்ட்டைத் திருத்துவதற்கான மசோதா ஆக்ட்டைக்குறித்து சர்ச்சை செய்ததில் ஸ்ரீமான் அநந்தாசாரியாரவர்கள் பேசியதாவது.—யோசிக்கவேண்டிய அம்சங்கள் ஐந்திருக்கின்றன. முனிசிபாலிட்டி காரியங்களைப் பின்னுஞ் சீராய் நடத்தவேண்டிய விஷயமொன்று; முனிசிபாலிட்டியை பப்ளிக்வர்க்ஸ் (மறமத்து) இலாக்கா; கன்சர்வான்சி சானிட்டேஷன (சீர்ப்பாடு-ஆரோக்கியம்) இலாக்கா, செல்லனை இலாக்காவென மூன்றாகப் பிரிக்கவேண்டும். இந்த மூன்று இலாக்காக்களுக்கும் தேர்ந்த ஒவ்வொரு தலைவரிருக்கவேண்டும். மறமத்து இலாக்காவுக்கு இஞ்சினீர் தலைவராயிருந்துகொண்டு, முனிசிபல் சபையிலும் மெம்பராயிருக்கிறார்; இது சரிதான். இரண்டாவது இலாக்காவுக்கு டாக்ட்டர் தலைவராயிருக்கவேண்டும்; அதுவிஷயமாய் அவரோடு ஆலோசனை செய்யவேண்டியதிருக்குமாதலால், அவரும் முனிசிபல் கமீஷனர்களிலொருவராயிருக்கவேண்டியது அவசியமே. ஹெல்த் ஆபீசர் நேமிக்கப்பட்ட காலத்தில், அவரும முனிசிபல்போர்டில் சேர்ந்திருக்கவேண்டுமென்கிற ஆவசியகம் உணரப்பட்டது; ஆனால் சட்டம் இடங்கொடுக்கவில்லை. மூன்றாவது இலாக்காவுக்குப் பிரசிடெண்டு தலைவராயிருப்பதேபோதும். வரிஏற்பாடுசெய்வதற்கும் செலவைக்கிரமப்படுத்துவதற்கும் ஒரே உத்தியோகஸ்தரிருக்கிறார், அது திருப்திகரமானதல்ல. மாசமொன்றுக்கு ரூ 200 க்குள்ளாக அசெஸ்ஸர்என்னும் பேரால் ஒருவனைநேமிக்கவேண்டும். தற்காலத்தில் வரிக்குள்ளாகவேண்டியதில்லாத அநேக ஏழைகளுக்கு வரிபோடப்பட்டிருக்கிறதென்றும், வரிக்குள்ளாகவேண்டிய அநேகபணக்காரர்களுக்குவரிபோடாமலிருக்கிறதென்றும் நம்மில் சிலருக்கு மனதிற்பட்டிருக்கிறதென்று கூறினர். (அப்போது அதுயதார்த்தமென்கிறதொனியுண்டாயது.) இவையெல்லாம் கீழ்உத்தியோகஸ்தர்களுக்கு குறைந்த சம்பளங் கொடுக்கிறதின் பலன்தான்.

கமீஷனர்கள் அதிக உபயோகமுள்ளவர்களா யிருக்கவேண்டியதுபற்றி, அந்தந்த டிவிஷன் கமீஷனர்கள் குறித்தவிடத்திலே வாரத்திற் கொருவிசை கூடி, வரிசெலுத்துகிறவர்கள் ஏதாவது சொல்லிக்கொள்வதைக்கேட்டு, அந்த டிவிஷனுக்கு வேண்டியிருக்கிற காரியங்களை நிறைவேற்றும்வகையில் அபிப்பிராயங்கொடுக்கிறவர்களாயிருக்கவேண்டுமென்கிற ஒரு செக்ஷன் ஆக்ட்டில் சேர்க்கவேண்டும். இந்த ஏற்பாட்டினால் யாருக்காக நாம் வேலைசெய்கிறோமோ அவர்களோடு பேச இடமுண்டாகும். பின்னும் அந்த டிவிஷன் கமீஷனர்கள் ஸ்டாண்டிங்கமிட்டியிலே பிரதிநிதிகளா யிருக்கவேண்டும்; அதாவது ஐந்து மெம்பர்களுக்கு வதிலாக எட்டு மெம்பர்களிருக்கவேண்டும். முனிசிபாலிட்டி சிப்பந்திகளிலே எவனையாவது தள்ளிப்போடுவதற்கு பிரசிடெண்டுக்குண்டாகிய அதிகாரத்துக்குத் தடையொன்றுமில்லை; ஆனால் ஐம்பது ரூபாய் சம்பளத்துக்குட்பட்ட உத்தியோகஸ்தர்கள் ஸ்டாண்டிங்கமிட்டியாருக்கும், அதற்குமேற்பட்ட உத்தியோகஸ்தர்கள் கமீஷனர்களுக்கும் அப்பீல் செய்துகொள்ளும்படியான ஏற்பாடு செய்வது நலம். கமீஷனர்கள் நடத்துகிற சரித்திரங்கள் பத்திரிகைகளில் பிரசுரமாகலாமென்பதற்கு ஆக்ட்டில் செக்ஷனொன்றுமில்லை. அப்பீல்செய்துகொள்ளுகிற உத்தியோகஸ்தர்களுடைய யோக்கியாயோக்கியதையை ஆலோசிப்பதுபோன்ற ரகசியமான சங்கதிகளுக்குத்தவிர மற்றவைகளுக்குப்பத்திரிகைக்காரர்களைச்சபையில்வந்திருக்கவொட்டலாம.—இந்த சங்கதிகளையும் மற்றுமுள்ள திருத்துப்பாடான சங்கதிகளையும்பற்றி ஆலோசிக்கும்படி ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

பிரேஞ்சு ரெயில்வேய்களிலொன்றில் கொஞ்சநாளுக்குமுன்னேதான் செத்துகிடக்கக்காணப்பட்ட ஒரு தொழிலாளி நான்குகோடிரூபாய் ஆஸ்திக்கு சட்டப்படி பாத்தியஸ்தனாயிருந்தானும். அவன் லண்டன்பட்டணத்துத் திரேஜரியிலே தன் ஆஸ்தியை வாரிசுதாரர்கள் வந்தால் கொடுக்கும்படி கட்டிவைத்து இந்தியாவில் இறந்துபோன இங்கிலீஷ் ஜனரலுடைய வமிசத்தான். அந்தப்பணம் இதுவரையில் தொடர்வட்டி சேர்ந்துபெருகிவந்தது. அந்தத்தொழிலாளிக்குப் பணமில்லை; அங்கேயிருக்கிற செல்வம் தனக்குச் சேரவேண்டியதென்று அறிந்திருந்தும், வியாச்சியந் தொடரவகையில்லாமல், ஒன்று பாதி பேரக்காரர்களோடு பேரம்பேச, அவர்கள் கொடுக்கிறோமென்று சொன்ன தொகை வெகு கொஞ்சமாயிருந்தபடியால் அதை வெறுத்துவிட்டுத் தற்கொலைசெய்துகொண்டான்.

சென்றமீ 29உ-யோடு முடிகிறவாரத்திற்கு பஞ்சாப்முழுவதும் பயிர் மிகவும் க்ஷீணித்திருப்பதாக ரிபோர்ட்டு செய்யப்பட்டது. பிரஜபோர் - முல்தான்டிஸ்திரிக்ட்டுகளிலே தண்ணீர்பாய்ச்சப்பட்ட இடங்களில் தவிர மற்றவிடங்களெல்லாம் கெடுதியென்று அறிக்கையாயிருக்கிறது. ரேவல்பிண்டியிலே சராசரியில் சீர்தான். அதிகமழை பெயாவிட்டால் மிகுந்த துன்பம் நேரிடுவது நிச்சயம்.

## அறிக்கை.

### தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ் செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலு முள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணுவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணு வீதம ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத் தொகைகளு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பட்சத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பட்சத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

பத்திரிகைக்கு எழுதும்கடிதமுதலியவிஷயஙகளை
மாத்திரம்
சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி
307 - வது நம்பர் வீட்டில்
பு. முனிசுவாமிநாயகருக்கும் ;
1886ம் - வருஷ முதல் சந்தாக்களையும்,
இங்கிலீஷ் பத்திரிகைகளையும்,
வேப்பேரி சில்வர்ஸ் ரோட்டில்
மதிருஸ் செகுலர்சொசைட்டி ஆனரரிசெக்ரிட்டேரி
மெஸ்டர். அப்ஷன்துரை யவர்களுக்கும்
அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 17.] MADRAS:—SUNDAY APRIL, 24, 287. A. S. [Monthly, 4 Annas.


சொல்லுக்சொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



முன்னே தேவர்களுக்காக விஷத்தையுண்டதற்குச் சாட்சியாகக்கழுத்திலே பரமசிவன் விஷத்தைத்தரித்தனராம். முன்னே அவ ரிருந்தாலல்லவோ பின்பு அவருடைய கழுத்தில் விஷத்தைக் காணலாம். அவரிருப்பதற்குச் சாட்சியாகக் ககனமார்க்கத்தில் ரிஷபவாகனருடராய்ச் சாயங்காலவேளையில பவனிவரலாகாதா?

---

ராஜா ஸர். டி. மாதவராவ் K. C. S. I. அவர்களால் கன்வோகேஷனில் வாசிக்கப்பட்ட உபந்நியாசத்தின் பாகம்.

## பூர்வீகஞானம்.

நமது பூர்வீகாள் தற்காலமனிதர்களைபபார்க்கினும் வளைகடந்தஞான முடையவர்களென்றுநினைக்குந் துடுக்கானபிசகை யொழித்துவிடுங்கள். அது யதார்த்தமாயிருக்கமாட்டாது. ஒவனவனுடைய வாழ்க்கையில் ஒவ்வொருவருஷத்திலும் முன்னதோடு சேர்க்கையாகக் கொஞ்சங்கொஞ்சமாய் அதிகஞானமடைகிறுன். இவ்விதமாய் வருஷத்துக்குவருஷம் ஞானம் விர்த்தியாகிவருகிறது. அப்பிரகாரமே ஒவ்வொருதலைமுறையும் ஞானத்தை முந்தியதலைமுறையின் ஞானத்தோடுசேர்த்துக்கொண்டேவருகிறது. இப்படி நடப்பதினுல், ஒருநூற்றுண்டில் ஞானம் கொஞ்சகொஞ்சமாய் மல்கிப்பெருகுகிறது. ஆதலால், தற்காலத்திற்பார்க்கினும் அநேக நூற்றுண்டுக்கு முன்னமே மனிதர்கள் அதிகஞானமடைந்திருநதார்களென்று துணிவதுவெட்ட வெளிச்சமான ஆபாசம். பூர்வீகாளுடைய ஞானமும் தற்காலத்தவர்களுடைய ஞானமும் சமநிலையிலிருப்பதாகவைத்துக்கொண்டாலும், ஞானம் சம்பாதிப்பதற்குப் பூர்வீகாளைப்பார்க்கிலும் தற்காலமனிதர்களுக்கு எத்தனையோ அனுகூலமானவகைக ளுண்டாயிருக்கின்றன. ஆராய்ச்சிக்கு நமக்குள்ள விடயங்களும், ஆராய்ச்சிக்கு நமக்குண்டாயிருக்கிற சுலபமான மார்க்கங்களும், ஆராய்ச்சிக்கு நமக்குக் கிடைத்திருக்கிற கருவிகளும், கணிப்பதற்கு மிகவுஞ் சிறந்த மார்க்கங்களும் ஆராய்ச்சியினுல் தேறுகடையாகு மவைகளைப் பிரசுரஞ் செய்வதற்கு நமக்குண்டாகியமுகாந்தரங்களும், பரிசோதிதததைத் தர்க்கித்து ஒப்பிட்டுச் சர்ச்சைசெய்து பலவிதத்தில்ருசுப்படுத்தி முடிவுகட்டுவதற்கு நமக்குள்ள முகாந்தரங்களும், தொலைதூரமான தலைமுறையார்களுக்கிருந்தவற்றைப்பார்க்கிலும் அதிகவிசேஷமாயிருக்கின்றன. பூர்வீகாளுடைய பரிசோதனைகள் துண்டு துணிக்கையாகவும் பரும்படியான மேற்பூச்சாகவுமிருந்தன. நாமோ, சமுத்திரத்தின் அடிவரையில் மூழ்கிப்பார்க்கிறேம், பூமியின் கர்ப்பம்வரையில் ஊடுருவிப்பார்க்கிறேம். ஆகாயவெளியிலே நெடுந்தூரத்தில் ஏகாந்த ஸ்தானங்களை எட்டிப்பார்க்கிறேம். அவ்விடங்களிலே புது உலகங்கள் சிருஷ்டி அல்லது பிண்டமாகித்திரண்டு வருவதாகக் காணப்படுகின்றன. இப்போது உலகமுழுவதையும் ஒருமிக்கக்கண்டறியலாம். ரெயில்வேமார்க்கமாய்க் கண்டங்களை நாம கடந்து செல்லக்கூடும். ஸ்டீமர்கள் மூலமாய் மகாசமுத்திரங்களைக் கடக்கக்கூடும். மைக்கிரஸ்கோப்பும் டெல்லஸ்கோப்பும்போனற கருவிகளால் நமது திருஷ்டிவலுவு எவ்வளவோ விர்த்தியாயிருக்கிறது. நாம் வெளியை அளக்குஞ் சக்தியானது வெகுநேர்த்தியான நாநாவித கருவிகளால் பெருகியிருக்கிறது. அவ்வாறே நமக்குக் காலத்தை அளவிடுஞ் சக்தியுமுண்டாயிருக்கிறது. அதிசயிக்கத்தக்க தபால் ஏற்பாடும் நமக்கு ஏற்பட்டிருக்கிறது, அதினுலே அநேகமார்க்கமாய்ச் சங்கதிகள் பரவுகின்றன. சமாச்சார தூதனுக நாம் மின்னலையே உபயோகிக்கிறேம். பத்திரிகைகள் புஸ்தகங்கள் முதலியவற்றை அச்சிடுகிற அதிசயமானவித்தை நமக்குக்கிடைத்திருக்கிறது, அதினுலே உலகத்திலுள்ள ஒவ்வொருதேசத்தாரும் தங்கள்தங்கள் எண்ணங்களைச் சுலபமாயும் தீவரமாயும் பரஸ்பரந்தெரிவித்துக்கொள்ள இடமுண்டாயிருக்கிறது. ஆராய்பவர்கள் அளவிறந்தவர்களிருக்கிறுர்கள்; அவர்கள் உண்மையை நாடும் அதிஅவாவினுலும் மிகுந்தசிரத்தையினுலும் அதி ஊக்கத்தினுலும் தூண்டப்பட்ட மகாவிசேஷபுத்திமான்கள். சுருக்கமாய், நாகரீகமடைந்த உலகமுழுமைக்கும் மகத்தான ஒரு ஞானசபையானது விடாது தலைமுறைதலைமுறையாய்க் கூடிவருகிறது; மானிடரால் வெளியிடப்படும் ஞானத்தைச்சேர்ப்பதற்கும் விர்த்திசெய்தற்கும்விடாதுபாடுபடுகிறது. கனவான்களே, அமரிக்கையுடனே சாக்கிரதையாய் ஆலோசித்துப்பாருங்கள்; பார்ப்பீராகில், எனது அபிப்பிராயத்தோடு கலப்பீர்களென்பது நிச்சயம். ஆகையால், பூர்வீகஞானத்தைப்பார்க்கினும், நவீனஞானத்தைச் சிலாக்கியப்படுத்துவதற்குப் பின்னிடையவேண்டாம். நமது மூதாதைகளுடைய சர்வஞ்ஞத்துவத்தில் குருட்டாட்டமாய் நம்பிக்கைவைப்பது கெடுதியானது; ஏனெனில், அதினுல் வழுக்கள் நிலைபெற்றுப்போகிறதுமன்றி, கெடுதி பயப்பதற்கும் வழியுண்டாகிறது.

---

## வியவசாயரசாயனம்.

(62-வது பக்கத் தொடர்ச்சி.)

**கரிமூலம்**—இந்த பூதமானது சுத்தியாகவும் தனியாகவும் சாதாரணமாய் வச்சிரங்களிலிருக்கின்றது. மிகுந்த அழகும் ஆச்சரியகரமுமான இந்தரத்தினமானது பளிங்கனசுத்தகரியேயன்றி வேறல்ல. இதை நெருப்பிலிட்டால் கரியாகிவிடுவதே இதற்கு பிரத்தியக்ஷரூபகாரம். இது நிலக்கரியிலிருப்பதுமன்றி காரீயத்திலும் மற்றும அநேகபூதங்களிலும் பிராணிகளின் சரீரத்திலுமிருக்கிறது. ஒருமரத்தண்டை காற்று விசேஷமாக எட்டாதபடிக்கு நெருப்பிலிட்டு சுடுவோமானுல் அதுமுழுமையும் எரிந்து சாம்பலாகாது கரியாகவேயிருக்கும். இது தான் கார்பன் அல்லது கரிமூலமென்று சொல்லப்படுவது. விளக்கில் ஒரு ஓட்டைக்காட்டினுல் இதில் கறுப்பான ஒருபதார்த்தமுண்டாகும். இதவும் அந்தகரிமூலந்தான். இந்த கரிமூலத்தை ஜீவமூலத்தில் சுடுவோமானுல் கரிமூலத்திருவம் என்னும் வாயுரூபங்கொண்ட ஒருபதார்த்தமுண்டாகிறது. இதற்கு வன்னமும் வாசனையுமில்லை. இதில் தீபம் உடனே அவிந்துபோகும், பிராணிகள் செத்துப்போகும். ஆயினும் இது கந்தமூலாதிகளுக்கு அவசியமாய் வேண்டியது. இதில்லாவிட்டால் பயிர்கள்விளையாது. இந்த திருவத்தைப் பயிர் பூண்டுகள் சூரியன்காங்கையினுல் சாதாரணமான காற்றிலிருந்து பிரித்து உட்கொள்ளும்.

**சுத்தகந்தகம்**—இது மிகவும் பிரயோசனகரமான பூதமாய் அநேக இடங்களில் காணப்படுகிறது. இது வெளிர்பசுமையான எளிதிலுடையத்தக்க கனபதார்த்தம். இதற்கு ரசங்கிடையாது. குளிர்ந்திருக்குங்காலத்தில் வாசனையுங்கிடையாது. ஆயினும் இதைச்சுட்டாலும் தேய்த்தாலும் ஒருகந்தமுண்டாகும். ஜலத்தைப்பார்க்கிலும் கொஞ்சங்கனமானது. இலகுவான காங்கையினுலே உருகிப்போகும். காற்றில்லாத இடத்தில அதிகமாகக் காயச்சப்பட்டால் கொதித்து ஆவியாய்விடும். காற்றிருந்தால் தீபற்றி எரிந்துபோகும்.

**காடிக்காரமூலம்**—மற்ற பூதங்களைப்பார்க்கிலும் மெத்தவினோதமானது. எப்போதும் ஜீவமூலத்தோடு சேர்ந்திருக்கும். இதில் கலந்திருக்கும் ஜீவமூலத்தை எளிதில் நீக்கிவிடலாம். இது வெள்ளரக்கைப்போன்ற எளிதிலுருகாநின்ற பதார்த்தம். இருட்டில் வெளிச்சமுள்ளபுகையால் மூடப்பட்டதாகத்தோன்றும். இது காற்றிலிருக்கிற ஜீவமூலத்தோடு கலந்து சாந்தமாக எரிவதினுல் அப்புகையுண்டாகும். இதை கையில் கொண்டால் கையிலிருக்கும் காங்கையினுலேயே உருகி கையைச்சுடும், இது வெள்ளைப்பூண்டைப்போன்ற வாசனையையுடையது. ஜலத்திலாவது சாராயத்திலாவது கரைவதில்லை. மெத்த விஷமுளளது, ஆயினும் இது ஜீவமூலத்தோடு கலந்து காடிக்காரத்திருவமென்கிற ஒரு அருமையான பதார்த்தம் ஆகிறது.

பிராணிகளுடைய எலும்புகள் இந்தத்திரவத்தினாலும் சுண்ணம்பினாலும் ஆகின்றன. நமது எலும்பு தசை நரம்பு முதலியவும் நாம் உண்ணுகிற ஆகாரத்தினால் குழந்தைப்பருவத்திலிருந்து வளருவதால் நம்முடைய ஆகாரத்தில் மேற்படிபதார்த்தம் விசேஷமாகக்கலந்திருக்கவேண்டும். ஆதலால் நாம் உண்ணுகிற பாலிலும் பலவித தானியங்களிலும் கிழங்குகளிலும் மாம்சாதிகளிலும் இந்தத்திரவம் விசேஷமாகக்கலந்திருக்கின்றது. இது இல்லாமற்போனால் சுந்தமூலங்கள் முளைக்கவேமாட்டா. நிலமானது பாழடைந்து ஒன்றையுமுண்டாக்காது. ஆகையால்தான் நறுக்கப்பட்ட எலும்புகளும் சுடப்பட்ட எலும்புகளும் மிகவும் பிரயோசனகரமான எருவாகின்றன.

கிளோரயின், பிரோமயின், ஜையோடயின், பிளோரயின், என்னும் இந்தநான்குபூதங்களும் ஒன்றுக்கொன்று மெத்தசம்பந்தப்பட்டனவாகத் தோற்றுகின்றன. இவைகளுள் முதற்சொல்லப்பட்ட கிளோரயின் அல்லது இலவணமூலம், அதிகப்பட்டதாயும் சிறந்ததாயும் இருக்கிறது. இது விசேஷமாக சாதாரணமான உப்பிலிருந்து எடுக்கப்படுகின்றது. இலவணமூலமும் ஸொடியன்என்னும் இலவணகாரமும் சேர்ந்துதான் உப்பு அல்லது இலவணமாகிறது. இந்த இலவணமூலம் மிகுந்த பசுமையான ஆவியாயிருக்கின்றது, அதின்கந்தம் மூச்சை அடைக்கத்தக்கது. இதை கொஞ்சம் முகர்ந்தாலும் இரும்பல் அதிகமாய் உண்டாகும். இது காற்றைப்பார்க்கிலும் அதிகபளுவுள்ளது. (இன்னும் வரும்)

த—ணி.

---

## ஆத்திகம்.

பிரபஞ்சத்திற்கு வேருயும், மனோவாக்குக்காயங்களுக்கதீதமாயும் உள்ளதாகச் சொன்மாத்திரமாய்ச் சொல்லப்படும் சுவர்க்கத்திலும், நரகத்திலும், அவற்றுள் முறையே வசிக்கும் தேவர்களிலேயும், பசாசங்களிலேயும் நம்பிக்கைவைத்து, அந்நம்பிக்கை காரணமாக இன்னல் பலவற்றையும் நன்மையெனக்கருதி இயற்றிவருவதே ஆத்திகம். இதனைப்பற்றி யெழுதப்பட்ட கிரந்தங்களெல்லாம் ஆத்திகநூல்களெனப்படும். இந்நூல்கள் பற்பலதேசங்களிலுள்ள பற்பல மதப்பிராந்தர்களால் தத்தம் மனம்போனபோக்காய் வரையப்பட்டுள்ளன. இம்மதப்பிராந்தர்கள் ஒவ்வொருவரும் தாம்தாம் எழுதிய நூல்களையே பதிநூல்களெனவும், மற்றையர் எழுதிய நூல்கள் பதிநூல்களல்லவெனவும் கூறுகின்றனர். இதனால் ஆத்திகநூல்களுள் ஒன்றையேனும் பதிநூலெனப் பகர்தற்கிடமில்லை. ஆயினும் ஆத்திகநூல்களைப் பதிநூல்களாகக் கொள்ளுமிடத்து அவைபுகல்வன எவையெனவிசாரிப்பது நமது கடனும். விசாரிக்குமிடத்து, அவை பொய், களவு, கள், காமம், கொலை முதலிய குற்றங்களைச்செய்ய ஏவும் நூல்களாகவேயிருக்கின்றன. எங்ஙனமெனின் இங்ஙனம் உதாரணவாயிலாய் உதகரிப்பாம்.

ஆத்திகநூல்கள் பொய்பகர ஏவுதல்:—ஆபிரகாம் மன்னர் சபையில் தன் மனைவியைச் சகோதரியென்று பொய் பகர்ந்தனர். கிறீஸ்து தனது பிரேதம் மூன்றுபகலும் மூன்று இரவும் புதைக்கப்பட்டிருக்கும் என்று அபத்தம் கூறினர். விவாகமேடையில் வீற்றிருந்த சுந்தரமூர்த்திநாயனாரைத் தமக்கடிமையெனச் சிவன் கூறியுள்ளார். விபசாரத்தொழிலில் முதற்றரும்பூலத்திற்குரியவரான விட்டுணு தன்னை ஏகபத்தினி விரதாசிரோன்மணியெனப் பகர்ந்துள்ளார். இவை யெல்லாம் ஆத்திகநூல்களுள் பொதிந்தவிஷயங்களே.

ஆத்திகநூலகள் களவுசெய்ய எவுதல்:—கிறீஸ்து குடித்தனக்காரன் கழுதைக் குட்டியைத் திருடிவரச்சொல்லி அதன்மீது ஊர்வலம்வந்தார். ஒண்டவந்தகாகம் உரம்பெற்றதென்பதாக எகிப்பதிற் சரண்புகுந்த இசரவேலர் எகிப்தியர் ஆடையாபரணங்களை மோசஞ்செய்து திருடிக்கொள்ளும்படி ஏகோவாவாவின் ஆணையின்பிரகாரம் மோசே கட்டளையிட இசரவேலர் அவ்வாறே களவுசெய்தனர். விட்டுணு கிருஷ்ணவதாரத்திலே ஆயச்சேரியிலுள்ள வீடுகள்தோறும் புகுந்து, தயிர் பால், வெண்ணெய் இவைகளைத் திருடியுண்டு உரலில் கட்டப்பட்டு அடியுண்டார். இவையெல்லாம் ஆத்திகநூல்களுள் பொதிந்த விஷயங்களே.

ஆத்திகநூல்கள் கள்ளாதி அருந்தலை ஏவுதல்:—நோவா தன் நிர்வாணம் வெளியாகும்படிக் குடித்து வெறிகொண்டுபுரண்டிருந்தனர். ஏசு கானான் தேசத்திலே கலியாணவாசலிலே கள்ளைப்பெருக்கிக் களிக்கச்செய்தனர். சிவன் தன்னடிமைகள் கேட்கும்வரங்களின் தாரதம்மியங்களை யறியாமல் தாறுமாறாக அவர்களுக்கு வரங்களையீந்து பின்பு தான் வருத்தமுறும்படியான அளவிற்குக் கஞ்சாவாதி குடித்துவந்தார். இவையெல்லாம் ஆத்திகநூல்களுள் பொதிந்தவிஷயங்களே;

ஆத்திகநூல்கள் காமச்செய்கைகளை யேவுதல்:—மரியாள் தன் கணவனாகிய யோசேப்புடன் சுகித்தறியாமுன் ஏசுவென்னும் புதல்வனைப் பெற்றாள். சாலோமோன் தனக்குள்ள எழுநூறு பத்தினிமார்கள் போதாமல் முன்னூறு வேசிமார்களையும் புணர்ந்துவந்தார். விட்டுணு பதினாயிரம் கோபஸ்திரீகளுடன் லீலாபோகமியற்றினதல்லாமல் கண்டகண்ட இடங்களில் கண்டகண்ட ஸ்திரீகளைக் கற்பழித்துவந்தார், சிவன் தாருகாவனத்து ரிஷிபத்தினிமார்களனைவரையுங் கற்பழித்ததல்லாமல கங்கையென்னும் பெண்ணையும் தன சடாமுடியில் ஒளித்துவைத்திருக்கிறார். இவையெல்லாம் ஆத்திகநூலகளுள் பொதிந்த விஷயங்களே.

ஆத்திகநூல்கள் கொலைபுரிய ஏவுதல்:—ஏகோவா ஆபிரகாமைநோக்கி அவரது ஏகபுத்திராகிய ஈசாக்கைத் தனக்கு நரபலியாககொடு என்று ஆக்கியாபித்தார். கிறீஸ்து இரண்டாயிரம் பன்றிகளைக் காரணமின்றி மடுவிற்றள்ளி மாய்த்தனர். சிவன் சிறுத்தொண்டனை அவன அருமைக்குழந்தையைக் கறிசமைத்துத் தமக்குப் படைக்கச்சொன்னார். விட்டுணு கிருஷ்ணவதாரத்திலே குருகுலவம்மிசததவர்களிலே கலகத்தையுண்டுபண்ணி பற்பலவாயிரங்களாக மாளும்படி பாரதப்போரை விளைத்து முடித்துவிட்டார். இவையெல்லாம் ஆத்திகநூல்களுள் பொதிந்தவிஷயங்களே.

இத்தகைய குற்றங்களுக்கெல்லாம் இடங்கொடுத்திருப்பது ஆத்திகம். ஆத்திகப்போதத்தைப் பருகி அதன் வயப்பட்டொழுகுவோரே ஆத்திகர். ஆத்திகம் இன்னதென்றும் இத்தகையதென்றும் அறிந்த ஒவ்வொருவரும் அபிமானமொழிந்தவர்களாயின் மீண்டும் அவர்கள் ஆத்திகர்களாகவிருப்பது அருமை, அருமை, அருமை.

D.

---

## இந்துசமயசாரவிளக்கம்.

விநாயகர் திரிமூர்த்திகளுக்கு அனுக்கிரகஞ்செய்தது.
(55-வது பக்கத்தொடர்ச்சி.)

**விநாயகபுராணம்.**—விநாயகர் திரிமூர்த்திகள் செய்த தோத்திரத்துக்கிரங்கி, அவர்கள் கேட்டுக்கொண்டபடி, தன்னிடத்து அவர்கட்கு அளவற்ற பத்திகள்பெருகத்தக்கதான வரத்தைத் தந்து, (7) வேதாகமபுராணகலைகளைக்கொண்டு யாவையுஞ் சிருட்டிசெய்யத்தக்க சத்தியைப் பிரமனுக்கும், யோகத்தினால் வேண்டியவடிவங்களைக்கொண்டுயாவையும் இரட்சிக்கத்தக்க சத்தியை விண்டுவுக்கும், ஏகாட்சர சடாட்சர மந்திரங்களைக் கொண்டு எங்குந் தானாகவிருந்து யாவையுஞ்சங்காரஞ்செய்யத்தக்க சத்தியை உருத்திரருக்குங் கொடுத்தார்.

**விளக்கம்**—(7) இந்த வரத்தின் பெருமையைப் பின்னால் சிருஷ்டி விகாரப்படுமிடத்து ஆலோசிக்கவேண்டும்.—யாவும் பஸ்மீபடலமாய்விட்டபின்பு சிருஷ்டிக்கு முன்னமே வேதாகமபுராணங்கள் எங்கிருந்து முளைத்தன? விநாயகரோ முந்தி யெழுதிவைத்துவிட்டனர் போலும். நடந்த விருத்தாந்தங்கள் புராணமாகவேண்டுமேயல்லாமல், விருத்தாந்தங்கள் நடவாமுன்னமேபுராணங்கள் எவ்வாறுண்டாயின? அவற்றைக்கொண்டு சிருஷ்டிசெய்கிறதென்பதென்னையோ? அவை (குயவனுடைய சிருஷ்டிக்கு மண்ணிருப்பதுபோல) பிரமசிருஷ்டிக்குப் பதார்த்தமா, அல்லது (தண்டுசக்கரங்களைப்போல) கருவிகளா, அல்லது சிருஷ்டிசெய்யும் வகையைக் கற்பிக்கும்நூல்களா?—இரட்சிப்பதற்காக விட்டுணு சமயத்துக்கேற்ற தந்திரங்கள் செய்யப் பலவடிவங்களெடுக்கவேண்டியது அவசியமாக்கும். விநாயகர் பிந்தி நடக்கப்போகிற காரியங்களை முன்னறிந்து, வேண்டியவடிவங்களெடுக்கும்படி விட்டுணுவுக்கு அனுக்கிரகஞ் செய்தனரென்றால், அநேக சங்கதிகளிலே பிந்தி நடக்கப்போகிறதை முந்தியறியத் தவறிப்போனவராகவும், முந்திநடந்ததையே மறந்தவராகவும் காணுகிறார். இதுவிஷயத்தை இந்த சர்ச்சையில் ஆங்காங்கு காணலாம்.] சங்காரகிருத்தியந்தவிர, வேற்று வடிவமெடுக்க அதிகாரங் கொடுக்கப்பெறாத சங்கரன் தாய்ப்பன்றியை யிழந்தபன்றிக்குட்டிகளுக்குத் தாயைப்போலவே பெண் பன்றிவடிவமெடுத்துவந்து பால் கொடுத்துக் காப்பாற்றின சத்தி பெற்றதெவ்வாறோ? பின்போர்சமயத்தில் தவஞ்செய்து பெற்றாலும் பெற்றிருக்கலாம்! இக்காலத்தும் பரமசிவன் திக்கற்ற ஜீவராசிகளை அவ்வாறு காப்பாற்றிக்கொண்டுதான் வந்தி

ருப்பர். அதைக் கண்டறிந்துசொல்ல அக்காலத்தில் பத்திமான்க ளிருந்ததுபோல இக்காலத்தி லில்லை: ஆயினும், இப்போது சில அடியார்கள் சிவவேடம்பூண்டுபத்தியில் பழுத்துவருகிறார்கள், அப்படிப்பட்டவர்கள் கண்டறிந்து சீக்கிரத்தில் சொல்லுவார்கள்போலும்.—

மேற்படி பன்றிகதை திருவிளையாடற்புராணத்திலுள்ளது. 45-வது விளையாட்டு.—முன்னாளில் ஒரு விச்சாதரன் புலத்தியமுனிவர் செய்கிற தவத்துக்கு விக்கினமாக வீணையிசைபாடினன், அதற்காக அவர் அவனைப் பன்றியாகச் சபித்தார்; அவன் விமோசனங் கேட்டுக்கொள்ள, பாண்டியன் வேட்டையிலே பலமிருகங்களோடு உன்னையுங் கொல்லுவான், பின்பு இச்சவடிவைப்பெறுவாயென்றார். அந்தபபடியே அவன் பன்றியாய்ப்பிறந்து அநேக பன்றிகளுக்குத் தலைவனாய்ப்பெட்டைப்பன்றியுடனே வாழ்ந்துகொண்டிருந்தான். இதுநிற்க;—குருவிருந்த துறையில் ஒரு வேளாளனுடைய பன்னிரண்டு பிள்ளைகள் வேடருடனே கூடிக் காட்டில்திரிகையில், ஒரு மரப்புதலின்கீழ் தவஞ்செய்கிறதேவகுருவைக்கண்டு பரிகாசஞ் செய்து கல்லுமணலும் வாரி அவர்மேல் வீசினார்கள்; அவர்கோபித்து, அவர்களைப் பன்றியின்வயிற்றிலே பிறந்து குட்டிகளாய்த் தாயையும் தகப்பனையுமிழந்து அலைந்து துன்பப்படககடவீர்களென்று கடிய சாபமிட்டார். அவர்கள் மேற்படி பன்றியரசனுக்கும் அரசிக்கும்பிறந்து குட்டிகளாயிருக்கும்நாளில், பாண்டியன் வேட்டைக்குவந்து சிங்கமுதலிய பல மிருகங்களையுங் கொன்று மேலைத்திக்கில் போகும்போது ஒரு பன்றிகண்டு இராசபன்றியினிடத்திற்கு விரைந்தோடிப் பாண்டியன் வருகிறதைச் சவிஸ்தாரமாய்ச் சொல்ல, அத்தலைமையான பன்றி தன்பரிவாரப்பன்றிகளுடனே யுத்தத்திற்கு புறப்படுகையில், பேட்டுப்பன்றி பிரிவாற்றாமையைப்பற்றி பல நியாயங்கள் சொல்லிக் குட்டிகளுடனே தானுங் கூடச்சென்றது. பாண்டியனும் அவனுடைய சேனையும் பற்பல ஆயுதங்களைக்கொண்டு வெகு கஷ்டநிஷ்டூரத்துடனே பன்றிகளைச் சேதப்படுத்தினது விசேஷமல்ல; அப்பன்றிகள் ஆயுதமொன்றுமில்லாமலே தங்கள்பற்களாலும் கொம்புகளாலும் காலாலும் வாலாலும் பாண்டியனுடைய நால்வகை சேனையை ஹதஞ்செய்தது மகாவிசேஷம். கடைசியாய் அவ்வரசப்பன்றி கொல்லப்பட்டபின்பு, பெண்பன்றியும் கூடியவரையில் யுத்தஞ்செய்து மாண்டது. நாயகனும் நாயகியுமாகிய அவ்விரண்டு பன்றிகளும் சுவர்க்கலோகம் போய்ச்சேர்ந்தன. அப்பால், தாயற்றபன்றிக்குட்டிகள் வருந்தி அலைந்துகொண்டிருப்பதைத் தமதிச்சையாய் விமானமேல் வந்த மீனாட்சிசுந்தரேசர் கண்டிரங்கி, தாய்ப்பன்றியாக வந்து பால்கொடுத்து வளர்த்து, அக்குட்டிகளுக்கு ஞான முதலியவையுண்டாகச்செய்து, முகமாத்திரம் பன்றிமுகமாகவும் உடம்பெல்லாம் மனிதவடிவாகவுஞ் செய்து, பின்பு பாண்டியனுடையகனவிலடைந்து அவற்றை மந்திரிகளாகவைத்துக்கொள்ளச்செய்து, கடைசியில் தமது சிவபுரத்திற்சேர்த்துக்கொண்டார்.

இந்தக்கதையினாலே, விண்ணுலகத்தோரும் மண்ணுலகத்திற்குவந்து தவஞ்செய்கிறபெருமையையும், அப்படிப்பட்ட மேன்மையான மண்ணுலகத்திலுள்ளவர்கள் பாவிகளாய்ப்போவதையும், பரமசிவன் பாலகொடுத்துக்காப்பாற்றுவது முதலியவற்றை முன்னறிந்து சொன்னஞானிகள் இன்ன இடத்தில் தவஞ்செய்தால் அதற்கு இன்னபடி விக்கினமுண்டாகுமென முன்னதாய் ஞானதிருஷ்டியினாலறிந்துகொண்டு, தகுதியான இடத்தில் தவஞ்செய்பவகையறியாத ஞானசூனியர்களாய்ச் சபித்துவிடுகிறசுலபத்தையும், வாசிப்பவர்கள் யோசித்துப்பார்க்கவேண்டும். பன்றியாய்ப்பிறந்த விச்சாதரன்பேசினாலும், மற்றப்பன்றிகள்பேசினதும், சிங்கமுதலிய பலமானமிருகங்கள்மாண்டும் தப்பித்துக்கொண்டோடியும்போக, பன்றிகள்மாத்திரம் தேர்களை முறித்து யானைகளைச்சிதைத்து படைவீரரைக்கொன்றதும் அதிசயமே.—உல்லாசமாய் விமானத்தின் மேற்சென்ற சுந்தரேசர் அவ்வழியாய்ப்போனதினாலல்லவா அப்பன்றிக் குட்டிகளைக்கண்டு இரங்கிப்பால்கொடுத்துவளர்த்தார்; போகாவிட்டால் என்னமாய்முடிந்திருக்கும்? அன்றியும், அதேகாலத்தில் வேறொருதேசத்திலே பூனைக்குட்டிகள் அவ்வாறு அவதிப்பட்டுக்கொண்டிருந்தால் அவற்றைக்காப்பாற்ற வகையில்லையே; ஒருவேளை அத்தேசத்துக்கடவுள் காப்பாற்றியிருப்பார்போலும். கடைசியாய் அப்பன்றிக்குட்டிகளைச் சிவபுரத்தில் சேர்த்துக்கொண்டவர் முதலிலே தானே சேர்த்துக்கொண்டிருந்தால், தான்பன்றியானது முதலிய இடைச்சம்பவங்கள் ஒழிந்துபோயிருக்குமே. தன்னுடைய அருளையும்வல்லமையையும்ஞானத்தையும் அக்காலத்திலுள்ளார்க்கு வெளியிடவேண்டிப் பன்றியாகி விளையாடினராக்கும்! இக்காலத்தில் தாயிழந்தோ வேறுகாரணத்ாலோசலதாரையில் புரண்டுருண்டெழுந்து விழுந்து கிடந்துபாதைப்பட்டுச்சாகிற பூனைக்குட்டிகளையும் நாய்க்குட்டிகளையும் காப்பாற்றவரவில்லையே. இக்காலத்தில அப்படி விளையாடச்சாமர்த்தியமில்லாமலோ, வெகுகாலமாய்விளையாடி விளையாடி அலுத்தோ (பின்வருமாறு) விநாயகருடைய கர்ப்பத்திற் புகுந்து இளைப்பாறிக்கொண் டிருக்கிறார்போலும்.

(இன்னும்வரும்.) A. M.

---

## இரசவாதியும்மதவாதியும்.

பேராசையுடையோர் இனிவரும் எனக் கருதிய பயனைவிரும்பி இப்போது உள்ளதையும் இழக்கின்றார்கள். பேராசை கிலேசத்தையே விளைக்கும். பேராசையுடையோருக்கு ஒருபொழுதும் திருப்தி பிறவாது. உள்ளதுபோதும் என்று அமைந்த மனமே குறைவற்ற களஞ்சியம். எத்துணைப்பெருஞ்செல்வராயினும், திருப்தியில்லாதவர் ஒருபொழுதும் சுகமடையார். இப்பூலோகத்தின்கண்ணே, இரசவாதத்தினாலே பெரும்பொருள் சம்பாதிக்கலாம் என்று பேராசைகொண்ட சிலரும், மதபோதனுவனுசரணைகளினால், பரலோககதியையடையலாம் என்று வீணாசைகொண்ட பலரும், பொய்வேடம்பூண்ட இரசவாதிகளாலும் மதவாதிகளாலும் வஞ்சிக்கப்பட்டு, தங்களுடைய பொருளையும் தெருளையும் இழந்து, வறுமையுற்று, வருந்துவதை யாவரும் செவியுற்றும் கண்ணுற்றும் உள்ளார். இரசவாதிகள் இவ்வுலகை பொன்னுலகாக்குவோம் என்கின்றார்கள். மதவாதிகள் இவ்வுலகை பொய்யாக்குவேம் என்கின்றார்கள். இரசவாதிகள் செய்வேமென்பது கைமாற்றத்தால்தான், மதவாதிகள் செய்வேமென்பது காரணகாரியவாதத்தால்தான். கைமாற்றத்தால் ஒருபொருள்மற்றொருபொருளாவதும் இல்லை, காரணகாரிய வாதத்தால் உள்ளபொருள்சூன்னியமாவதும் இல்லை. இவ்வுண்மைகளையறியாத மாந்தர் பேராசையென்னுஞ் சுரநோயுற்று, இனிமைபபலவற்றிற்கும் காரணமாயுள்ள இப்பிரபஞ்சத்தினில் வெறுப்புற்று, அனுபோக சித்தியாகாத இரசவாதத்திலும், மனோவாக்குக்காயங்களுக்கெட்டாத பரலோக போகத்திலும் நம்பிக்கையுற்று, கைப்பொருளிலும் மெய்ப்பொருளிலும், நம்பிக்கையற்றவர்போல நடித்து, இரசவாதத்திலும் மதவாதத்திலும் அதிபாண்டித்தியம் அடைந்தவர்போல் நடிக்கும் வாதிகளுக்குத் தத்தம் பிதுரார்ச்சிதங்களையும், தத்தம் கைப்பொருள்களையும் ஈந்து, அந்தத்தில் கைம்மாறொன்றும் பெறாததினால், அகமும்முகமும் மிகவும் மெலிந்து, இகபோகத்தை யனுபவியாது வகைமோசம் போகின்றமை பரிதாபத்தினும் பரிதாபமாகியவிஷயமே. இஃதென்ன அறியாமை! இரசவாதமதவாத மயக்கத்தினாலே உள்ளபொருளையும் இழந்து வீண்காலம் போக்காமல், தங்கள் தங்களால் இயன்ற தொழில்களைச்செய்து தங்களதும் பிறரதும் சுகானுபோகவிருத்தியின்பொருட்டு செலவுசெய்து, வாழ்ந்திருக்கக்கடவர்களாக மாந்

தர்கள். இரசவாதிகளையும் மதவாதிகளையும் மாந்தர் நம்புதல் மானுஷீகத்திற்கு ஈனமும், இகபோகத்திற்கு ஊனமும் சம்பவிக்கும் என்பதனையறிவது அறிவுடையோரது அருங்கடனும் பெருந்தொழிலுமாம். D.

---

## வர்த்தமானசங்கிரகம்.

---

மதிராஸ் நாஷனல் இந்தியன் அசோஸியேஷன் என்னும் சங்கத்தின் மெம்பர்கள் சென்ற சோமவாரம் சாயங்காலம் வருஷாந்தர மகாசபை கூடினார்கள். ஆனரேரி செக்ரிட்டேரியாகிய ஸ்ரீமான் ராய்பஹதூர் ப். ரங்கநாதமுதலியாரவர்களால் ரிபோர்ட்டு வாசிக்கப்பட்டது. அதின் சங்கிரகமாவது:—வருஷக்கடைசியில் சேர்ந்திருக்கிற மெம்பர்கள் 154. இந்தச்சபையாருடைய ஏற்பாட்டினால் இங்கிலீஷ் தமிழ் தெலுங்கு இந்துஸ்தானி உபாத்திச்சிமார்கள் சிலவீடுகளுக்குச் சென்று வகுப்புகள் ஏற்படுத்தி ஸ்திரீகளுக்கு கல்வி கற்பித்துவருகிறார்கள். மகமதியஸ்திரீகள் இந்துஸ்தானி வாசிப்பது துர்லபமாயிருப்பதால் அந்த பாஷை உபாத்தியாயர் நிறுத்திவைக்கப்பட்டனர். இதுவரையில் வாசித்த ஸ்திரீகள் பரீட்சைக்குப் போயிருக்கிறார்கள். உபாத்திச்சிமார்கள் பரிட்சையில் தேறி, கல்விப்பயிற்றும் முறைமை கற்று சர்ட்டிபிகேட்டு பெற்றிருக்கிறவர்கள். வித்தியார்த்திகளில் சிலர் இங்கிலீஷ் நன்றாய் வாசிக்கவும் கொஞ்சம் பேசவும் கற்றிருக்கிறார்கள். சிலர் இங்கிலீஷில் திறமையாக வீட்டுக்கணக்கு எழுதி வருகிறார்கள். சாதாரணமான தையல்வேலையிலும் சித்திரத் தையல் வேலையிலும் தேர்ந்தவர்களில் சிலர் லண்டன் பட்டணத்துக் காட்சிசாலைக்கு விநோதமான தையல்வேலை அனுப்பியிருக்கிறார்கள். இச்சங்கத்தார் சில வித்தியார்த்திகளுக்கு ஸ்காலர்ஷிப் என்னும் வர்த்தனையும் சில பெண்கள் பாடசாலைகளுக்குக் கிராண்டும் கொடுத்துவருகிறார்கள். விஜயநகரம் மகாராஜா அவர்களுடைய பாலிகா பாடசாலைகள் இந்தச் சங்கத்தாருக்குள் ஓர் சப்கமிட்டியாருடைய விசாரணையிலிருக்கின்றன. இந்தப் பாடசாலைகள் அதிக விர்த்தி யடைந்துவருகின்றன.

இந்த ரிபோர்ட்டு முடிந்தபின்பு, ஸ்ரீமான் சோமசுந்தரசெட்டியாரவர்கள் இந்தியாவிலுள்ள ஸ்திரீகளுக்குக்கல்விப் பயிற்சி அத்தியாவசியகமென்பதைப்பற்றி உபன்னியாசம்வாசித்தனர். அதன் சாராம்சமாவது:—ஸ்திரீகளுக்குக் கல்விப்பயிற்றும் தற்கால ஏற்பாட்டினாலே உண்டாகிய பிரயோஜனங்கள் திர்ப்திகரமாகவே இருந்தபோதிலும், அது புத்தியைவிசாலப்படுத்துவதற்குமாத்திரம் உதவுகிறதேயன்றி குடும்பத்திற்கு ஆதரவாக அவ்வளவாய் காரியபாகமான உதவி புரியவில்லை. ஆதலால் புத்தியை விசாலப்படுத்தும் பயிற்சிமாத்திரம்போதாது, பாகசாஸ்திரமுதலியவைகளைக் கற்று கிரகக்கிர்த்தியங்களுக்கு அனுகூலமாயிருக்கும்படியான பயிற்சியும் வேண்டும். வீட்டில் சரியான ஏற்பாடுகள் செய்விப்பதிலும், குழந்தைகளை அதிக செலவுண்டாகாதபடி உபாயமான ஔஷதங்கொடுத்து பிணிகளை நீக்கி வளர்க்குந்திறமுள்ளவர்களாகவேண்டும்; நமது ஸ்திரீகளுக்கு அப்படிப்பட்ட திறமையில்லாதபடியினாலே வயித்தியர்களுக்குக் குடும்பங்களில அதிக பணங்கொடுத்து வருகிற வழக்கம் யாவருக்குந் தெரிந்தேயிருக்கிறது. நமது ஸ்திரீகள் புத்திவிசாலமடைவதோடு கூட சற்குணங்களிலும் பயிற்றப்பட்டு கிரகக்கிர்த்திய நிர்வாகத்திலும் குழந்தைகளை வளர்ப்பதிலும்தேர்ச்சியடைந்திருப்பார்களாகில்அவர்களுடைய நிலைமை அதிக சிறப்புடையதாகும். இதனாலே குடும்பத்தில் அதிக செலவு குறைந்து, யோகக்ஷேமாபிவிர்த்திக்கு வழியுண்டாகும். இங்கிலாந்து முதலிய மற்றத் தேசங்களில் இதற்கென்று ஸ்திரீகளுக்கு பிரத்தியேகமானபயிற்சிசெய்யப்படுகிறது; இதனாலே அவர்கள் தங்கள் மக்களை அன்புடனே ஜாக்கிரதையாய்க் காப்பாற்றி சில வயசுவரையிலே தங்கள் வீடுகளில் நீதிமுதலிய உபயோகமானவிஷயங்களை அவர்களுக்குக் கற்பித்து வருகிறார்கள். நமது சிறுவர்களின் தாய்கள் நடத்துவது அம்மாதிரியல்ல, சிலர் விவேகமாய் நடத்தினபோதிலும் பெரும்பாலார் மற்ற தேசங்களில் தங்களைப்போன்ற ஸ்திரீகள் நடத்துகிறமாதிரியை சுத்தமாய் அறியாதவர்கள். இது மிகவும் பரிதாபப்படத்தக்கதே. அவர்கள் தங்கள்மக்களை வளர்க்கிறமாதிரியானது அவர்களுக்கு சுகமும் வலுவும் உண்டுபண்ணவேண்டியதற்குப் பதிலாக, அவர்களை பலவீனப்படுத்த உதவியாயிருக்கிறது; தாய்களின் மூடத்தனத்தினாலே சில குழந்தைகள் இறந்தும்போகின்றன. இந்தவிஷயத்தில் கற்பிப்பது அதியாவசியகமாதலால், டெக்னிகல்இனிஸ்டிட்டியூஷன் என்னும் சாலை ஏற்படுத்துவதற்காக இப்போது அதிக முயற்சி செய்யப்பட்டு கையொப்பம் சேகரிக்கப் படுகிறபடியால் சிறுமிகளை கிரகக்கிர்த்திய நிர்வாகத்திலும் குழந்தைகளை வளர்ப்பதிலும் திறமை யடையும்படி பயிற்றுவதற்காக ஒரு சாகை யேற்படுத்துவது உசிதமாகும்.—சிறு வயதிலே விவாகஞ்செய்கிறவழக்கத்தைக்குறித்துஇப்போதுபோதுமான சர்ச்சைநடந்துகொண்டிருக்கிறபடியால்அதுவிஷயத்தில்விசேஷமொன்றுஞ்சொல்லாமல்,சிறுபருவவிவாகவழக்கம் எவ்வளவுசீக்கிரத்திலொழிகிறதோ அவ்வளவும்தேசக்ஷேமத்திற்குஅனுகூலமுண்டாகும். என்றுசொல்லிமுடித்தனர். [இச்சங்கத்தார் மேற் போட்டுக்கொண்டு அதிக பொறுமையுடனே நாலு வருஷகாலமாய் சாந்தமாக நடத்திவருகிற விஷயங்கள் மிகவும் புகழப்படத்தக்கவைகளே. இவற்றிற்கு திரவியசகாயம் மிகுதியாக வேண்டியிருக்குமென்பதையாவரும் அறிந்திருக்கலாம். இந்தியாவிலல்லாமல் வேறொருதேசத்திலானால் இப்படிப்பட்ட பொதுநல முயற்சியானது வெகுசீக்கிரத்தில் கைகூடிவந்தேயிருக்கும். இவ்விடத்திலே கல்வியிற் சிறந்தவர்கள் பெரும்பாலும்உத்தியோகஸ்தர்களாதலால்செல்வப்பெருக்கினராதல் அரிது. வர்த்தகவகுப்பாரில் வாசிக்கிற சில புத்திமான்கள் உத்தியோகத்தில் பிரவேசித்துவிடுகிறார்கள்; மற்றவர்கள் வாசிப்புகுறைவினாலே பழயவழக்கங்களை அனுசரித்து, விக்கிரகங்களுக்குப்பிராணப் பிரதிஷ்டைசெய்வதிலும்,உற்சவாதிகள்நடத்துவதிலும்விமானங்கள்செய்வதிலும்பிராமணபோஜனத்திலும் லட்சம் பதினாயிரமாக வாரியிறைத்துவிடுகிறார்கள். உபாயமாகவாசித்துக்கொண்ட சிலர் அதிகபுத்திமான்களோடு சேரத்தகாதவர்களானதுபற்றி, தாங்கள் மூடஜனங்களுக்குள் பிரகாசித்துப் பெருமையடையவேண்டுமெனக்கருதி, வேடம்பூண்டு அவர்களைச் சேர்த்துக் கொண்டு பழையகதைகளை உபதேசித்து லவுக்க காரியங்களை அசட்டைசெய்விப்பதால், மேற்கண்டவைபோன்ற பொதுநல காரியங்கள் நமது தேசத்திலே சீக்கிரத்தில் விர்த்தியடையுமென்பது கனவுதான்; ஆயினும் 'நன்மைகடைப்பிடி' என்னும் வாக்கியத்தை நாம் எப்போதும் மறக்கலாகாது. E. D.]

---

அப்பர்பர்மாவிலே பூமி அதிர்ச்சி அடிக்கடி யுண்டாகிறதாகத் தெரியவருகிறது. இப்போது மாதத்திற்கு இரண்டு மூன்றுமுறை யுண்டானபோதிலும் சேதமொன்றுமில்லையாம்.

ராவல்பிண்டி ஆயுதசாலையைச்சேர்ந்த சாமான் கிடங்கில் சென்ற 14௳ தீப்பிடித்து சுமார் இரண்டுலட்சம் ரூபாய் நஷ்டமுண்டானதாகத் தெரியவருகிறது.

---

## அறிக்கை.

---

நமது மெம்பர்களும் கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிகமாக "தீன்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினால், அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச
தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ் பிரதியாயின் நான்கும ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி—என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றி பெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணை புரிவார்களென்று நம்புகிறோம.

---

இந்தியாவிலுள்ள
சுவக்கியானிகளை
**மதிராஸ் செக்கியுலர்சோசைட்டியில்**
மெம்பர்களாகச் சேரும்படி
கேட்டுக்கொள்ளலாகின்றது.

---

## கையொப்பநேயருக்கு.

---

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறாதவர்கள் உடனேதெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

———o———

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Dayaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 18.] MADRAS:—SUNDAY MAY, 1, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



**இங்கிலாந்து லௌகிகசங்கம்.**—மாதாந்தர நிர்வாகசபை ஜனவரிமீ 5வ கூடியது. மிஸ்டர் பிராட்லா அக்கிராசனுதிபதி. சென்னைச்சாகை சங்கத்தார் உபகாரநிதிக்கு 4பவுன் 2ஷிலிங் 6 பென்ஸ் அனுப்பினார்களென்று மிஸ்டர் பார்டர் உறிக்கைசெய்ததின்பேரில், சென்னைச்சாகையார் தங்கள் இங்கிலீஷ் ஏழைசோதரர்களுக்கு உபகாரமாய் விராளம்அனுப்பினதற்காக அவர்களுக்கு வந்தனக்கடிதம் எழுதும்படி சபாநாயகரைக் கேட்டுக்கொள்ளவேண்டியதென்று மிஸ்டர் பிராட்பானுல் பிரேரேபிக்கப்பட்டு, மிஸ்டர் சௌடனுல் ஆமோதிக்கப்பட்டு, யாவராலும் அங்கீகரிக்கப்பட்டது.

மேற்படிவிஷயத்தை யனுசரித்து, நாஷனல் சிக்கியூலர் சோசைட்டியின் சென்ற நிர்வாகசபையிலே, அந்த சோசைட்டியின் சென்னைச்சாகையார் சுவக்கியானிகள்உபகார நிதிக்குச் சகாயமாக கைபொப்பமனுப்பி யெழுதிக்கொண்ட கடிதம் வாசிககப்பட்டதைக் கேட்க வெகு ஆனந்தமுண்டாயதென்றும், சென்னையிலுள்ள நமது கூட்டாளி மெம்பர்களுக்கு மகாசமுத்திரத்தைக்கடந்து செல்லும்படி நன்றி கூர்ந்த வந்தனம் அனுப்புகிறேமென்றும்நாஷனல்ரிபார்மரில் எழுகியிருக்கிறது. சென்னைசாகை மெம்பர்கள் தாங்கள் அனுபபிய அற்பதொகை அவ்வளவு அன்புடனே அங்கீகரிக்கப்பட்டதற்காக உள்ளபடி சந்தோஷிக்கிருர்கள். அந்த உபகாரநிதி பாத்திரமானதாகையால் அதற்கு உதவிபுரிவது அவசியமானதுபற்றி இவ்வருஷம் தொகை அதிகமாயிருக்குமென்று கோருகிருர்கள்.

---

ராஜா ஸர். டி. மாதவராவ் K. C. S. I. அவர்களால் கன்வோகேஷனில் வாசிக்கப்பட்ட உபந்நியாசத்தின் பாகம்.

**பழயன சழிதலும் புதியன புகுதலும். அதாவது—பழமையில் (தீமையையொழித்து) நன்மையைக்காத்துக்கொள்வதும், புதுமையில் நன்மையை ஏற்றுக்கொள்வதும்.**

---

இந்தியாவானது இரண்டு பிரபலமான நாகரீகங்கள் சேர்ந்திருக்கிற ஸ்தானமாயிருக்கிறது. பழமையானவைகளும் விஸ்தாரமிருக்கின்றன, புதுமையானவைகளும் விஸ்தாரமிருக்கின்றன. அவற்றை பாத்திராபாத்திர மறியாமலாவது அவ்விரண்டுள் ஒன்றையேயாவது ஏற்றுக்கொளளலாகாது. தெரிந்துதெளிவதில் விவேகத்தை உபயோகிக்கவேண்டும். சாஸ்திரக்கியானத்திலோ, நவீனமே சிலாக்கியமுள்ளது. நல்லொழுக்கத்திலோ, அநேக சகாப்தங்களாய் உண்டாகி நமக்குத் தொன்றுதொட்டுவருகிற—சாந்தம், தயை, தன்னொடுக்கம், விஸ்வாசம், நன்றியறிதல், அடக்கம், பொறுமை, தருமம், உபகார சிந்தை, மரியாதை, குளாத்தனத்திற்கு அமைவு, அமரிக்கையிலும் ஒழுங்கிலும் பிரியம், இப்படிப்பட்ட—பழமையான அநேக ஒழுக்கங்கள் சிறந்தவைகளாயிருக்கின்றன; அவைகள் வைத்துக்கொள்ளப்படத்தக்கவையே. இப்படிப்பட்டவைகளை யெழுதினுல் ஒரு பெரிய ஜாபிதாவாகும், அது நமக்குப் பெருமையே. ஆயினும், தைரியம், தூயகுணம், சுயாதீனம், கடைப்பிடிப்பு, கிரமம், பிறர்நன்மைவிரும்பல், முதலிய சில நவீன ஒழுக்கங்களையும் ஏற்றுக்கொள்ளலாம். அப்பிரகாரமே, டம்பமல்லாத வாழ்க்கை, அடக்க ஒடுக்கம், குடும்ப ஆசை, ஏழை பந்துஜனங்களை சந்தோஷத்துடனே ஆதரித்தல் இப்படிப்பட்ட நமது ஒழுக்கங்களு[illegible] வழக்கங்களும் நடவடிக்கைகளும் ஓர்அளவுக்குக் காப்பாற்றப்படத்தக்கவைகளே. சாவகாசமிருக்குமாகில், நம்முடைய [illegible]ற்பம், கவிசாதுரியம், சித்திரம், சங்கீதம் முதலிய விநோத[illegible]ட்சி விசித்திரவித்தைகளில் சிலவற்றை நான் எடுத்துக கூறியேயிருப்பேன்; இவைகள நன்குமதிக்கப்படத்தக்கவைகளே.

பூர்வீகதுரைத்தனநிலைமை.

இந்தியாவின் பூர்வீக துரைத்தன நிலைமையானது தற்காலத்தியதைப்பார்க்கினும் சீராய் இருந்ததென்று சிலர்வெகுதுணிச்சலாய்ச் சொல்லுகிருர்கள். அப்படிச்சொல்வதை நீங்கள் ஒப்புக்கொள்ளமாட்டீர்களென்று நம்புகிறேன். துரைத்தனத்தைப்பற்றிய பூர்வீக மனோரதங்கள்வசனகாவியங்களிலும் செய்யுட் கிரந்தங்களிலும் எழுதப்பட்டு நமக்குக் கிடைத்திருக்கின்றன. அந்த மனோ கற்பிதங்களில் சிறந்தது கூறியதுகூறியபடியே குறைவற நமக்குக் கிடைத்திருந்தாலும், இந்தியாவானது அதின்பேரில் குறைகூறவேகூறும். தற்கால நிலைமையைப்பற்றிப் பேசுவோம், இங்கிலீஷ் துரைத்தனகாலத்திற்குமுந்தியிருந்த எந்த கவரன்மெண்டையும் இந்தியாவானது பொறுத்துக்கொள்ளுமென்று நான் நினைக்கவில்லை. இந்தியாவிலே இங்கிலீஷ் துரைத்தனமானது நமக்கு எக்காலத்திலும் இருந்திராத ஒப்பற்ற சிறந்த துரைத்தனமென்கிற உண்மையை தாராளமாய் நன்றிகூர்ந்து ஒப்புக்கொள்ளவேண்டும். அது மகாபராக்கிரமமும் மகா நீதியுமுள்ளது. இந்தியாவிலுள்ள நானாவிதஜாதிஜனங்களுக்கும் பலவகையான பிரயோஜனங்களுக்கும் மிகவும் தகுந்ததாயிருக்கிறது. குடிஜனங்கள் கல்வித்தேர்ச்சி முதலிய நாகரீகத்தில் விர்த்தியாகஆக அதற்கேற்றபடி தானே ஆதரிப்பதற்கும் நூதன ஏற்பாடும் ஒழுங்குஞ்செய்வதற்கும்தானே மிகவுஞ் சக்தியுள்ளது.

இந்தியா சுயாதீனமுள்ளதாகமாட்டாது.

மனோரதமுயிராமல், உள்ளபடி உலகத்தின்நிலைமையையெவ்வளவாவது கவனித்திருக்கிற ஒவ்வொருவனும் இனிவரும் தீர்க்ககாலவரையில் இந்தியாவானது சுயாதீனமாய் தன்னரசு செலுத்துகிற தேசமாகமாட்டாதென்று தெரிந்துகொள்ளவேண்டும். அதனுடைய சுகவாழ்வும், உற்சாகமும், விர்த்தியும், செல்வமும், ஏதாவதொரு பலமும் நீதியும் உதாரத்துவமுமுள்ள அதிகாரத்தின் சிறகுகளுக்குள் இருப்பதினலேதான் உண்டாகவேண்டும். அப்படியாயின் எந்த துரைத்தனம் இங்கிலீஷ் துரைத்தனத்தைவிட உத்தமமானதாயிருக்கிறது? தர்ப்பலமும மருளுமுடைய இந்தியாவானது, பராக்கிரமமுள்ள ஆதரவையும் சவரட்சணையும் இல்லாவிட்டால்,கொடுங்கோலரசுகொள்ளைக்குத்தான் உள்ளாய்விடும்! வாசித்த புத்திமான்கள் இந்த உண்மைகளை உள்நுழைந்து நன்குய் ஆராய்ந் தறியவேண்டும்.

—0—

## வியவசாயரசாயனம்.

(66-வது பக்கத் தொடர்ச்சி.)

பிரோமயின் அல்லது இலவணத்திப்பி, இது இலவணமூலத்தைப்பார்க்கிலும் அருமையானபூதம். கடல்ஜலத்தில் விசேஷமாக கலந்திருக்கும். கடல்நீரிலிருக்கும் உப்பை எடுத்துவிட்டால் அதில் சேஷமாக நிற்கிற பதார்த்தந்தான் இலவணத்திப்பி; இது சுத்தமாயிருந்தால் சிவப்பான அதிக பளபளப்புள்ள எண்ணைபோலிருக்கும்; இதின் கந்தம் இலவணமூலத்தினது கந்தத்தைப்பார்க்கிலுங் கொடியது. இதனுடைய ஆவி சிவந்திருக்கும். ஜலத்தோடு சற்றே கலக்கும், இது ஜீவமூலத்தோடு கலந்து காரத்திரவ மென்கிற ஒரு அருமையான பதார்த்தம் உண்டாகிறது. பிராணிகளுடைய எலும்புகள் இந்ததிரவத்தினலும் சுண்ணம்பினலும் ஆகின்றன. நமது எலும்பு தசை நரம்புமுதலியவும் நாம் உண்ணுகிற ஆகாரத்தினல் குழந்தைப்பருவத்திலிருந்து வளருவதால் நாம் உண்கிற ஆகாரத்தில் மேற்படி பதார்த்தம் விசேஷமாக கலந்திருக்கவேண்டும். ஆதலால் நாம் உண்ணுகிற பாலிலும் பலவித தானியங்களிலும் கிழங்குகளிலும் மாம்ஸாதிகளிலும் இந்ததிரவம் விசேஷமாக கலந்திருக்கின்றது. இது இல்லாமற்போனல் கந்தமூலங்கள் முளைக்கவேமுளையா. நிலமானது பாழடைந்து ஒன்றையுமுண்டாக்காது. ஆகையால்தான் நற

க்கப்பட்ட எலும்புகளும் சுடப்பட்ட எலும்புகளும் மிகவும் பிரயோசனகரமான எருவாகின்றன.

கிளோரயின், பிரோமயின், ஐயோடயின், பிளோரயின். என்னும் இந்த நான்குபூதங்களும் ஒன்றுக்கொன்று மெத்த சம்பந்தப்பட்டனவாகத் தோற்றுகின்றன. இவைகளிலமுதற்சொல்லப்பட்டது சாராயத்தோடு பூரணமாககலந்துபோய்விடும்.

**ஐயோடயின்.** இது கெட்டியான பளபளப்புள்ள பூதம். இதன் ஆவி இந்திர நீலவர்ணமுடையது; இதன் கந்தம் மேற்சொன்னவைகளைப்போன்ற தானலும் அவ்வளவு கொடியதல்ல. இது சமுத்திரஜலத்திலும் சமுத்திர ஓரங்களிலும் முளைத்திருக்கும் சாதாளைமுதலிய பூண்டுகளிலிருந்து எடுக்கப்படுகின்றது.

**பிளோரயின்.** இது தனியா யிருப்பதில்லை. பவுல்ஸ்பார் என்னும் ஒருவிதகல்லிலிருந்து எடுக்கப்படுகின்றது. இதன்பொடியை கந்தகத்திரவத்தோடு கலந்தால் ஜலமூலத்திரவமென்கிற அருமையான பொருள் உண்டாகின்றது. இந்த ஜலமூலத்திராவகத்தை கண்ணுடியில்விட்டால் அது கண்ணுடியைக தணைத்துவிடும்.

**ஸ்படிகமூலம்.** இந்தப்பிரயோசனமுள்ள பூதமானது பிராணவாயுவோடு கலந்து பரிசுத்தமான பளிங்குக் கல்லாகிறது. இந்த பரிசுத்தமான பளிங்குகல்லுதான் ஸ்படிகமூலசத்து (அல்லதுசிலிக்ஆசிட்) என்று சொல்லப்படுவது. இது ஸ்படிகக்கல் நெருப்புக்கல் பருக்காங்கல் பாறுங்கல் களிமண்முதலிய பல பொருள்களுக்கு ஆதாரமாயிருக்கின்றது.

## லோககாரிய பூதங்கள்.

**காரமூலம்.** இது மரச்சாம்பலென்னப்பட்ட வஸ்துவிலிருந்து எடுக்கப்படும் லோகம். இதுவெள்ளியைப்போல் வெளுத்து கெட்டியாயும் கொஞ்ச நீலவர்ணமாயுமிருக்கும். இது காற்றுப்பட்டால் உடனே ஜீவமூலத்துடன் கலந்து காரம் அல்லது மரவுப்பை உண்டாக்கும். இதை ஜலத்தின்மீதுவிட்டால் தீபற்றி எரியும். இலவணகாரம் இது பொட்டால்லியத்தைப்போல் ஒருவிதலோகம், கல்லுப்பைப்போலிருக்கும். இதை சலத்தோடு சேர்த்தாலும் அல்லது ஜீவமூலத்தில் சுட்டாலும் சோடாஎன்கிற ஒருவிதகாரத்தை யுண்டாக்கும். **சுண்ணமூலம்** இது சுண்ணும்புக்கு ஆதாரமானபூதம், இதுவும் சுத்தகரிதிரவமுஞ் சேர்ந்துதான் பலவித சுண்ணும்புக்கற்கள் உண்டாகின்றன. இது சுத்தமாயிருக்கும்பொழுது பொன்னைப்போல் பசுமையாயும் ஜலத்தைப்பார்க்கிலும் அதிக பளுவாயும் இருக்கும். இது காற்றுள்ளவிடத்தில் சுடப்பட்டால் பிரகாசத்தோடு எரிந்து சுடுசுணணும்பு ஆய்விடும். சுண்ணும்பும் இலவணமூலமுஞ்சேர்ந்து வஸ்திரங்களைச் சுத்திசெய்ய உதவுமொருவித சவுட்டுமண் ஆகின்றது.

**காந்தக்கல்.** இதிலிருந்து மெக்னிஷியா என்னுங் காந்தபஸ்பம் செய்யப்படும். காந்தத்தை ஜீவமூலத்தில் தகித்தால் காந்தபஸ்பமாகும். இது மிருதுவான பசையுள்ள ருசியற்ற சற்றுவெளுமையான ஒருவித பொடிமருந்துக்கு மெத்த உபயோகமானது.

**படிகாரமூலம்.** இதுஒருவிதகளிமண். சுத்திசெய்யப்பட்டால் நேத்தியான வெளுத்த பிரகாசமுள்ள பொடியாயிருக்கும். இது படிகாரமெனனும் லோகத்துக்கு ஆதாரமாயிருக்கின்றது. ஜீவமூலமும் படிகாரமூலமுஞ் சேர்ந்துதான் படிகாரமென்னும்லோகமுண்டாகும். படிகாரத்தை சுட்டால் அதிலிருக்கும் ஜீவமூலம்நீங்கி படிகாரமூலமாய்விடும்.

**அயம்.** இதுபஞ்சலோகங்களில் ஒன்று. இது மனிதருக்கு மிகவும் பிரயோசனமுள்ளதாயும் உலகத்தில் எங்கும் நிறைந்ததாயும் இருக்கின்றது. இரும்பு சன்னம் கலந்திராதமண் காண்பதரிது. இது ஜீவமூலத்தில் உருகி பிரகாசமாக எரிந்து அயபஸ்பம் உண்டாக்கும். மேலும் இரும்பானது கரிமூலத்தோடுசேர்ந்து எஃகுஎன்னும் பதார்த்தமாகும். பலவிதிரவங்களோடு சேர்ந்து பலவித உப்புகளாகும்.

**காந்தப்போலி.** இது சுத்தமாயிருந்தால் எஃகைப் போல வெளுத்திருக்கும். இது காற்றிலிருக்கும் ஜீவமூலத்தை நிதானமாக கிரஹித்துக்கொள்ளும். இதனிடத்தில் ஜலத்தைப் பிரிக்குந் தன்மையுண்டு. இது கண்ணுடி செய்வோருக்குமெத்த உபயோகமுள்ளது. இதைக் கொண்டுதான் கண்ணுடிகளுக்கு ஒருவித நீலவர்ணமுண்டாக்குவார்கள். இது ஜீவமூலத்தோடு சேர்ந்து பலவித பஸ்பமாகும்.

இவ்வாறு லோகசூன்னியமான, கக-பூதங்களும் லோககாரிகளான-எ-பூதங்களும் சத்திரமேகந்தமூலாதிகள் பயிர் ஆவதற்குக் காரணமாயிருக்கின்றன.

த—னி.

---

## அவஸ்தாத்திரையங்கள்.

---

உயர்ந்தமலைகளையும் தாழ்ந்த கணவாய்களையும் வெருவியோடும் நதிகளையும் பரவிச்சூழும் ஆழிகளையும் உடைய இவ்வுலகம் சகல சம்பத்துக்களுக்கும் உறைவிடமாகவிருக்கின்றது. மனிதராகிய நாமோ உற்பவகாலந்தொடங்கி அறியாமையென்னும இருள் நமது ஞானவிழிகளைக் கப்பப் பிறவிச்குருடராகவேயுள்ளேம். இத்தகைமையான நமது வாழ்நாட்களைத் தொடர்ந்துவரும் அவஸ்தைகள் மூன்று. அவை ஜாக்கிரம், சொற்பனம், சுழுத்தியெனப்படும்.

(க) ஜாக்கிரத்தின்கண்ணே மனிதராகிய நாம் பிரிதிவியாதி பூதங்களின் குணங்களையறிந்தவராய் அவைகளுக்கிணங்க நடந்தும் அவ்வாறு நடவாக்கால் இடுக்கணடைந்தும் வருகின்றேம்.

(உ) (a) சொர்ப்பனத்தின்கண்ணே நம்மவரிற் சிலர் பூதவியல்பிற்கு விரோதமாய் கடலில் கனத்தகல் மிதந்ததாகவும், தீக்குழியிலிடப்பட்ட மனிதன் குளிர்ந்திருந்ததாகவும், எலும்புபெண்ணானதாகவும் பூட்டிவைத்துள்ள கதவு தானே திறந்துகொண்டதாகவும், நரிகள் பரிகளானதாகவும், பரிகள் நரிகளானதாகவும், ஆண்பனை பெண்பனையானதாகவும்தாசிவீட்டிற்கிள்ளின அரைக்கீரை கோயிலுள்ள இலிங்கத்தின்மீது வில்வமாய்த் திரிந்திருந்ததாகவும், செங்கல்லுகள் செம்பொன்னகத் திரிந்து ஆற்றிலிடப்பட்டு அட்டிற்றரப்பட்டதாகவும் கணடுகளிப்பர்.

(b) சிலர்கல் கன்னிகையானதாகவும், பூமிமுழுவதையும் ஒரடியால் அளந்ததாகவும், புவனங்களையெல்லாம் வயிற்றிற்குள் வைத்துக்கொண்டதாகவும், கடலின் மத்தியில் பால்போன்ற சலத்தின்மீது நித்திரைசெய்வதாகவும், பால் குடிக்கும் பாலகன் விபசாரஞ் செய்ததாகவும் கண்டுகளிப்பர்.

(c) சிலர் தந்தையில்லாமல் மைந்தன் பிறந்ததாகவும், ஜலத்தை மதுவாக்கினதாகவும், உலகத்தின் ஒருபுறத்தினின்று உலகமுழுவதையும் ஒருங்கே கண்டதாகவும், அலைகள்மோதும்கடல்மீது உலாவினதாகவும், வானத்தினின்று அன்னமழை பொழிந்ததாகவும், அல்ப போஜனத்தை அனேகருக்குப பங்கிட்டுக் கூடைகூடையாக மீத்தினதாகவும் கண்டுகளிப்பர்.

(d) இன்னுஞ் சிற்சிலர் பற்பலவாய் சொர்ப்பன கற்பனைகளைக் கண்டுகளிப்பர்.

(௩) சுழுத்தியின்கண் உள்ள மனிதர் யாவரும் தம்மையும் தம்மைச்சூழ்ந்த உள்ள பிரபஞ்சத்தையும் மறந்து மனேசெயல் துறந்தவராய்நித்த நித்தம் சற்றுநித்திரைபெற்றுய்வர். ஆகவே மக்கள் ஜாக்கிரத்திலும் சுழுத்தியிலும் அடையும் பலாபலன்கள் ஒரு நேர்மையினவாக விருக்க சொர்ப்பனத்தினிடத்தே யுதிக்கும் பலாபலன்கள் மாத்திரம் வேறுபாட்டினதாக விருக்கின்றதலலாமல் இயல்பிற்கு விரோதமாகவும் இருக்கின்றன.

ஆனல் நம்மவரிற் சிலர் இவ்வாறு இயல்பிற்கு விரோதமாய் சொற்பனத்தின்கண்ணே காணும் காட்சிபேதத்தோற்றத்திற்குக்காரணம் நமது ஞானவிழிகள்மீதுகப்பியுள்ள அறியாமையெனவறிந்து, அனுபவக்கியானமாகிய பணையின்மீது விசாரணையென்னும்கூடத்தால் செய்யப்பட்ட பற்பல சாத்திரச் சிலாக்குகளைக்கொண்டு, அறியாமையெனும் படாத்தை உரித்தெறியத்தலைப்பட்டார்கள். இச்சூட்சியைப்பெற்று தமது பிறவிக்குருட்டை நிவிர்த்திபெற்றவர்கள் சிலர். இவர் சிலராகையாலும், இவர் செய்யும் கிர்த்தியங்கள் சிறந்துளவாதலாலும், இவரது தீரத்துவம் மற்றவர்களுக்கில்லை யாதலாலும் இவர்களை மற்றவர் (கோமணங்கட்டாதஊரில் கோமணங்கட்டினவராக) மதித்து நிந்தித்து வருகின்றனர். ஆகவே இச்சிலரிலும் சிலர் நிந்தனை பொருதவராய் தெரிந்த கண்ணும் தெரியாததுபோல் திருட்டுக்குருட்டு வேடம்போட்டுக்கொண்டிருக்கின்றனர்.

இவ்வேடதாரிகளின் விவேகத்தின்பயனென்னை! விவேகமில்லாதவருக்கு விவேகம் போதித்தல்கூடும். விவேகமிருந்தும் விவேகமில்லார்போல் நடிப்பவருக்கு விவேகம்கூறியும்பயனென்னை! உண்மையாய் நித்திரைசெய்பவனைத் தட்டியெழுப்பலாம், நித்திரைசெய்பவனைப்போல் நடிப்பவனைத் தட்டியெழுப்புவது அசாத்தியம். ஆகவே இவர்கள் தாங்களே விவேகிகள் எனத் தத்தம்செய்கைகளால் வெளியில்வந்தால் வரட்டும், அல்லவேல் தூஷணைக்கஞ்சி எஞ்சியவர்போல் அஞ்ஞானப்படுகுழியில் வீழினும்விழட்டும். அறியாமையால் கெடுபவரை விடுதலைசெய்யககூடும், ஆணவத்தால் கெடுபவரை விடுதலைசெய்ய யார்திறம்? இதனை யிவர் அறியாததென்னை! பரிதாபம்! பரிதாபம் !!

குன்றெனுந்திரத்தை குலதெய்வமாகக் கொண்டுள்ளமற்றைய சிலர் நன்மையைக்கெடுக்கும் நிந்தை, நிந்தையல்லவென்றும், நன்மையைக்கடைப்பிடியாமை நிந்தையாமென்றும், தீரமில்லாதவர்க்கு தீரமானகிர்த்தியங்களைச் செய்துகாட்டி பின்னர் அவரை அக்கிர்த்தியங்களைச் செய்யும்படி உசாவுதல் நலமென்றும், பிறவிக்குருடு நீங்கியதற்கொப்ப விப்புவியின்கண் தப்புகள்கடிந்து ஒப்புகள் நடாத்தி நிற்கின்றனர். இவரைத்தான் தத்துவவிவேசினி உத்தமவிவேகிகள் எனக்கூறும். இவர் நெறியைத்தான் அறிந்தொழுகும்வண்ணம் மற்றவர்க்குபதேசிக்கும். ஆகவே சொற்பனவஸ்தையின்கண் எழும் [illegible]பனகாட்சிக

ளால் மயக்குறும் மார்ச்சர்யாவரும் திடசித்தம்பெறறு மடத்த னம அற்று மறத்தொழில்நீங்கி அறத்தொழில் ஓங்கிவருவ ரேல் பயனும் பண்பும் உடையரொன்பதற்கையமில்லை.

D.

## உடையவர் சரித்திரம்.

இந்த தென்னிந்தியாவில் காஞ்சிநாட்டில் ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்து, பரமாசாரியென்று எழுந்தருளி, தங்கள் வமிசத்தார் சோம்பேறி சுகசீவனம் பண்ணக் கட்டுக்கதையைக்கட்டி மகத்துவங் கற்பித்து, அனேகரை வஞ்சித்துப் பொருள்பறிக்கச் செய்திருக்கிறஅநேகவித ஏற்பாட்டுக்கொள்கைகளில், இதுவுமொரு பெருத்த மோசவிதக்கொள்கையென்று பல திருட்டாந்தங்களினால் மெய்ப்பிக்கவேண்டியது ஆவசியகமாயிருக்கிறதென்று நினைக்கிறேன். அதாவது-உடையவர் அவதாரம்-பரமபதத்தில் பரமபத நாதனுக்குப் பிராட்டியார் கால் வருடிக்கொண்டிருக்கும்போது, புருஷாகாரமாய் ஷை நாதனைநோக்கி இவ்வுலகில் சீவராசிகள் உஜ்ஜீவிக்காமல் நாசப்படுகிறார்களே கிருபை செய்யவேணுமென்று விண்ணப்பம்பண்ணினர். அதற்கவர் கிரேதாயுகத்தில் தத்தாத்திரேயராய் நாம் அவதரித்து ஆசாரிய சிஷிய பாவனைகாட்டினதற்கு நம்பாமற்போனார்கள்; திரேதாயுகத்தில்தசரதகுமாரனுன இராமாவதாரம் பண்ணி உன்னை முன்னிட்டு ராவணசம்மார முதலானதைச் செய்து நான் பரனென்று காட்டினேன், அப்போதும் நம்பாமற்போனார்கள்; துவாபர யுகத்தில் கிருஷ்ணாவதாரம் பண்ணி, காளிங்க நிர்த்தனம் செய்து, கோவர்த்தனகிரியைக் குடையாக வெடுத்து, சூரியனைச் சக்கரத்தால் மறைத்து, மனிதரால் செய்யப்படாத ஆச்சரியங்களைச் செய்து நான் பரனென்று சொன்னேன்; அப்போதுங் காரடி வித்தைக்காரனென்று அசட்டை செய்து நம்பாமற்போனார்கள். இப்படி யெல்லாம் அன்றுதொடங்கி கஷ்டப்பட்டும் நம்பாமற்போனார்களே! நானென்னசெய்வேனென்று பரமபதநாதன் சொல்ல. அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஆதிசேஷன் தலையெடுத்துநோக்கிப்பார்த்ததற்கு "உன்னாலே ஆகுமா" வென்று நாதன் கேட்க "உத்தரவானால் செய்கிறே" னென்று சேஷன்சொன்னதற்கு உத்தரவுகொடுத்தோம், நீபோய் சீவர்களைஉஜ்ஜீவிக்கச் செய்யென்று சொன்னாராம். அப்போது மானைக் காட்டி மானைப்பிடிப்பார்போல, இவரும் மனிஷாவதாரஞ்செய்தாரென்கிறார்கள். அப்படி ஸ்ரீபெரும்பூதூரில் ஆசூரி கேசவாசாரிக்குப் புத்திரனாய்ப்பிறந்து, யாதவப்பிரகாசரிடத்தில் வாசித்து, சன்னியாசம் பெற்றுக்கொண்டு தங்கள் வமிசபிராமணரில் எசு-பேரை ஆசாரிய சிம்மாசனாதிபதிகளென்று ஏற்படுத்தினர். ஷை யாதவப்பிரகாசருடைய குமாரத்திகள் இரண்டுபேர் நன்றாய் வாசித்தவர்களாயிருந்து, சாத்திரயுக்தப்படி விதவைகளான நாங்களுனக்குப் பணிவிடை செய்கிறோமென்று கேட்டுக்கொண்டதற்குத் தம்மிலும் அதிகமாய் வாசித்திருக்கிறபடியால், தம்முடைய எண்ணத்துக்கு விரோதம் பண்ணுவார்களென்றே தம்முடைய சன்னியாசத்துவத்தை நிலைக்கவொட்டார்களென்றே அங்கிகாரம்பண்ணமல், தள்ளிவிட்டனர், அவர்கள் கோபங்கொண்டு வடக்கே நெடுந்தூரம்போய், அவ்விடத்தில் நெடியராய், தடியராய், மூடராய், முரடராயிருக்கிற பிரஜைகளைப்பார்த்து அவர்களுடன் பேசி வசப்படுத்தி, உடையவர் மதமென்று தாபனம் பண்ணி, சாதிபேதமில்லாமல் கூட்டி; சகல மாமிசங்களையும் கள்ளு சாராயங்களையும் உடையவர் விக்கிரகத்துக்கு அமிசை செய்வித்து, கோலாகலமாய் குடித்தும் புசித்தும் ரவுகலவுச்சவமென்று பேதமில்லாமல் புணர்ச்சி செய்ததினாலே, சீக்கிரத்தில் அனேகருஞ்சேர்ந்து, மதக்கூட்டமும் பெருத்து, அதற்குத் தகுந்த சரமகைங்கரிய சாத்திரங்கள் மந்திரங்களென்று உண்டாக்கி, உடையவர் தென்தேசத்து இராஜாக்களையும் பிரஜைகளையு மயக்கி இரங்காகோயிலுக்கு ஆஸ்திகளைச் சேர்த்துக்கொண்டிருக்கிறதால், அவரை மோசம்பண்ணவும் தங்களை எந்தநினைப்பினால் நீக்கினரோ அந்தப்படி அவருக்கு விரோதமாய் துன்மதம்செய்து வெற்றி பெற்றோமென்றதாகவும் காட்ட, தென்தேசத்தில் இரங்கமென்ற பரமபதத்தைச் சேவித்தால் முத்திமோக்ஷம் அடையலாமென்று அந்த ஸ்திரீகள் அவர்களில் 10 பேருக்கு போதித்து, வேஷகுலக்ஷணமா யனுப்புவித்தார்கள். அவர்கள் ஸ்ரீரங்குகளை வந்து சேவித்தார்கள். அவாள் காத்திராகாரத்தையும் வைஷ்ணவகோலத்தையும் பார்த்து நீங்கள் யார் திருவடியில் ஆசிரித்தவர்களென்று கேட்டதற்கு உடையவர் திருவடியில் ஆசிரித்தவர்களென்றார்கள். அனுஷ்டானமென்னவென்று கேட்டார். சகல மாமிசமும் சாராயமும் கள்ளும் ரவுக்கை வுச்சவமு மென்று ஒளியாமல்சொன்னார்கள். நாம் துரத்திவிட்ட யாதவப்பிரகாசருடைய விதவைப் பெண்கள் நமக்கு விரோதமாய் துன்மதத்தை யுண்டாக்கினர்களென்று துக்கப்பட்டு, உடனேஎவ்விதத்திலாவது அவ்விடத்துக்கு நாம் போயதை யழிக்கவேணுமென்று கோபங்கொண்டு புறப்பட்டார். இவர்போனால் இவ்விடத்தில் காரியங்களெல்லாம் கெடுதியாகுமென்று ஒரு பிராமணன்பேரில் இரங்கநாதன் ஆவேசம்வந்ததுபோலே வந்து, உடையவர் போகக்கூடாதென்று தடுத்து, மடக்கிப்போட்டார்கள். நம்முடைய எண்ணம் பூர்த்தியாகவொட்டாமல் விதவைகள் செய்தார்களென்று அதுவேதுக்கமாய் (வாயிலடித்து வயிற்றிலறைந்துகொண்டு) இறந்தார். அவர் உயிரோடிருக்கும்போதே தன்னைப்போலவிக்கிரகம் ஏளச்செய்து, அதைத்தான்தழுவி தன்னுடைய சத்தை அதற்குக்கொடுத்து, பிறகு தன்னுயிரையும் அந்த விக்கிரகத்துக்குக் கொடுத்து,திருநாட்டுக்கேளினரென்றும், திருமஞ்சன காலத்தில் முத்துமுத்தாய்வியர்வைவொழுகுகிறதென்றும். அவர் பரமாசாரியரென்றும்,அவர்லீலாவிபூதிக்கும் நித்திய விபூதிக்கும் உடையவரென்றும், அவரைத் துதித்தவர்களுக்கே முத்திமோக்ஷமென்றும், அவரல்லாமல் பரமபதநாதன் மோக்ஷம் சாதிக்கக்கூடாதென்றும், அவரைத்துதிக்க சகலமந்திரமும் அடங்கிய இராமாநுஜ நூற்றந்தாதியென்று ஒரு தமிழ் அந்தாதிசெய்து, அதைச் சகலத்திராளும் பாராயணம்பண்ணி அனுஷ்டிக்கவேணுமென்று, ஜனங்களை மயக்கிக் கொள்ளைக்கிடம்பண்ணி நாராயணனென்று சொன்னாலும் துதித்தாலும் பிரயோசனமில்லை, இராமாநுசரென்று வுடையவரைச்சொல்லவும் துதிக்கவுமாயிருந்தால் மோட்சமென்று கற்பித்து ஷை ஸ்ரீபெரும்பூதூரில் மூட அரசர் முதலான பலரால் கோயிலைக்கட்டி, அவர் தகப்பனை கேசவப்பெருமாளென்றும், அவரை உடையவரென்றும், விக்கிரகங்கள் வார்ப்பித்து, பல சாதியாரைக்கொண்டு உச்சவாதிகள் செய்து, பெருமைபாராட்டி இதுவு மொரு கொள்ளைக் கிடம் பண்ணிக் கொண்டார்கள். இப்படி இத்தேசத்தார் ஊருக்கொரு கோயிலை முன்னிட்டுக் கொள்ளைக் கொடுக்கிறதுமல்லாமல், எசு சிம்மாசனாதிபதி ஆசாரிகள் பெருகி எங்கும் பரவி, அனேக ஏற்பாட்டின்வழியாய் பபமுறுத்தி, கொள்ளையடிக்கிறார்கள். முதலில் தத்தாத்திரேயராயும், உ-வது இராமனுயும், ங-வது கிருஷ்ணனுயும் அவதாரம்பண்ணி அலைந்து வேசாரி கால் கை கடுப்பெடுத்து அசந்து படுத்திருக்கிறவருக்கு பிராட்டிகால் கைமடிக்கலாச்சதோ ? பரமபதநாதன் சர்வவல்லவனாய் மூன்று அவதாரம்பண்ணியும் மாளாமற்போனதை நிறைவேற்ற நாதனுக்குப் பாயலாயும் மிதியடியாயும் குடையாயுமிருக்கிற பாம்பான ஆதிசேஷனுக்கு மாத்திரம் வல்லபமெப்படியுண்டாச்சதோ? அப்படியானால் விதவைஸ்திரிகள் இவருக்குவிரோதமாய்சாத்தானிய மதத்தையுண்டாக்கி, அந்த மதஸ்தரை இவர்சந்ததியாருக்குப்பங்காளிப்போராட்டத்தை யுண்டுபண்ணி உலகம் நிறையச்செய்ததை ஏன் தடுக்கவில்லை? பாண்டிய

னுக்குப் பயந்து வெள்ளைவஸ்திரம் உடுத்து ஓடி ஒளித்துக்கொள்ள வேண்டியதென்ன? டிலலிபாதுஷா அனுப்பிய சேவர்களுக்குப்பயந்து பறைச்சேரியில் ஒளித்துக்கொள்ள, உங்களிஷ்டப்படி மூன்றுநாளைக்கு நீங்கள் மேல்கோட்டை - செல்லப்பிள்ளையை எதேச்சையாய் கோயிலுக்குட்புகுந்து ஆராதனை முதலானதுஞ் செய்துகொள்ளலாமென்று வாக்குத்தத்தம் பண்ணி பறையர் கேட்டுக்கொண்டபடி யிடங்கொடுத்து நடந்தேறிவருகிறதே. துறத்திக்கொண்டுவந்த டில்லிமனுஷாளை துரத்திவிடச் சத்தியில்லாமற்போனதென்ன? வாதஞ்செய்தபோது திரைக்குள்- ௧௦௦௦- சிரசைக்கொண்டு தர்க்கம்பண்ணினவர்தேப்பெருமாள்உத்தரவுபடி ஆசூரிகேசவாசாரி பெண்சாதிவயிற்றில் உதிக்கப்போகிற இவர் திருக்கச்சிநம்பிக்கு-௧௦௦௦-சிரசுகளை சொலித்து தரிசனையாகி ஷை ஆசாரிவீட்டு சாக்கடைக்கால்வழியாகப்போய் ஷை யான்வயிற்றில் தங்கினர்? திருவேங்கடத்தானுக்கு நாமம்போட சர்ப்பரூபங்கொண்டு கோடுவழியாய் உள்நுழைந்து நாமமுதலான சின்னங்களை தரித்தவனென அவர்-௧௦௦௦-படத்தைக்காட்டி பாண்டியனையும் டில்லிச்சேவகரையும் ஏன் செயிக்கவில்லை? மேற்கண்ட விதவை ஸ்திரிகளை பணிவிடைக்கு வைத்துக்கொண்டால் சாத்தானிமதம் விரோதமாயுண்டாகாதே? நம்மிலும் அதிகமாய்வாசித்திருக்கிறதால நம்முடைய எண்ணத்தைக்கெடுப்பார்களென்று துறத்திவிட்டதாயிருக்கலாம். இவர்களைத் துறத்தினால் நமக்கு விரோதமதஞ்செய்வார்களென்று பூர்வக்கியானமில்லாமல்போனவர் பரமபதத்திலிருந்து உத்தரவு பெற்றுக்கொண்டு வந்தாரென்றுஎப்படிநம்பக்கூடும்? நான் செய்கிறேனென்று நாதனிடத்திற்சொல்லிவந்தது என்னமாயிற்று? ஒருபாப்பான் தங்கள்வமிசத்தார் பிழைக்கவும் தன்னைப்பரமாசாரியென்று புகழ்ந்து துதித்து வழிபாடுசெய்யவும் செய்த கற்பனைகளை யோசிக்காமல் தொண்டு பூண்டு சகலவிதத்திலும் நெடுநாளாய் மோசம்போகிறது ஆச்சரியமாயிருக்கிறது. முதல் பார்ப்பாரசுவாமிகள, ௨-வது பூண்டி பண்டாரசுவாமிகள், ௩-வது சாத்தானிய சுவாமிகளாயிருக்கிற இவர்களை, எல்லாரும் வணங்கிக் கொடுக்கவேண்டியதாயிருக்கிறது. இவைகளல்லாமல் உடையவர் பாண்டியனுக்குப் பயந்து மேற்கே ஓடிப்போனவிடத்தில் சுருனங்குடிக்கிராமத்தில் வெண்களிமண் தாவள்ளியமாயிருக்கக்கண்டு, இதை வைஷ்ணவசின்னமாய் நெற்றிமுதலான இடங்களில் வைத்து ஸ்தாபித்தால் வைஷ்ணவமதம் இன்னமும் பலப்பட்டு நம்மை பரமாசாரியென்றும் நம்புவார்களென்று ஷை மண்ணுக்கு திருமண்ணென்றும் நாமமென்றும் அலங்காரப்பேரிட்டு, நெற்றியிலிடும்போது தன்னுடைய பேரால் தனியன் மந்திரமுதலானதை செபித்துப்போடக்கற்பித்துவிட்ட இரண்டு திருமண்கோட்டை எம்பெருமான் திருவடிகளென்றும், அதின்மத்தியில் மஞ்சள் கோடிட்டு பிராட்டியார் உருவமென்றும், இகபரசாதனமென்றும் கற்பித்து தன்னால் ஏற்படுத்திய ஆசாரிகள்கொள்ளைக்கு அங்கமாகவும் செய்ததினால் உலகமெல்லாம் பரவி இந்த மதத்திலடங்கிய சகல சாதியாரும் மூடபக்தி சிரத்தையாய் திருவடிச்சின்னமாய், வரவர அகலமாயும் தளமாயும் அல்லது துவாதசநாமம் திருமண்போட்டு வீண்காலம் கழித்தும், நாமம் திருச்சூரணம் கிரையம்கொடுத்து வாங்கி ஒரு குடும்பத்துக்கு ௴ ௧-க்கு ௧-௨- அணா வீதம் ௵ ௧-க்கு ௧-ரூபா-௨-ரூபா இறுத்தும் நாடோறும் நெற்றி முதலான விடங்களிலிட்டு அதைக்கழுவி சாக்கடையில் விடுகிறதாயிருக்கிறது. இவருக்குமுன் மலை கோபிக்கல்லை யுரைத்து நெடுக்கிடுதல் குறுக்கிடுதலென்று மதக்குறியாய் போட்டிருந்ததற்கு விபரீத கற்பனை பண்ணி நஷ்டத்தையும் கஷ்டத்தையும் பிற மதஸ்தரில் பழிப்பையும் சனங்களடையச் செய்திருக்கிறார்.

A. V.

—o—

## வர்த்தமானசங்கிரகம்.

சென்ற புதுவெள்ளிக்கிழமைகாலை தேவாராதனைக்குசிறப்புற்றோங்கிய வைஸ்ராய் அவர்கள், கவுண்டெஸ் ஆவ் டவ்ரின் அம்மா அவர்களும் பரிவாரங்களும் புடைசூழ்ந்துவர, டோரா திருச்சபைக்குச் சென்றார்கள். அந்தத் தேவாலயமணிகூண்டில் பெரிய தேன்வண்டுக்கூட்டம் ஐந்துவருஷகாலமாயிருந்தது. அந்த வண்டுகள் அக்காலமுழுவதும் ஒருவருடைய ஜோலிக்கும்போகாமல் அமரிக்கையாகவே இருந்தன. மணியடிக்கிற சௌகிதார் திருச்சபைக்கு வைஸ்ராய் அவர்கள் வருவதினிமித்தம் வழக்கத்துக்குமிஞ்சி மணியடித்துத் தனது அதிகபாராக்கிரமத்தைக் காட்டினதினால் அவை சஞ்சலப்பட்டுக் கலைந்தனவோ, அல்லது வைஸ்ராய் அவர்களோடு கூடச்சென்ற பாடிகார்டின சிவப்புச்சட்டைகளும், திருச்சபையின் வாயிலண்டை தங்கள் ஸ்தானத்திலே அஞ்ஞானிகளாகிய படைவீரர்கள் வந்திருப்பதும் அவற்றிற்குச் சரிப்படவில்லையோதான அறிந்திலேன். ஆனால் அவை கூட்டமாக இறங்கிவந்து அந்தக் கட்டடத்திற்கு வெளியிலிருந்தவர்களெல்லோரையும் கொட்டின. அதினாலுண்டான கலவரத்தை விவரித்துச்சொல்லுவதைப்பார்க்கிலும் இன்னபடியிருக்குமென்று நினைத்துக்கொள்வது சுலபமாயிருக்கும். வைஸ்ராய் அவர்களும் அவருடைய பரிவாரமும் அதிஷ்டவசாத்தாய் தேவாலயத்திற்குள் பிரவேசித்துவிட்டார்கள், கதவுகள் மூடிவிடப்பட்டன, அவர்கள் சுத்தமாய் தப்பித்துக்கொண்டார்களென்று நம்புகிறேன். வெளியிலிருந்த பாடிகார்ட் ஓட்டம்பிடித்தது. பூரன்சிங் வண்டியில்பூட்டியிருந்த குதிரைகள் வார்களை யறுத்துக்கொண்டு வண்டியைத் தவிடுபொடியாக்கின. ஒரு ஆபீஸருடைய குதிரைமிகவும் கடுமையாய்க் கொட்டப்பட்டபடியால் அது கீழேவிழுந்துவிட்டது, அந்தவண்டுகள் அந்தக் குதிரையைச் சுற்றிச் சுற்றிவந்து கொட்டிக்கொட்டி அது சாகிறவரையில் அதைவிட்டுப் போகவில்லை. ஒருபக்கத்தில் தரைசாணிகளும் குழந்தைகளும் கூச்சலிடுவதும், மற்றொருபக்கத்தில் குதிரைகள தலைகால்தெரியாமல் ஓடுவதுமாய், கலவரம் மிகுதியாயிருந்தது. டோரா திருச்சபைக்கு வைஸ்ராய் அவர்கள் போனது நெடுங்காலம்வரையில் அவருடைய ஞாபகத்தை விட்டு அகலாது. தேவாராதனை நடக்கவில்லை யென்று நான் சொல்லவேண்டுவதில்லை.—

(Statesman.)

**ரஷியன்சமாச்சாரம்.**—பாடுவுக்கும் உஜன்ஆடாவுக்கும் நீராவிஎந்திரமார்க்கம் தடையின்றி பூர்த்தியாய் அமைந்திருப்பதினால், திரான்ஸ் காஸ்பியன் ரெயில்வேமார்க்கமாய் பக்காரன் பஞ்சு உஜன்ஆடாவுக்கு திரளாகக்கொண்டுவரப்படுகிறது, அவ்விடத்திலிருந்து பட்டோமுக்கும் சிபஸ்டபூலுக்கும் அனுப்பப்படுகிறது, அங்கங்கிருந்து மாஸ்கோவுக்கும் அனுப்பப்படுகிறது. கட்டுகள் வெகுதிட்டமாய் பந்தனை செய்யப்படுகின்றன.

ரஷிய வர்த்தகர்கள் மத்திய ஏஷியாவிலுள்ள பலதேசங்களில், ரஷியன்-டர்க்கிஷ்-பெர்ஷியன் பாஷைகளிலே துபாசித்தனஞ் செய்கிறவர்கள் இல்லாமையினாலே தங்கள் வியாபாரம் மிகவும் அடைபட்டிருக்கிறதென்று தெரிந்துகொண்டபடியால், வேண்டியிருக்கும் துபாசிகளை பயிற்றுவிப்பதற்காக ரஷியாவைச் சேர்ந்த அந்தந்த அந்நியபிரதேசத்தில் இதற்கென்றுபாடசாலைகள் ஏற்படுத்தும்படி, அந்நியதேச காரியங்களுக்காக ஏற்பட்டிருக்கும் ரஷியன் மந்திரியையும் பப்ளிக் இன்ஸ்திராக்ஷன் மினிஸ்டரையும்கேட்டுக்கொள்ளவேண்டியவர்களானார்கள்.

சென்றவருஷம் வசந்தருதுவிலே ரஷியஇராச்சியமந்திரியானவர், மத்தியஏஷியாவிலுள்ள ரஷியபட்டணங்களாகியபாவ்லொதாருக்கும் செமிபாலாடின்ஸ்கினுக்கும் போய், அவ்விடங்களிலே வனாந்தர மணல் வந்து விழுகிறதற்குக் காரணங்களை அதிநுட்பமாய் கவனித்தறிந்து, பயமுறுத்துகிற அந்த அபாயம் சரியாய் எவ்வளவு விஸ்திரணத்திற்குப் பரவுகிறதோ அதைக்குறித்து ரிபோர்ட் பண்ணும்படிக்கும், என்னசெய்தால் அந்தத்துன்பம் நிவாரணையாகுமோ அந்தவகையை யெடுத்துச்சொல்லும்படிக்கும் காட்டு விசாரணை அதிகாரிக்கு உத்தரவு செய்தார்கள். அந்த அதிகாரி யிப்போது விசாரணைமுடித்து, பிந்திய பட்டணத்தின் விஷயத்தில், இனி அப்படி மணல் வந்து அடையாதபடி தடுப்பதற்கு சுமார் பத்து ஏகார அளவுக்கு தாழை மடல் நடவேண்டுமென்றும், முந்திய பட்டணத்தின் நிலைமை பின்னுங்கெடுதியா யிருக்கிறபடியால், இரிட்டிஷ்நதிக் கரைகளில் குச்சுகள்நாட்டி உடைப்புகளைத்தத்து பந்தோபஸ்துசெய்யவேண்டுமென்றும், இந்தவகைகளைச் செய்துமுடிப்பதற்கு தம்முடைய மதிப்பு ஐம்பதினாயிரம் ரூபா ஆகுமென்றும் அறிக்கை செய்திருக்கிறார்.

Printed and Published for the Proprietor at the VURTHAMANATHARUNGINI PRESS, No. 174 Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—No. 24.] MADRAS:—SUNDAY JUNE, 12, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## அறிக்கை

சந்தாக்களையும், பத்திரிகைவேண்டி-
எழுதிக்கொள்ளுங்கடிதங்களையும்
மேப்பேரி சிலவர்ஸ் ரோட்டில்
மதிருஸ் செகுலர்சொசைட்டி ஆனரரிசெக்ரிட்டேரி
மெஸ்டர். அப்ஷன்துரைக்குநேராய்
அனுப்பவேண்டும்; அனுப்பாவிட்டால், பத்திரிகை
கிடைக்கமாட்டாது.

## ஆன்மவிசாரணை

(89-வது பக்கத் தொடர்ச்சி.)

ஆன்மாவைப்பற்றி நமக்கு என்னதெரியும்? ஒன்றுமில்லையே. சூக்ஷமமாகிய ஆன்மா தன்னோடு எவ்வாற்றானும் ஒற்றுமையில்லாத தூலபதார்த்தத்தோடு எவ்வாறு பொருந்தியிருக்குமென்பதை ஆன்மசித்தாந்திகள் சொல்லுதல் வேண்டுமே. தேகத்தினாலேயே ஆன்மா உண்டென்பதும் இல்லையென்பதும் தீர்மானித்தல்கூடும் என்றும், ஆன்மாவானது தேகமாகிய சட்டையைப் போர்த்திருக்கின்றது என்றும், ஆன்மா சூக்ஷமபதார்த்தமென்றும், அது கடவுளிடத்திருந்து வந்ததென்றும், கடவுளால் சிருட்டிக்கப்பட்டதென்றும், அல்லது கடவுளைப்போல அனாதி நித்தியமாயுள்ளதென்றும், வியவகரிக்கும் ஆன்மசித்தாந்திகள், சூக்ஷமமாகிய ஆன்மா தூலமாகிய தேகசட்டையுள் எவ்வாறு கட்டுப்பட்டிருத்தல் கூடுமென்றும், (நிழலைக் கயிறுகொண்டு கட்டுவதுபோல) சூக்ஷமத்தை நவவாயிலுடைய தூலம் எவ்வாறு எல்லைக்குட்படுத்திக் கவசஞ்செய்தல் கூடுமென்றும் சொல்கின்றிலர். தூலங் கட்டுக்குட்படுமா? சூக்குமங் கட்டுக்குட்படுமா? தூலம் அறிவுகோசரப்படுமா? சூக்குமம் அறிவுகோசரப்படுமா? அல்லது இவ்விரண்டுமே அறிவிற்கு எட்டுமா? தூலம் அறிவுகோசரப்படுவது நம்மெல்லாருக்குமே அனுபவமாதலான் அதைப் பிரசனை செய்வது ஆவசியகமன்று. சூக்குமம் எந்த அறிவிற்குக்கோசரமானது! அந்த அறிவையுடைய பிறர்க்கு அதை எவ்வாறு விளக்குதல் கூடும்! அது அறிவிற்கு எட்டாதெனின், அறிவிற்கு எட்டாததை எவ்வாறு உண்டென்று அறிந்து தீர்மானித்தல்கூடும்? ஆன்மா தூலமென்னில் சுட்டிக்காட்டுதல் சாத்தியமாமே. தன்னை இன்னதென அறியவும் இலக்ஷியிக்கவுங்கூடாதது, தனக்குத்தாயகமாகிய தலைவனை எங்ஙனம் லக்ஷியிக்கவும் அறியவுங்கூடும்? இவ்வாறு இலக்ஷியிக்கவும் அறியவும் கூடாததை உண்டென்பது, அறிந்துசொல்லுஞ் சொல்லா அறியாமற்சொல்லுஞ் சொல்லா? அறியாததை அறிந்ததாகச்சொல்வது சத்தியமா? அசத்தியமா? மேலும் ஆன்மா சிருட்டிக்கப்பட்டதென்றால், முன்னொருபோது இல்லாதிருந்து பின் உண்டாக்கப்பட்டதாதல்வேண்டும். இங்ஙனம் ஒருபோது இல்லாதிருந்ததை உண்டாக்கவேண்டும் என்று எண்ணின எண்ணமும், எண்ணியபடியே செய்தசெய்கையும் விகாரத்துவமன்று? விகாரத்துவங் கடவுளிலக்கணமன்றே: ஆயினமையின் கடவுள் சிருட்டித்தாரென்பது நியாயவிருத்தம். மேலும் ஆன்மா சிருட்டிக்கப்பட்டதெனின், அது கடவுளுக்கு அன்னியமோ? அனன்னியமோ? அனன்னியமாயின் கடவுளும் ஆன்மாவும் ஒன்றே; கடவுளும் ஆன்மாவும் ஒன்றாயின், ஆன்மாவிற்கு உண்டெனச்சொல்லும் நினைப்பு மறைப்பாதி அபூரணத்தவம் கடவுளுக்கும் உண்டாயிருத்தல்வேண்டும். கடவுள் அபூரணரென்பது, ஆன்மசித்தாந்திகளாகிய வைதிகர் துணிபன்று. ஆயினமையின் ஆன்மா அனன்னியமன்று. அன்னியமெனின், சூனியோபாதானமாய்ச் சிருட்டிக்கப்பட்டதோ? நிர்ச்சூனியோபாதானமாய் சிருட்டிக்கப்பட்டதோ! சூனியோபாதானமாய் சிருட்டிக்கப்பட்டதெனின், இல்லது வாராது உள்ளதுபோகாது இல்பொருள் எக்காலத்தும் இல்பொருளேயாதலான், சூனியத்திலிருந்து ஓர்பொருளும் உண்டாகாது. நிர்ச்சூனியோபாதானமாய்ச் சிருட்டிக்கப்பட்டதெனில், ஆன்ம உற்பத்திக்குமுன் கடவுளோடு அனாதியாய் வேறொருபொருளிருந்திருத்தல்வேண்டும். இரண்டுபொருள் அனாதியாயிருக்க, கடவுளொருவரோ பூரணரென்பது பூர்வபக்ஷமாகும். எங்ஙனமெனின் எங்கும் ஒரே வஸ்துவாய் இருந்தால்மாத்திரம் அதற்குப்பூரணத்துவங் கற்பிக்கலாமேயல்லாது, இரண்டுள்ளபோது ஒன்றிற்குப் பூரணத்துவங்கற்பிப்பது தருக்கவிருத்தம். ஆன்மா நித்தியமெனினும் இதே ஆபாசத்தையடையும்.

மனிதன் தேகான்ம கலப்பாகவிருக்கின்றானென்பது என்னகருத்துகொண்டு? வைதிகர் சொல்கின்றது இவ்விரண்டும் வெவ்வேறென்றுதானே? நாமெல்லாம் தூலதேகிகளாகவிருக்கின்றமையால் ஒருவரையொருவர் அறிகின்றோம். இதுபோலவே சூக்குமம் இன்ன தன்மையினதென்றும், இவ்வியல்பினதென்றும், இவ்விவ்விலச்கணங்களோடு இன்னவாறு இருக்கின்றதென்றும் அறிகின்றோமில்லையே. ஏன் காண்கின்றதில்லை? ஜடம் இயக்கப்படுபொருளென்றும், சித்து இயக்கும் பொருளென்றும், ஜடம் அசேதனமென்றும், சித்துசேதனமென்றும் பகுத்துரையாநிற்கும் பகுத்துணர்வுடையோர் வகுத்துரையாடுவது ஆவசியகமே: பிரபஞ்சத்தையும் அதனது ஓர்பாகத்தில் நாம் இயங்குவதையுங் கண்டிருந்தும், பிரபஞ்ச இயக்கத்தைக்கண்டுணரும் விசாரதீரமின்மையால், தத்தம் அறியாமையைத் தெரியாமையாக்கக் கடவுளென்றும், ஆன்மாவென்றும் கற்பனாசிருட்டிசெய்து கரந்துரைவது யாதுபற்றியோ! ஜடம் இயக்கப்படுபொருளென்பது யாதுபற்றியோ! இப்பூமி பிரபஞ்சத்திலுள்ள உலகங்களி லொன்றென்றும், உலகங்க ளனேகமென்றும், அவை ஒன்றினாலொன்று இயங்குகின்றதென்றும் சொல்லும் சாத்திரக்கியானிகளும் ஜடம் இயங்காப்பொருளென்பது யாதுபற்றியோ! நாம்பார்க்கிற சகல வஸ்துக்களுக்கும் பூதாம்சங்களே காரணமாக விருப்ப, அவையல்லாது வேறொன்றிருக்கின்றதென்பதயாது கருதியோ: சேதனத்துவம் ஓர்வித தர்ம்மம் என்று சொல்லாமைக்கு யாதுகாரணம்? அதுபிரத்தியேகவஸ்துவென்று சொல்லுதற்கு என்ன ஆதாரமுண்டு? வேறே யாதேனும் உண்டா? அது சூக்குமமா? சூக்குமமாவதென்ன? அது அறிவாளிகளுக்குத் தோன்றத்தக்கதா? அறிவை அசட்டைசெய்து துறந்தவர்களுக்குத்தான் தோன்றும்போலும். உலகத்திலுள்ள சகல பொருள்களும் அறிவினால் அறியப்படுவதாக விருப்ப, ஆன்மாமாத்திரம் அறிவாதீதமென்னில், அதனை யறிய அவாவும் ஒவ்வொருவரும் அறிவை யிழந்துவிடல் வேண்டும்போலும்! அறிவற்றவர்களுக்குத்தான் ஆன்மாதோன்றுமோ? நாம் அறிவென்பது சத்த பரிச ரூபரச கந்தமென்னும் ஐந்தறிவைமாத்திரமல்ல; மனிதருக்குண்டென்று சொல்லும் சகல அறிவையுமே. அறிவினது அளவும் எல்லையும் வகுக்கும் திறத்தினேமல்லேம். சிலருக்கு அறிவறிவாகருஷண சக்தியென்று ஓர்சக்தியுண்டென்றும் அதனால் சகலத்தையுங்காணுமலே சொல்கின்றனரென்றும், அறிவு மயக்கமடைந்த பின்னர் சொல்வதை பராதீன கர்த்தத்துவத்தாலென்றும், நம்பி எல்லை இல்லா சுவாதந்திரத்திற்குப் பாரதந்திரத்தைக் கற்பிக்கின்றனர். காரணங் கணிக்கப்படாதனவற்றிற்கு எதைச்சொல்லினும் சொல்லலாம்போலும். இவ்வாறு செய்தல் விசாரசித்தத்தை வேர்கெல்லி விடுதல்போலாமன்றோ: அறிவாகருஷண சக்தியினை சந்தர்ப்பநேர்ந்தபோது இன்னொருகால் விவரிப்போம்.

(இன்னும் வரும்.)

## பிரார்த்தனை.

(90-வது பக்கத் தொடர்ச்சி.)

பிரார்த்தனை செய்பவர்களாகிய வைதிகிகள் தாம் செய்யும் பிரார்த்தனை சிருட்டி சிருட்டிகருக்குச்செய்யும் வந்தனை வழிபாடுகளை ஒத்தது என்று சொலலினுல்தான் கடவுளின்மேல் குறுகியசித்தமுடையானென்னும் தோஷாரோபணம் சம்பவிக்கும். குடும்பவளவில் பிதாபுத்திர சம்பந்தத்துவத்தை நோக்கி புத்திரர் தமக்குவேண்டற்பாலனவான பொருள்களையும் தாம் இச்சித்த பொருள்களையும் தத் தம் பிதா மாதாக்களை வெண்டிப்பெறுதல்போன்றது யாம்செய்யும் பிராத்தனை யெனின், சொல்வாம். இந்தத்திருட்டாந்தம் அபூரணசம்பந்த முடைத்தானதேனும் வியவகாரார்த்தம் பூரணசம்பந்தமுடையதாகவே கொண்டு விவகரிப்பாம். மிகுதியாகிய செல்வமும் வெகுவாகியசிறப்பும், உயர்வாகிய நாகரீகமும் உள்ள குடியிற் பிறந்தபிள்ளைகள், நாகரீகமும் சிறப்புமில்லா வறியவர்வீட்டுப்பிள்ளைபோல தத்தம் மாதா பிதாக்களை மிகுதியாகிய பொருள்கள் தங்களுக்குவேண்டுமென்று கேட்பார்களோ? பிள்ளைகளுக்குத்தேவை மிகுதியாயிருப்பதெல்லாம் பிதாமாதாக்கள் தத்தம் பிள்ளைகளுக்கு இன்னது இன்னது ஆவசியகம் என்று உணர்ந்து அளிக்காமையன்றோ? பிதாமாதாக்கள் தத்தம் பிள்ளைகளுக்கு இன்னது இன்னது ஆவசியகமென்று உணர்ந்து அளிக்காமைக்குக்காரணம்மிகுதிவிவேகமும்பெருந்தகையும்நாகரீகமும் நன்னிதியும் இல்லாமையன்றோ! இவை அனைத்தும் இருந்தும் அறியாமையையுடைய தம்பிள்ளைகள் தம்மைவருந்திக்கேட்டால் தான் கொடுப்பேம் என்று வைராக்கிய வசத்தராயிருக்குந் தாய்தந்தையர்களைப் புத்திரவஞ்சகரென்றும் பராபகாரிகளென்றும் வஞ்சநெஞ்சத்தவரென்றும் சொல்லுவது தவறுமோ? தாய்தந்தையர்கள் எவ்வளவுபுத்திமான்களாகவும் புத்திரவாஞ்ஞை யுடையவர்களாகவும் இருக்கின்றார்களோ அவ்வளவும் அப்புத்திரர்களுடைய வேண்டுகோள் முறைவெய்தியேயிருக்கும். சகல அனுபவமும் மிகுந்த அறிவும் உள்ளதகப்பன் இன்னதுசெய்தால் தன்பிள்ளைக்கு நன்மைவிளையும் என்று உணர்ந்தியற்றுதிருக்க, அனுபவக்குறைவும் அறிவின்சிறுமையுமுடைய பிள்ளை பிதாவுக்கு உணர் வூட்டி வலிந்துகேட்டுப்பெறுவது அப்பிதாவினுடைய அறிவின்மையையும் மௌட்டியத்தையும் நன்குவிளக்குகின்றதன்றோ? மனுஷத்துவமும் அபூரணக்கியானமுமுடைய ஓர்மனுஷனே இங்ஙனம்செய்யுங்கால் இத்தகைய தோஷாரோபணஞ் சம்பவிக்குமேல், தேவத்துவமும்பூரணக்கியானமுமுடைய கடவுள் மேற்சொல்லியவாறு செய்யின் எத்தகைய தோஷாரோபணஞ் சம்பவிக்குமோ அதனைவிவேகிகளே அனுமானித்துக்கொள்ளக்கடவர். மனிதர் கடவுளை இடைவிடாமல் சதாகாலமும் வழுத்திவாழ்த்திப்பிரார்த்தித்தல்வேண்டும் என்றுவைதிகிகளுள் சிலசார்பார்சொல்லுகின்றனர். நல்லுணர்வும் நாகரீகமும் உள்ள பிதாவை ஒருகால்கேட்டமாத்திரத்தில் கொடுப்பார் என்று நம்பிக்கையில்லாமல் பலகால் பன்னிப்பன்னிக்கேட்கும்புத்திரனை அப்பிதா அருவருப்புற்று கண்டிப்பதுதிண்ணம். அதுபோல் இடைவிடாது பிரார்த்தித்துக் கேட்பதனால் கடவுளுக்கு அருவருப்புண்டாகுமேயல்லாமல் பிரீதியுண்டாகாதே.

(இன்னும்வரும்.)

## இந்துசமயசாரவிளக்கம்.

### விநாயகபுராணம், திருமணம்.

(91-வது பக்கத்தொடர்ச்சி.)

ஆன்மகோடிகள் பலவுமோங்கி நிலைபெற்றபின்பு, ஒரு காரணமாக விநாயகர் சிவனுக்குப்புத்திரராக அவதரித்திருந்தார். அக்காலத்தில் நாரதன் கைலாய சபாமண்டபத்தின் முகப்பில் இருக்கின்ற விநாயகரிடத்திற் சென்று பலவகையாய்ப் பாடிப் புகழ்ந்து, ஓ சர்வபரிபூரணமூர்த்தியே, பிரமதேவர் முன்னர் தமது தியானச்சிந்தையினின்றும் உகித்த இரண்டு கன்னியரை தேவரீர்க்குத் திருக் கலியாணஞ் செய்ய எண்ணங்கொண்டிருக்கிறார்; சுவாமிகள் வனப்பினுக்கேற்ற அம்மாதர்களுடைய பேரழகை என்னென் றெடுத்துரைப்பேனென்று சொல்லி, பாதாதிகேசம்வரையில் வர்ணித்து, கடைசியில் அம்மங்கையருடைய அழகை ஒருதன்மையாகச் சொன்னேனேயன்றி யுள்ளபடி சொல்லத்தன்னாற் கூடாமையென்றனன் (12).

விளக்கம் (12) அதுபோலவே, அங்க அவலட்சணமான வர்ணனைமுழுதும் இங்கே எடுத்துரைக்க எம்மால் கூடாமை. விருப்பமுடையவர்கள் புராணத்தைப் பார்த்துக்கொள்ளவேண்டும்.—இப்படிப்பட்ட காரியங்களுக்கு துணைபுரிவதற்காகவே பிரமன் நாரதனை சிருட்டிசெய்துகொண்டான். விநாயகர் பிரசன்னமாவதும், விஸ்வரூபமெடுப்பதும், குழந்தையாவதும், புத்திரனாகப் பிறப்பதும், மறைந்திருப்பதுந்தான்வேலை. மறைந்திருக்கும்போது எங்கேயிருந்து என்ன செய்துகொண்டிருப்பரோ தெரியவில்லை. முற்றுமுணர்வினனாகிய கடவுளுக்கு அம்மங்கையரின் அழகு இப்படிப்பட்டதென்று தெரிந்திராதா? சிற்றின்ப விசசையில்லாத கடவுளுக்கு நாரதன் மாதர்களின் அழகை யெடுத்துரைத்துக் காமத்தைத் தூண்டிவிட்டான். ரோகை-மச்சம்-நரம்பு-வயிற்றுரோமம் முதலிய எந்த அவயவ இலக்கணத்தையும் நாரதன் விடவில்லை. காணுஸ்தலத்தை "மெல்லிய தொடையைச் சேர்ந்து துணையாக நெருங்கி, மதம் பொழிகின்ற யானையினது பிடரியையும் ஆண்மையையும் வென்று, இருபத்து நான்கு அங்குலவளவு வாய்ந்திருக்கின்ற"(இன்னது) எனப் பச்சையாகக்கூறினான்; அம்மாதர்களின் அவயவஇலக்கணங்களை விளங்கக் கூறவேண்டி, அவர்களை நிர்வாணிகளாக்கி யெங்கும் அளவிட்டுப்பார்த்தனனோ, அல்லது ஆதியில் மானிடர்களும் மிருகப் பிராயிகளாய் நிர்வாணமாயிருந்தார்களென்றபடி யிருந்ததனால் பரிஷ்காரமாய் தெரிந்துகொண்டனனோ, அல்லது புராணிகன் அங்கலட்சண சாஸ்திரம் தனக்குப் பூர்த்தியாய்த் தெரியுமென்று தனது சாமர்த்தியத்தைக் காட்டினனோ? பின்பு நாரதன் கணேசமூர்த்தியினுடைய சம்மதி பெற்றுக்கொண்டு அம்மாதர்களிடத்திற்கு வந்து கலியாணங்கூட்டிவைத்த சங்கதியைச் சொல்லி அப்பால் பிரமனிடத்திற் சென்று தான் நடத்திவந்த காரியங்களனைத்தையும் அறிவிக்க; அப்பிரமன் தாய்தந்தையருடைய சம்மதி பெறவேண்டி கைலாயத்திற்குச் சென்று, பார்வதி பரமசிவனைக்கண்டு காரியத்தை முடித்துக்கொண்டு, கணபதியினிடத்திற்கு வந்து வெகுவாய் தோத்திரஞ்செய்து, சகலத்திலும் "உள்ளும் புறம்பும் வியாபித்து அந்தரியாமியாகிய பரமாத்மாவாகியும், சர்வ சாட்சியாகியு மிருக்கின்ற சுவாமிகள் எவ்வாறு நடாத்திக் காட்டுகின்றதோ அவ்வாறன்றி, இப்பிரபஞ்சங்களில் வேறொன்று நடப்பதில்லாமையால், சுவாமிகள் அப்பெண்களைத் திருமணஞ்செய்து காட்டாதவரையில் இப்பிரபஞ்சங்களில் சுகங்காணமாட்டாது, அஃதன்றியும் ஆண்களோடு பெண்கள் மனங்கலந்து கூடினாலல்லது, சுவாமிகள் அடியேற்குக் கற்பித்தருளிய சிருட்டித்தொழில் பிரகாச முறாதாதலால், சுவாமிகள் தயவுசெய்து எழுந்தருளி, அடியேனை முற்றினும் ஆட்கொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தான்." அதற்கு விநாயகர் இசைந்தார்.—இதனாலே முதற்கடவுள் நடத்திக்காட்டாத எந்தக்காரியமும்பிரபஞ்சத்தில் நடக்கமாட்டாதென்று விளங்குகிறது; ஆகையால் கொலை-களவு காமாதி சகல காரியங்களும் முதற் கடவுளினிடத்திலிருந்துதான் பிரபஞ்சத்திற்கு வந்திருக்கவேண்டும். சுட்டிக்காட்டாத வித்தை சொட்டுப்போட்டாலும் வராதென்பதுபோல சகலமும் கடவுள்தான் சுட்டிக்காட்டி யிருக்கவேண்டும். மனிதர்கள்மாத்திரமேயல்லாமல் மற்ற ஜீவராசிகளும் சையோகத்தை கடவுளின் வழியாகத்தான் தெரிந்துகொண் டிருக்கவேண்டும்; அப்படியாயின், கடவுள் விவாகஞ் செய்துகொண்டதை யறிந்து மானிடர்கள் விவாகஞ்செய்துகொள்ளத் தொடங்கியதுபோல மற்ற ஜீவராசிகள் ஏன் செய்துகொள்ளுவதில்லையோ? (அரவகலல்குலார்பால் ஆசைநீத்தவர்க்கே வீடுதருவம்) ஸ்திரீகளிடத்து ஆசை நீங்கினவர்களுக்கே மோட்சம்தருவோமென்று கடவுள் கூறியிருப்பதற்கு மாறாக, கடவுளே ஸ்திரீகளின் பேரழகைக்கேட்டு மோகவலையிற் சிக்குண்டு வழிகாட்டிவிட்டு, மனிதர்களைமாத்திரம் தடுப்பது எவ்வளவு நியாயமோ யோசிக்கவேண்டும்.

பின்பு பிரமன் தனது சத்தியலோகத்திற்கு வந்து, விசுவகர்மாவை யழைப்பித்து, கலியாணத்திற்கு வருகின்ற விண்ணுட்டினர்-பூமண்டலவாசிகள்-பாதலத்தினர் முதலானவர்கள் இருப்பதற்குக் தகுந்த விடுதிகள் முதலியவைகளையும் கலியாணமண்டபத்தையும் தீவரமாய் முடிக்கும்படி ஆக்கியாபித்தான். உடனே விஸ்வகர்மா ஒரு நகரமுண்டாக்கி மாடமாளிகை கூடகோபுர முதலியவைகளையெல்லாம் நிர்மித்துவிட்டான். இதைப்பற்றிப் புராணத்தில் எழுதியிருப்பவைகளை யோசிப்போமாகில், செய்வதுகூடாமையாயினும் வாய்ச்சொல்லுக்கு பஞ்சம் இல்லையென்று தெரிந்துகொள்ளலாம். திருமணப்பத்திரிகையைக்கண்டஉடனே ஈரேழுதினுன்கு லோகத்தவர்களும் சந்திரர் சூரியர் முதலிய நவக்கிரகங்களும் சேடனுதிய நாகராஜாக்கள்முதலானவர்களும் தங்கள்தங்கள் மனைமககள் சுற்றத்தினர்முதலிய கூட்டங்களோடு ஏகமாகத்திரண்டு, திருக்கலியாணசம்பிரமத்தைத் தரிசித்து பேறுபெறும்படி அந்நகரமெங்கணும்வந்து நெருங்கினர்களாம்.—ஒரு சத்தியலோகத்திலே பதினன்குலோகத்தவர்களும் அடங்க இடம்போதாதிருக்குமாயின் அந்தலோகத்தையே பெரிதாக்கியிருக்கவேண்டும்—பூமியைத்தாங்கும் ஆதிசேஷன் முதலானவர்கள் கலியாணத்திற்கு வந்துவிட்டதினலே, பூமி நிலைத்திருக்க வேறே முட்டு வைத்துவிட்டு வந்தனராகும்.

காமதேனு—கற்பகத்தரு—சங்கநிதி—பதுமநிதிமுதலியவைகள் வேண்டியவற்றை யளித்ததுமல்லாமல், கலியாணமண்டபத்தில் பொன்னுற்செய்து நவரத்தினங்கள் பதித்திருக்கின்ற தூண்கள்தோறும் நாட்டியிருக்கும் மரகதவாழைகளும் கமுகமரங்களும் கன்னற்றண்டுகளும் கண்டவர்கள அதிசயிக்கும்படிச் சொர்ணுபரணங்கள் பட்டாடைகள் அமுதுகள் சிற்றுண்டிகள் முதலானவைகளை அளவில்லாமல் கொடுத்துவந்தனவாம். சுவரில் எழுதியிருக்கின்ற சித்திரங்களெல்லாம் சொர்க்க மத்தியபாதாலமுதல் சகலதீபாந்தரங்களிலுள்ள வேறுவேருனபொருள்களை வந்தவர்கட்கெல்லாம் வரையாதுகொடுத்து ஏவல் செய்துகொண்டிருந்தனவாம்.—அத்திருக் கலியாணத்திற்கு இப்பூமண்டலத்திலிருந்து போயிருந்த நம்முன்னேர்களுக்குக் கிடைத்தஆபரணங்களை பின்சந்ததியாருக்குக் காப்பாற்றி வைத்திருப்பார்களாகில், அவற்றைப் பார்க்க நமக்கு எவ்வளவுசந்தோஷமாயிருக்கும். ஒருவேளை அவற்றை கஞ்சிக்கில்லாமல் விற்று காய்ச்சிக்குடித்து விட்டார்களோ, அல்லது இதுகலியுகமாதலால் அவை நிற்காமல் மாயமாய் மறைந்து போயினவோ!—சந்திரர்சூரியர்முதலிய நவக்கிரகங்கள் கலியாணத்திற்கு வந்திருக்க, அந்நகரத்தின்கண் பன்னிரண்டுகோடி சூரியர்களும் சந்திரர்களும் நட்சத்திரக்கூட்டங்களும் ஒருமிக்கக்கூடியிருக்கின்றமையால், அங்கு இராப்பகலென்னும் காலவேற்றுமைகளில்லாது ஒரேதன்மையாயிருந்ததென்று புராணிகர் எழுதியிருக்கிறுர். இதைவானசாஸ்திரிகள் கேட்டால் என்னென்று சொல்லுவார்களோ! இது சாத்தியாசாத்தியமென்பதை சாமானியர்களும் அறிந்துகொள்வார்கள். நூறுகோடி ஆயிரங்கோடி அற்புதம் நீர்ப்புதமுதலிய கணக்குகளிருக்கின்றனவே; அந்த உயர்ந்ததொகைகளைக் கொள்ளாமல் உண்மையாகத் தோற்றும்படி செய்யவேண்டி புராணிகர் பன்னிரண்டுகோடி சூரியர்களோடு விட்டுவிட்டனராக்கும். புராணிகர் ஒளியைமாத்திரம் விரும்பினரேயல்லாமல் வெப்பமுதலியவற்றை யோசியாமற்போயினர்.

அந்நகரத்தில் நிறைந்திருந்த ஆடவர்களில் பற்பலர் யானை குதிரை ஆடு கோழி கவுதாரி காடைகளை சண்டைக்குவிட்டு ஜயம்கூறி சந்தோஷ மடைந்திருந்தார்களாம்.—இப்படிப்பட்ட உபத்திரவமான விளையாட்டுகள் தகாதவையென்று இக்காலத்து புத்திமான்கள்புத்திமதிகூறிக்கொண்டிருக்க, அக்காலத்தவர்கள், (அதுவும் சத்தியலோகத்திலே முதற்கடவுளின் விவாகமகோற்சவகாலத்திலே,) இப்படிப்பட்டவிளையாட்டுகள் புரிய எவ்வளவுபுத்திமான்களாயிருந்திருக்கவேண்டும்! வேதாகமமுதலியவைகளைத் துரிசறவாராய்ந் துணர்ந்து, இருவினைகளினின்று நீங்கியமகாதவத்தையுடைய வசிஷ்டர்முதலான ரிஷிபுங்கவர்களில் சிலர்தருமவாதமும், சிலர் அருத்தவாதமும்,சிலர்காமவாதமும், சிலர் மோட்சவாதமும் செய்துகொண் டிருந்தார்களாம்.—இவர்கள் இப்படிவாதஞ்செய்து கொண்டிருந்தால், துரிசறவாராய்ந்துணர்ந்த உண்மைதானென்னையோ? ஆயின், இக்காலத்து நாம் வாதஞ்செய்வதைப்பற்றிக் கேட்பானேன்!

(இன்னும்வரும்.)

---

## சூத்திரர் முன்னிருந்த நிலைமை.

கல்வி, அறிவு, ஒழுக்க முதலிய நற்குணங்களுடைய நண்பர்களே! யாம்கூறும் சில விஷயங்களுக்கு அபிமான மென்னும் பற்றைபகற்றி செவிசாய்ப்பீர்களென நம்புகின்றேம். மானுஷீகம், நடுவுநிலைமைமுதலிய நற்குணமில்லாச் சில பிராமணர் சூத்திரரை முற்காலத்தில் வைத்திருந்த ஸ்திதியை எண்ணுந்தோறும் எமக்கு மனம்கூசுகின்றதே. பிராமணருக்கு சூத்திரர் அடிமைத்தொழில் புரிதல்வேண்டுமென்று, மனுஸ்மிருதி, பராசரஸ்மிருதி முதலிய நூல்களில் எழுதிவைத்து, அவ்வாறே சூத்திரரையடிமைகளாக்கிவந்தனர். இதல்லாமலும், சூத்திரரை முழுமூடர்களாக்கிவைத்தும் வந்தார்கள். அவர்களது சொத்தில் மூன்றுபங்கைப் பொசித்தும் வந்தார்கள். இம்மட்டோ, மனுதர்மநூல், மனுதர்மநூல்யென்று அந்த பாரபக்ஷநூலை, இப்பிராமணர் எடுத்துக்காட்டி சூத்திரரை அநேக இராஜதண்டனைக்கு ஆட்படுத்தியும் வந்தனர். தருமநூல்களின்படியே, சூத்திரர் பிராமணர்களுக்கு அடிமைகளென்பதற்கு பிராமணர்கூறும் நியாயத்தால் நாம் மேலேகூறிய விஷயம் நன்குவிளங்கும். பிராமணர்கூறுவது: "'தெய்வாதீனஞ் ஜகத்சர்வம் மந்திராதீனந்து தைவதம், தன்மந்திரம் பிராமணதீனம், பிராமணேமமதேவதா' என்கிற வசன தாற்பரியம் யென்னவென்ருல் சகல சகத்துந் தெய்வத்தின் ஆதீனமாயிருக்கிறது, அந்தத்தெய்வம் மந்திராதீனமாயிருக்கிறது, அந்த மந்திரமோ பிராமணதீனமாயிருக்கிறது, ஆகையால் அப்படிப்பட்ட பிராமணர்தான் சூத்திரருக்குத் தெய்வம், பிராமணரைத்தவிரச் சூத்திரர் வேறே தெய்வத்தை ஆராதிக்கவும் ஒண்ணுது, ஜபதப அனுஸ்டானங்கள் நியமநிஷ்டைகள், செய்யவுங் கூடாது, சூத்திரருக்குக் கோத்திரமில்லை, கர்மத்துக்குப் பாத்திருமலலர், அவர்களுக்கு மந்திரஞ் சொல்விக்கவொண்ணுது, சொன்னுல் பிராமணனுக்குப் பிராயச்சித்தமுண்டு. பூர்வகால இந்து ராஜாங்கமாயிருந்தால் அப்படிப்பட்ட நியமநிஷ்டையுள்ள சூத்திரனை வண்டியில்போட்டுப் பிணைத்துக்கட்டித் தெருவிலிழுத்துப்போய் வாச்சியால் செதுக்கும்படி உத்தரவாய்விடும். இராஜாக்களால் நிறைவேற்றவேண்டிய தருமசாஸ்திரவிதிகளை யெடுத்துக்காட்டுகிறேம், அதாவது—சற்கதி யடையவேண்டுமானுல் சூத்திரன் பிராமணருக்கு அடிமைத்தொழில் செய்யவேண்டும், பிராமணன் இலையில் விட்ட சேஷத்தை அவன் புசிக்கவேண்டும். அதைவிட்டு ஒரு சூத்திரன் பிராமணனுக்கு அடிக்கடி இடைஞ்சல் செய்வானுகில் அச்சூத்திரனுக்குப் பிராணதண்டனை விதிக்கவேண்டும், ஒரு சூத்திரன் பிராமணனுடைய மனைவியரோடு சோரக்குற்றஞ் செய்வானுகில் அச்சூத்திரனுடைய மாணியை யறுத்து மழுவாய்க்காய்ந்த ஒரு இருப்புத்தகட்டின்மீது அவன் இறந்து பஸ்மமாகிறவரையில் பிணைத்துவைத்திருக்கவேண்டியது. ஒரு சூத்திரன் பிராமணனுடைய சொத்தைத்திருடுவானுகில் அச்சூத்திரனை நெருப்பில்போட்டு வதைத்துக் கொல்லவேண்டியது.சூத்திரன்பிராமணனுடைய சமுகாளம்முதலியவற்றின் மீது உட்காருவானுகில் அப்படிப்பட்ட சூத்திரனுடைய குதத்தில் காய்ந்த இரும்பின் வாசியையேற்றிச் சூட்டுக்கோலால் சூடி இராச்சியத்தை விட்டுத்துரத்திவிடவேண்டியது, அல்லது பிட்டத்தையறுத்துவிடவேண்டியது. சூத்திரன் பிராமணனை அடித்தால் அவன்கைகளை வெட்டிப்போடவேண்டியது. அவமதிப்பாய்ப்பேசினுல், ஒரு இருப்புவாசியை வாயிலேற்றி அவனை நெருப்பில் பொசுக்கவேண்டியது, சூத்திரனை நியாயவிசாரணையதிகாரத்தில் வைத்தால் அந்த ராசாங்கம் அழிந்துபோகும், சூத்திரனைப் பிரம்மா சிருட்டித்தது, பிராமணருக்கு அடிமைத்தொழில் செய்கிறதற்காகவே. சூத்திரன் சம்பாதிக்கிற சொத்தில் இழிவான அன்னவஸ்திரத்துக்கு அவசியம் வேண்டியதைமாத்திரம் வைத்துக்கொண்டு, மற்றதைப் பிராமணருக்குச் சேர்த்துவிடவேண்டியது." இதுதான் பிராமணர் எழுதிய தருமநூல். இப்பிராமணர்களால் முற்காலத்தில்

சூத்திரருக்கு விளைந்த கொடுமையையும் இக்காலத்து இங்கிலீஷ் ராசாங்கத்தின் நீதியையும்பற்றி காசிவிஸ்வநாதமுதலியார் பின்வருமாறு கூறுகின்றனர்:—"நம்மை யாண்டுவருகிற இங்கிலீசு துரைத்தனம் இதுவரையில் வந்திராமல் இந்துராஜாங்கத்துரைத்தனமே யிருக்குமாகில் மனுநூலிற்சொல்லியிருக்கிறபடி சூத்திரர் பிராமணருக்கு அடிமைகளாக இருக்கவேண்டியதுமல்லாமல் இந்நேரம் முக்காற்பங்கு பஸ்பமாய்ப் பொசுக்கப்பட்டுப் போய்த்தானிருப்பார்கள். கணவனை இழந்த கைம்பெண்கள் கோடிக்கணக்கில் உயிரோடு பதைக்கத் துடிக்கப் பொசுக்கப்பட்டும் வருவார்கள். சூத்திரருக்கு இத்தனை படிப்பேது? செல்வமேது? மேன்மையான அந்தஸ்து உத்தியோகம் ஏது? கதியேது? சூத்திரர் பிராமணர் மூனபாகப் பேசுகிறதேது? இன்னும் படியாத மூடச்சனங்கள் பிராமணருக்கு அடிமையாகத்தானிருக்கிறார்கள். அவர்களுடைய சொத்தில் மூன்றுபங்கு புசித்துக்கொண்டுதான் வருகிறார்கள். நம்முடைய மனுநீதிக்கும் இப்போது நம்மையாளுகிற இங்கிலீசு நீதிக்கும் எவ்வளவு வித்தியாசமெனின், நரகத்துக்கும், சுவர்க்கத்துக்கும் எவ்வளவு வித்தியாசமோ, அவ்வளவு வித்தியாசமென்று பட்சபாதமில்லாத உம்முடைய மனதுக்கேதெரியும். தருமநூல்களை வாசியாமலே அவைகளுக்குப் பெருமைபாராட்டும் நண்பர்களே! தருமநூல்களின் கருத்தை யறியுங்கள், அதனது சத்தியா சத்தியத்தைப்பற்றி யோசியுங்கள்! யோசியுங்கள்,"

இ-மு.

## வர்த்தமானசங்கிரகம்.

**தியாசோபிகல்சோசைட்டி** கர்னல் ஆல்காட் அவர்கள் இப்போது லாகோர்-காசி முதலான விடங்களுக்குச் சென்று உபன்னியாசம் செய்துவருகிறார். தமது உபன்னியாசத்திற்கு ஜனங்கள் வந்துசேரும்படி, "மகாத்ம தரிசனம் விர்த்தி ஆகஆக, பரிகாசக்காரர்கள் பின்னும்பின்னும் அடங்கிவருகிறார்கள்" என்பதாகக் கண்டு விடுதி பத்திரிகைகளை வெளியிட்டுவருகின்றனராம். இந்தபிராந்தியங்களில் மகாத்துமாக்களைத் தரிசித்தும் பிறருக்குக் காட்டியும், தாம் கொண்ட கருத்து முடிந்துவிட்டதுபோலும்.

**வைசிராய்** அவர்கள் சிலமாசங்களுக்குமுன்னமே வெள்ளி ஹவுதா முதலான அலங்காரத்துடனே ஒரு யானையை ஷா அவர்களுக்கு வெகுமதியாக பெர்ஷியாவிற்கு அனுப்பினார்கள். அந்த யானை ஏப்பிரல் மாசம் பதினான்தேதி புஷயரில் இறக்கப்பட்டது. நிகழு மாசம் மத்தியில் தெஹிரானுக்குப் போய்ச் சேரும். வழியிலே இந்துதேசத்து யானைகளின் விலையைப்பற்றி பற்பலர் பற்பல விநோதயான அபிப்பிராயங்கொள்ளுவார்கள்; ஏனெனில், இந்த யானையானது ரூ 60,000 பெறுமானதென்று ஒரு பத்திரிகை கூறுகின்றது.

**பேர்ஷியாவிலிருந்து** வருஷவாரியில் ஏற்றுமதிசெய்யப்பட்ட அபினி சுமார் 2500 பெட்டிக்கு விலை ரூ 17,00,000 ஆகிறது. ஸ்பேஹானைச்சுற்றிலும் கசகசாச்செடி பயிர்தான்; சாகுபடிக்காரர்களுக்கு அதிக லாபங் கிடைக்கிறதாயிருப்பதினால் அந்தப்பயிர் நிலையாய் விர்த்தியாய்க்கொண்டு, மற்ற பயிர்களுக்குரிய நிலங்களிலும் சாகுபடி செய்யப்படுகிறதாம். பெர்ஷியா அபினியானது லண்டன்பட்டணத்திலும் ஹாங்காங்கிலும் நல்ல விலைபோகிறது. புகையிலையும் நல்லவிலையாகிறது, அது இஸ்பஹானிலும் அதைச்சுற்றிலும் முக்கியமாய்ப் பயிர் செய்யப்படுகிறது; சுருட்டுப்பிடிப்பது ஒரு மோஸ்தராக ஏற்பட்டிருப்பதனால், புகையிலை வரவர அதிகசெலவாகிறது. புகையிலையானது மிகுதியாய் பாக்தாதுக்கும் பெய்ரூட்டுக்கும் அலெப்போவுக்கும் போகிறது.

**பர்மாவுக்காக** அதிகமாய் மூன்று மிலிட்டேரி போலீஸ் பட்டாளங்களை வடமேற்கு மாகாணங்களிலும் அயோத்தியிலும் சேர்ப்பதற்கு அவசியமான ஏற்பாடுகள் செய்யும்படி சர்க்கார் உத்தரவு பிறந்திருக்கிறது. ஆக்ரு-பாரிலி-லக்னோ இம்மூன்று பிரதேசங்களும் அப்படிச் சேர்ப்பதற்கு மத்தியஸ்தானமாகும். எல்லா நேட்டிவ் ஆபீசர்களும்நன்கமீஷனெட் ஆபீசர்களில் பாதிபேரும் பங்காளத்து சேனையிலிருந்து எடுத்துக்கொள்ளப்படுமாம்; பஞ்சாப் தேசஸ்தர்கள் ஏற்றுக்கொள்ளப்படார்கள். இந்தப்புது போலீசுசிப்பந்தியை அக்டோபர்மீ வரையில் கவாத்துபழக்கி உருவாக்கி, பின்பு பர்மா சம்பளத்திலே பர்மாவுக்கு அனுப்புவார்களாம்.

**ஊட்டியில்** காபி அரிதாய்விடுகிறது. மணங்கு ஒன்றுக்கு ரூ பதினாறுக்குக் குறைவுபடவில்லை. இரண்டு மாசத்திற்கு முன்னமே ஒருவீசை 15 அணுவுக்கு விற்றது; இருந்தாப்போலிருந்து விலையுயர்ந்து, வாரத்துக்குவாரம் அதிகப்பட்டு வருகிறதென்று ஒரு கடிதநேயர் எழுதினார்.

**சென்னை** கஞ்சிதொட்டி ஆசுபத்திரியிலிருந்து ஒரு நோயாளி மகமதியன் தப்பித்துக்கொண்டோடி ரங்கோனுக்குப் போய்விட்டான்; அவனை நிகழு மாசமமூன்ருந்தேதி அவ்விடத்திலிருந்துகொண்டுவந்தார்கள். ஒருஜதை பொன்காப்புதிருடினதாக அவன்பேரில் வேறொரு குற்றமும் பாரிக்கப்பட்டது. மாஜிஸ்திரேட் கோர்ட்டிலே அவ்விரண்டு குற்றத்திற்கும் வெவ்வேறு தண்டனை விதிக்கப்பட்டது.

**தூக்கு.**—நிர்பாக்கியனான தங்கவேலு முதலி யென்பவன் இரத்தினவேலு என்னும் சிறுவனை கொலைசெய்ததாகக் குற்றவாளியாக்கப்பட்டான். சுமார் எட்டுவயசுள்ள அச்சிறுவனை கைதியினுடைய மைத்துனன் ஸ்வீகாரம் செய்துகொண்டபடியால், மைத்துனனுடைய ஆஸ்தி தனக்குக் கிடைக்குமென்கிற ஆசைக்கு பங்கம்வந்ததுபற்றி, அச்சிறுவனை எப்படியாவது தொலைத்துவிடவேண்டுமென்று கைதி தீர்மானஞ் செய்துகொண்டான். அச்சிறுவன் படித்துக்கொண்டிருந்த பள்ளிக்கூடத்திற்கு சென்ற பிபர்வரிமீ 12உ காலமே கைதிபோய் அச்சிறுவனை அழைத்துக்கொண்டு சென்னைக்கு வடக்கிலிருக்கிற திருவொற்றியூரில் ஓர் சத்திரம்சேர்ந்து இருட்டுகிறவரையில் அங்கேயிருந்து, ஒருவருமில்லாத சமயம்பார்த்து கைதியானவன் அச்சிறுவன்பேரிலிருந்த நகைகளை கழற்றிக்கொண்டு, சத்திரத்துக் கருகாமையிலிருந்த ஒருகிணற்றிலே அச்சிறுவனை தூக்கிப்போட்டுவிட்டான். இவ்விதமாய்த் தன் எண்ணத்தை முடித்துவிட்டு, வீட்டிற்கு திரும்பிவந்து, தான் கூடிவாழ்ந்துகொண்டிருந்த ஸ்திரீயினிடத்திலே இந்த நகைகளைக் கொடுத்து இரகசியமாய் புதைத்துவைக்கச்சொன்னான். தத்துத் தாய் தந்தையர்கள் அன்றையதினமே அச்சிறுவனைக்காணுமல் தேடிக்கொண்டிருந்தார்கள். கைதி தான் ஒன்றும் அறியாதவனைப்போல அத்தாய்தந்தைகளோடுகூட போலீசுக்குப்போய் பிள்ளையைக்காணோமென்று அறிக்கைசெய்ததுமல்லாமல், பிள்ளையைத் தேடிக்கொண்டு போலீசாரோடுகூட பலவிடங்களுக்குப் போனான். கடைசியில் இவன்பேரில் அனுமானமுண்டாகி, இவனைப் பிடித்துக்கொண்டு விசாரித்ததில் இவன் குற்றத்தை ஒப்புக்கொண்டு, அச்சிறுவனிருந்த இடத்தையுங்காட்டி, நகைகளையுங் கொடுத்துவிட்டான். கரோனர் விசாரணையிலே இந்தக் கைதியினுடைய பந்துக்கள் இரண்டுபேர்ஜூரிகளிலிருந்தபடியினாலே, எவனோ கொலைசெய்துவிட்டான் இன்னானெனத் தெரியவில்லையென்று ஜூரித் தீர்ப்பு கொடுக்கப்பட்டது. அந்தத் தீர்ப்பின்பேரில் கரோனர் அந்தக் கைதியை ஸெஷனுக்குக் கமிட்டு பண்ணக்கூடவில்லை. ஆகையால் போலீசார் அந்தக் கைதியின்பேரில் செங்கல்பட்டு மாஜிஸ்திரேட்டினிடத்திலே பிராதுகொண்டுவந்தார்கள். குற்றவாளி ஸெஷனுக்குகமிட்டுசெய்யப்பட்டு, தூக்குக்குஉத்தரவுகொடுக்கப்பட்டது. அந்தத்தீர்ப்பின்பேரில்ஹைகோர்ட்டுக்குகயிதிசெய்துகொண்டஅப்பீல் வியர்த்தமாயது. கருணைபுரியும்படி கவரன்மெண்டுக்குமனுசெய்துகொண்டான்; கவரன்மெண்டார்தாங்கள் பிரவேசிப்பதற்கு நியாயமில்லையென்றும் சட்டப்படி நடந்தேறவேண்டியதுதானென்றும் உத்தரவுகொடுத்து விட்டார்கள். இந்த உத்தரவைசென்ற ஆதிவாரம் கைதிக்கு அறிவித்து, செவ்வாய்க்கிழமைகாலமே அவன்தூக்கில்விழவேண்டியதென்று தெரிவித்தார்கள். ஐயோபரிதாபம்! அவன் என்னசெய்வான்! அவன் தன்னுடைய புத்தியீனத்திற்காக விசனப்படவேண்டியது தவிர வேறொன்றுமில்லை. அவ்வாறே சென்ற செவ்வாய்க்கிழமை காலமே கூவம் ஆற்றங்கரையிலிருக்கிற பினிடென்ஷியேரி மதிலுக்கு வெளியிலிருக்கிற தூக்குமரததிலே பார்த்தவர்கள் யாவரும் விசனப்படும்படியாக தூக்கிற்போடப்பட்டு, அந்தப் பிரேதம் அவ்விடத்திலேதானே புதைத்துவிடப்பட்டது. சென்னையில் இதற்கு முந்திதூக்குப்போட்டு இப்போது மூன்று வருஷமாகிறது.

## கையொப்பநேயருக்கு.

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறாதவர்கள் உடனேதெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

பத்திரிகைக்கு எழுதும்கடிதமுதலியவிஷயங்களை

மாத்திரம்

சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி

307 - வது நம்பர் வீட்டில்

பு. முனிசுவாமிநாயகருக்கு

அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Davaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

VOL. VI.—NO. 27.] MADRAS:—SUNDAY JULY, 3, 287. A. S. [MONTHLY, 4 ANNAS.


சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.



## அறிக்கை

சந்தாக்களையும், பத்திரிகைவேண்டி
எழுதிக்கொள்ளுங்கடிதங்களையும்
வேப்பேரி சில்வர்ஸ் ரோட்டில்
மதிறாஸ் செகுலர்சொசைட்டி ஆனரரிசெக்ரிட்டேரி
மெஸ்டர். அப்ஷன்துரைக்குநேராய்
அனுப்பவேண்டும்; அனுப்பாவிட்டால், பத்திரிகை
கிடைக்கமாட்டாது.

## விளம்பரம்



ஒரு பிரசங்கியார் எவ்வெவ்விடத்தில் எவ்வெவ்வித பிரசங்கஞ் செய்தபோதிலும், ஆங்காங்கு, நாஸ்திகம் விர்த்தியாகிவருகிறதென்றும், உலகம் கேடடைவதற்கு இது அறிகுறியாயிருக்கிறதென்றும் முறையிட்டுக்கொண்டுவருகிறார். இதுவரையில் ஆஸ்திகத்தாலடைந்த கேட்டைப்பார்க்கினும் நாஸ்திகத்தாலடைந்ததென்னையோ? நாஸ்திகத்தாலல்லவா கொஞ்சங் கொஞ்சமாய்ச் சீர்ப்பட்டு வருகிறது. சிலநாளுக்கு முன்னே ஒரு பத்திரிகையில், சிந்தாத்திரிப் பேட்டையிலே ஒரு நாஸ்திகனுக்கும் மந்திரவாதியாகிய ஒரு ஆஸ்திகனுக்கும் வாதமுண்டாகி, அந்த மந்திரவாதி ஒரு கடிதாசியில் பென்சிலினாலே தேளுருவமெழுதி, அவன்சொன்னபடி அந்தத்தேளின் கொடுக்கினிடத்து நாஸ்திகன் கைவைக்கவே, விஷமேறி அவஸ்தைப்பட்டு நாஸ்திகன் ஆஸ்திகனானானென்று எழுதியிருந்தது. அதை வாசித்த யாம், "இது பழங்கதை," ஆஸ்திகரானவருடைய பெயரையும் இருப்பிடத்தையும் விளங்கச் சொன்னால் அவரைக்கண்டு வார்த்தையாடி தெளிவுற்று யாமும் ஆஸ்திகராவோமென்று எழுதினேம்; இதற்கு மறுமொழி யொன்றுங் கிடைக்கப் பெற்றிலேம். ஆஸ்திகர் நாஸ்திகராவதற்கு இவ்வித அத்தாட்சி வேண்டுவதில்லை. மேற்படி புராணிகராகிய ஆஸ்திகரோ ஒப்புக்கொள்ளுவதுமன்றி, ஆஸ்திகரென்போரில் அனேகர் மனதில் நாஸ்திகராகவே யிருப்பதும் பலருக்குத்தெரியும். அன்றியும், இதற்கு ருசுவாக, எல்லாம் சங்கிரமஜாதியாகி நாஸ்திகம் மேலிடுமென்று ஆஸ்திகருடைய பாரதபாகவதங்களில் சொல்லியிருப்பது உண்மையென நம்புகிறவர்கள் தங்கள் மனதைத் தேற்றிக்கொள்ளவேண்டியதே யன்றி, அதைத்தடுக்க முயலுவார்களாகில் வீண் பிரயத்தனமாய் முடியுமல்லவா? இவ்வுண்மையை யறிந்த மேற்படி புராணிகர் முதலாயினோர் தங்கள் பெரியோர்கள் வாக்குக்கு மாறாக நடக்க முயலாமல் நாஸ்திகராவதே முறைமை. பூமி சூரியனைச் சுற்றிவருகிறதென்கிற பிரமாணத்தை ஸ்தாபித்த கலிலியோ என்னும் விருத்தரை குருக்கள்மார்கள் அதிக உபத்திரவப்படுத்தி, அவர் சொன்னது பொய், பூமி சுற்றிவருகிற தில்லையென்று சொல்லும்படி செய்தபின்பு, அவர் எழுந்துபோகையில், வழியிலே நின்றிருந்தவர்களோடு, நான் இல்லையென்று சொன்னபோதிலும், சுற்றுகிறது சுற்றிக்கொண்டுதானிருக்குமென்று சொல்லிப்போயினர். அதுபோல, ஆஸ்திகர்கள் எவ்வளவு தலைகிழாகப்பட்டபோதிலும், ஐரோப்பா சாஸ்திரங்களை வாசிக்கவாசிக்க, நாஸ்திகம் விர்த்தியாவது ஆய்க்கொண்டுதான் வரும்.

—o—

## பூதவிசாரணை.

பிரபஞ்சத்தின் இலட்சணத்தையும் அதனதுபிரகிருதிகியாயப்பிரமாணங்களையும் உணராமல் பதிசாத்திரங்களை ஆராயத்தொடங்குதல் பயனில்லாதசெய்கை என்பதற்குச்சிறிதேனும் ஐயமில்லை. இப்பிரபஞ்சவுண்மைகளை இலக்கணயுக்தமாயறிவதற்கு பிரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்களை வகுத்துப்பேசவேண்டியிருக்கின்றதென்பது சகலருக்குந் தெரிந்தவிஷயமே. பிரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்கள்யாவும் பூதங்களும் பூதகலப்புகளுமா யிருக்கின்றனவென்பதை அடிக்கடி கேட்டிருக்கின்றோமாகையால், பூதங்களின்சுபாவம் இன்னதென்றும், அவைகளின் இலக்கணமின்னதென்றும் அறிதல் மானிடர்க்கு இன்றியமையாக்கடமையாயிருக்கின்றது.

பூதமென்னுஞ்சொல்லுக்குப் பற்பல பொருள்களுண்டு. இச்சொல் பலபொருள்குறித்த ஒருசொல்லாயினும் நாம்பிரயோகிக்கும் சந்தர்ப்பத்தில்பூதமென்னுஞ்சொல்லுக்கு எதிர்மொழி பௌதிகம். பௌதிகமென்றால் பூதங்களாலுண்டானது. பூதமென்னுஞ்சொல்லுக்குரிய பொருளை நாம் மூலபாஷையினின்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட வோர்நூலிற்கண்டவாறே யுரைப்போம்.—"பூதமானது வெவ்வேறுவிதமான பற்பல சுபாவகுணங்களைக் கொண்டிருக்கிறதுமாய் அதினுடைய அம்ஸங்களைக் கெடுக்கத்தக்கதாக எத்தனை பிரயாசைப்பட்டாலும் முன்னிருந்த அந்தகுணங்களை எப்போதும்போலவே சுவகரித்துக்கொண்டிருக்கிற பொருளுமாய் இருப்பதுதான் பூதமென்றுசொல்லப்படும். அதெப்படியென்றால், தண்ணீரென்று சொல்லப்படுகிற பூதமானது நெருப்பினுடைய உஷ்ணத்தினாலே யெத்தனைபிரிந்துபோனாலும், அதினுடைய அம்சங்களெல்லாம் மறுபடியும்கூடி யெப்போதும்போலே தண்ணீராய்ப்போம்." இப்பூத இலக்கணத்தைப்பற்றி பின்னர் சந்தர்ப்பம் நேரிட்டவிடத்து வியவகரிப்பாம்.

சாதாரணமாய் பூதங்களைந்தெனப்படுகின்றன: அவை பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். பிரிதிவு என்பது பூமி, அல்லது மண். அப்பு என்பது ஜலம், அல்லது தண்ணீர். தேயு என்பது நெருப்பு, அல்லது காங்கை. வாயு என்பது காற்று. ஆகாசம் என்பது வெளி. சிலர் பூதங்களை நான்காகக்கொள்கின்றனர். அவை, பிரிதிவு, அப்பு, தேயு, வாயு. இனி நாம பொதுவாய் பூதங்களின் குணலட்சணங்களைக் காட்டுவோம். அவ்வாறு காட்டியபிறகு நம்மாலங்கிகரிக்கப்பட்ட பூதங்களித்தனையென்றும், அவைகளின்னவையென்றும் இலட்சணயுத்தமாய் கூறுவோம். பூதங்களின்குணங்களைக் கூறவேண்டியிருத்தலின் ஒவ்வொரு பூதத்துக்குரிய குணங்களின் தொகையை இங்குவிளக்குவாம். ஸமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்த்திருக்கும் ஓர் நூலில் பூதத்திற்குரிய குணங்களின் தொகையைச் சொல்லியிருக்கின்றவாறே இங்கு உரைப்போம். அதுயாதெனின், "ஆகாயத்திற்குக்குணம் ஒன்று; வாயுவிற்குக்குணம் இரண்டு; தேயுவிற்குக்குணம் மூன்று; அப்புவிற்குக்குணம் நான்கு; பிரிதிவுக்குக்குணம் ஐந்து" என்பதே.

ஒவ்வொரு பூதத்திற்கும் குணங்களிருக்கின்றபடியாலும், குணங்களையுடையது பதார்த்தங்களாதலாலும், இத்தேசத்துசாத்திரிகளால் கூறப்பட்ட பஞ்சபூதங்களும் குணங்களையுடைய பதார்த்தங்களென்றாகிறது. இனி பூதங்களுக்குரிய குணங்கள் இன்னதெனவிசாரிப்பாம். அக்குணங்களைப்பற்றி பின்வருமாறு ஸமஸ்கிருதநூல்களில் மொழிந்திருக்கின்றன. "பிரதித்தொனியொன்றும ஆகாயத்தின்குணம்; சீறுசீறென்றடிக்கிற சத்தமும், சீதோஷ்ணமாகவருகிற பரிசமும், வாயுவின்குணம்; பகபகவென்று சொலிக்குஞ்சத்தமும், சுடுகிற பரிசமும், பிரவையென்கிறரூபமும், அக்கினியின்குணம்; கள

களவென்கிற சத்தமும், குளிர்ந்தபரிசமும், சுக்கிலரூபமும், மதுராசமும்,அப்புவின்குணம்; கடகடவென்கிறசத்தமும்,கடினபரிசமும், பஞ்சவன்னரூபமும், அறுசுவைரசமும், நற்கந்தம், துற்கந்தமும், பிரிதிவின்குணம்." இக்குணங்களை நன்குவிளங்கக்கூறுவது ஆவசியகம். ஆகாயத்திற்கு சப்தமாகியகுணம் ஒன்றே; வாயுவிற்கு ஸப்தம், ஸ்பரிசம் ஆகிய குணங்களிரண்டு; தேயுவிற்கு ஸப்தம், ஸ்பரிசம், ரூபம் ஆகிய குணங்கள் மூன்று; அப்புவிற்கு ஸப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம் ஆகிய குணங்கள்நான்கு; பிரிதிவிற்கு ஸப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம, கந்தம் ஆகிய குணங்களைந்து. இனி பதார்த்தங்களின்னவையென்றும் அவைகளை நாமறியும்வித மின்னதென்றும் விளக்குவாம்·

பதார்த்தங்களை நாம் பஞ்சேந்திரியங்களால் உணருகிறோம். பஞ்சேந்திரியங்களாவன மெய், வாய், கண் மூக்கு, செவி என்பவைகளே. பஞ்சேந்திரியங்களெனினும், ஐம்புலன்களெனினும், ஐம்பொறிகளெனினும் ஒக்கும். பஞ்சேந்திரியசேட்டை அல்லது தொழில் அறிவெனப்படுகின்றது. இந்த அறிவு ஐந்துவகைப்படும், அவை, பார்த்தல், கேட்டல், மூகர்தல், உருசித்தல், பரிசித்தல். அறிவானது பதார்த்தங்களிவையென்றும் அவற்றின் குணங்களிவையென்றும் மனமானது அறிந்து நிச்சயிக்கத்தக்கமூலமும் துணைக்கருவியுமாயிருக்கிற புலன்களின் தருமமே. இந்திரியங்கள்வழியாய் பிரபஞ்சத்திலுள்ள பதார்தங்களை சீவசெந்துக்களறியவேண்டி யிருக்கின்றபடியால், இந்திரியச்சேட்டை யெதற்கில்லையோ அதற்கு பிரபஞ்சவுணர்ச்சியில்லை;

இ-மு.

## பிரார்த்தனை·

(98-வது பக்கத் தொடர்ச்சி.)

பிரபஞ்சத்தில் நடந்தேறிவரும் ஒவ்வொரு சம்பவமும் அதற்கு முன் நடந்த சம்பவங்களை ஒட்டித் தொடர்ந்தே வருமென்றும், அச்சம்பவங்களைப் பின்னோக்கிப் பார்க்குங்கால், ஒன்றற்கொன்று காரணகாரிய சம்பந்தத்தில் இணைபிரியாமல் படிப்படி நமது கியானத்திற்கு அப்பாற்படுமென்றும் சாத்திரங்கள் போதிக்கின்றன. முன்னடந்த காரண சம்பவங்களை யொட்டியே பின்னடக்கும் காரிய சம்பவம் விளைவது பிரபஞ்ச ஒழுங்காம்: இப்பிரபஞ்ச ஒழுக்கத்தை ஒட்டியே காலக்கிரமப்படி குளிர்வாடை வீசும் பருவத்தில் குளிர் வாடை வீசுவதும், பனிமழை பெய்யும் பருவத்திற் பனிமழை பெய்வதும், வெயில்காயும் பருவத்தில் வெயில் காய்வதுமாதலால், இடைநடுவில் பிரார்த்தித்தலால் பிரபஞ்ச ஒழுங்கிற்கும் காலக்கிரமத்திற்கும், காரண ஒழுங்கிற்கும் விரோதமாய் மழைக்காலத்தில் வெயிலையும், வெயிற்காலத்தில் மழையையும், சொற்பமழை பெய்கிறதென்று விசேஷ மழையையும் விசேஷமழை பெய்கிறதென்று சொற்பமழையையும் விரும்பினால் பெய்யுமோ? இன்றைய சீதோஷ்ணாதிகளை விலக்கவேண்டுமானால் இவற்றின் காரணங்களா யொட்டியுள்ள இதற்குப் பின்னனவாகிய எண்ணிறந்த நாட்களின் தன்மைகளை மாற்றுதல் வேண்டுமே: அவை மாறினாலன்றி இவை மாறாவே: நடந்துவிட்ட காரியத்தை நடக்காதிருக்கப் பிரார்த்திக்கும் மௌட்டியர் ஒருவரையும் நாம் காண்கிறோமில்லை.—அதாவது இறந்து தகனம் செய்துவிடப்பெற்ற ஒருவனை இறக்காமற் செய்யும்படி கடவுளைப் பிரார்த்திப்பார் ஒருவருமில்லை. ஆயினும் அவ்விறந்தகால சம்பவத்தினையே காரணமாகப்பற்றி நடந்தேறிவரும் நிகழ்கால எதிர்கால சம்பவங்களாகிய சீதோஷ்ணாதிகளை விரும்பி வருணஜெபம், அருணஜெபம் முதலியனவற்றைப் பலரும் புரிந்துவருகின்றனர். இதற்குக் காரணம் யாதெனின், அன்னோர்க்குச் சாத்திரக் கியானம் பரமாணுப் பிரமாணமேனும் இல்லாமையே. இன்னோர்க்குச் சாத்திரக்கியான மிருப்பின், இன்னின்னகாரண சம்பவங்களால் இன்னின்னபோது மழை பெய்யும், இன்னின்ன காரணத்தால் இன்னபோது மழை பெய்யாது, இன்னின்னகாரணத்தால் இன்னின்னபோது பெரு மழை பெய்யும் என்று உணர்வர். உணரவே இன்னின்னகாலம மழைபெய்யாத காலமாதலால் அவ்வக்காலத்தில மழை பெய்விக்க வேண்டுவோமேல் அதற்குமுன் இன்னின்னபோது இப்படி இப்படி நடந்த சம்பவங்களை இன்னின்னபடி மாற்றியிருத்தல் வேண்டுமென அநுமானிப்பர். அநுமானிக்கவே இறநதகால சம்பவத்தை மாற்றலும் அதை மாற்றும்படி பிரார்த்தித்தலும் மௌட்டியமெனத் தெளிவர். தெளியவே பிரார்த்தனை செய்யார். இந்த வானசாத்திர உணர்ச்சிப்படியே பிணியாதி பீடைகளுக்கும் வழக்காதி வில்லங்கங்களுக்கும் ஏதுவாய் நடந்துள்ள காரணங்களை யுற்றுணர்வரேல் பிரார்த்தனையின் அப்பிரயோஜனத்தை நன்குணர்வர்.

பிரார்த்தனை அனுபவத்திற்கேனும் ஒத்ததா வென்பதனைப் பரியாலோசிப்பாம். சகித்தற்கரிய சங்கடங்களை சகித்தற்கும் செயற்கரிய செய்கைகளைச் செய்தற்கும் காரணமாகிய மனோதிடத்தை யுண்டாக்கவல்லது பிரார்த்தனையென்று சொல்பவர்களுடைய அனுபவத்தை இவிடம் குறிக்கவேண்டியது அத்தியாவசியகமாக விருக்கின்றது. யாதானும் ஓர் நம்பிக்கையால் மனோதிடம் உண்டாவது உண்மையேயெனும், அதனை நியாயவிழிகொண்டு நேர்நோக்குங்கால் அதன்பால் பாத்துவப் பிரசாதம் ஒன்றும் விளங்கவில்லை. நாம் அண்ணாந்து பார்த்து அகோராத்திரம் பிரார்த்தித்தாலும் அஃது மண்ணைவிட்டு விண்ணிலெழும்பப் போகின்றதில்லை. அரிய தொழிலொன்றை முடிக்கவேண்டிய காலத்தும் அரிய துன்பம் ஒன்றைச் சகிக்க வேண்டிய காலத்தும் பலமுறை பிரார்த்தித்து அங்ஙனம் பிரார்த்தித்ததனால் கடவுள் சகாயம் தனக்குண்டாயிருக்குமென்று மனோதிடங்கொண்டு அம்மனவூக்கத்தின் விசேடத்தால் ஒருவன் சித்தி யடைகின்றான்; இதுபோலவே ஓர் சுத்தவீரன் யுத்தகளத்தில் தன்னை வருத்தும்படி எதிரிகள் புரியுங்கொடுமை பலவற்றினையுஞ் சகித்துப் புறங்கொடாமல் அமர்புரியின் தப்பாமல் வெற்றி தனதேயாம் என்று முன்னிலும் பதின்மடங்கு மனோதிடங்கொண்டு முன்வைத்தகாலைப் பின்வையாது போர்புரிந்து தன் மனாபிலாஷம் சம்பூரணமெய்தப் பெறுகின்றான்; இவ்விரண்டிடத்திலும் மனோதிடங் காரணமாக நின்று வலிமையை விருத்திசெய்கின்றதேயல்லாமல், பிரார்த்தித்த கடவுள் பலந்தருகின்றமையைக் காணோம். ஒருவன் மூடவைராக்கியங்கொண்டு தகாதனவற்றைச் சாதிக்க விடாமுயற்சி செய்வனேல் அவன் அக்காரியத்தை முடித்தேவிடுகின்றான். ஆகையால் மனோதிடத்தால் எது எது செய்யற்பாறரோ அதுஅதுவே மனவைராக்கியத்தாலும் பிரார்த்தனையினாலும் செய்தல் சாத்தியமாகும். ஆயினமையின் பிரார்த்தனையினிடத்து தெய்வத்துவம் விளங்கி நிற்குமென்பது அனுபவ விருத்தம். கோட்டைகளுங் கொத்தளங்களும் பட்டணங்களும் கிராமங்களும் வீடுகளும் வாயில்களும் தீப்பற்றியெரியுங் காலங்களிலும், சண்டமாருதத்தால் தாக்குண்ட மரக்கலங்கள் நிலைகலங்கி துறைதெரியாது தத்தளிக்குங் காலங்களிலும், சப்தமேகங்களும் வருஷித்து சகல நதிகளும் பிரவாகித்து கடலும் பெருகி மேலிட்ட காலங்களிலும் எத்தனை எத்தனை கோடிபேர் எத்தனை எத்தனை தெய்வங்களை நாத் தழுதழுக்கப் பிரார்த்தித்த எத்தனை எத்தனைகோடி பிரார்த்தனைகள் செவிசாற்றப்படாமல் அவலமாயின. தேசாபிமானிகளாகவும் சுத்தவீரர்களாகவும் உள்ள எத்தனையோகோடிபேர் பிரஜாநுகூலத்திற்கும் தேசாநுகூலத்திற்கும் பிரஜாரோக்கியத்திற்கும் அரசை யெதிர்த்து வாதித்து வாதித்தும், கடவுளை நோக்கிப் பிரார்த்தித்துப் பிரார்த்தித்தும் பயன்பெறாது பித்தேறி மாண்டனர். மரணாவஸ்தையைச் சகிக்கலாற்றாது "கடவுளே! கடவுளே! என் துயரினைப் போக்காயோ" வென்று கதறியழும் பரிதாபத்திற்கும் இரங்கினார் ஒருகடவுளரும் இல்லை; அவ்வாறு அழுபவனைச் சூழ்ந்துள்ள உறவினரும் ஏனையோரும் எத்தனையோகோடி பிரார்த்தனைகள்செய்து இளைத்தனர்: புருஷன்பிழைப்பானென்று மனைவியும், பிள்ளைபிழைக்குமென்று தாயும், மனைவி பிழைப்பளென்று மணாளனும் கண்டகண்ட கோயில்களுக்குக் கையெடுத்துப் பிரார்த்திக்க எத்தனையோகோடி பிரார்த்தனைகள் பிரயோஜனப்படாமல் பேரழிந்தன.

இன்னும் பிரார்த்தனையினது ஆபாசத்தை விளங்கக் காட்டுவாம் - இரண்டுபாரிசத்தார் ஒருவருக்கொருவர் நேர்விரோதமாகப் பிரார்த்திக்கின்றனர், இவர்களில் யாருடைய பிரார்த்தனையைப் பூர்த்திசெய்வது, யாருடைய பிரார்த்தனையைப் பூர்த்திசெய்யாமல் விடுவது? இரண்டு சைனியங்கள் யுத்தத்திற்குப் பிரவேசிக்கும்போது தங்கள் தங்களுக்கே வெற்றியுண்டாக வேண்டுமென்று பிரார்த்திக்கின்றன. இவ் விருதிறவரில் வெற்றி யொருவர்பங்கே யாதல் சாத்தியமாகவும், மற்றையர் பிரார்த்தனை போகும் வழி யென்ன?

நாம் மேற்கூறிய நியாயங்களால் பிரார்த்தனையால் பிரயோசன முண்டென்றும் இல்லையென்றும் அபிமான மொழிந்து நோக்கவல்ல பரிசுத்த கியானிகளுக்கு விளங்கும். அபிமானாந்தகாரம் மனக்கண்ணை மறைத்திருந்தால் அதற்கு நாமென் செய்வோம்.

## இந்துசமயசாரவிளக்கம்·

### 2-ம் பாகம்.

### விநாயகபுராணம், தேவேந்திரன் உபாசித்தது.

(104 - வது பக்கத் தொடர்ச்சி.)

விதற்பநாட்டிற்கு அதிபதியாகிய வீமராஜனுக்கு விநாயகரது கிருபையால் புத்திரனாக உற்பவித்த உருக்குமாங்கதராஜன் தன்தந்தை உபதேசித்த ஏகாட்சரமந்திரத்தை இடைவிடாது ஜபஞ்செய்து, கணேசமூர்த்தியினுடைய திருவடிகளில் பேரன்புடையவனாகி, அரசாண்டுவருநாளில், குடிகள் அவ்விராசனிடத்திற்குவ

ந்து, காட்டுமிருகங்கள் நாட்டுப்பயிர்களை அழிக்கிறதென்று முறையிட; அவ்வரசன் சகல பரிஜனங்களோடுஞ்சென்று பலமிருகங்களையுங்கொன்று, பின்னர்தான் தனியேசென்று, தனக்கெதிர்ப்பட்டுவருகின்ற மிருகங்களை அதஞ்செய்து வருகையில், அதிகதாகங்கொண்டு, அடுத்தவனத்தில கவிமகாமுனிவர் வாசஞ்செய்கின்ற ஆசிரமத்தையடைந்து, அவ்விடத்தில் அவர்பத்தினிமுகுந்தையென்பவள் உல்லாசமாய்த் தனியேஉலாவுவதைக்கண்டு, அவளருகிற்சென்று, அன்னையே, தாகத்திற்கு நீர்தரல்வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவள் அரசனைக்கண்டவுடன் விரகதாபங்கொண்டு, அவனுடைய தாகஇளைப்பையும் நினையாமல் தனது மோகத்தைத் தெரிவித்து அரசனுக்கெதிரில் நின்றாள். அவ்வரசன் அவளைநோக்கி, தாயே, நீரிஷிபத்தினி, என்மனது எக்காலத்தும்பரஸ்திரீகமனஞ் செய்வதில்லையென்று பலநீதிகளையும் நன்மொழிகளையும் சொல்லித்தடுத்தான். அதற்கவள் - ஸ்திரீகளுக்கு இக்கிரேதாயுகத்திலும் திரேதாயுகத்திலும் தாங்களே வலுவிற்சென்று வேறுபுருடர்களைக்கூடுவதான சுதந்தரத்தைப் பிரமன் அளித்திருக்கின்றானாதலால், அச்சுதந்தரத்தினால் யான் உன்னைவலியக்கூடவந்தேன், அதனால் உனக்குப்பழிபாதகமொன்றும்நேராது, இனிமேலும் தடைசொல்லுவையாயின் நீறாகும்படி உன்னை எரித்துவிடுவேன், அல்லது உன்னழகனைத்துங்குலைந்து காட்டில் திரியும்படி சபித்துவிடுவேன், இதனைத் தீர்க்காலோசனைசெய்யக்கடவையென்று சொல்லி, அவ்வரசன்மேலேவிழுந்து மார்பைத்தழுவினாள். அவ்வரசன் பயந்து, உதறிக்கொண்டு அவளைதுஷ்டையென பலவாறு வைதுத் திரும்பிவிட்டான். பின்னர் அவள் அவனுக்குக்குட்டரோகம் உண்டாகும்படி சபித்தனள். அவ்வரசன் அம்முகுந்தைகொண்ட மோகத்தை யான் நிராகரித்துவந்தது தருமமாயிருக்க, அப்பாதகியிட்ட சாபத்தால் இப்படிப்பட்ட வியாதி உண்டாயிற்றேயென்றுதுக்கித்துக்கொண்டு இளைப்பாகி அவ்வனத்திற்றானே ஓர் ஆலமரத்தினிழலிலிருந்தான். அவனுடைய பரிசனங்களெல்லாம் அரசனைத்தேடி எங்குங்காணாமல் மறுபடியும் நகரத்திற்போய்ச் சேர்ந்தார்கள்.—

இதைவாசிக்கும் நண்பர்களே, இதிலுள்ள ஆபாசங்களை எடுத்துக்கூறவும் வேண்டுமோ? முதற்கடவுளாகிய விநாயகரைப்பூசித்துவந்த அரசனுக்கு இத்துன்பம் நேர்ந்தது அநியாயமே, ஆயினும் பூர்வகர்மத்தின்பலனாயிருந்தாலென்ன செய்யலாம்! எந்த புராணத்திலும், அரசன் வேட்டைக்குச்சென்றால், அவன்தனித்துப்பிரிந்து விட்டதாகவும், அவனுடைய பரிவாரங்கள்தேடித்திரும்பிவிட்டதாகவும், சாதாரணமாய் எழுதியிருக்கிறது. சிலராவதுகூட இராமல் அரசன்தனித்துவிடுகிறதும், பரிவாரங்கள் தேடித்திரும்பிவிடுகிறதும் கிள்ளுக்கீரையாயிருக்கிறதென்று தெரியவில்லையா? சேனை வேடர்வில்லியர்முதலானபரிவாரங்கள் எத்தனைபேரோ இருப்பார்களே, பத்து கஜம் தூரத்திற்கு ஒவ்வொருவனாகச் சென்றாலும், அடுத்தகாட்டிற் புகுந்த அரசனை வெகுசுலபமாய்க் கண்டுபிடித்திருக்கக்கூடுமே, பரிவாரங்கள் அரசனை எங்குங்காணாமல் திரும்பி நகரம் வந்துவிடுவதென்பது எவ்வளவு ஆச்சரியம்? இக்காலத்தில் எத்தேசத்தரசனாவது அவ்வாறு தப்பிப்போய்விட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறோமா? ஆதலால் வீண்கதையைவளர்த்து நிமித்தம் அவ்வாறு எழுதப்படுகிறதென்று ஸ்பஷ்டமாய்விளங்குகிறது. ஸ்திரீகளிலும் ரிஷிபத்தினியாய்விளங்கி, ரிஷியோடுகூட சதாகாலம்பழகி நற்குணநற்செய்கை யடைந்திருக்கவேண்டியவள, அதுவும் பொன்யுகமாகியமுதன்மையான கிரேதாயுகத்தில், பரபுருஷனைவிரும்பி வலுமைசெய்தனளென்றால், ஆதிமனிதர்கள் பரிசுத்தவான்களென்றும், கிரேதாயுகத்தை சத்திய யுகமென்றும் கூறுகிறமூடர்களை யென்னென்று சொல்லலாம்! ஸ்திரீ வேறுபுருஷனை வலுமைசெய்தது இங்கே தெரியவருகிறது. புருஷன் வேறு ஸ்திரீயைக் கெடுத்தது பின்னால் தெரியவரும். கிரேதாயுகத்திலும் திரேதாயுகத்திலுமாத்திரம் பரபுருஷர்களை விரும்பும்படியான சுதந்திரம் ஸ்திரீகளுக் குண்டாயிருந்த தென்பதைப்பற்றி நாம் என்னசொல்லவேண்டும்! முகுந்தையைப்போன்ற துஷ்டை சபித்துவிடுவதும், அச்சாபம் பலித்துவிடுவதும் எவ்வளவு சுலபம்! அரசன் அக்கிரமத்தைத் தடுத்தது தருமமாயிருக்க, அவனுக்குச் சாபம் பலித்ததென்பது என்ன கொடிய கதை!

பின்னர் அவ்வரசன் கணேசமூர்த்தியைத் தன்னிதயத்தில் தியானித்துக்கொண்டிருந்தான், அச்சமயத்தில் ஆகாயமார்க்கமாய் நாரதமுனிவர் செல்லக்கண்டு அவரைத் தோத்திரஞ்செய்யவே, அவர் நிலத்தில் இறங்கி அரசனெதிரில வந்தார். அவரை அவ்வரசன் வணங்கி, நடந்த விருத்தாந்தங்களைச்சொல்லி, அவ்வியாதி நீங்கும்படியான மார்க்கத்தை அருளவேண்டுமென்று பிரார்த்தித்தலும்; அன்பனே; உனது விதர்ப்பதேயத்தில் யான் வரும்போது, கந்தர்ப்ப நகரத்தில் ஓர் அற்புதத்தைக்கண்டேன்; அந்நகரத்திலிருக்கிற சிந்தாமணி விநாயகரைப் பலபேர் பூசனைசெய்து அவ்வவர்களிஷ்டகாமியார்த்தங்களைப் பெறுகிறார்கள். அவ் வாலயத்தெதிரில் கணேசகுண்டமென்று ஒருதீர்த்த மிருக்கிறது; குஷ்டநோயடைந்த ஒரு சூத்திரன் தீர்த்தயாத்திரை செல்லுகையில் அத்தடாகத்தை யடைந்து ஸ்நானஞ்செய்தவுடனே அவனுடைய குஷ்டநோய் நீங்கியதன்றிச் சகல வினைகளும் நீங்கப்பெற்று, தேவகணங்கள் கொண்டுவந்த விமானத்திலேறிக் கணேசலோகத்திற் போய்ச்சேர்ந்தான். ஆதலால் நீயும் அவ்விடத்திற் சென்று ஸ்நானஞ்செய்து, அவ்விநாயகமூர்த்தியைப் பூசித்துத் தான தருமங்களைச் செய்வாயாகின் இக்குஷ்டவியாதி உன்னைவிட்டு நீங்குமென்றனர். அரசன் அவ்விநாயகரைப் பிரதிஷ்டைசெய்து பூசித்தவர் யாவரோ அந்த விவரத்தை அருள்செய்யவேண்டுமென்று இரத்தலும், நாரதர் இதனைச்சொல்லுவதாயினர்.—

குஷ்டநோய் தீர்ப்பவர் சிந்தாமணி விநாயகராதலால், அவ்வரசன் ஏகாட்சர மந்திர உபதேசம் பெற்று பூசித்துவந்த விநாயகர் வேறுமூர்த்தமாயிருக்கவேண்டும். ஒரு விநாயகருக்கிருக்கிற சக்தி வேறு விநாயகருக்கில்லைபோலும். மேலேகூறிய முகுந்தையின் துஷ்டசெய்கையினாலே யுகதர்மபேதம் பாராட்டுவது மூடத்தனமென்று தோன்றுகிறது. முன்யுகங்களில் சிவன்முதலிய தேவர்களும் முனிவர்களும் கந்தர்வர் முதலானவர்களும் ஆகாயத்திற் பறந்ததுபோல இந்தயுகத்தில் பறவாமையாலும், விநாயகரைப் பூசித்த அவரவரும் இஷ்டசித்தியை அடைந்தாரென்றதனால் ஈஸ்வரனுடைய நிர்னயம் இல்லாமற்போவதினாலும், "இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி, விட்ட சிவனுஞ் செத்துவிட்டானோ" என்கிற வினாவற, அவர்களெல்லோரும் பூண்டற்றுப்போனார்களென்று தெரியவருகிறது. விநாயகபூசை செய்கிற அவ் வரசனுடைய நகரத்திலிருந்த சிந்தாமணி விநாயகருடைய மகிமையை அவன் அதுவரையில் அறியாதிருந்தது அதிசயமே. மேலே ஒரு சூத்திரனுடைய விர்த்தாந்தத்தினால், 'சூட்சத்திலிருக்கிறது மோட்சம்' என்றபடி மோட்சமடைவது வெகு சுலபமென்று தெரியவருகிறது. அந்த சூட்சந்தெரியாமலே இக்காலத்து மதஸ்தர்கள் நரகலோகத்தை வீணாய் நிரப்பிவிடுகிறார்கள்போலு

(இன்னும்வரு

---

## பிள்ளையார்பிடிக்கக் குரங்கானது

எந்நாட்டவரும் பொன்னாடெனக் கருதுந் தெ
ண் சாரங்கபாணி சக்கரபாணியென்னுந் திரு ந
பெற்று மிகு மகிமை விளங்காநின்ற விரண்
தேவாலயமுள. அவ்விரண்டு தேவாலயங்க
ளுமன்று, விஷ்ணுவாலயங்களுமன்று. அ
ரகங்கள் சமண விக்கிரகங்களைப்போ
திருக்கையில், இறந்துபோன

டதுபோல, இந்நாட்டிலிருந்த வைணவர்களும் சைவர்களுமேற்பட்டு, அவ்விஷயமாக வாதம்நேர்ந்து, பார்ப்பான்வீட்டுத் திண்ணைக்குப் பரதேசிகள் அடித்துக்கொள்வதுபோல, வைணவர்கள் தங்களுடையதென்றும் சைவர்கள் தங்களுடையதென்றும் அடித்துக்கொண்டிருந்தனர். ஓர்காலத்து தென்றல் முற்றிப் பெருங்காற்றுனதுபோல், கலக மதிகரித்ததனுல், அவ்வூர் நியாயாதிபதி யவ்விருசமயிகளையும் வருவித்து யாதுநிமித்தம் நீவிர் போர்புரிகின்றீர்களென சைவர்களுக்குள் தலைவராய் மடத்தம்பிரானெழுந்து இவ்விரண்டாலயங்களும் சிவஸ்தலங்களே. இதோ அப்பர் பதிகங்க ளிருக்கின்றன பாருங்கள். சம்பந்தர் பதிகங்களிருக்கின்றன பாருங்கள். இதோ ஸ்தல புராண மிருக்கிறது பாருங்களென்றுகூறி, 'வெட்கம்போனுல் போகிறது, தொப்பை நிரப்பினுல் போதும்' என்பதுபோல சிவஸ்தலமேயென்று உறுதிமொழி பகர்ந்தனர். வைணவர்களும் அவ்வாறே செப்பி நின்றனர். நியாயாதிபதி யிருதிறத்தவர்களுடைய சொற்களைக்கேட்டு நெடுநேரம் சிந்தித்து நீவிர் இவ்வாறு கூறுகின்றமையான் அவரவர் கடவுளருக்குரிய சின்னங்களை யவ்வாலயத்திற் காண்பித்தாலன்றித் தீர்மானங் கூறப்படாதென்று செப்பினர். சைவர்கள் தங்களுக்குள் ஓர் முடிவுசெய்துகொண்டு தங்கள் வீட்டினின்று ஓர் பிள்ளையாரைக் கொடுபோய் திருக்குளத்தின் மூலையில் நீரிலமிழ்த்தி வைத்தனர். இச்சூதை யோர்ந்த வைணவர் பிள்ளையாரை யகற்றி யவ்விடத்தி லனுமாரை வைத்தனர். மறுநாள் சைவர்கள் அம்பலத்திற்குச்சென்று திருக்குளத்தைச் சோதிக்கில் எங்கள் கடவுளருக்குரிய சின்னங் காணலாமென்றனர். நியாயாதிபதி யவ்வாறே சோதித்து அனுமாரிருக்கக் கண்டமையால் வைணவர்பக்ஷம் தீர்மானமளித்தனர். இதைக்கண்ணுற்ற சைவர்கள் பிள்ளையார்பிடிக்கக் குரங்காயிற்றே யென்றனர்கள். அதே யிக்காலத்தும் பழமொழியாய் வழங்கிவருகின்றது. நண்பர்களே! இவ்வாலய மகிமையைப் பாருமின்! அவற்றி னுண்மையை யோருமின்.

## வர்த்தமானசங்கிரகம்.

**B. I. கம்பேனி**யாரின் கப்பல்களில் மிகவும் பெரிதாகிய ஜம்னு என்பது தீபிடித்ததாக ஏடனிலிருந்து வந்த தந்திசமாசாரத்தால் தெரியவருகிறது. அந்தக் கப்பல் தானியம்-காப்பிக்கொட்டை-எண்ணெய்-தோல் முதலிய பல சரக்குகளை யேற்றிக்கொண்டு சென்ற ஸ்ரீ 3உ கொழும்பிலிருந்து போயிற்று. அந்தக்கப்பல் ஏடனுக்குப்போய்ச் சேருவதற்கு முன்னமே 3 நாள் எரிந்துகொண்டிருந்து, சமாச்சாரம் அனுப்பப்படும்போதும் ஏடன்கப்பற்றுறையில் அதிலுள்ள சரக்குகள் எரிந்து கொண்டிருந்ததாம். மனிதருக்குத் துன்பமாவது பிராணச் சேதமாவது நேரிட்டதாக ஒன்றுஞ் சொல்லப்படவில்லை. கொழும்பிலிருந்து அதில் ஏறிப்போன பயணக்காரர் மிஸ்டர் ஆந்தரூ என்பவர் ஒருவரே.

**மின்சார** வுஷ்ணமானது கடைசியாய் முட்டைகளைக் குஞ்சு பொரிப்பிக்க உபயோகிக்கப்படுகிறது. இதைக்கண்டறிந்தவர் ஒநாஷியன். இது செயற்கைஉஷ்ணத்தினுல் முட்டைகளைப் பொரிப்பிப்பதற்கான மற்ற சூழ்ச்சிகளைப்பார்க்கிலும் மிகவும் சிறந்ததாம். இதனுல் உண்டாக்கப்பட்ட வுஷ்ணம் இடைவிடாது ஒரே நிதானமாயிருக்கிறதென்றும், தீர்க்க காலத்திற்கு ஒரேநிதானமான வுஷ்ணம் வேண்டியிருக்கிற மற்றும் அநேககாரியங்களுக்கு பிரயோசனகரமாய் உபயோகிக்கலாமென்றும் சொல்லப்படுகிறது.

**பொம்பாய்** சிலம்பக்கூட கட்டடத்திற்காக கவரன்மென்டார் (கோட்டை) மைதானவெளியில் இனுமாய நிலங்கொடுக்கிறபக்ஷத்தில், அந்தக்கட்டட நிதிக்காக தாமும் ரூ 10,000 கொடுக்கிறதாய் ஸர் டின்ஷா மனக்ஜீ பெட்டிட் அவர்கள்சொல்லியிருக்கிறார்கள்.

**பிரான்சிலே** ஒரு புதுமோஸ்தரான மணிகடியாரம் நவீனமாய்ச் செய்யப்பட்டிருக்கிறது. அதினுடைய டயல்தகடு தோற் கடுதாசியினுல் செய்யப்பட்டு பூமாலை சித்திரித்திருக்கிறது. இந்தப்புஷ்பங்களிலே இரண்டு தேன்வண்டுகளைக் காணலாம். அவை ஒரு புஷ்பத்திலிருந்து மற்றொருபுஷ்பத்திற்குக் குதிக்கின்றன; அவற்றில் ஒன்று ஒரு மணிநேரத்தில் அந்தத் தகட்டைச் சுற்றிவர, மற்றொன்று பன்னிரண்டு மணிநேரத்தில் சுற்றிவருகின்றது. அந்தத் தகட்டில் சந்து ஒன்றுமில்லை; அக்கால சம்மாரத்தின் உட்கருவிகளோடு யாதொரு சம்பந்தமுமின்றி அந்த வண்டுகள் எப்படி நகர்ந்துவருகிறதோ அதை அறிய மாட்டாமல் அநேகர் மயங்குகிறார்கள். அந்தத் தட்டைகளுக்குப்புறத்திற்கடியிலே சாதாரணமான இரண்டு காந்தமுள்ள காரணங்களிருக்கின்றன. அவற்றில் ஒவ்வொன்றும் காரியப்பிரயோஜனத்தை அடைந்து அந்த வண்டுகள் இலேசான எஃகுகால் செய்யப்பட்டவை ஆனதால், அவை அந்தத் தோல் தகட்டின் உட்புறத்தில் தென்படாத காந்தக்கற்கள் செல்லுகிறபோது அவைகளைப் பின்பற்றிப் போகின்றன.

## அறிக்கை.

நமது மெம்பர்களும் கையொப்பநேசர்களும் தாங்கள்பெறுகிற ஒருபிரதிக் கதிகமாக "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பிரதியாவது, "தத்துவவிவேசினி" என்னுந் தமிழ்ப்பிரதியாவது பெறவிரும்பினுல், அடியிற்கண்டிருக்கிற குறைந்தவீதத்திற்குப பெற்றுக்கொள்ளலாம்.

மாசமொன்றுக்கு அதிகமாகவாங்குகிற

இங்கிலீஷ் பிரதி - க - இ .. அணா ச
தமிழ்ப்பிரதி ... - க - இ ... அணா உ

இங்கிலீஷ் பிரதியாயின் இரண்டும் தமிழ் பிரதியாயின் நான்கும் ஒரேதபாற்செலவில் அனுப்பக்கூடும்.

இவ்விதமாய்ப் பத்திரிகையைப் பரவச்செய்து, இரட்டைப்பேற்றுச்சகோதரர்களாகிய—மடமை, மூடபக்தி—என்னும் இராக்கதர்களோடு போராடி வெற்றி பெறுவதற்கு நமது மெம்பர்களும் நண்பர்களும் துணைபுரிவார்களென்று நம்புகிறோம்.

இந்தியாவிலுள்ள

சுவக்கியானிகளை

## மதிராஸ் சிக்கியுலர்சோசைட்டியில்

மெம்பர்களாகச் சேரும்படி

கேட்டுக்கொள்ளலாகின்றது.

| | | |
|---|---|---|
| உள்ளூர்மெம்பர் - மூன்றுமாசத்திற்கு | —ரூ | 3—0—0 |
| வெளி ,, ,, | —ரூ | 1—14—0 |

செலுத்தவேண்டும். அப்படி சேருகிறவருக்கு "தின்கர்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகையாவது, "தத்துவவிவேசினி" யாவது இலவசமாக அனுப்பப்படும்.

## தத்துவவிவேசினி

நான்குபக்கம், பிரதி 1க்கு விலை அணா 1.

### தமிழ்சந்தாவிபரம்.

| | | Rs | A. | P. |
|---|---|---|---|---|
| மாசம் | 1-க்கு | 0 | 4 | 0 |
| ஷை | 3-க்கு | 0 | 10 | 0 |
| ஷை | 6-க்கு | 1 | 2 | 0 |

முன்பணஞ்செலுத்தவேண்டும். சந்தாவோடுகூட, இந்தியாவிலும் பர்மாவிலுமுள்ள வெளியூரார் மாசமொன்றுக்கு ஒருஅணாவீதமும், சிலோனிலுள்ளவர்கள் வாரமொன்றுக்கு ஒரு அணா வீதம் ஆறுமாசத்திற்கு ரூ 1—10—0 மும் தபாற்செலவு சேர்த்தனுப்பவேண்டும். ஒரு வருஷத்திற்குப் பணமனுப்ப விரும்புகிறவர்கள் ஆறுமாசத் தொகைக்கு இரட்டிப்பு அனுப்பவேண்டும். தபாற்செலவு குறைவுபடக் கோருகிறவர்கள் தெரிவித்தால், பத்திரிகைகள் இரண்டுவாரத்திற்கொருவிசை சேர்த்தனுப்பப்படும் பக்ஷத்தில், பாதியும், நான்குவாரத்துக்கொருவிசை சேர்த்தனுப்பப்படும்பக்ஷத்தில் முக்கால்பங்கும் தபாற்செலவு கூடிவரும்.

## கையொப்பநேயருக்கு.

யாதொரு பத்திரிகை வந்து சேரப்பெறுதவர்கள் உடனே தெரிவிக்கவேண்டும்; காலாதீதமாய்த் தெரிவித்தால் அப்பத்திரிகை பின்புகிடைப்பதரிது.

பத்திரிகைக்கு எழுதும்கடிதமுதலியவிஷயங்களை

மாத்திரம்

சென்னை முத்தியாலுப்பேட்டை இலிங்கசெட்டிவீதி

307 - வது நம்பர் வீட்டில்

பு. முனிசுவாமிநாயகருக்கு

அனுப்புதல்வேண்டும்.

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Dayaraja Moodelly Street,—Madras.

# தத்துவவிவேசினி

சென்னைலௌகிகசங்கத்தாரால்பரிபாலிக்கப்பட்டுவருகின்ற

வாராந்த திராவிட சுவக்கியான பத்திரிகை.

Vol. VI.—No. 31.] MADRAS:—SUNDAY JULY 31, 287. A. S. [Monthly, 4 Annas.

சொல்லுகசொல்லைப்பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ்சொலின்மையறிந்து.—குறள்.





வைததனை யின்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும், ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள்கண்டுவாழ்வார்.

திட்டை யினியசொல்லாகவும், கூழை நெய்கலந்த சோறாகவும், கசப்பைதித்திப்பாகவும், உள்ளது உள்ளபடி யறியாமல், மாறுபடக் கொள்பவன் புத்திமாறுட்டக் காரணகத்தானிருக்க வேண்டும். பதார்த்தத்தின் உண்மையையே யறியமாட்டாதவன் மெய்ப்பொருளாகிய கடவுளை எவ்வாறு காண்பனோ? இழிவான மாயையை உயர்வான பரமாக எண்ணுவன். இந்தப் பாட்டை வியந்து சொல்லி, இத்தகைய குணங்கள் நாஸ்திகருக்கு அமையுமாவென்று ஒருவர் கேட்டனர். உள்ளது உள்ளபடி யறியுந் தெளிவுள்ள நாஸ்திகனுக்கு இப்பேய்த்தனமான குணம் ஒருக்காலும் அமையமாட்டாதென்பது உண்மையே. இது இருக்கட்டும். அப்படி கேட்டவர் அழுக்கு வஸ்திரம் தரித் திருந்த வேறொருவனைப் பார்த்துப் பரிகாசஞ் செய்தனர். இது என்ன மதியீனம்! கசப்பைத் தித்திப்பாகக் கொண்டவன்போல், மலினவஸ்திரத்தைச் சலவை செய்த சரிகைவேஷ்டியாகக் கொண்டிருப்பரென்று எண்ணிக் கொள்ளலாகாதா? குற்றம் பாராட்டுவதே யிவருக்கமைந்த குணம்போலும்.

## மனோதத்துவம்.

உலகினில் நால்வகை யோனிபேதமா யெழுவகை தோற்றத்தியங்கு மனந்த வான்மகோடிகளும் அளப்பரும்பிறவி யல்லலுற் றுழலாவண்ணம் முத்தி நன்னெறியை யுணர்த்துவானுசித்த சமயங்களில் இந்துமதமானது ஆதிரவாய்க்கொண்ட கொள்கைகள் பலவற்றுள்ளும் சிறந்ததும், பிரதானமுமானது தேகம்வேறு தேகிவேறென்பதே. எப்போது தேகியாகிய ஜீவாத்மாவை இன்னதெனப்பிரித்து அதன் இலக்ஷணங்களை யுணர சாத்தியப்பட்டதோ அப்போதே ஜீவாத்மாக்களின் சமஷ்டி கூட்டத்தை பிரபஞ்சத்தினின்றும் பிரித்து பரமாத்மாவென கூறுதற்கு மிடமாயிற்று. உடலிற்கும் ஆத்மாவுக்குமுள்ள சம்பந்தாசம்பந்தத்தைப்பற்றி வைதிகர்களோடும் வேதாந்திகளோடும் ஆசங்கிக்கின் அவர்கள் மானிடர்களனுபவிக்கும் சாக்கிர சொர்ப்பன சுழுப்தியாகிய மூன்றவஸ்தைகளே தேகம்-தேகி இவற்றிற்குள்ள சம்பந்தத்தை தெள்ளிதிற்காட்டவல்ல தேட்டு ஏதுக்களாயிருக்கின்றனவென்று சொல்லுகிறார்கள். எப்படியென்னில் சாஸ்திரத்தில் ஜீவாத்மாவானது உடலுடன் ஒன்றுகி நடித்து சுகதுக்க பேதங்களால் துயர்ப்பட்டுமென்றும், சொர்ப்பனத்தில் உடலை ஒருபுடை விடுத்தும் சாக்கிராவஸ்தை வாசனையினால் வேறுடலைத்தேடி வினைபலபுரிந்து இன்பதுன்பங்களுக் கிலக்காகியும் சுழுப்தி யவஸ்தையில் மட்டும் ஒன்றும் விகார மடையாமல் படிந்திருப்பதால் அப்போது தான் விஷய வாசனைகளால் சிறிதும் சேஷ்டிக்கப்படாமல் சுசமாயிருக்கிறதென்றும், அப்படி ஜீவாத்மாவானது தன்னிலை தவறி வாசனாசம்பந்தங்களாலேயே விலக்ஷணப்பட்டு தனக்கன்னியமானவைகளையெல்லாம் தன்னுடையதெனவே யபிமானித்து அல்லலுற்று வருகிறதென்றும் சொல்லுகிறார்கள்.

மேலும் இமையா நாட்டத்தவராகிய தேவர்களுக்கு சொர்ப்பன சுழுப்தி யவஸ்தைக ளில்லாமையாலும், மானிடர்க்குக் கீழ்ப்பட்டனவாகிய மிருகாதிசெந்துக்களுக்கு அறிவுங் குன்றி யிருக்கின்றமையாலும் இவைகள் ஜீவாத்மா பரமாத்மாவின் இலக்ஷணத்தை அறிய அசக்தப்பட்டுப் போயினவென்றும் அதனால் பிறவியைநீத்து சைதன்யத்தோடு கலந்து முத்தி பெறுதற்கு கூடாமற்போயிற்றென்றும், மனிதனே பஞ்ச அறிவு மூன்றவஸ்தைகளையும் பெற்றிருப்பதால் ஜீவாத்ம பரமாத்மாவின் இலக்ஷணத்தை யுணர்ந்து முக்திவழியை நாடவுமருகனாயிருக்கிறானென்றும் தெரியவருகிறது. ஒருவன் தன்னிடத்துள்ள ஜீவாத்மாவை பாசத்தின் காரணமாக கவர்ந்துள்ள அன்னியவிஷயங்களையெல்லாம் பரிசோதித்து கழித்து நீக்கவே ஜீவாத்மாவானது சுவயமாய் வெளிப்படுமென்றும், அதைக்கண்டுணர்தலே பரமாத்மாவின் தெரிசனமென்றும், முத்தியென்றும் வேதாந்திகளால் தெரியவருகிறது. ஆகையால் நம்முடைய அவஸ்தாத்திரயங்களைக் களைந்துபார்த்து ஜீவாத்மாவை கண்டறிவது யாவருக்கு மின்றியமையாக் கடனாயிருக்கிறது.

ஒவ்வொருவருடைய மனமும், தேகமும் தொழிற்படுதற்கு அடைந்திருக்கு மாற்றலானது பழக்கத்தால் வளர்ந்துவந்திருக்கின்றதேதவிர வேறில்லை. சிசுவாயிருக்குங்காலத்து துரும்பை யெடுக்க அசக்தமாயிருந்த கைகளாலேயே, வரவர பழக்கத்தால் வலிவுபெற்றுவந்து மனிதன் பூரண பிராயத்தில் தன்னிலும் பலமடங்கு பளுவுள்ள வஸ்துக்களையு மெடுக்க ஆற்றலுடையவனாகின்றான். அப்படியே மனமும் அறிந்துகொண்டதெல்லாம் சிசுப்பருவ முதல் விருத்தபரியந்தமுள்ள பழக்கத்தாலேயேதான். சிசுவாயிருக்கையில் அந்த ஜீவன் தன்னைத்தவிரப் பிறிதொன்றையு மறியவில்லை. அதன் மனதில் யாதொருஎண்ணமு முதிக்கவில்லை. ஆகையால் சித்தம் சுத்த சமாதானத்தோடேயிருக்கிறது. அதற்கிருந்த பிரஞ்ஞையெல்லா மதன் தேகதத்துவபேதங்கள் சம்பந்தப்பட்டமட்டிலேதான். அந்த சிசுவினுக்குப் பசிக்கும்போதும், யாதேனும் வலிதோன்றும்போதும்; அப்போது அதன் தேகதத்துவங்கள் வேற்றுமை யடைந்ததால் உண்டான பிரஞ்ஞையே அதற்கிருந்த

து. எவரோனு மடித்தாலும், சீதோஷ்ண வஸ்துக்களை அதனருகில் வைத்தாலும், அதற்கு பிரஞ்ஞை யுண்டாகின்றது. அப்போதும் அது ஸ்பரிச அறிவு வாயிலாய் தன் தேகதத்துவ மாறுபாட்டை யுணர்ந்ததேதவிர, தனக்கன்னியமான எந்தவஸ்து யாதுகாரணத்தால் பிரஞ்ஞை மூட்டினதென்று அறியக்கூடவில்லை. நமக்கு பஞ்ச அறிவுகளு மில்லாமற் போமாகில் நாம் என்ன பரிதாபமான நிலைமையி லிருப்போமென்பதை ஒவ்வொருவரும் யூகித்துக்கொள்ளலாம். ஆகையால், பஞ்ச அறிவினாலேயே நம்முடைய தேக தத்வங்களையும், பிரபஞ்சத்தில் நமக்குப் புறம்பாயுள்ள ஒவ்வொரு வஸ்துவின் தத்துவங்களையும், உணர்தற்கு திறமை யுடையவர்களாயினோம். எப்படியென்னில், ஒருவஸ்துவினுடைய நிறத்தை சட்சு இந்திரியத்தாலும், அந்த வஸ்துவின் மழமழப்பு அல்லது சுரசுரப்பான தன்மையையும், மெதுவு அல்லது கடினமான தன்மையையும், அதன் பளுவையும், துவக்கிந்திரியத்தாலும், அதன் ரூபத்தை துவக்கு சட்சு இந்த இரண்டு இந்திரியங்களாலும், அந்த வஸ்துவினு லுண்டாகும் சொனியை சுரோத்திரேந்திரியத்தாலும் அதன் சுவையை சிங்குவை இந்திரியத்தாலும், அதன கந்தத்தை ஆக்கிராணேந்திரியத்தாலு மறிந்து கொள்கின்றோம். ஞானேந்திரியங்களின் வாயில்களுக்கும் புலனுணர்வு ஸ்தானத்துக்கும் (Sensorium) அறிவு ஸ்தானத்துக்கும் (Cerebrum) தொடர்பாய் நரம்புகளாகிய தாதுக்கள் தொடுக்கப்பட்டிருப்பதாலும், ஒவ்வொரு வஸ்துவும் நம்முடைய புலன்களை யதுஷ்டிப்பதாலும், அந்தந்த வஸ்துவுககுத் தக்கவாறு தாதுக்க ளியக்கப்பட்டு புலன்களை யுணரும் ஸ்தானத்தி லுணர்ச்சியைத் தருகின்றன. மேலு மந்த உணர்ச்சியின் காரியமாய் கபாலத்தி னடியி லுள்ள அறிவு ஸ்தானமானது (Cerebrum) எவ்வாறு மலின மடைந்ததோ அந்தப் பிரஞ்ஞையே நமக்கு ஒவ்வொரு வஸ்துவையும்பற்றி உண்டாகும் பாவனையு மாகிறது.

மேலும் நம்முடைய அறிவு ஸ்தானமானது அனந்த பேதமாய் மலினப்பட்டு வருவதே நம்முடைய பிரஞ்ஞைக்கு அவசியமாகவு மிருக்கின்றது. ஏனெனில், ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு புலனையும் ஒரேவிதமாக சேஷ்டிக்கவேண்டுமாதலால் அறிவுஸ்தானமும் ஒருவிதமாகவே சுதாவாய் மலினப்பட்டு வரவேண்டியது. ஆகையால் ஜீவனுக்கு பேத உணர்ச்சி யின்மையால் பிரஞ்ஞையுமில்லை யெனல்வேண்டும். எப்படியென்றால் நாம் ஒளி இருள் ஆகிய இரண்டையும் பார்த்துள்ளேமாதலால், அவற்றிற்குள்ள பேத உணர்ச்சியாலேயே இது இருளென்றும், இது ஒளியென்றும் பகுத்துச்சொல்ல சக்தியுடையவர்களாயினோம். ஆனால் பிறந்தகாலமுதல ஒரே பரிமாணமுள்ள ஒளி அல்லது இருளிலேயே ஒருவன் வளர்ந்து வருவானாகில் அவனுக்கு ஒளி அல்லது இருளில் உலாவுகின்றேமென்னு முணர்வுமில்லையென்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. பிறந்தகாலமுதல் அணுக்கூட்டத்தினிடையே உலாவுகின்ற நாம், அவற்றின் பளுப்பிரமாணத்தை யுணராதிருத்தலே போன்ற திருஷ்டாந்தமெனக் கொள்ளலாம். ஒருவன் சிரசில் சொற்ப கனமுள்ள எந்த பதார்த்தத்தையாவது அவனறியாதிருக்கையில் வைப்போமாகில் உடனே அவன் உணர்ச்சி பேதத்தால் பிரஞ்ஞையடைந்து, ஏதோ கொஞ்சம் பளுவான ஒரு வஸ்து தன் சிரசிற் பொருந்தி யிருப்பதா யுணர்கின்றான். அந்த வஸ்துவை மீள வெடுத்துப் போடுவோமாகில், தன்மேல் பளுவான வஸ்து ஒன்றுமில்லையென்று சமாதான மடைகிறானே தவிர, அணுக்கூட்டத்தில் பளுப் பிரமாணத்தை யுணரவில்லையே. ஆகையால் பிரஞ்ஞைக்குப் பேத உணர்ச்சி அவசியம் வேண்டுமென்பது விசிதமாகும்.

V.

(இன்னும்வரும்.)

## நியாயப்பிரமாணங்கள்.

நாத்திகவாதிகளுக்கு மறுமைப்பலாபலன்கள்இல்லாமையினால் அவர்கள் எவ்வித அக்கிரமும் புரியலாமே, என சமயவாதிகள் வாயில் வந்தபடி நியாயவழுவாகப் பேசுகிறார்கள். அப்படி பேசுவது நியாயமல்ல. நாத்திகவாதிகள் ஒழுகவேண்டிய ஒழுக்கத்தைப்பற்றி நிரீசுரவாத மந்திராலோசனை சபையார் நிர்மாணித்திருக்கிற சில விதிகளை இதனடியில் யாவருக்கும் விளங்கத்திட்டுகிறோம்.

விதிகள்.

நீங்கள் உங்கள் பூர்ண இருதயங்களோடும் உங்கள் பூர்ண மனதுகளோடும் இன்னதெனவறியாத கடவுள் என்னும் மொழியைப் பின் பற்றாதிருக்கக் கடவீர்கள்.

நீங்கள் தொழிற்படுத்திய எந்த சொரூபத்தையாகிலும்,மேலே ஆகாயத்திலும், கீழே பூமியிலும், பூமிக்குக்கீழே ஜலத்திலுமுள்ள எந்தப்பொருளையாகிலும், தொழாமல் இருக்கக் கடவீர்கள்.

நீங்கள் பொய்யாமை, கள்ளாமையாகிய இவற்றின் விருதுக்கொடியை உடையவர்களாக இருக்கவேண்டும்.

உதிரக் கலப்பானவரையும், புருஷருக்கு இருபத்தைந்து பருவமும் கன்னிகளுக்கு பதினெட்டுவய பருவமும் செலலுமுன்னும் மணம்புரியலாகாது. இவ்வித விவாகத்தினால் பலம்குன்றி பின்னடியாரின் பலமும் புத்தியும் குறைந்துவரும்.

கைம்மாதரும் புருஷரும் மறுமணம் புரிந்து கொள்ளக்கடவர்கள். வேசிமறதிலும் புநர்விவாகத்தை யேற்றுக்கொள்ளுதல் நலம்.

எதை மற்றவர்கள் உங்களுக்குச் செய்யாதிருக்க நீங்கள் விரும்புகிறீர்களோ அதை நீங்கள் மற்றவர்களுக்குச் செய்யாதிருப்பீர்களாக.

உயர்ந்தோரால்விலக்கப்பட்டவைகளும்,தேகத்தைக் கெடுத்து புத்தியைத தாறுமாறாக்கித் தன்னையும், தன் குடும்பத்தாரையும் நாசப்படுத்தும்படியானவைகளாகிய மதுபானம், சூதாடல் முதலிய துர்க்கிரியைகளை புரியாதிருப்பீர்களாக.

நீங்கள் விருத்தசேதனஞ் செய்யாமலும்,நாசி,செவி, மிடறு ஆகிய இவைகளில் இரந்திரஞ்செய்யாமலும், அடையாளமாக எழுத்துகளை (பச்சைகுத்துதல்) உங்கள்மேற்பதியாமலும், சிரசையும், பாதங்களையும் இறுக்கிக்கட்டி விகாரப்படுத்திக் கொள்ளாமலும் இருப்பீர்களாக. (விருத்தசேதனம் - இதை மோகம்மதியர் சுன்னத் எனக்கூறுவர்.)

ஜீவபிராணிகளின் உடலை தக்கதேல் இஷ்டமுள்ளவர்கள் உண்ணலாம்; பிரியமில்லாதவர்கள் உண்ணாதிருக்கலாம்.

உங்களுக்கு நடுவுநிலைமையுடைய எல்லா மாந்தரிடத்திலும் மாசற்றவிசுவாசம் இருக்கக்கடவது. நீங்கள் எத்தேசத்து எச்சாதியாரிடத்திலும் சகோதரவாஞ்சையாய் இருக்கக் கடவீர்கள். சகோதரவாஞ்சை மலைமுடியிலிருந்து வழிந்து பெருகி யோடிவரும் அருவி போலிருக்கிறது.

உங்களுக்குத் தீங்குசெய்தவர்கள் நாணும்படி அவர்களுக்கு நன்மையையே புரியுங்கள்.

நீதிவழுவா ஆளுகையே நீதிக்கு அழகாகையால், வறியோர் முகத்தை நோக்காமலும், வலியார் முகத்தை எண்ணாமலும் நீதியாகப் பிறருக்கு நியாயந்தீர்க்கக் கடவீர்கள். நீதியின்மேல் பசி தாகம் உள்ளவர்கள் வாழ்வுடையவர்கள்.

நீங்கள் மாயவித்தைகளைப் புரியாமலும், சுப அபசகுனங்களை உணர்த்தும் சகுனங்களையும், சுபாசுப காலங்களையும் பாராமலும், பேய்வித்தைக் காரரையும், மந்திரங்களையும், மந்திரக்காரரையும் மதியாமலும் இருப்பீர்களாக.

மாசற்ற எண்ணமும், சுத்தமானவார்த்தையும், குற்றமற்ற செய்கையும் உங்களுக்கு இருக்கக்கடவது.

இந்நியாயப் பிரமாணங்களினால் நீங்களே உங்களை சற்குணராக்கவேண்டுமேயல்லாமல், அதற்காக கடவுள் ஒருவர் இருக்கிறாரென்றும் அவரைநோக்கி ஜெபம் செய்யவேண்டுமென்றும் நினைக்கவேண்டாம்.

M. M.

## மோக்ஷவழிபாடு.

( 118 - வது பக்கத் தொடர்ச்சி. )

6. பத்திரம் என்பது :—பீஜத்தின்கீழ் ஜீவனிடத்து இருகால்பரட்டையும் வைத்து அவ்விரு பாதத்தையும் இருகையால் இறுகப்பிடித்து அசையாதிருத்தல்.

7. முத்தம் என்பது :—இடக்கால் பரட்டால் ஜீவனை அழுத்தி வலக்காற்பரடு அப்பரட்டின் கீழுந்த விருத்தல்.

8. மயூரம் என்பது :—முழங்கை இரண்டும் உந்திபுறத்தி லழுந்த பூமியில் கை யூன்றி கால் நீட்டி தலைநிமிர்ந்திருத்தல்.

9. சுகம் என்பது:—சுகமும் திட்டமும் எவ்வாறு இருத்தற் கெய்துமோ அவ்வாறிருத்தல். இவையன்றி, இரு குதிகாலும் ஜீவனிடத்து பொருந்த இருபுறவடியின் மீதிலும், இரண்டு அங்கையையும் சேர்த்து மார்பு நெறித்து தலை நிமிர்ந்திருத்தலாகிய குக்குடாசன முதலிய ஆசனங்களும் சிலவுள.

பிராணயாமம்-2-வகை. அவை:—சகர்ப்பம. அகர்ப்பம்.

1. சகர்ப்ப மென்பது:—தியானத்துடன் மூச்சைப் பிடிப்பது.

2. அகர்ப்பமென்பது:—தியானமின்றி மூச்சைப்பிடிப்பது. இந்த இருவகையும இரேசக பூரக கும்பகமாம். இன்னும் பலவிதமாக இருக்கும்.

பிரத்தியாகாரமாவது:—(யோ) மனதை இந்திரிய விஷயங்களில் செல்லவொட்டாமல் லக்ஷியத்தில் நிறுத்துதல். (ஞா) சர்வம் பிரம்மமயமாகப் பார்ப்பதென பிரம்மநிஷ்டர்கள்சொல்லுதல்.

வேதத்தில்சொல்லிய நித்திய நைமித்திய காமியங்களை பிரம்மாராதனமென்று செய்யுதல். தேகத்தை நானென்று நினைப்பதைத் தள்ளி சித்தாத்துமாவே நானென்று நினைத்திருத்தல்.

தாரணையாவது:—(யோ) தேகாகாசத்தை வெளி ஆகாசமாகவும், தேகவாயுவை வெளி வாயுவாகவும், தேக தீயை வெளித்தீயாகவும், தேக நீரை வெளி நீராகவும், தேக மண்ணை வெளி மண்ணாகவும், நினைத்திருத்தலும், பாதமுதல் முழங்கால்வரையில் பிருதிவி பாகம் பிரமனாகவும், முழங்கால்முதல் தொப்புள்வரையில், ஜலபாகம் விட்டுணுவாகவும், நாபிமுதல் மார்புவரையில் அக்கினி பாகம் உருத்திரனாகவும், மார்புமுதல் புருவம் வரையில் வாயுபாகம் மகேஸ்வரனாகவும், புருவம் முதல் சிரசுவரையில், ஆகாயபாகம் சதாசிவமாகவும் நினைத்திருத்தலும், மனதிற்குச் சந்திரன், காதுக்குத் திக்கு, தோளுக்கு விட்டுணு, வாக்குக்கு அக்கினி, குதத்திற்கு மிருத்யுவு, உபஸ்தத்திற்கு பிரஜாபதி, தொக்குக்கு வாயு, கண்ணுக்கு சூரியன், நாவுக்கு வருணன், மூக்குக்கு பூமாதேவி, புருஷனுக்கு அந்தரியாமி அதிஷ்டான தேவதை என்று புந்தியில் தரித்தலுமாம். (ஞா) தேகாதிபதி பிரபஞ்சமாகிய பஞ்சபூதங்களை மகா பூதங்களில் ஒடுக்கி, மகா பூதங்களை மாயையில் ஒடுக்கி, மாயையை ஆத்தும சொரூபத்தில் ஒடுக்கி, தான் சின்மாத்திரனென்று மனதில் தரிப்பதும், நான் தேகாதிகளுமன்று, அதற்கு உரித்தாகிய மாயையுமன்று, நான் சின்மாத்திரனென்று ஒடுங்கி நிற்பதும் பரம தாரணையாம்.

தியானமாவது:—(யோ) மனதை மூர்த்தி வடிவமாக்கி, மற்றொன்றிலும் பொருந்தாமல் செலுத்துதல். (ஞா) தேகாதீதமாயும் திருக்கு ரூபமாயும் இருக்கின்ற சின்மாத்திரத்தை நானென்று தியானிப்பது பரம தியானமாம். இப்படி தியானிக்கிறவனை சாக்ஷாத் பரமசிவ னெனப்படும்.

சமாதியாவது:—(யோ) சீவனுக்கும் பரனுக்கும் ஐக்கிய பேதக்கியானம் பிறப்பதேயாம். (ஞா) நான் சாக்ஷாத் சிவரூபனாகையாலே, நான் தேகாதிகளல்லன். நான்பரமசிவனென்ற புத்தியும், பிரமாண்ட பிண்டாண்டங்களை தூல பஞ்சபூதங்களில் ஒடுக்கி, அந்த பூதங்களை அபஞ்சீகிருத பூதங்களில் ஒடுக்கி, அச்சத்தாதியாகிய தன்மாத்திரைகளை மாயையில் ஒடுக்கி, அம்மாயையை பிரத்யேகாத்மாவில் ஒடுக்கி, அவ்வாத்மாவாகிய நானே பிரமம், நான் சமுசாரியல்லன், என்னைவிட வேறேயில்லை என்று அறிவதும், பிரணவ சொரூபமான பரமேஸ்வரனை மூன்று வருணங்களாக பாவித்து, அம்மூன்று வருணங்களையும், இருக்கு தைத்திரிய சாம ரூபங்களாக பாவித்து, நாதத்தை அதர்வண வேதமாக பாவித்து, அம்மூன்று வருணங்களையும், பிரமா விட்டுணு ருத்திரனாக பாவித்து, அந்த வருணத்துடைய நாதத்தை காரண ஈஸ்வரராக பாவித்து, அம்மூன்று வருணங்களையும் மூன்று அக்கினியாகவும், மூன்று லோகமாகவும், மூன்று அவஸ்தையாகவும், மூன்று ஸ்தானங்களாகவும், மூன்று காலங்களாகவும் பாவித்து, அகாரத்தை உகாரத்திலொடுக்கி, உகாரத்தை மகாரத்தில் ஒடுக்கி, மகாரத்தை நாதத்தில் ஒடுக்கி, நாதத்தை, மாயையில் ஒடுக்கி, மாயையை சீவனில் ஒடுக்கி, சீவனே ஈஸ்வரன். அவனே நானென்று சாதிப்பதும் பரமசமாதியாம்.

யோகம் சாதிப்பது மனைவி முதலிய இல்லற சம்பந்தம் அனைத்துமின்றி துறவுபூண்டு, கற்பசாதனைசெய்து, அமுதம் இறக்கியுண்டு காயசித்தி பெற்றபின், பன்னிரண்டுகலை கொண்டு பாயும் வாசியை வசப்படுத்தி, சுவஸ்திகம் முதலிய ஆசனங்களில் இருந்து, பிராணவாயுவை இரேசித்து (மூச்சுவிட்டு) பூரித்து கும்பித்து (பிராணவாயுவை சமப்படுத்தி யடக்கல்) உபாதியை நீக்கி, உண்ணாக்கு, கண்டம், இதயம், நெற்றி, கபாலம். நாபி இவற்றில் ஒன்றில் சதாகாலம் சிந்தைவைத்து, ஐம்புலன் அடக்கி இருந்து சாதிப்பது. இப்படி சாதனைசெய்யுமிடத்தே சிறிது வழுவினால் வயிறு வெடித்து, கண்டம் விம்மி, கண்பிதுங்கி, தலை வெடித்து பிராணச்சேத மடைவதும், பிராணன் பிறழந்தபோதும் பஞ்ச புலன்கள் ஊறுபடுதலும், பைத்திய முண்டாதலும், மீஹாச்சுர முதலிய நோய்கள் உண்டாதலும் இன்னும் பல கேடுகள் உண்டாதலுமாகிய வெகு மோசங்கள் அடைய யேதுவா யிருக்கும் என சிவயோகிகள் உரைத்தனரோ.

M. M.

(இன்னும்வரும்.)

## வினையும் விதியும் முறணியமை.

இன்பமின்மையே துன்பம். இன்பத்தை யனுபவிப்பதே எல்லோருக்கு முள்ள நோக்கம். இத்தகைய ஆக்கத்தையே சதாகாலமும அனுபவிக்க விருப்புற்றிருக்குமவர் பலர்க்கும் இடையிடையே துன்பம் சம்பவிக்கின்றது. இவ்வாறு துன்பஞ் சம்பவிப்பதற்குக் காரணம்யாதென விசாரித்தல் இன்பத்தைக் காதலிப்போர் கடனாகும். இடையிடையே யுண்டாகும் இன்பதுன்பங்கள், பிரபஞ்சத்தின்கண் ணுள்ள பதார்த்தங்களின் பிரயோக பாவத்ததாகின்றன. பிரபஞ்ச பதார்த்தங்களொவ்வொன்றும் இன்பத்தையேனும் துன்பத்தையேனும் விளைக்கவல்லது. அவற்றால் விளையும் இன்பதுனபங்கள் அப்பதார்த்தங்களின் பிரயோகவாற்றலா லென்க. பதார்த்தங்களை இனபத்தின்பொருட்டே யுபயோகிக்காமல் துன்பத்தின் பொருட்டும் மக்கள உபயோகிப்ப தென்னையெனின், அறியாமையாலும், மானுஷீகமின்மையாலு மெனபட்டென்க. அறியாமை முன்னிட்டுபதார்த்தங்களினால் பழுதியற்றப்படுகின்றனவெனினும், அறியாமையால் பதார்த்த பிரயோகத்தின்கண் விளையும் துன்பம் மிகுதியே. பதார்த்த பிரயோகவாற்றலால் விளையும் துன்பங்களை விலக்கவேண்டில், பதார்த்தங்களின் யுக்தாயுக்தங்களை யறியவேண்டியது ஆவசியகம். அறிந்தபின் பதார்த்தங்களை நற்பிரயோசனஞ் செய்யல்வேண்டும். துர்மார்க்கங்களில் ஓர் சிறிதும் பிரயோகிக்கப்படாது. ஆனால், பதார்த்தபரிசோதனையில் யதார்த்தமாய் பாடுபட்டு வருபவரொழிந்த மற்றைய மானிடர், துன்பத்திற்குக்காரணம் பதார்த்தங்களின் அபக்குவ பிரயோகமென வறியாது, வினையையும்விதியையும்காரணமாகக்கூறுகின்றனர். வினையென்றால்தன்வினையென்றும்பிறவினையென்றும்இருவகைப்படும். தன்வினையாவதுஒவ்வொருவனும்தத்தம்முன்பிறப்பில்செய்தஇதாயிதங்களின்பலாபலன்களென்ப்பொருள்படும். பிறவினையென்பது தாய்தந்தைகள் செய்த இதாயிதங்களின் பலாபலன்களாம். விதியென்பது அவரவர்செய்த இதாயிதங்களுக்கேற்ப பலாபலன்களை யவரவர்களுக்கு கடவுள நிர்ணயித்தல் எனப் பொருள்படும். இன்ப துன்பங்களுக்குக்காரணம் வினையாயின், இன்பதுன்பங்களை யனுபவிக்கவேண்டியது, வினையை யியற்றியதற்குக்காரணமாகவிருந்த தேகமா, அல்லது வினையின் பலாபலனாகிய இன்பதுன்பங்களை யனுபவிக்குந்தேகமா! எவ்வினையை எத்தேக மியற்றியதோ அத்தேகமன்றோ அவ்வினையின் பலாபலன்களாகிய இன்ப துன்பங்களை அனுபவித்தல்வேண்டும்? ஓர் தேகத்தால் இயற்றியவினையின் பலாபலன்களாகிய இன்பதுன்பங்களை வேறோர் தேகம் அனுபவிப்பதெங்ஙனம் கூடும்? இன்பதுன்பங்களுக்குக்காரணம் விதியாயின், விதிக்குக்காரணம்வினையும், வினைக்குத்தக்கவாறு பலாபலன்களை நிர்ணயஞ்செய்த கடவுளுமாகின்றனர். வினைக்குக் காரணம் தேகமாகின்றது. தேகத்திற்குக்காரணம் கடவுளாகின்றார். ஆகவே சுகதுக்கங்களுக்குக்காரணம் விதியென்றால், கடவுளே சுகதுக்கங்களுக்குக்காரணராகின்றார். கடவுள் காருண்ணியராதலால் சுகத்திற்குக் காரணராவரோயன்றி துக்கத்திற்குங் காரணராகார். ஆகாராகவே சுகதுக்கங்களுக்குக் காரணம் விதியென்பது விருத்தமென்க. வினையும் விதியுங்கூடி சுகதுக்கங்களை யியற்றுகின்றனவெனின், சுகதுக்கங்களை வினையின்றி விதியும், விதியின்றி வினையும் இயற்றவல்ல தல்லவெனவாகவேண்டும். ஆகவே சுகதுக்கங்களுக்குக்காரணம் வினையும், விதியும் என்றாலோ, வினை தேகத்தின்தொழில், விதி தெய்வத்தின்தொழில், தேகத்தின்தொழிலாகிய வினையியங்காதிருப்பதற்கிடமில்லையாயினும், எல்லாம்வல்ல தெய்வத்தின்தொழிலாகிய விதியியங்காதிருப்பது சாத்தியமன்றோ? சாத்தியமாயின், தெய்வம் விதிக்காதிருக்கலாமன்றோ? விதிக்காமலிருப்பின், தனியே யியங்கவல்லதல்லாத வினையொன்றும் இயற்றவல்லதல்லவன்றோ! தெய்வம் சும்மாஇல்லாமையினாலேயே சுகதுக்கங்கள் விளைவதாகின்றன. ஆகவே சுகதுக்கங்களுக்குக்காரணம் கடவுளாகின்றாரேயொழிய தேகவியல்பாலாகிய வினையன்றென வெளிப்படையாகின்றது. ஆகவே சுகதுக்கத்துக்குக்காரணம் வினையும் விதியும் என்பது முறண்பட்டு, கடவுளென்பதும் அவரது காருண்யத்தாலும், சர்வவல்லபத்தாலும் பொய்பட்டு, அறி வறியாமையே நிலைநாட்டப்பட்டதென மேலையநியாயங்களால் கண்டுணர்வார்களாக.

D.

## கடிதம்.

தத்துவவிவேசினியாந்தார்குழலேயென்றனது
சித்தத்தறுமையைந்திரவே—புத்திமிகும்
உந்தைதனைக்கேட்டேயுலககனிலான்மாக்கள்
வந்தவிதஞ்சொல்வாய்மகிழ்ந்து.

இதவிஷயத்தில் எனக்கு நெடுநாளாய்ச் சந்தேகம். யானிதைப் பலரிடத்தும் கேட்டுத் தக்க விடை பெருததுபற்றி வியாகூலங்கொண்டு, நீ சமயம் வாய்த்தபோது பேசுவை, அப்போது தெள்ளெனத் தெளிந்துகொள்வோமென் றிருந்தேன். ஆனால் நான் பத்திரிகை பார்க்கத்தொடங்கின நாண்முதலாயிதுபரியந்தம் இதுபற்றி நீ யாதோர் வார்த்தையும் புகல வெண்ணினையில்லை. சங்கைதீர்த்துக்கொள்ளவேண்டுவது என்கடமையாதலால் நின்னை நேரேகேட்கப் புகுந்தேன். மாசே! இதனை நிவர்த்திக்க நின்னையன்றி யெவருளர்? நான் பத்திரிகை வாங்கி வாசிக்க வாரம்பித்தது கொஞ்சகாலம். அதற்கு முன் னிதனைக்குறித்தேனுங் கூறியிருப்பினும் "அதனைப்பார்த்துக்கொள்க" வெனாது இவ்வாரத்திலேயே தெளிவுற மறுமொழி தந்திடுவையாயின் எனக்குமட்டும் அன்று என்போன்ற புது கையொப்பக்காரரும் சந்தேகிகளுமாய் அநேக ரிருப்பர். அவர்க்கும் உபயோகமாம். இக்கேள்வி உன்போன்ற அறிவாளர்க்கு இலேசாயிருப்பினும், என்போன்ற தெரியார்க்கு மிக்க பிரமையை விளைவித்திருக்கின்றதாதலால், என்னைமதித்து தக்க விடை யளிப்பாயென நம்பும்.

புதுவை
சுவஞானப்பிரியன்.
T. V.

---

வினா. ஒரு ஊசிமுனையில் எத்தனைபேர் தொங்கலாம்?
விடை. பூர்வகாலத்திலே ஒரு ஊசிமுனையில் ஒருவர் தொங்கினராம். இக்காலத்தில் அதுவும் அசாத்தியம்.

---

## வர்த்தமானசங்கிரகம்.

**ஒட்டகமண்டிலே** சென்ற சிலநாள் விடாது பெய்த அதிக மழையினால் பிராணச்சேதமும் சொத்து நஷ்டமு முண்டாயது. பைகாராவுக்கு போகிற மார்க்கத்திலே எட்டு கூலிசகாரர்கள் செத்து விழுந்து கிடந்தார்கள். கூனூருக்குப் போகிற மார்க்கத்திலே மூன்று பிரேதங்கள் விழுந்து கிடந்தன. இது அதிக குளிரினால் உண்டானது.

**தெய்வீகவிபூதி** விஷமானது.—மாயவரம் தாலூக்காவிலே ஒரு கிராமத்தில் ஒரு பரதேசியானவர் நாலுபேருக்கு வாயிற் போட்டுக்கொள்ளும்படி விபூதி கொடுத்தபின்பு, குடிப்பதற்குக் கொஞ்சங் கள்ளுங்கொடுத்தார். அவர்களில் வெறும்வயிற்றிலே விபூதியை உட்கொண்ட வொருவன் அரைமணிக்குள் வாய் கொமட்டிக்கொண்டு வயிறு நோகிறதென்று சொல்லி, ஒன்பதுமணி நேரத்திற்குள் இறந்துபோனான். மற்றை மூன்றுபேரும் வாந்தி முதலிய உபத்திரவமடைந்து, தகுந்தகாலத்தில் ஆசுபத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டதினால் பிழைத்தார்கள். இறந்தபோனவனுடைய வயிற்றைப் பரிசோதனை செய்ததில் பாஷாணம் கண்டெடுக்கப்பட்டது.

**ஒருகிராம மணியக்காரரைக்** கொலைசெய்ததற்காக சித்தூர் செஷன்ஜட்ஜியால் மரணதெண்டனை விதிக்கப்பட்ட முனியனென்பவன் செய்துகொண்ட அப்பீல் ஹைகோர்ட்டில் விசாரணை செய்யப்பட்டது. அந்த மணியக்காரர் தன்கிராமத்திலே ஒரு வீட்டை ஜப்திசெய்வதற்காகப் போய், இருபதுபெயரோடுகூட உட்கார்ந்து வேலை நடத்திக்கொண்டிருக்கையில், கைதி துணிபோர்த்துக்கொண்டு அவரருகிற்சென்று, பின்னால்நின்று, அவரைப் பிடரியில் வெட்டுகத்தியால் நோக்கி யொரு வெட்டுப்போட்டு ஓடிப்போய்விட்டான். அவர் கழுத்து வெகுவா யறுந்து தலைதொங்க மல்லாக்கவிழுந்து இறந்துபோனார். இனும் கொடுப்பதாகச்சொல்லிச் சிலர் தன்னைத் தூண்டினதினால் அப்படி கொலைசெய்ததாகக் கைதி ஒப்புக்கொண்டான். மணியக்காரர்பேரில் கைதிக்குப் பகை யொன்றுமில்லாமல், வெகுமதிக்கு ஆசைப்பட்டு வேணுமென்று கொலைசெய்ததினால், ஜட்ஜிகள் அப்பீலைத் தள்ளிவிட்டு, மரணதெண்டனையை ஊர்ஜிதப்படுத்தினார்கள்.

**கடப்பை** செஷன் ஜட்ஜியால் மரண தெண்டனை விதிக்கப்பட்ட மோதின் சாயபு என்பவனுடைய அப்பீல் விசாரணையிலே, பத்துவயது பிள்ளை பகல் போஜனத்துக்கு வராமையினால், தாய் தேடிப்பார்த்து, தன் பிள்ளை கைதியோடு கூடப்போனதாய்ச் சிலர் சொல்லுகிறார்களென்று கிராம முனிசீப்பினிடத்திலே முறையிட்டுக்கொள்ள, அவர் கைதியைப்பிடித்து விசாரிக்குமளவில் அவன் பிள்ளையை யிட்டுக்கொண்டு பழங்கள் பொறுக்கும்பொருட்டு ஒரு மலையண்டைபோய், கழுத்தில் அணி சுற்றி யிறுக்கிக் கொன்று, வெள்ளி நகைகளைப் பறித்துக்கொண்டு, ஒரு குகையில் எறிந்துவிட்டதாகத் தெரியவந்ததனால், அந்த பிரேதத்தைக் கண்டுபிடித்தெடுத்து, கழுத்தில் தனியுடனே கண்விழிகளும் நாக்கும் பிதுங்கி யிருக்கக்கண்டு, வைத்திய பரிசோதரும மரணத்தைப்பற்றி அவ்வித அபிப்பிராயமே கொடுத்திருக்கிறானெனும், அதினாலே ஹைகோர்ட்டு ஜட்ஜிகள் அந்த சங்கதியிலே தாங்கள் பிரவேசிக்க நியாயமில்லாமையால், அந்த மரணதெண்டனையை காயப்படுத்தினார்களென்று தெரியவருகிறது.

மைசூர் செஷன்ஜட்ஜி யவர்களால் மூன்றுபேருக்கு மரணதெண்டனை விதிக்கப்பட்டதின்பேரில், பிரதான சோர்ட்டிலே அப்பீல் விசாரணைசெய்யப்பட்டது. கவர்ன்மெண்டு அட்வோகேட்டானவர் செஷன்ஜட்ஜியும் அசெஸ்ஸர்களும் பிராதுபட்சத்து சாட்சிகளை நம்பாமையினாலே பிராதுபட்சத்தில் பேசுவதற்குத் தனக்கு ஆதார மொன்று மில்லையென்று சொல்லிவிட்டார். ஆதலால், பிரதான கோர்ட்டார் செஷன் ஜட்ஜியும் அசெஸ்ஸர்களும் பிராதுபட்சத்து சாட்சிகளை நம்பாதிருந்து, அசெஸ்ஸர்கள் விடுதலைசெய்யவேண்டுமென்று சொல்லச்சேயும், செஷன் ஜட்ஜி கொலை நடந்திருக்ககூடுமென்கிற நோக்கத்தினால் மூன்றுபேருக்கும் மரணதெண்டனை விதித்தது கூடாமை யென்று சொல்லி, அந்த சிட்சையை ஒப்புக்கொள்ளவில்லை.

**பர்மாவிலே** கிழக்கு பக்கத்திலுள்ள சமஸ்தானங்கள் அமைதியா யிருக்கின்றன. இரத்தினக் கனிகளினாலே வரும்படி திருப்திகரமாகவே யிருக்கிறது. மெஸ்ஸர்ஸ் ஸ்திரீட்டர் கம்பெனியார் கொடுக்கிறதாகச் சொன்ன குத்தகைத்தொகைசகு மிஞ்சுமாம்.

**நியூகினியாவிலுள்ள** ஹெர்கியுலிஸ் மலை 32,786 அடி உயரமிருக்கிறதென்று சொல்லிக்கொள்ளுகிறது உண்மையா யிருக்குமாகில், இந்தியாவானது உலகத்திலுள்ள எல்லா மலைகளைப் பார்க்கினும் உன்னதமானமலையுடையதென்று இனிபுகழ்வதுகூடாமையென்று தோன்றுகிறது.

**லண்டர்வுக்தும்** பெல்காமுக்கு மத்தியி லோடுகிற வண்டித்தொடர்கள் - வெள்ளத்தினால மண்வேலை கெட்டுப்போயிருப்பதினாலே, மிகவும் தாறுமாறு யிருக்கிறது. சென்ற பன்னிரண்டுநாள் விடாது அதிக மழை பெய்தது.

**பெல்காமிலும்** அதைச் சுற்றிலும் நெய்யற்றொழிலாளிகள் சங்கட்டப்படுகிறார்கள். நாலாயிரம் கையெந்திரங்கள் நிறுத்திப்போட்டப்பட்டன. சுமார் பதினாயிரம் பேருக்கு வேலையில்லை. இது தொழிலாளிகளிடத்திலே வர்த்தகர்கள் அதிக வேலை வாங்குவதினாலே யுண்டாயிற்று.

**மசோவாவிலே** நிகழு மீ 13உ பிரதான மருந்துகிடங்கு வெடித்து பத்துபேர் மாண்டதாகவும், முப்பதுபேருக்குக் காயம்பட்டதாகவும் ஏடனிலிருந்து சமாச்சாரம் வந்ததாக சிம்லாவிலிருந்து பம்பாய் கேஜெட்டுக்கு வந்த டெலிகிராமினால் தெரியவருகிறது.

**மதிராஸ்ஹார்பர்** கிரஸ்டு போர்டார் பீரொன்னும் இருப்புவாராவதிக்கு இருபக்கத்திலும் மும்மூன்றடி அகலப்படுத்தும்படி தீர்மானித்திருக்கிறார்கள். பீரின்பேரில் வியாபாரப் போக்குவரத்து மிகுதியா யிருப்பதால், அடிக்கடி ஜனங்களடர்த்தியினாலே அதிக தாமசமுண்டாகிறது.

**ரிவினியூபோர்டார்** மாடு குதிரைகளுக்கு நல்ல தீனி இன்னதென்று கண்டறியும்படி பல விடங்களி லிருந்து அறிக்கை வரவழைக்கிறார்கள். இந்தத் தீனிக்காக ஜில்லாக்களிலே வளருகிற வைக்கோல் முதலிய பல தினுசுகளையும் வரவழைத்து, பரிசோதித்து அறிக்கைபண்ணும்படி லோக்கல்கெமிக்கல் எக்ஜாமினருக்கு அனுப்பி யிருக்கிறார்கள்.

**வில்லாபுரத்துக்குச்** சமீபமான ஒரு கிராமத்தில் கொஞ்சகாலத்திற்கு முன்னே கன்னம் வைக்கப்பட்டது. அவ்விடத்திலே ஒருவன களவுசொத்து வைத்துக்கொண் டிருந்தான். அவனுடைய பெண்ஜாதி அந்த சங்கதியைக் கன்னம்வைக்கப்பட்ட வீட்டுக்காரனுக்குத் தெரிவித்தாள். அதைக்கணவன் அறிந்து அவளுக்கும் தன் ஒரே பேற்றுப்பெண்ணுக்கும் தனக்கும் சாப்பாட்டிலே வெள்ளைப்பாஷாணம் கலந்தான். அந்தப்பெண் மாத்திரம் கொஞ்சநேரத்தில் இறந்துபோயிற்று. அவன்பேரில் இப்போது கொலைக்குறறமும் தற்கொலை செய்துகொள்ள எத்தனித்த குற்றமும் பாரிக்கப்பட்டிருக்கிறது.

---

Printed and Published for the Proprietor at the
VURTHAMANATHARUNGINI PRESS, No. 174,
Davaraja Moodelly Street,—Madras.